குமரன் றுணை,

அருணகிரிநாதர்

அருளிச்செய்த

# திருப்புகழ்.

முதற் புத்தகம்,

சந்தக்குழிப்பும், அரும்பதவுரையும் அடங்கிய

திருத்தமான புதுப்பதிப்பு.



இது

மதுரை, வித்தியாபாநுப் பத்திராதிபர்

மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்களால்

பரிசோதிக்கப் பெற்று,

மதுரை புதுமண்டபம், புத்தக வியாபாரம்

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனாரால்,

தமது

எக்ஸெல்ஸியர் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப் பெற்றது.

1918.



இதன் விலை ரூ. 2—8

உ

குமரன் றுணை.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

—:0:—


| விஷயம். | பக்கம். |
|---|---|
| 1 சிறப்புப் பாயிரப் பாடல்கள். | |
| 2 பதிப்புரை. | க |
| 3 அருணகிரிநாத சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் | ரு |
| 4 ஸ்தல அகராதி. | கூ |
| 5 பாட்டுமுதற் குறிப்பகராதி. | சருகூ |
| 6 முருகக் கடவுள் துதி. | க |
| 7 விநாயகர் துதி. | ரு |
| 8 திருப்புகழ் நூல். | எ |




குமரன்றுணை.

# திருப்புகழ்ச் சிறப்புப்பாயிரம்.

## திருப்புகழ்ச் சிறப்பு

வெண்பா.

எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி (க)

---

திருப்புகழ் சிவணைத்தால் வேதார்த்தாதி அர்த்தம் அறியலாம். ஆகவால் அதனையே கேட்க என்றது.

வேதம்வேண் டாம்*சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம் (உ)

சீராந் திருப்புகழைச் செவ்வேள்மே லன்பாக
ஆராய்ந் துரைத்தா னருணகிரி—நேராக
அந்தப் புகழை யநுதினமு மோதாமல்
எந்தப் புகழோது வீர். (௩)

மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்—பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டு மினி. (௪)

* சகலவித்தை — அறுபத்துநான்கு கலைஞானங்கள்.

## திருப்புகழ்ச் சிறப்புப்பாயிரம்.

ஆனைமுக வற்கிளைய ஐயா அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை—யானினைந்து
போற்றிடவு நின்னைப் புகழந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவு மோதிடவுந் தா. (௫)

அருணகிரி நாத னகிலதலத் துன்னைக்
கருணையினாற் பாடுங் கவிபோற்—பிரியமுற
வேறுமோர் புன்கவிகள் வேலோனே நின்செவியி
லேறுமோ என்னே யினி. (௬)

வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார். (௭)

## திருப்புகழ்ப் பயன்.

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினர்க் காமேயிக் கூறு. (௮)

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்று மெழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால் (௯)

அன்பர் வினவ ஆண்டவன் விடையருளியதாக மேலையதை வற்புறுத்துவது.

### கலி விருத்தம்

பொருப்பது பொடிப்பட விடுத்திடுகை வேலா
இருப்பிட முனக்கெது எனக்கருளியம்பாய்
உருக்கநல் விழுக்குல மொழுக்கமில ரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினிலிருப்பாம் (௧0)

# திருப்புகழ்ச் சிறப்புப்பாயிரம்.

அங்ஙனம் அருளக்கேட்ட அன்பர் ஆண்டவனை நோக்கிக் கூறியதாகத் திருப்புகழ் படிப்போர் திட்பங்கூறியது.

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதில்லை யுன்றனரு ளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றுமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெரு மாளே. (கக)

நூலாசிரியர் பெயரோடு நூற்பண்பும், பெயரும் உணர்த்தி, அதனைத் துதிப்போர் பேறுங் கூறியது.

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
போரா லருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார். (கஉ)

திருப்புகழ் இன்ன இன்னதற்கு இன்ன இன்னதாம் எனல்.

அருணகிரி நாதர்பதி னாறா யிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கஃ
தேணியருட் கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்
காணி பிறவிக் கரம். (கங)

திருப்புகழ் வழிபாட்டால் கூற்றையும் வெல்லலாம் எனக் கெடி பெற உரைத்தது.

திருப்புகழைக் கற்க திருப்புகழைக் கேட்க
திருப்புகழை நித்தஞ் செபிக்க—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடி.

திருப்புசழ்ச் சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

இப்பாயிரச் செய்யுட்கள் பூர்வத்துள்ள அபியுக்தர்களாற் செய்யப்பட்டு, பழைய பிரதிகளில் எழுதப்பெற்று வழங்கிவருவன. பாடினோர் பெயராதியன தெரியவில்லை.

உ

குமரன்றுணை.

# பதிப்புரை.

---

சந்தனப் பொதியத் தடவரை முனிக்குச்
செந்தமிழ் தெருட்டியுந் திருப்பரங் கிரியிற்
கீரன் பாடல் கேட்டுள மகிழ்ந்தவன்
ஆருயிர் புரந்தும் ஆறுசெல் காலைப்
பொய்யா மொழிக்கவி புகல்கவி கேட்டு
மெய்யா தரத்தின் வேறுபாச் சொற்றும்
மூங்கையாய்ப் பொருட்பொருண் முறைநயந்தேற்றியும்
வீங்குசீர்ப் புவியின் வியத்தகு சந்தத்
திருப்புகழ்ப் பாடல் செப்பென அருணை
கிரிப்பெரு மாற்குக் கிளரருள் புரிந்தும்
புலவனுந் திருப் பெயர் புனையும்
கலவமா மயிலோன் கழலிணை பணிவாம்.

திருப்புகழ் என்னுஞ் செஞ்சொற் பிரபந்தம் கருணையங் கடலாகிய முருகக் கடவுளுக்கு உகந்த தோத்திரமா மென்பது உலகப்பிரசித்தம். மதுரம் பழுத்துத் தேன்றுளிக்குஞ் சந்தச்சுவை வாய்ந்து, தமிழ் நாட்டிலுள்ள எல்லாருள்ளத்தையும் கொள்ளை கொண்டு விளங்கும் இந்நூல், படிப்பாரையும், கேட்பாரையும் பரவசப்படுத்திப் பேரானந்தப் பெருக்கி லாழ்த்துஞ் சிறப்பு வாய்ந்த தென்பதொருதலை. இந்நூலாசிரியராகிய அருணகிரிநாத ரியற்றிய திருப்புகழ்ச் செய்யுட்கள் பதினாறாயிரம் என்ப. ஆகவும் இவற்றுள் ஓராயிரஞ் செய்யுட்களேனும் ஒருசேர ஒருவரிடத்தே யிருக்கக்காண்டலரிதாயது தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டமே போலும். இவற்றின் நானூறு பாடல்கள்வரை சென்னை ஊ. புஷ்பரதசெட்டியாரவர்கள் கலாரத்நாகரம் பிரஸில் வெளிவந்துள்ளன. வந்துமென்ன? அவை பெரிதும் பிழைபாடுடையனவாகவே காணப்படுகின்றன. பின்னர் திருத்தருப் பூண்டி முன்சீபாக இருந்த ஸ்ரீமத் வ. த. சுப்பிரம

ணிய பிள்ளையவர்கள் பலவருட காலம் அரிதின் முயன்று, ஆயிரத் திருநூற்றுமுப்பத்தொரு பாடல்கள் வரை சேர்த்து இரண்டு புத்தகமாக அச்சிட்டுள்ளார்கள். இவ்விஷயத்தில் பிள்ளையவர்கள் எடுத்த முயற்சியும், பிரயாசையும் மிகப் பாராட்டற்பாலன. இங்ஙனம் அச்சிடுவித்த இருவகைப் புத்தகங்களையும் முதலில் யான் பார்த்தபோது பற்பல வேறுபாடுகள் காணப்பட்டன. அன்றியும் பற்பல பாடல்களின் சொல்வகையிலும், பொருள்வகையிலும், பெரிதும் ஐயப்பாடெய்திற்று. அதனால் கையெழுத்துப் பிரதிகள் சிலதேடி ஒப்பு நோக்குழி முன் அச்சிட்ட பிரதிகளினும் பொருட் சிறப்பு வாய்ந்த பாடபேதங்கள் பலகண்டேன். இதுவரை அச்சுக்கு வராத சில புதிய பாடல்களையுங் கண்டேன். தமிழ்வேதபாராயண சீலர்களான ஓதுவா மூர்த்திகள் பலர் திருப்புகழை ஓதுங்கால் திருத்தமான பாடங்கள் சில கேட்டேன். தொடக்க முதற் கொண்டே சிதறுண்டு எடுப்பார்கைப்பிள்ளையாகப்போன இத்திருப்புகழ்நூலை யான் அறிந்தவளவில் சுத்தப்பிரதியாக்கி, அரும்பதப்பொருள்களை ஆங்காங்கு விளக்கி, சந்தக் குழிப்பைத் தலைப்பிற்சேர்த்து, அச்சிடுவிப்பது பெரும் புண்ணியமாமென நினைத்து, முருகபிரான் திருவருளைச் சிந்தித்து இப்போது 642 பாடல்களை இயன்றவரை திருத்தஞ் செய்து முதற் புத்தகமாக வெளியிட்டுளேன்.

இதனுள் பெண்களின் ஸ்தன்யத்தைக் குறிக்கும் வெளிப்படைச் சொல் வருமிடந்தோறும் லை என்பதற்குப் பிரதியாக கை என்பதைச் சேர்த்து, முகை என்று மாற்றியிருக்கின்றேன். இம்மாற்றம் தற்கால நாகரீக முறை நோக்கியும், எப்பாலாரும் நாணுறுது கற்பது கருதியுமே செய்யத் துணிந்தேன். இங்ஙனஞ் செய்தது தவறுயின் அதையும், மற்றும் இதனுட்காணப்படும் குறைகளையும் அறிஞர் பொறுத்தருள்வாராக.

இம்முதற் புத்தகம் வெளியாமாறுகருணை செய்தது போலவே இரண்டாம் புத்தகமும் விரைவில் வெளியாமாறு குமரக்கடவுள் திருவருள்புரிவாராக. இங்ஙனம்

**மு. ரா. கந்தசாமிக்கவிராயர்,**

மதுரை.

குமரன் றுணை.

## ஸ்ரீ அருணகிரிநாதர் சரித்திரச் சுருக்கம்.

அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொற்ற
எந்தை யருணாடி யிருக்குநா ளெந்நாளோ.

ஐயா அருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினரார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றார் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னான்.

எனத் தாயுமானவரும்.

வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்.

காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறு
மூழுக்குக் கூத்த னுவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு.

எனப்பிறரும் வியந்தெடுத்தோதிப்பாராட்டப்பெற்ற ஸ்ரீஅருணகிரிநாதர் தொண்டை நாட்டிலே நினைக்க முத்தியளிக்கும் திவ்ய க்ஷேத்திரமாகிய திருவண்ணாமலையிலே பிரபுடதேவ ராஜர் காலத்திலே இற்றைக்கு 465 வருடங்களுக்கு முன்பு தமிழ் நாடு செய்த தவப்பயனாகத் திருவவதாரஞ் செய்தருளினார். பால்யத்திலே சிற்றின்பத்துறையின் மூழ்கி அதனால் மிடியும், பிணியுங் கொண்டு, மிகவருத்தமுற்று முன்னைத் தவப்பேற்றால் அறுமுகக்கடவுள் குருவடிவாகி வந்து, தடுத்தாட்கொண்டு, ஞானோபதேசஞ்செய்யப்பெற்று எல்லாப்பற்றும் அற்றவராய் முருகக்கடவுள்மீது சந்தப்

பாக்கள் ஆகிய திருப்புகழ் பாடித்துதிப்பதே தொழிலாகக்கொண்டிருந்தனர். இங்ஙனமே குமரக்கடவுள் வீற்றிருந்தருளுந் தலங்கடோறுஞ் சென்று, திருப்புகழ் என்னும் தேன்மழை பொழிந்து வந்தனர். இவ்வாறு இவர் பாடிய திருப்புகழ் பதினாறாயிரமென்ப. அன்றியும் கந்தரனுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு என்பனவும் இவரியற்றியருளியனவேயாம்.

இவர் திருவாக்குக்களில் செந்தமிழ்ப்பாஷைப் பொலிவும், பத்திச்சுவையும், செவிக்கினிய ஓசைநயமும், மனத்தைக்கவரும்படியான ஒருவித வசீகரத் தன்மையும், இன்னும் பற்பல நயங்களும் மிக்குத் தோன்றுவனவாகும். தமிழ் நாட்டில் வசிப்போர்களில் இற்றைக்கும் இவரைப் புகழ்ந்து போற்றுதாரைக் காண்டல் அரிதினுமரிது.

இவர் காலத்தே தமிழ்ப்புலமை வாய்ந்து தருக்கு மிகக்கொண்ட வில்லிபுத்தூரருக்கும், நமதுசந்தப்பாப் புலவர் பெருமானுக்கும் வாதமுண்டாயிற் றென்றும், அப்போது வில்லிபுத்தூரரை வாதில் வெல்வதற்கே நமது பாவலர் பெருமான் கந்தரந்தாதி பாடினரென்றும், அவ்வந்தாதியைப் பாடிவருங்கால் ஒவ்வொரு செய்யுட்கும் உரைகூறி வந்த வில்லிபுத்தூரர் அதில் "திதித்த" எனத் தொடங்குஞ் செய்யுட்கு உரைகூறமாட்டாது தோற்றனரென்றும், இவ்வாதத்தில் "தோற்றவர் காதை வென்றவர் அறுப்பதென" ச் சூளுறவு செய்துகொண்ட வாறே தோல்வியுற்ற வில்லிபுத்தூரர் காதைத்தாம் அறுக்காமல்அவருக்குத் தமதுபரிசாக அருளிச்செய்தன ரென்றும், ஆதலாற்றான்," கருணைக்கருணகிரி"எனப் பிறராற் புகழப்பட்டன ரென்றும் கூறுவர்.

திருவண்ணாமலையில் பிரபுட தேவராஜன் சபையில் சம்பந்தாண்டான் என்பவற்கும், நமதுபாவலர் பிரானுக்கும் வாதமுண்டான போது "இவ்விருவரில் தாம் உபாசிக்கும் மூர்த்தியை இச்சபையில் வரவழைப்பவர் எவரோ அவரே வென்றவராவர்" என அரசன் கூற, சம்பந்தாண்டான் தன் உபாசனா தேவியாகிய பார்வதியாரை வரவழைக்கிறேன் என்றான். நமது கவிஞர்பெருமான் தம் உபாசனா மூர்த்தியாகிய குமரக்கடவுளை வரவழைக்கிறேன் என்ற

ணர் இவ்வாதத்திலும் ராசசபையில் முருகக்கடவுள் எழுந்தருளி வந்து காட்சிகொடுக்கச் செய்து வெற்றிபெற்றவர் நம்சந்தப்பாவலர் பெருமானே யாவர்.

இதனால் மனப்புழுக்கங் கொண்ட சம்பந்தாண்டான் யாதேனும்ஒரு சூழ்ச்சியால் வெல்லக்கருதி கற்பகநாட்டிலுள்ள பாரிசாத மலரைக் கொண்டுவரக் கூடுமோ எனக்கூற, நமது புலவர் பிரான் தாம் கொண்டுவருவதாகச் சம்மதித்து, தம உடலை அருணைக்கோபுரத்துட் கிடத்தி, ஒரு கிளியுருவெடுத்து, விண்ணுலகிற் சென்று மலர் கொண்டு மீண்டனர். இவர் மீண்டு வருமுன் "அருணகிரிநாதர் காலஞ்சென்றார்" என அரசனுக் கறிவித்து, அவர் திருமேனியைத் தகிப்பித்து விட்டனன் சம்பந்தாண்டான். மீண்டு வந்த நமது புலவரேறு தம்முடலழிந்ததை யுணர்ந்து, கிளியுருவாகவே யிருந்து, கந்தரநுபூதியைப் பாடி முருகக்கடவுள் திருவடி நீழல் எய என்பா

இத்தகைய பெரும் புகழ்வாய்ந்த அருணகிரிநாத சுவாமிகள் சரித்திரங்களையெல்லாம் அவர் திருவாக்குக்கள் அங்கங்கே விளக்கிச் செல்லும். அறிஞர் அறிக.

குமரக்கடவுள் திருவடிகளே சரணம்.

மு. ரா. க.



# ஸ்தல அகராதி.




| ஸ்தலம் | | | பக்கம் | பாடற்றொகை |
|---|---|---|---|---|
| அத்திப்பட்டு | ... | ... | 411 | 1 |
| அருக்கொணாமலை | ... | ... | 307 | 1 |
| ஆய்க்குடி | ... | ... | 408 | 1 |
| ஆறுதிருப்பதி | ... | ... | 384 | 2 |
| இரத்நகிரி (வாட்போக்கி) | ... | ... | 251 | 2 |
| இராஜகெம்பீரவளநாட்டுமலை | | ... | 283 | 1 |
| இராமேசுவரம் | ... | ... | 403 | 2 |
| இலஞ்சி | ... | .... | 396 | 4 |
| உத்தரமேரூர் | ... | ... | 441 | 4 |
| ஊதிமலை | ... | ... | 285 | 2 |
| கதிர்காமம் | ... | ... | 301 | 11 |
| கழுகுமலை | ... | ... | 299 | 3 |
| காசி | .... | ... | 408 | 3 |
| குருடிமலை | ... | ... | 287 | 1 |
| குறட்டி | ... | ... | 417 | 1 |
| குன்றக்குடி | ... | ... | 292 | 6 |
| குன்றுதோறாடல் | ... | ... | 179 | 4 |
| கைலைமலை | ... | ... | 181 | 7 |
| கொங்கணகிரி | ... | ... | 289 | 1 |
| கொடுங்குன்றம் | ... | ... | 290 | 2 |
| கொல்லிமலை | ... | ... | 282 | 2 |
| கோசை நகர் | ... | ... | 416 | 1 |
| சீபுருடமங்கை (நான்குநெரி) | | ... | 394 | 3 |
| ஸ்ரீ சைலம் | ... | ... | 186 | 1 |
| சுவாமிமலை | ... | ... | 152 | 39 |
| ஞானமலை | ... | ... | 284 | 2 |
| தச்சூர் | ... | ... | 451 | 1 |
| தனச்சயம் | ... | ... | 309 | 1 |
| திருக்கழுக்குன்றம் | ... | ... | 235 | 3 |
| திருக்கற்குடி (உய்யக்கொண்டான்) | | ... | 250 | 3 |
| திருக்காளத்தி | ... | ... | 311 | 3 |
| திருக்கானப்பேர் | ... | ... | 400 | 2 |
| திருக்கோணமலை | ... | ... | 308 | 1 |
| திருக்குற்றாம் | ... | ... | 369 | 3 |

| | | |
|---|---|---|
| திருசிராப்பள்ளி | 239 | 16 |
| திருச்செங்கோடு | 265 | 25 |
| திருசெந்தூர் | 20 | 83 |
| திருத்தணிகை | 190<br>451 | 64 |
| திருப்பரங்குன்றம் | 6 | 16 |
| திருப்புத்தூர் | 401 | 2 |
| திருப்புவணம் | 398 | 3 |
| திருப்பெருந்துறை | 408 | 3 |
| திருப்போரூர் | 459 | 4 |
| திருமலை | 371 | 3 |
| திருமயிலை | 431 | 10 |
| திருவக்கரை | 447 | 1 |
| திருவடமுல்லைவாயில் | 417 | 2 |
| திருவருணை | 152 | 78 |
| திருவஸிதாயம் | 416 | 1 |
| திருவல்லம் | 425 | 1 |
| திருவாடானை | 403 | 1 |
| திருவாமாத்தூர் | 448 | 4 |
| திருவாலங்காடு | 419 | 3 |
| திருவான்மியூர் | 437 | 1 |
| திருவுத்தரகோசமங்கை | 400 | 1 |
| திருவேங்கடம் | 485 | 5 |
| திருவேற்காடு | 41 | 2 |
| திருவொற்றியூர் | 412 | 2 |
| திருவோத்தூர் | 450 | 1 |
| தென்சேரிகிரி | 288 | 2 |
| பசுமலை | 310 | 1 |
| பழநி | 79 | 90 |
| பழமுதிர்சோலை | 373 | 16 |
| பாக்கம் | 414 | 2 |
| புகழிமலை | 309 | 1 |
| பேறைநகர் | 446 | 2 |
| பொதியமலை | 297 | 2 |
| மதுராந்தகம் | 444 | 15 |
| மதுரை | 385 | 1 |
| மயிலம் | 258 | 1 |
| மாடம்பாக்கம் | 438 | 1 |
| வயிரவிவணம் | 410 | 1 |

| | | |
|---|---|---|
| வள்ளிமலை | 329 | 9 |
| வள்ளியூர் | 200 | 1 |
| வினாயகமலை | 264 | 1 |
| விராலிமலை | 252 | 14 |
| விரிஞ்சிபுரம் | 427 | 6 |
| வெள்ளிகரம் | 421 | 8 |
| வேப்பூர் | 407 | 3 |
| வேலூர் | 420 | 2 |
| பொது | 454 | 2 |




# பாட்டுமுதற்குறிப்பு அகராதி.


அகத்திணை ... 235
அகல்வினை ... 111
அங்கை நீட்டி ... 239
அங்கைமென் ... 37
அச்சாயிறு ... 451
அஞ்சுவித ... 407
அடலரி ... 421
அடல்வடி ... 448
அணிசெவ்வி ... 417
அணிபட்ட ... 95
அதல விதல ... 112
அதிகராய் ... 425
அதிருங்கழல் ... 179
அத்தவேட்கை ... 278
அந்தகன் ... 37
அந்தோமனமே ... 240
அபகார ... 84
அமருமம ... 113
அமுதுததிவிட ... 22
அமுதமூறு ... 324
அமைவுற்றடைய ... 190
அம்பொத்த ... 36
அயிலொத் ... 432
அரகர ... 201
அரிசன ... 113
அரிவையர் ... 440
அருக்கார்நல ... 333
அருக்கிமெத் ... 451
அருக்கும ... 8
அருணமணி ... 40
அருத்தி ... 138
அருமா ... 334
அருவமிடை ... 314
அருவரை ... 410
அலகிய ... 385
அலகின்மாறு ... 301
அலைகடல் ... 384
அல்லச ... 232
அல்லில்நேரு ... 300
அல்லிவிழி ... 229
அவனிதனி ... 103
அவனிபெறு ... 29
அவாமரு ... 159
அழகுதவழ் ... 380
அழகுபெறு ... 428
அழகெறிந்த ... 292
அழுதழுதாசார ... 241
அழுதுமாவா ... 335
அளகபார ... 21
அறப்பாவை ... 398
அறமிலாநிலை ... 138
அறமிலாவதி ... 432
அறிவழிய ... 24
அனங்கனம் ... 290
அனத்தோ ... 400
அனிச்சங்கார் ... 41
அனுத்தே ... 439
அனைவரு ... 42
அன்பாக ... 265
ஆசைநாணு ... 376
ஆடல்மத ... 394
ஆதவித ... 416
ஆதாளிக ... 93
ஆதிமக ... 285
ஆலகாலமட ... 277
ஆலகாலமெனக் ... 114
ஆலம்போ ... 413
ஆலவிழி ... 323
ஆறுமயில் ... 369
ஆறுமுகம் ... 143
ஆனனமுகந்து ... 174
ஆஞதபிருதி ... 175
ஆனைமுகவர் ... 393
ஆனைவரிக்கோ ... 335
இதலவரு ... 432
இடமடுசுற ... 328
இடம்பார்த்தி ... 272
இடருக்கிட ... 336
இணையதில ... 433
இதழுறு ... 252

| | | | |
|---|---|---|---|
| இத்தாரணி | 115 | உலகபசுபார்ச | 139 |
| இமராஜனி | 336 | உலையிலன | 341 |
| இயலிசையி | 64 | உனைத்தினந் | 7 |
| இரதசுரத | 337 | ஊனுரு | 403 |
| இரத்தமுஞ்சி | 405 | எங்கேனு | 288 |
| இரவியுமதி | 328 | எதிரிலாத | 302 |
| இரவியென | 116 | எதிரெதிர் | 256 |
| இரவுபகற் | 338 | எதிர்பொருது | 290 |
| இராவினிருள் | 157 | எந்தத்திசை | 161 |
| இருகணக | 105 | எந்தன்சட | 14 |
| இருகுழை | 43 | எலும்புநாடி | 204 |
| இருக்கன | 222 | எழுகுநிறை | 237 |
| இருசெப்பென | 94 | எழுதிகழ் | 180 |
| இருப்பவல் | 202 | எனக்கென | 193 |
| இருமலுரோக | 200 | எனையடைந்த | 205 |
| இருவர்மய | 338 | ஏடுக்கொத் | 369 |
| இருவினைபுனை | 160 | ஏதுபுத்தி | 206 |
| இருவினைமங்க | 339 | ஏருஞலே | 275 |
| இருவினையுண் | 339 | ஏலப்பணி | 391 |
| இருளளக | 340 | ஏவினைநேர் | 65 |
| இருளவிரி | 44 | ஏறுமயி | 1 |
| இலக்கியகளப | 117 | ஐங்கரனை | 289 |
| இலகுகனி | 139 | ஐந்துபூதமு | 256 |
| இலவிதழ் | 373 | ஐயுமுறு | 230 |
| இலாபமில் | 260 | ஒருபது | 186 |
| இலைச்சுருட் | 309 | ஒருபொழுது | 140 |
| இல்லையென | 423 | ஒருவரைச் | 427 |
| இளையவர் | 242 | ஒருவரையு | 162 |
| இழுகுமணி | 341 | ஒருவரையொரு | 140 |
| இன்பமுந் | 64 | ஒருவரொடு | 443 |
| ஈனமிகுத் | 385 | ஒழுகூனிரத்த | 177 |
| உடலினூடு | 202 | ஓடியோடி | 118 |
| உடையவர்க | 203 | ஓதிவைத்தவர் | 223 |
| உததியறல் | 45 | ஓராதொன்றைப் | 65 |
| உம்பர்தரு | 2 | ஓலமிட்ட | 236 |
| உயிர்க்கூடு | 118 | ஓலையிட்ட | 207 |
| உய்யஞான | 204 | ககனமு | 233 |
| உருகுமா | 325 | கருப்பிலே | 394 |
| உருக்கார் | 440 | கச்சணி | 208 |
| உருவேறவே | 255 | சடகட | 302 |

| | | |
|---|---|---|
| கடலைச்சிறை | ... | 119 |
| கடலைபொரி | ... | 107 |
| கடல்பரவு | ... | 342 |
| கடற்செகத் | ... | 191 |
| கடாவினி | ... | 157 |
| கடிமா | ... | 158 |
| கடியவேக | ... | 435 |
| கடினதட | ... | 293 |
| கட்டமன்னு | ... | 282 |
| கட்டழகு | ... | 45 |
| கண்கயற் | ... | 49 |
| கண்டுமொழி | ... | 46 |
| கதியை | .. | 120 |
| கதிரவ | ... | 163 |
| கமரிமலர் | ... | 320 |
| கமலமாது | ... | 20 |
| கமலமுகப்பிறை | ... | 342 |
| கமலமொட்டை | ... | 343 |
| கயலைச்சருவி | ... | 251 |
| கயல்விழித்தே | ... | 320 |
| கரங்கமல | ... | 296 |
| கரதமுங்குறி | ... | 257 |
| கரிக்குழல் | ... | 196 |
| கரிக்கொம்பங் | ... | 25 |
| கரிமுகக்கட | ... | 344 |
| கரியபெரிய | ... | 96 |
| கரியமுகில | ... | 412 |
| கரியிணைக் | ... | 141 |
| கரியுரி | ... | 26 |
| கருங்கயகன்று | ... | 142 |
| கருங்கயறி | ... | 411 |
| கருடன்மிசை | ... | 287 |
| கருணைசிறிதுமில் | ... | 315 |
| கருத்ததலை | ... | 188 |
| கருநிறஞ் | ... | 345 |
| கருப்பந்தங் | ... | 26 |
| கருப்புச்சாப | ... | 401 |
| கருப்புவில் | ... | 247 |
| கருகில் ... | ... | 449 |
| கருவடைந்து | ... | 6 |
| கருவாகியெ | ... | 377 |
| கருவினுரு | ... | 104 |
| கரையய | ... | 267 |
| கலகனெனச் | ... | 189 |
| கலகவாள் | ... | 109 |
| கலக்குங்கோ | ... | 270 |
| கலவிபிலி | ... | 101 |
| கலைமட | ... | 200 |
| கலைமேவு | ... | 391 |
| கவடுற்ற | ... | 2[illegible]8 |
| களபமணி | ... | 434 |
| களபமுலை | ... | 87 |
| களபமொழு | ... | 47 |
| களவுகொண்டு | ... | 384 |
| கள்ளக்கு | ... | 232 |
| கள்ளமுள்ள | ... | 422 |
| கறுக்குமஞ்சன | ... | 9 |
| கறுவுமிக்கா | ... | 321 |
| கறைபடு | ... | 162 |
| கனகரும்ப | ... | 121 |
| கனகந்திரள் | ... | 18 |
| கனங்கள் | ... | 48 |
| கனத்தறப் | ... | 192 |
| கனத்திருகிப் | ... | 99 |
| கனத்திரைக்கு | ... | 222 |
| கனமா | ... | 84 |
| கனவாலங் | ... | 419 |
| கனைகடல் | .... | 327 |
| கனைத்ததிர் | ... | 209 |
| கன்றிலுறு | ... | 66 |
| காணுத | ... | 445 |
| காதடருங்கயல் | ... | 18 |
| காமாஸ்திர | ... | 258 |
| காமியத்தழுங் | ... | 173 |
| காரணம | ... | 378 |
| காரணிந்த | ... | 85 |
| காராடக் | .... | 346 |
| காருமரு | ... | 349 |
| கார்குழல் | .... | 395 |
| கார்க்கொத்த | .... | 414 |

| | | | |
|---|---|---|---|
| கார்ச்சார் | 414 | கொடியன | 149 |
| காலமுகி | 450 | கொடியனைய | 23 |
| காலனார்வெங் | 39 | கொண்டாடிக் | 288 |
| காலனிடத் | 178 | கொந்தள | 397 |
| புரியுளா | 209 | கொந்துத்த | 110 |
| கிறிமொழிக் | 110 | கொம்பனையார் | 49 |
| கீதவிநோத | 348 | கொலைகொண்ட | 238 |
| குகரமேவு | 67 | கொலைமத | 68 |
| குசமாகி | 437 | கொலைவிழி | 149 |
| குடந்தைக் | 250 | கொங்கமுகை | 300 |
| குடர்நிண | 67 | கோங்கிள | 187 |
| குதலைமொழி | 299 | கோடான | 349 |
| குதறுகுர | 185 | கோடுசெறி | 333 |
| குதிபாய்ந் | 444 | கோதிமுடித்து | 286 |
| குமரகுருபர | 353 | கோமள | 153 |
| குமரகுருபரமுருக | 152 | கோலகுங்கும | 148 |
| குமரகுருபரமுருகச | 152 | கோலக்காதிற் | 400 |
| குமுதவாய் | 244 | கோலமதி | 89 |
| குயிலொலிமு | 211 | கோவைவா | 273 |
| குருவியென | 211 | சகடத்திற | 122 |
| குரைகட | 407 | சங்குபோன் | 31 |
| குலைத்தமயிர் | 212 | சங்கைதா | 38 |
| குலையமயி | 428 | சத்தமிகு | 50 |
| குவலயமல்கு | 428 | சத்திபாணி | 245 |
| குவளைக்கணை | 191 | சந்தம்ப | 17 |
| குவளைபூசல் | 244 | சந்தனமவ்வாது | 35 |
| குலமுடவி | 108 | சந்தனந்தி | 13 |
| குழவியுமாய் | 349 | சமரமுக | 303 |
| குழைக்குஞ்சந்த | 26 | சயிலாங்கனை | 445 |
| குறித்தமணிப் | 100 | சரக்கேறித்தப் | 311 |
| குன்றுங்குன் | 145 | சரணகமலா | 164 |
| கூர்தலைவிழ்த்து | 213 | சரத்தே | 304 |
| கூர்வேல் | 214 | சரவணசாதா | 264 |
| கெஜநடை | 360 | சரியையா | 304 |
| கேதகைய | 332 | சருவும் படி | 14 |
| கைத்தல | 1 | சாந்தாமில் | 188 |
| கையொத்து | 230 | சாலநெடு | 267 |
| கொங்கைகள் | 48 | சிந்துரகூர | 124 |
| கொங்கைப்பணை | 39 | சிரத்தானத்திற் | 312 |
| கொடியமறலியு | 281 | சிரமங்க | 234 |

| | | | |
|---|---|---|---|
| சிலைநுதல் ... | 350 | தந்தபசி ... | 69 |
| சிவமாதுட ... | 350 | தமரகுரங் ... | 354 |
| சிவனார் | 86 | தமருமமரும் ... | 96 |
| சிறுபறையு ... | 125 | தமிழோதிய ... | 355 |
| சிற்றுயக் கூட் ... | 310 | தரிக்குங்கலை ... | 69 |
| சினத்தவர் ... | 196 | தருணமணி ... | 3[illegible]2 |
| சினத்திலத் ... | 198 | தருநிலை .. | 181 |
| சினமுடுவல் ... | 351 | தருவரிவ ... | 166 |
| சீதவாசனை ... | 288 | தலைமயிர் ... | 381 |
| சீயுதிர மெங்கு ... | 90 | தலையமழித்துச் ... | 356 |
| சீரான கோல ... | 259 | தலைவலி ... | 126 |
| சீருலாவிய ... | 440 | தவப்ரியங் ... | 406 |
| சீர்சிறக்கு ... | 378 | தவர்வாட் ... | 430 |
| சீலமுள ... | 373 | தழையின் ... | 180 |
| சீறலசடன் ... | 90 | தாக்கமரு ... | 215 |
| சுக்கிலச்சு ... | 352 | தாரணிக்கதி ... | 408 |
| சுத்திய ... | 165 | திடமிலி ... | 143 |
| சுருதிமறை ... | 441 | திமிரமாமான ... | 441 |
| சுருதிமுடி ... | 106 | திமிரவுததி ... | 96 |
| சுரும்பணி ... | 397 | திருட்டுவாணி ... | 330 |
| சுருளளக ... | 142 | திருநிலை ... | 180 |
| சூதுகொலை ... | 284 | திருமக ... | 301 |
| செகமாயை ... | 155 | திரைவார் ... | 335 |
| செஞ்சொற் ... | 353 | துகிலும்மருக ... | 315 |
| சேமக்கோ ... | 68 | துஞ்சு கோட்டி ... | 271 |
| சேலால் ... | 426 | துப்பாரப்பா ... | 216 |
| சேனுமயினு ... | 166 | துன்பங்கொண் ... | 75 |
| சேலையடர்த்தால ... | 383 | தெருப்புறத்துத் ... | 52 |
| சைவமுதற் ... | 393 | தெருவினில் ... | 17[illegible] |
| சொரியு ... | 215 | தேதொகு ... | 356 |
| சொருபப் ... | 412 | தேனுந்து முக்கனி ... | 182 |
| ஞாலமெங்கும் ... | 275 | தொக்கருக ... | 197 |
| ஞானங்கொள் ... | 126 | தொடத்துள ... | 199 |
| தகரநறு ... | 97 | தொடரியமன் ... | 30 |
| தகரநறை ... | 51 | தொடுத்த ... | 307 |
| தகைமைத்தனி ... | 94 | தொந்திசரி ... | 53 |
| தடக்கைப் ... | 17 | தொய்யில் ... | 423 |
| தண்டேனுண் ... | 32 | தொல்லை ... | 282 |
| தண்டையணி ... | 5[illegible] | தோகைமயி ... | 91 |
| புருவநெறித்து ... | 219 | தோடப்பாமற் ... | 277 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தோடுழுங் | .. | 438 | பச்சிலையிட்டு | .... | 447 |
| தோதகப்பெரு | ... | 357 | பஞ்சபாதக | ... | 21 |
| தோரணகனக | ... | 150 | பஞ்சபாதகன் | ... | 129 |
| தோலெலும்பு | ... | 442 | படர்புவியின் | ... | 56 |
| தோலொடு | .. | 54 | படிதனி | ... | 77 |
| தோழமை | ... | 276 | படுகொலை | ... | 371 |
| நகைத்து | .... | 183 | பதித்த செந் | ... | 11 |
| நகையொடு | ... | 225 | பதுமவிரு | ... | 75 |
| நாசர்தங் | ... | 173 | பத்தர்கணப்ரிய | | 279 |
| நாட்டந் | ... | 407 | பத்தியால் | ... | 252 |
| நாதவிந்து | ... | 80 | பந்தப்பொற் | ... | 399 |
| நாமேவு | .... | 295 | பந்தாடி | ... | 265 |
| நாலு மைந்து | ... | 55 | பரவரி | ... | 168 |
| நாவேறு | ... | 167 | பரவியுனது | ... | 429 |
| நிகம்மெனி | ... | 127 | பரவுநெடுங் | ... | 386 |
| நிகரில் பஞ்ச | .... | 428 | பரிமளகள | ... | 70 |
| நிதிக்குப்பிங் | ... | 55 | பரிமள மல | ... | 151 |
| நிராமய | .... | 264 | பரியகைப் | ... | 322 |
| நிரைதரு | ... | 435 | பருத்தந்தத் | ... | 28 |
| நிலவினி | ... | 168 | பருத்தபற் | ... | 193 |
| நிலையாக | ... | 217 | பழமைசெப்பி | .. | 118 |
| நிலையாய்பொரு | ... | 70 | பழிப்பர் | ... | 377 |
| நிறைமதி | ... | 173 | பறைபடும் | | 163 |
| நினைதுதிரு | ... | 4 | பனியின்விந்து | ... | 183 |
| நினைத்ததெட் | ... | 217 | பாசத்தால் | ... | 379 |
| நீதத்துவ | ... | 391 | பாணமலரது | ... | 357 |
| நீரிழிவு | .... | 417 | பாதாள | ... | 259 |
| நீலமஞ்சாண | ... | 268 | பாதிமதி | .. | 174 |
| நீலமயில் | ... | 446 | பாரவித | ... | 305 |
| நீள்புயற் | ... | 443 | பாரியான | ... | 92 |
| நெறித்துப் | ... | 251 | பாலாய் | ... | 358 |
| நெற்றி வெயர் | ... | 128 | பாற்றுக் | ... | 415 |
| நேசா சாரா | ... | 299 | பிறர்புக | ... | 292 |
| பகர்தற் | ... | 86 | புகரப்புங்கப் | .... | 71 |
| பகலவ | ... | 242 | புகரில்சேவல | ... | 79 |
| பகலிரவி | ... | 246 | பிடிக்கணி | ... | 88 |
| பகலிரவினுங் | ... | 118 | புடைசெப்பென | ... | 96 |
| பக்கரை | ... | 2 | புணர்முலை | ... | 358 |
| பங்கமேவும் | ... | 31 | புமியதனிற் | ... | 184 |
| பங்கயனார் | ... | 312 | புரக்கவந்த | ... | 78 |

புருவச்செஞ் ... 388
புலையனை ... 35
புவனத்தொரு ... 246
புற்புதமெனும ... 280
பூசலிட்டு ... 220
பூரணவார ... 76
பெரியதோர் ... 130
பெருக்கச்சஞ் ... 57
பெருக்கவு ... 194
பேதகவி ... 324
பையரவு ... 424
பொரியப் ... 190
பொருப்புறுங் ... 16
பொருவன ... 422
பொருவிக்கங் ... 220
பொருளின் ... 247
பொருள்கவர் ... 248
பொற்சித்ரப் ... 280
பொற்பதத்தி ... 221
பொன்றலைப் ... 274
பொன்றுமன் ... 419
போககற்பக் ... 359
போதகங் ... 80
மகரகேத ... 169
மகரமெறி ... 316
மங்கைக்கண ... 409
மங்கைசிறு ... 71
மஞ்செனுங்குழ ... 58
மந்தைக்கடைக் ... 272
மருக்குல ... 194
மருமலரி ... 104
மருமல்லி ... 416
மருவரு ... 305
மருவுமஞ்சி ... 330
மருவுமலர் ... 309
மருவேசெறித் ... 156
மலரணி ... 131
மலரணை ... 382
மலைமுகைச் ... 223
மனத்தின்பங் ... 27
மனிலை ... 392
மனைகனக ... 71
மனைமாண் ... 445
மனையவள் ... 285
மன்றலங் ... 12
மாகசஞ் ... 283
மாதர்கொங் ... 443
மாதர்வச ... 306
மாயவாடை ... 59
மாயாசொரூப ... 262
மாலாசைகோப ... 260
மாலையில்வந்து ... 398
மானைவிடத்தை ... 360
மின்னிடை ... 418
முகத்தூக்கிக ... 331
முகத்தைப்பிணுக்கி ... 184
முகத்தைமிணுக்கிகள் 224
முகமெலா ... 390
முகிலளக ... 102
முகிலாமெனுமள ... 60
முகிலாமெனுவார் ... 389
முகிலுமிரவியு ... 225
முகிலையிகல் ... 317
முகைமுளரிப் ... 132
முடித்தமுழவினர் ... 226
முதிரவுழை ... 133
முதிருமார ... 306
முத்துக்குச் ... 134
முத்தாத்தெறிக்க ... 226
முத்துரவ ... 392
முத்தைத்தரு 5
முத்தோலை ... 370
முந்துதமிழ் ... 35
முறுகுகாள 169
முருகுசெறிகுழலவிழ 134
முருகுசெறிகுழற்சொரு 318
முருகுசெறிகுழல்முகி 98
முலைபுளக ... 227
முலைமுகந்தி ... 72
முலையைமறைத் ... 299
முல்லைக்கு ... 231
முழுகிவட ... 233

| | | | |
|---|---|---|---|
| மூப்புற்றுச் ... | 73 | வாதம்பித்தமி ... | 136 |
| மூலங்கிள ... | 135 | வாதினை ... | 382 |
| மூலமந்திர . | 82 | வாரணந்தனை ... | 81 |
| மூளும்வினை .. | 61 | வாரணமுகங் ... | 375 |
| மேகமெனுங் | 263 | வாரமுற்ற ... | 170 |
| மேகமொத்த ... | 361 | வாருற்றெழு ... | 228 |
| மைக்கணிக்கன் ... | 297 | வார்குழலைச் ... | 154 |
| மொகமொகென ... | 4 ,2 | வார்குழையை ... | 375 |
| மொழியநிறங் ... | 362 | வாலவய ... | 403 |
| மோதியிறுகி . | 263 | வானவராதி ... | 399 |
| வங்கம்பெறு ... | 227 | வானோர் ... | 404 |
| வசனமிக ... | 144 | விடமடைசு ... | 3 |
| வஞ்சகலோப ... | 179 | விடமுமமு ... | 319 |
| வஞ்சங்கொண் ... | 62 | விடமும்வடி ... | 171 |
| வஞ்சத்துட .. | 73 | விடுமத ... | 363 |
| வடத்தை ... | 10 | விதமிசைந் ... | 137 |
| வடவையன ... | 363 | விதிபோலு ... | 33 |
| வடிவது நீ | 420 | விதியதாக ... | 364 |
| வட்டவாட் ... | 197 | விந்ததி ... | 74 |
| வண்டார் ... | 266 | விந்துப்புள ... | 364 |
| வதனசரோ .. | 424 | விரகொடு ... | 329 |
| வந்துவந்து ... | 62 | விரித்த ... | 172 |
| வரதாமணி ... | 144 | விரைமருவு ... | 105 |
| வரிக்கலை | 453 | விலக்கு ... | 308 |
| வரிசேர்ந் ... | 186 | விலையிறுக் ... | 121 |
| வரித்தகும் . | 406 | விழியால் ... | 159 |
| வரியார் ... | 74 | விறல்மார ... | 34 |
| வரிவிழி ... | 372 | வினைக்கின ... | 195 |
| வருத்தங்காண .. | 274 | வீறமத ... | 374 |
| வருமயிலொத் ... | 436 | வீறுபுழு ... | 367 |
| வரைத்தடங் ... | 15 | வெங்களம் ... | 33 |
| வரைவில் .... | 234 | வெஞ்சரோ ... | 63 |
| வலிவாத .. | 368 | வெடுத்த ... | 298 |
| வள்ளமுகைப் ... | 393 | வெருட்டி ... | 249 |
| வறுமைப்பாழ் ... | 177 | வெற்பென ... | 400 |
| வனசமொத்த ... | 371 | வெற்றிசெய ... | 229 |
| வாசித்தநூல ... | 270 | வேதத்திற் ... | 370 |
| வாசித்துக்கா ... | 248 | வேயிசைந்தெழு ... | 83 |
| வாட்படச் ... | 408 | வேலைதோற்க ... | 402 |
| வாதமொடு ... | 176 | வேழமுண்ட ... | 410 |



உ

முருகக்கடவுள் துணை.

திரு அருணை.

ஆசிரிய விருத்தம்.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

வேலுமயிலுந் துணை.

EXCELSIOR PRESS, MADURA



உ

கணபதி துணை.

முருகக்கடவுள் துணை.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.



## விநாயகர் துதி.

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
*முத்தமி ழடைவினை முற்படு ‡கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு †சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே. (க)

---

*முத்தமிழடைவு - பாரதக்கதை. ‡கிரி - மேருமலை.
†சுப்பிரமணி - முருகக்கடவுள்.

## இக்கவி முடிபு.

கரிமுகன் அடிபேணி...அடியவர் புத்தியிலுறைபவ! கற்பகம்! என, வினை...ஏகும் (ஆதலால் யான்) ...அரன் மகன்...மதயானை (ஆகிய) மத்தளவயிறனை, உத்தமிபுதல்வனை...மலர்கொடுபணிவேன். (என்செய்து, எதன் பொருட்டுப் பணிவேன் எனின்) ...முதல்வோனே! ...அதிதீரா! ...பெருமாளே! (எனத்துதிசெய்து, எடுத்துக்கொண்ட துதியாகிய இந்நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுப் பணிவேன் என்க)

---

தந்ததனத் தானதனத் தனதான.

*உம்பர்தருத் †தேநு ‡மணிக்    கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத்    துணர்வூறி
இன்பரசத் தேபருகிப்    பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற்    றருள்வாயே
தம்பிதனக் காகவனத்    தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக்    கனியோனே
அன்பர்தமக் கானநிலைப்    பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப்    பெருமானே (௨)

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான.

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
§பக்ஷியெனு முக்ர||துர    கமும ¶நீபப
பக்குவம லர்த்தொடையும் *அக்குவடு புக்கொர்தொளை
பட்டுருவ விட்டருள்கை    வடிவேலும்
திக்கதும திக்கவரு †குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றியப    னிருதோளும்

---

* உம்பர்தரு - சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் தெய்வ விருக்ஷங்கள். †தேநு - காமதேனு என்னும் தெய்வப்பசு. ‡மணி - சிந்தாமணியென்னும் தெய்வரத்நம் இம்மூன்றும் தம்மை யடைந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரவல்லன. §பக்ஷி - மயில். ||துரகம் - குதிரை. ¶நீபம் - கடம்ப.

* அக்குவடு - கிரவுஞ்சகிரி. † குக்குடம் - கோழி.

செப்பதியும் வைத்துயர்திருப்புகழ்விருப்பமொடு
செப்பெனவெனக்கருள்கை மறவேனே
இக்கவரை நற்கனிகள் சர்க்கரைபருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர் *வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனு மருளாழி
வெற்ப †குடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே. (௩)

---

தனதனன தான தனதனன தான
தனதனன தான தனதான.

விடமடைசு வேலை யமரர்படை சூலம்
விசையன்விடு பாண மெனவேதான்
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேது மறியாதே
‡ கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனின் மூழ்கி வறிதாய
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே
இடையர்சிறு பால்நெய் திருடிநெடி தேக
இறைவன்மகள் வாய்மை யறியாதே
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னுமம் முறைகூற
அடையலவ ராவி வெருவஅடி கூர
அசலுமறி யாம லவரோட
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளு மானை முகவோனே. (௪)



---

* வண்டு எச்சில் - தேன், † குடிலம்-வட்டம், ‡ கடி - மணம்,

தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன தனதான.

நினது திருவடி சத்திமயிற்கொடு
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறையஅமுதுசெய் முப்பழமப்பமும் நிகழ்பால்தேன்
நெடிய வளைமுறி யிக்கொடு லட்டுகம்
நிறைவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமு மிளநீரும்
மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக வொற்றைம ருப்பனை வலமாக
மருவு மலர்புனை * தொத்திர சொற்கொடு
வளர்கை † குழைபிடி ‡ தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே
தெனன தெனதென தெத்தென னப்பல
சிறைய § அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பிட்டுநி ணக்குடல் செறிமூளை
செருமு வுதரநி ரப்புசெ ருக்குட
னிரைய வரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே
எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவி லெழுமோசை
இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிருநிசிசரை பெலியிட்டருள் பெருமாளே. (௫)

---

* தொத்திர சொற்கொடு - தோத்திரசொல் கொண்டு.
† குழை - காது.
‡ தொப்பணம் - தோப்பணம், தோப்புகரணம்,
§ அறுபதம் - ஈ,

உ

குமரக்கடவுள் துணை.

# திருப்புகழ்.

---

## நூல்.

தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன தனதான.

1. முத்தைத்தரு பத்தித்திருநகை
*அத்திக்கிறை சத்திச்சரவண
முத்திக்கொரு வித்துக்குருபர எனவோதும்
முக்கட்பர மற்குச் † சுருதியின்
முற்பட்டது ‡ கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத்தமரரு மடிபேணப்
பத்துத்தலை தத்தக்கணை § தொடு
ஒற்றைக் || கிரி மத்தைப்பொருதொரு
பட்டப்பகல் வட்டத்திகிரியி லிரவாகப்
¶ பத்தற்கிர தத்தைக்கடவிய
* பச்சைப்புயல் மெச்சத்தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித்தருள்வது மொருநாளே
தித்தித்தெய வொத்தப்பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப்பயிரவி
திக்கொட்க நடிக்கக்கழுகொடு கழுதாடத்
திக்குப்பரி அட்டப்பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத்தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத்ரிகடக எனவோதக்

---

* அத்தி - தெய்வ யானை. † சுருதியின் முற்பட்டது - பிரணவம். ‡ இருவர் - பிரமவிட்டுணுக்கள். § தொட்டு என்பது தொடு எனத் தொகுக்கப்பட்டது. || கிரிமத்தைப் பொருது - மந்தரகிரியாகிய மத்தைக் கொண்டு (திருப்பாற்கடலைக்) கடைந்து. ¶ பத்தன் - அருச்சுனன்.
* பச்சைப்புயல் - விட்டுணு.

கொத்துப்பறை கொட்டக்களமிசை
குக்குக்குகு குக்குக்குகுகுகு
குத்திப்புதை புக்குப்பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற்றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக்குலகிரி
குத்துப்பட - வொத்துப்பொரவல பெருமாளே.

---

### இதன் முடிபு

அத்திக்கிறை! ...சரவண; ...குருபர! எனவோதும் பரமற்கு ..கற்பித்து, இருவரும்...அமரரும் அடிபேண, ...பயிரவிநடிக்க, —கழுதாட, ...அட்டபயிரவர் ...ஓத, பறைகொட்ட, ...கூகை புக்குப்பிடியென, ...அவுணரைவெட்டிப் பலியிட்டு, ...கிரிகுத்துப்பட்ட ...பொரவலபெருமானே!...தலைத்தக் கணைதொட்டு, ...கிரிமத்தைப்பொருது, ...பகல்...இராக ...இரதத்தைக்கடவிய பச்சைப்புயல் மெச்சத்தகு பொருளே! (நீ எளியேனை) இரக்ஷித்தருளும் ஓர் நாளும் (உளதோ?)

---

## முருகக்கடவுளின் முக்கிய திருப்பதிகள் ஆறனுள்

முதலாவது

## திருப்பரங்குன்றம்.

தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த தனதான.

2 கருவடைந்து பத்துற்றதிங்கள்
வயிறிருந்து முற்றிப்பயின்று
கடையில்வந்து தித்திக்குழந்தை வடிவாகிக்
கழுவியங்கெ டுத்துச்சுரந்த
முலை*யருந்து விக்கக்கிடந்து
கதறியங்கை கொட்டித்தவழ்ந்து நடமாடி
அரைவடங்கள் கட்டிச்சதங்கை
யிடு†குதம்பை பொற்சுட்டிதண்டை
அவையணிந்து முற்றிக்கிளர்ந்து வயதேறி

* அருந்துவிக்க — அருந்த ஊட்ட. † குதம்பை — காதணி.

அரியபெண்கள் நட்பைப்புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமியனுமுன்க்ரு பைச்சித்தமென்று பெறுவேனோ

இரவியிந்த்ரன் வெற்றிக்குரங்கி
னரசரென்று மொப்பற்ற *வுந்தி
யிறைவன் †எண்கி னக்கர்த்தனென்றும் நெடுநீலன்

எரியதென்றும் ருத்ரற்சிறந்த
அநுமனென்றும் ஒப்பற்றவுண்டர்
எமருமிந்த வர்க்கத்தில்வந்து புனமேவ

அரியதன்ப டைக்கர்த்தரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டைவென்று
அரிமுகுந்தன் மெச்சுற்றபண்பின் மருகோனே

அயனையும்பு டைத்துச்சினந்து
உலகமும்ப டைத்துப்பரிந்து
அருள்பரங்கி ரிக்குட்சிறந்த பெருமாளே.

---

தனத்ததந்தன தனதன தனதன
தனத்ததந்தன தனதன தனதன
தனத்ததந்தன தனதன தனதன தனதான

3 உனைத்தினந்தொழு திலனுன தியல்பினை
உரைத்திலன்பல மலர்கொடுனடியிணை
உறப்பணிந்திலெ னொருதவமிலனுன தருள்மாறு

உளத்துளன்பின ருறைவிடமறிகிலன்
விருப்பொடுன்சிக ரமும்வலம்வருகிலன்
உவப்பொடுன்புகழ் துதிசெயவிழைகிலன் மலைபோலே

கனைத்தெழும் ‡பக டதுபிடர்மிசைவரு
கறுத்தவெஞ்சின §மறலிதனுழையினர்
கதித்தடர்ந்தெறி ||கயிறடு ¶கதைகொடு பொருபோதே

---

* உந்தியிறைவன் - பிரமன். † எண்கினக்கர்த்தன் - கரடிமுகமுள்ள சாம்புவான். ‡ பகடு - எருமைக்கடா. § மறலி - யமன். || கயிறு - பாசம் ¶ கதை - தண்டாயுதம்.

கலக்குறுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்துநைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்திலென்பய மறமயில்முதுகினில் வருவாயே

*வினைத்தலந்தனி லலகைகள்குதிகொள
விழுக்குடைந்துமெ யுகுதசைகழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவுணரையமர் புரிவேலா

மிகுந்தபண்பயில் குயில்மொழியழகிய
கொடிச்சிகுங்கும முலைமுகடுழுநறை
விரைத்தசந்தன ம்ருகமதபுயவரை யுடையோனே

†தினத்தினஞ்சதுர் மறைமுனிமுறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவிணவரொடு
சினத்தைநிந்தனை செயுமுனிவரர்தொழ மகிழ்வோனே

தெனத்தெனந்தென எனவரியளிநறை
தெவிட்டஅன்பொடு பருகுயர்பொழில்திகழ்
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே.(உ)

---

4 அருக்குமங்கையர் மலரடிவருடியெ
கருத்தறிந்தபி னரைதனிலுடையினை
அவிழ்த்துமங்குல அரசிலைதடவியு மிருதோளுற்

றணைத்துமங்கையி னடிதொறுநகமெழ
வுதட்டைமென்று பலிடுகுறிகளுமிட
அடிக்களந்தனில் மயில்குயில்புறவென மிகவாய்விட்

டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
இரத்தைதமிஞ்சிடு மனுபவமுறுபலம்
உறக்கையின்கனி நிகரெனஇலகிய தனமேல்வீழ்ந்

திருக்கலங்கிமெ யுருகிடவமுதுகு
பெருத்தவுந்தியின் முழுகிமெயுணர்வற
வுழைத்திடுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ

* வினைத்தலம் - போர்க்களம். † தினந்தின மென்றபாலது சந்தம் நோக்கி தினத்தினமென விகாரப்பட்டது.

இருக்குமந்திர மொழிவகை * முனிபெற
வுரைத்தசம்ப்ரம சரவணபவகுக
இதத்தஇங்கித மிலகியஅறுமுக எழில்வேளென்

றிலக்கணங்களு மியலிசைகளுமிக
விரிக்குமம்பல மதுரிதகவிதனை
யியற்றுசெந்தமிழ் விதமொடுபுயமிசை புனைவோனே

செருக்குமம்பல மிசைதனிலசைவுற
நடித்தசங்கரர் வழிவழியடியவர்
திருக்குருந்தடி யருள்பெறஅருளிய குருநாதா

திருக்குழந்தையு மெனஅவர்வழிபடு
குருக்களின்திற மெனவருபெரியவ
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே. (௩)

---

5. கறுக்குமஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கிநெஞ்சற எறிதருபொழுதொரு
கனிக்குளின்சுவை யமுதுகுமொருசிறு நகையாலே

†களக்கொழுங்கனி வலைகொடுவிசிறியும்
மனைக்கெழுந்திரு மெனமனமுருகவொர்
கவற்சிகொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி

நறைத்தபஞ்சணை மிசையினில்மனமுற
அணைத்‡தகந்தனி லிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திடஅமுதிதழ்பருகியு மிடறூடே

நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
இசைத்துநன்கொடு மனமதுமறுகிட
நழுப்புநஞ்சன சிறுமிகள்துயரற அருள்வாயே

நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரத்த§கஞ்சுகி முடிநெறுநெறுவென
நிரைத்தஅண்டமு கிடுகிடுகிடுவென வரைபோலும்

---

* முனி — அகத்தியர். † களக்கொழுங்கனி—வளமானகண்டத்தொனி.
‡ஆகம் என்பது அகம் எனத்திரிந்தது. ஆகம் - மார்பு. § கஞ்சுகி — பாம்பு— அதாவது ஆதிசேஷன்.

*நிவத்ததிண்கழல் நிசிசரருரமொடு
சிரக்கொடுங்குலை மலைபுரை தரஇரு
நிணக்குழம்பொடு குருதிகள்சொரிதர அடுநீரா

திறற்கருங்குழ லுமையவளருளுறு
புழைக்கைமன் கட கயமுகமிகவுள
சிவக்கொழுந்தன கணபதியுடன்வரு மிளையோனே

சினத்தொடுஞ்†சம னுடைபடநிறுவிய
பதற்குளன்புறு புதல்வனமணிபுரு
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே. (ச)

---

௬. வடத்தைமிஞ்சிய புளகிதவனமுலை
தனைத்திறந்தெதிர் வருமிளைஞர்களுயிர்
மயக்கியைங்கணை மதனனையொருஅரு மையினாலே

‡வருத்திவஞ்சக நினைவொடுமெலமெல
நகைத்துநண்பொடு§வருமிருமெனவுரை
வழுத்தியங்கவ ரொடுசருவியுமுடல் தொடுபோதே

விடத்தைவென்றிடு படைவிழிகொடுமுள
மருட்டிவண்பொருள் கவர்பொழுதினில்மயல்
விருப்பெனும்படி மடிமிசையினில்விழு தொழில்தானே

விளைத்திடும்பல கணிகையர்தமதுபொய்
மனத்தைநம்பிய சிறியனை வெறியனை
விரைப்பதந்தனில் அருள்பெறநினைகுவ துளதோதான்

குடத்தைவென்றிரு கிரியெனஎழில்தள
தளத்தகொங்கைகள் மணிவடமணிசிறு
குறக்கரும்பின்மெய் துவள்புயனெனவரு வடிவேலா

குறைக்கருங்கடல் திருவணையெனமுனம்
அடைத்திலங்கையி னதிபதிநிசிசரர்
குலத்தொடும்பட வொருகணைவிடுமரி மருகோனே

---

* நிவத்த - நிவந்த, விளங்கிய † சமன் - யமன். ‡ வருத்தி - வருவித்து. § வருமிரும் - வாரும் இரும்.

திடத்தெதிர்ந்திடு மசுரர்கள்பொடிபட
அயிற்கொடும்படை விடுசரவணபவ
திறற்குகன்குரு பரனெனவருமொரு முருகோனே

செழித்ததண்டலை தொறுமிலகியகுட
வளைக்குலந்தரு தரளமுமிகுமுயர்
திருப்பரங்கிரி வளநகர்மருவிய பெருமாளே. (ரு)

---

தனத்ததந் தந்தத் தத்தனதந்தந்
தனத்ததந் தந்தத் தத்தனதத்தந்
தனத்ததந் தத்தந் தத்தனதத்தந் தனதான.

7. பதித்தசெஞ்சந்தப் பொற்குடநித்தம்
பருத்துயர்ந்தண்டத் திற்றலைமுட்டும்
பருப்பதந்தந்தச் செப்பவையொக்குந் தனபாரம்

*படப்புயங்கம்பற் கக்குகடுப்பண்
செருக்குவண்டம்பப் பிற்கயலொக்கும்
பருத்தகண்கொண்டைக் கொக்குமிருட்டென் றிளைஞோர்கள்

துதித்துமுன்கும்பிட் டுற்றதுரைத்தன்
புவக்கநெஞ்சஞ்சச் சிற்றிடைசுற்றுந்
துகிற்களைந்தின்பத் தார்க்கமளிக்குங் கொடியார்பால்

துவக்குணும்பங்கப் பித்தனவத்தன்
புவிக்குளென்சிந்தைப் புத்திமயக்கந்
துறக்கநின்தண்டைப் பத்மமெனக்கென் றருள்வாயே

குதித்துவெண்சங்கத் தைச்சுறவெற்றுங்
கடற்கரந்தஞ்சிப் புக்கவரக்கன்
குடற்சரிந்தெஞ்சக் குத்திவிதிர்க்குங் கதிர்வேலா

குலக்கரும்பின்சொற் றத்தை†யிபப்பெண்
தனக்குவஞ்சஞ்சொற் ‡பொச்சையிடைக்குங்
குருக்குருங்குங்குக் குக்குருக்குங் குருகூடு

---

* படப்புயங்கம் பல்கக்குகடு, பண்செருக்கு வண்டு, அம்பு, அப்பிற்கயல் எனப்பிரிக்க. † இபப்பெண் - தெய்வயானை. ‡ பொச்சையிடை - காட்டினிடத்தில்.

திதித்திதிந்திந்தித் தித்தியெனக்கொம்
பதிர்த்துவெண்சண்டக் கட்கம்விதிர்த்துந்
திரட்குவிந்தங்கட் பொட்டெழவெட்டுங் கொலைவேடர்

தினைப்புனஞ்சென்றிச் சித்தபெணைக்கண்
டுருக்கரந்தங்குக் கிட்டியணைத்தோன்
திருப்பரங்குன்றிற் புக்குளிருக்கும் பெருமாளே.(சு)

---

தந்தனந் தந்ததன தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன தனதான.

8. மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்

மண்டிடுந்*தொண்டையமு துண்டுகொண்டன்புமிக
வம்பிடுங்கும்பகன தனமார்பில்

ஒன்றஅம்பொன்றுவிழி கன்றஅங்கங்குழைய
உந்தியென்கின்றமடு விழுவேனை

உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்

பன்றியங்கொம்புகம டம்புயங்கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே

பஞ்சரங்கொஞ்சுகிளி வந்துவந்தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா

சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகம்பைம்பொன்மலர் செறிசோலை

திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே. (எ)

---

* தொண்டை - கொவ்வைக்கனி.

தந்தனந் தனந்ததந்த
தந்தனந் தனந்ததந்த
தந்தனந் தனந்ததந்த தனதான.

9. சந்தனந் திமிர்ந்தணைந்து
குங்குமங் கடம்பிலங்கு
சம்பகஞ் செறிந்திலங்கு திரடோளும்
தண்டையஞ் சிலம்பலம்ப
வெண்டையஞ் சலஞ்சலென்று
சந்தமஞ் சதங்கைகொஞ்ச மயிலேறி
திந்திமிந் திமிந்திமிந்தி
தந்தனந் தனந்தனென்று
சென்றசைந் துகந்துவந்து க்ருபையோடே
*சிந்தையங் குளம்புகுந்து
சந்ததம் புகழ்ந்துணர்ந்து
செம்பதம் பணிந்திரென்று மொழிவாயே
அந்தமந் திகொண்டிலங்கை
வெந்தழிந் திடும்பகண்டன்
அங்கமுங் குலைந்தரங்கொள் பொடியாக
அம்பகும் பனுங்கலங்க
வெஞ்சினம் புரிந்துகன்ற
அம்புகொண் டுவென்றகொண்டல் மருகோனே
இந்துவுங் கரந்தும்பை
கொன்றையுஞ் சலம்புனைந்தி
டும்பரன் சிலம்பமர்ந்த குமரேசா
†இந்திரன் பதம்பெறண்டர்
தம்பயங் கடிந்துமுந்த
எங்கணுங் கமழ்ந்திருந்த பெருமாளே.(அ)

---

* சிந்தை அம் குளம் - மனமாகிய அழகிய கோயில்.
† இந்திரன்பதம்பெற அண்டர்எனப்பிரிக்க, அகரம் தொகுத்தல் விகாரம்.

தந்தந்தன தந்தந்தன தந்தந்தன தந்தந்தன
தந்தந்தன தந்தந்தன தனதான.

10. *எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களில்
என்றுந்துயர் பொன்றும்படி யொருநாளே
இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பிணை
†யென்றும்படி பந்தங்கெட மயிலேறி
வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந்திசை
மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்
வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சன்துக ளொன்றுங்கொளும்
வண்டன்தமி யன்றன்பவம் ஒழியாதோ
தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணிநூபுரம்
சந்தந்தொனி கண்டும்புய லங்கன்சிவ னம்பன்பதி
சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்
கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழு ‡மண்டன்கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்கும்பொழில்
கந்தங்கொள்ப ரங்குன்றமர் பெருமாளே. (௰)

---

தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன தனதான.

11. சருவும்படி §வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர்கண்களின் வசமாகிச்
சயிலங்கொளு மன்றல் பொருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சுனை துன்றியெ ழுந்திட இதமாவே

---

* எந்தன், இது எனறன் என்பதன் மரூஉ. † என்றும்படி - எப்போதும்போல. ‡ அண்டன் - நக்கீரர். § வந்தனன் என்பது வந்து என்னும் பொருளைத்தரும் முற்றெச்சம்.

இரவும்பக லந்தியுநின்றிடு
குயில்வந்திசை தெந்தெனவென்றிட
இருகண்கள்து யின்றிடலின்றியும் அயர்வாகி
இவணெஞ்சு *ப தன்பதனென்றிட
மயல்கொண்டுவ ருந்தியவஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்திலகும்பதம் அடைவேனோ
திருவொன்றிவி ளங்கிய †அண்டர்கள்
மனையின்தயி ருண்டவனெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் ‡வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநிறம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்கமு குந்தன்மகிழ்ந்தருள் மருகோனே
மருவுங்கடல் துந்துமியுங்குட
முழவங்கள்கு மின்குமினென்றிட
வளமொன்றிய செந்திலில்வந்தருள் முருகோனே
மதியுங்கதி ரும்புயலுந்தின
மறுகும்படி அண்டமிலங்கிட
வளர்கின்றப ரங்கிரிவந்தருள் பெருமாளே.(க0)

---

தனத்தனந் தந்ததான தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான தனதான.

12. வரைத்தடங் கொங்கையாலும் வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலும் §அனைவோரும்

---

* பதன்பதனென்றிட-பதைபதைக்க. † அண்டர்-இடையர்
‡ வண்டமிழ்பயில்வோர்பின் திரிகின்றவன் என்றது: —
“கணிவண்ணன் போவென்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டாம் — துணிவொன்றிச்
செந்நாப் புலவனியான் செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.' என்றதிருமழிசையாழ்வார் பின்சென்றதை

§ அனைவோரும் வசிச்செயுந்தொண்டை — பலராலும் வசிப் படுத்தப்படும் கொவ்வைக்கனி யொத்த இதழ்.

வடுச்செயுந்தொண்டையாலும் *விரைத்திடுங்கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல மிகக்கெடுந் தொண்டனேனும்
†இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேத மொழித்திடுந் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீக மருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன் ‡இளக்ரவுஞ் சந்தனோடு
துளக்கெழுந் தண்டகோள மளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோகம் அழித்தவன் சம்ப்ரதாயம்
கெடப்பருஞ் சண்டவேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பர்சேனை துளக்கவென் றண்டமூடு
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே
தினைப்புனஞ் சென்றுலாவு குறத்தியின் பம்பராவு
திருப்பரங் குன்றமேவு பெருமாளே. (கக)

---

தனத்தனந் தந்தன தனத்தனந் தந்தன
தனத்தனந் தந்தன தந்ததான.

13. பொருப்புறுங்கொங்கையர் பொருட்கவர்ந்தொன்றிய
பிணக்கிடுஞ்சண்டிகள் வஞ்சமாதர்
§புயற்குழன் றங்கமழ் ||அறற்குலந் தங்கவிர்
முருக்குவண்செந்துவர் தந்துபோகம்
அருத்திடுஞ்சிங்கியர் தருக்கிடுஞ்செங்கயல்
அறச்சிவந்தங் ¶கையில் அன்புமேவும்
அவர்க்குழன் றங்கமு மறத்தளர்ந்தென் பயன்
அருட் *பதம்பங்கய மண்புருதோ
யிருத்தனும்பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித் †தெனுங்கும்பிடு கர்தவேளே

* விரை – மணம். † இனற்படுந்தொந்தவாரி – துன்பப்படுகின்ற வினைத் தொடர்புள்ள பிறவிக்கடல். ‡ இள – இளமையாகிய. § புயல்குழன் றங்கமழ் என்பிரிக்க. || அறல் – கருமணல். ¶ கையில் – கைப்பொருளில்.
* பதபங்கய மெனற்பாலது சந்தநோக்கி இயல்பாயிற்று. † எனும் – என்னும்.

இடுக்கண்உடந்துஞ்சமனரைப்பெருந்திண்கழு
மிசைக்கிடுஞ்செந்தமி ழங்கவாயா
செருக்குதண்சம்பக வனத்திடங்கொங்கொடு
திறற்செழுஞ்சந்தகில் துன்றிநீடு
தினைப்புனம்பைங்கொடி தனத்துடன்சென்றணை
திருப்பரங்குன்றுறை தம்பிரானே.(கஉ)

---

தனத்தத்தந்தனந் தனத்தத்தந்தனந்
தனத்தத்தந்தனந் தனதான.

14. தடக்கைப்பங்கயங் கொடைக்குக்கொண்டல்தண்
டமிழ்க்குத்தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற்புண்படுந்
தளர்ச்சிப்பம்பரந் தனையூசற்
கடத்தைத்துன்பமண் சடத்தைத்துஞ்சிடுங்
கலத்தைப்பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
சுணத்திற்சென்றிடந் திருத்தித்தண்டையங்
கழற்குத்தொண்டுகொண் டருள்வாயே
படைக்கப்பங்கயன் துடைக்கச்சங்கரன்
புரக்கக்கஞ்சைமன் பணியாகப்
பணித்துத்தம்பயந் தணித்துச்சந்ததம்
பரத்தைக்கொண்டிடுந் தனிவேலா
குடக்குத்தென்பரம் பொருப்பிற்றங்குமங்
குலத்திற்கங்கைதன் சிறியோனே
குறப்பொற்கொம்பைமுன் புனத்திற்செங்கரங்
குவித்துக்கும்பிடும் பெருமாளே.

---

தந்தனந் தந்தத் தனதான.

15. சந்ததம்பந்தத் தொடராலே
சஞ்சலந்துஞ்சித் திரியாதே
கந்தனென்றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண்டன்புற் றிடுவேனோ

*தந்தியின்கொம்பைப் புணர்வோனே
ஏங்கரன்பங்கிற் †சிவைபாலா
செந்திலங்கண்டிக் கதிர்வேலா
தென்பரங்குன்றிற் பெருமாளே. (கரு)

தனதந்தன தந்தன தந்தன தனதந்தன தந்தன தந்தன
தனதநதன தந்தன தந்தன—தனதான.

16. கனகந்திரள் கின்றபெருங்கிரி தனில்வந்துதக தகனென்றிடு
கதிர்மிஞ்சிய ‡செண்டையெறிந்திடு கதியோனே
§கடமிஞ்சிய னந்தவிதம்புணர் கவளந்தனை யுண்டுவளர்ந்திடு
கரியின்றுணை யென்றுபிறந்திடு முருகோனே
||பனகந்துயில் கின்றதிறம்புனை கடல்முன்புக டைந்தபரம்பரர்
படரும்புய லென்றவரன்புகொள் மருகோனே
பலதுன்பமு முன்றுகலங்கிய சிறியன்புலை யன்கொலையன்புரி
பவமின்றுக ழிந்திடவந்தருள் புரிவாயே
அனதன்பெயர்நின் றுருளுந்திரி புரமுந்திரிவென் றிடவின்புடன்
அழலுந்தந குந்திறல்கொண்டவர் புதல்வோனே
அடல்வந்துமுழங்கியிடும்பறை டுடுடுண்டுடுடுண்டுடுடுண்டென
அதிர்கின்றிட அண்டநெரிந்திட வருசூரர்
மனமுந்தழல்சென் றிடவன்றவருடலுங்குடலுங்கிழிகொண்டிட
மயில்¶வென்றனில் வந்தருளுங்கன பெரியோனே
மதியுங்கதி ருந்தடவும்படி யுயர்கின்றவ னங்கள்பொருந்திய
வளமொன்றுப ரங்கிரிவந்தருள் பெருமாளே. (கசு)

தானனதந்தன தந்தனந் தந்தன
தானனதந்தன தந்தனந் தந்தன
தானனதந்தன தந்தனந் தந்தன—தனதான.

17. காதடருங்கயல் கொண்டிசைந்தைம்பொறி
வாளிமயங்கமனம்பயந்தந்திருள்
கால்தரவிந்துவி சும்பிலங்கும்பொழு தொருகோடி

* தந்தியின்கொம்பு – தெய்வயானை. † சிவை- பார்வதி. ‡ செண்டை- செண்டாயுதத்தை. § கடம் – மதம். || பனகம் - பாம்பு. ¶ வென் . முதுகு.

காய்கதிரென்றொளிர் செஞ்சிலம்புங்கணை
யாழியுடன்கட கந்துலங்கும்படி
காமனெடுஞ்சிலை கொண்டடர்ந்தும்பொரு மயலாலே

வாதுபுரிந்தவர் செங்கைதந்திங்கித
மாகநடந்தவர் பின்திரிந்துந்தன
மார்பிலழுந்தவ ணைந்திடுந்துன்பம துழலாதே

வாசமிகுந்தக டம்பமென்கிண்கிணி
மாலைகரங்கொளு மன்பர்வந்தன்பொடு
வாழநிதம்புனை யும்பதந்தந்துன தருள்தாராய்

போதிலுறைந்தருள் கின்றவன்செஞ்சிர
மீதுதடிந்துவி லங்கிடும்புங்கவ
போதவளஞ்சிவ சங்கரன்கொண்டிட மொழிவோனே

பூகமுடன்திகழ் *சங்கினங்கொண்டகி
ரீவமடைந்தைபு ரந்தரன்தந்தருள்
பூவைகருங்குற மின்கலந்தங்குப னிருதோளா

தீதகமொன்றினர் வஞ்சகந்துஞ்சியி
டாதவர்சங்கரர் தந்தவன்பும்பல
சேர்நிருதன்குல மஞ்சமுன்சென்றடு திறலோனே

சீதளமுந்துமண ந்தயங்கும்பொழில்
சூழ்தரவிஞ்சைகள் வந்திறைஞ்சும்பதி
தேவர்பணிந்தெழு தென்பரங்குன்றுறை பெருமாளே.



* சங்கினங்கொண்ட கிரீவம் - சங்கின் அம் (அழகு) கொண்ட, அல்லது சங்கு இனங்கொண்ட கழுத்து.

௯

இரண்டாவது

## திருச்சீரலைவாய் என்கின்ற

## திருச்செந்தூர்.

---

தனதனாதன தந்தன தந்தன
தனதனாதன தந்தன தந்தன
தனதனாதன தந்தன தந்தன தனதான.

18. கமலமாதுட னிந்திரையுஞ்சரி
சொலவொணாதம டந்தையர்சந்தன
களபசீதள கொங்கையிலங்கையி லிருபோதேய்
கலவிநூல்தெரி வஞ்சனையஞ்சன
விழியில்மோகித கந்தசுகந்தரு
கரியவோதியி லிந்துமுகந்தனில் மருளாதே
அமலமாகிய சிந்தையடைந்தகல்
தொலைவிலாதஅ றம்பொருளின்பமும்
அடையவோதியு ணர்ந்துதளர்ந்தபின் அருள்தானே
அறியுமாறுபெ றும்படியன்பினின்
இனியநாதசி லம்புபுலம்பிடும்
அருணஆடக கிண்கிணிதங்கிய அடிதாராய்
குமரிகாளிப யங்கரிசங்கரி
கவுரிநீலிப ராபரைபாலிகை
குலைபோகினி சண்டினிகுண்டலி எமதாயி
குறைவிலாளுமை மந்தரியந்தரி
வெகுவிதாகம சுந்தரிதந்தருள்
குமரமூஷிக முந்தியஐங்கர கணராயன்
மமவிநாயக னஞ்சமிழ்க்குஞ்சரி
அணிகஜானன விம்பனொரம்புலி
மவுலியானுறு சிந்தையுகந்தரு ளிளையோனே
வளருமாமறையுமஞ்சருரிஞ்சியும்
இடைவிடாது நெருங்கியமங்கல
மகிமைமாநகர் செந்திலில்வந்துறு பெருமாளே. ()

19. *அளகபாரம லைந்துகுலைந்திட
வதனம்வேர்வு துலங்கிநலங்கிட
அவசமோகம்வி ளைந்துதளைந்திட அணைமீதே

அருணவாய்நகை சிந்தியசம்பரம
அடர்நகாநுதி பங்கவிதஞ்செய்து
அதரபானம ருந்திமருங்கிற முலைகமேல்வீழ்ந்

துளமும்வேறுப டும்படியொன்றிடு
மகளிர்தோதக இன்பின்முயங்குதல்
ஒழியுமாறுதெ ளிந்துளமன்பொடு சிவயோகத்

துருகுஞானப ரம்பரதந்திர
அறிவினோர்கரு தங்கொள்சிலம்பணி
உபயசீதள பங்கயமென்கழல் தருவாயே

இளகிடாவளர் சந்தனகுங்கும
களபபூரண கொங்கைநலம்புனை
யிரதிவேள்பணி தந்தையும்அந்தணமறையோனும்

இனிதுறாதெதி ரிந்திரனண்டரும்
அரஹராசிவ சங்கரசங்கர
எனமிகாவரு நஞ்சினையுண்டவ ரருள்பாலா

வளர்நிசாசரர் தங்கள்சிரம்பொடி
படவிரோதமி டுங்குலசம்ப்ரமன்
மகரவாரிக டைந்தநெடும்புயல் மருகோனே

வளரும்வாழையு மஞ்சளுமிஞ்சியும்
இடைவிடாதுநெ ருங்கியமங்கல
மகிமைமாநகர் செந்திலில்வந்துறை பெருமாளே.

---

தந்ததானன தனதனதனதன
தந்ததானன தனதனதனதன
தந்ததானன தனதனதனதன தனதான.

20. பஞ்சபாதக முறுபிறையெயிறெரி
குஞ்சிகூர்விட மதர்விழி†பிலவக
பங்கவாண்முக முடுகியநெடுகிய திரிசூலம்

---

* அளகம் - கூந்தல். † பிலவகம் - குரங்கு.

பந்தபாசமு மருவியகரதல
மிஞ்சிநீடிய கருமுகிலுருவொடு
பண்பிலாதொரு பகடதுமுதுகினில் யமராஜன்
அஞ்சவேவரு மவதரமதிலொரு
தஞ்சமாமென வழிவழியருள்பெறும்
அன்பினாலுன தடிபுகழடிமையெ னெதிரேநீ
அண்டகோளகை வெடிபடஇடிபட
எண்டிசாமுக மடமடநடமிடும்
அந்தமோகர மயிலினிலியலுடன் வரவேணும்
மஞ்சுபோல்வள ரளகமுமிளகிய
ரஞ்சிதாம்ருத வசனமுநிலவென
வந்ததூயவெண் முறுவலுமிருகுழை யளவோடும்
மன்றல்வாரிச நயனமுமழகிய
குன்றவாணர்த மடமகள்தடமுலை
மந்தராசல மிசைதுயிலழகிய மணவாளா
செஞ்சொல்மாதிசை வடதிசைகுடதிசை
விஞ்சுகீழ்திசை சகலமுமிகல்செய்து
திங்கள்வேணியர் பல*தளிதொழுதுயர் மகமேரு
செண்டுமோதின ரரசருளதிபதி
தொண்டராதியும் வழிவழிநெறிபெறு
செந்தில்மாநக ரினிதுறையமரர்கள் பெருமாளே.

---

தனனதன தனனதன தந்தத்தந்தத்
தனனதன தனனதன தந்தத்தந்தத்
தனனதன தனனதன தந்தத்தந்தத் தனதான.

21. †அமுதுததிவிடமுமிழு செங்கட்டிங்கட்
பகிரொளிர்வெளிறெயிறு துஞ்சற்குஞ்சித்
தலையுமுடையவனரவ தண்டச்சண்டச் சமனோலை

---

* தளி - கோயில். † அமுதுஉததி - பாற்கடல்.

அதுவருகுமளவிலுயி ரங்கிட்டிங்குப்
பறைதிமிலைதிமிர்தமிகு* தம்பட் டம்பற்
கரையவுறவினரலற வந்திசசந்தித் தெருவூடே
எமதுபொருளெனுமருளை யின்றிக்குன்றிப்
பிளவளவுதினையளவு பங்கிட்டுண்கைக்
கிளையமுதுவசைதவிர இன்றைக்கன்றைக் கெனநாடா
திடுககடிதெனுமுரையொ டொன்றிக்கொண்டிட்
டுடுடுடுடுடுடுடுடு டுண்டுட்டுண்டுட்
டெனவகலுநெறிகருதி நெஞ்சத்தஞ்சிப் பகிராதோ
குமுதபதிவகிரமுது சிந்தச்சிந்த
சரணபரிபுரசுருதி கொஞ்சக்கொஞ்சக்
குழலசைய†பவுரிகொடு தொங்கப்பங்கிற கொடியாட
‡குலதடினிஅசையஇசை பொங்கப்பொங்கக்
கழலதிரடெகுடெகுடடெங்கடடெங்கத்
தொகுகுகுகுதொகுகுகுகு தொங்கத்தொங்கத் தொகுதீதோ
திமிதமெனமுழவொலிமு ழங்கச்செங்கைத்
§தமருகமதிர்சதமியா டன்பர்க்கின்பத்
திறமுதவுபாதகுரு வந்திக்குஞ்சற் குருநாதா
திரளுமணிதரளமுயர் தெங்கிற்றங்கிப்
புரளஎறிதிரைமகர சங்கத்துங்கத்
திமிரசலநிதிதழுவு செந்திற்கந்தப் பெருமாளே. (௪)

தனனதன தனனதன தந்தனந்தந்தனந்
தனனதன தனனதன தந்தனந்தந்தனந்
தனனதன தனனதன தந்தனந்தந்தனந் தந்ததான

22. கொடியனையஇடைதுவள அங்கமுபபொங்கஅங்
குமுதஅமுதிதழ்பருகி யின்புறுஞ்சங்கையன்
குலவியணைமுகிலளக முஞ்சரிந்தன்பினின் பண்புலாவக்

---

* தம்பட்டம்பல்கரைய - தம்பட்டம் முதலிய பல வாத்தியங்கள் சப்திக்க. † பவுரி - கூத்து. ‡ தடினி – ஆறு. குலதடினி - சிரேஷ்டமான கங்கையாறு. § தமருகம் –உடுக்கை.

கொடியவிரல்நக நுதிசெய் புண்படுஞ்சஞ்சலன்
குறுகியவருடனினிது சம்ப்ரமங்கொண்டுளங்
குாலழிய அவசமுறு குங்குணன்கொங்கவிழ்ந் ததான்றபாய்போல்
விடமனையவிழிமகளிர் கொங்கையின்பன்புறும்
வினையனியல்பரவுமுயிர் வெந்தழிந்தங்கமும்.
மிதமொழியஅறிவில்நெறிபண் பிலண்டுஞ்சகன்செஞ்செநீடும்
வெகுகனகவொளிகுலவும் அந்தமன்செந்திலென்
றவிழவுளமுருகிவரு மன்பிலன் *தந்திலன்
விரவுமிருசிறுகமலபங்கயந்தந்துகந் தன்புறாதோ
படமிலகுமரவினுட லங்கமும்பங்கிடந்
துதறுமொரு†கலபிமிசை வந்தெழுந்தண்டர்தம்
பகையசுரரனைவருடல் சந்துசந்துங்கதஞ் சிந்தும்வேலா
படியவருமிமையவரும் நின்றிறைஞ்செண்குணன்
பழையஇறையுருவமிலி யன்பர்பங்கன்பெரும்
‡பருவரல்செய்புரமெரிட விண்டிடுஞ்செங்கணன் கங்கைமான்வாழ்
சடிலமிசையழகுபுனை கொன்றையும்பண்புறும்
தருணமதியினகுறைசெய் துண்டமுஞ்செங்கையொண்
சகலபுவனமுமொழிக தங்குறங்கங்கியும் பொங்கிநீடும்
சடமருவுவிடையாவர் துங்கஅம்பங்கினின்
றுலகுதருகவுரியுமை கொங்கைதந்தன்புறும்
தமிழ்விரகவுயர்பரம சங்கரன்கும்பிடுந் தம்பிரானே. (ரு)

---

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான.

23. அறிவழியமயல்பெருக வுரையுமறவிழிசுழல
அனலவியமலமொழுக அகலாதே
அனையுமனைய நகினுற வெருவியழவுறவுமழ
அழலினிகர்மறலியெனை யழையாதே

* தந்திலன் - சாஸ்திர ஆராய்ச்சியில்லாதவன். † கலபி - மயில்
‡ பருவரல் - தன்பம்.

செறியுமிருவினைகரண மருவுபுலனெறியவுயர்
திருவடியிலணுகவர மருள்வாயே
சிவனைநிகர்பொதியவரை முனிவனகமகிழஇரு
செவிகுளிரஇனியதமிழ் பகர்வோனே
நெறிதவறி*அலரிமதி நடுவன்மகபதி†முளரி
நிருதிநிதிபதிகரிய வனமாலி
நிலவுமறையவனிவர்க ளலையஅரசுரிமைபுரி
நிருதனுரமற அயிலை விடுவோனே
‡மறிபரசுகரமிலகு பரமனுமையிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே
§மதலைதவழுததியிடை வருதரளமணி||புளின
மறையவுயர்கரையிலுறை பெருமாளே. (௬)

---

தனத் தந்தந் தனத் தந்தந்
தனத் தந்தந் தனத் தந்தந்
தனத் தந்தந் தனத் தந்தந் தனதான.

21. கரிக்கொம்பந் தனித்தங்கங் குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்
கனைக்கும்பண் டழைக்கும்பங் களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்
சரக்குஞ்சம் புடைக்கும்பொன் துகிற்றந்தந் தரிக்குந்தன்
சடத்தும்¶பண் பிலுக்குஞ்சம் பளமாதர்
சலித்தும்பின் சிரித்துங்கொண் டழைத்துங்கண் பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ
சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ் செழிக்கின்பங் களித்துண்பன்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங் கசுராரைத்
துவைத்தும்பந் தடித்துஞ்சங் கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா

---

* அலரி - சூரியன். † முளரி - அக்கினி. ‡ மறிபரசு - மானமழு.
§ மதலை - மரக்கலம். || புளினம் - மணல்மேடு ¶ பண்பிலுக்கல் - தகுதியாகிய வஸ்துக்களைக்கொண்டு ஆடம்பரமாக அலங்கரித்தல்.

சிரப்பண்புங் கரப்பண்புங் கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே
தினைத்தொந்தங் குறப்பெண்பண் சசிப்பெண்சொங் கையிற்றுஞ்சுஞ்
செழிக்குஞ்செந் திலிற்றங்கும் பெருமாளே. (எ)



25. கருப்பந்தங் கிரத்தம்பொங் *கரைப்புண்கொண் டிருக்கும்பெண்
கலைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே
கலப்புண்டுஞ் சிறுப்புண்டுந் துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுந் தலிப்புண்டுந் தடுமாறிச்
செருத்தண்டந் தரித்தண்டம் புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்திண் செகத்†தஞ்சுங் கொடுமாயும்
தியக்கங்கண் டுயக்கொண்டென் பிறப்பங்கஞ் சிறப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே
அருக்கன்சஞ் சரிக்குந்தெண் டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா
அணிச்சங்கங் கொழிக்குந்தண் டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா
புரக்குஞ்சங் கரிக்குஞ்சங் கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனைய்
புனக்குன்றக் கிளைக்குஞ்செந் தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே. (அ)

---

26. குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தகற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே
குழைக்குஞ்செங் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் தழைக்குஞ்சிங் கியராலே

* அரைப்புண் - அல்குல். † அஞ்சு - பஞ்சேந்திரியம்.

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டெடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே
உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன்றுஞ் சிவக்குந்தண்
டியர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்
தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம்*புயத்தொன்றும் பெருமானார்
தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே
கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே
கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே. (கக)

---

27. †மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்
மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்‡தங்கும் பலவோரும்
எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றன்
றினைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்

---

* புயம் - கை. †மனத்தின் பங்கென தங்கு ஐம்புலன் - மனம் செல்வதற்கு வேறு வேறு வாயில்களாகப் பொருந்தியிருக்கும் ஐம்புலன்.
‡ தங்கும் பலவோர் - தத்துவக்கூட்டம்.

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற்பங்கங்
கெடுத்தன்பங் கழித்தின்பந் தருவாயே
கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித் *தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்டுஞ் சிடுமாலும்
†நதித்தொண்பங் கயத்தன்பண்
பணைக்கோங்குன் றிடைச்சந்தந்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளாய்
தினைக்குன்றந் தனிற்றங்கும்
சிறுப்பெண்குங் குமக்கும்பந்
திருஞ்செம்பொன் புயந்தென்றும் புணர்வோனே
செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே. (கo)

தனத் தந்தத் தனத் தந்தத்
தனத் தந்தத் தனத் தந்தத்
தனத் தந்தத் தனத் தந்தத் தனதானா.

28. பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் பரவைக்குன்றத் தனமாதர்
பரிக்குந்துற் சரக்கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்ணைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்
துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்பற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனே

* எங்குங் கலக்கம் சிந்திட கண்துஞ்சிடு மால் — சர்வான்மாக்களும் கலக்க கற்றச் சுகமுற அனந்தசயனங் கொள்ளும் திருமால். † நதித்தொண்பங்கயத்தன் — நதித் + ஒண் + பங்கயத்தன் — பங்கயத்தனும்.

துணைச்செம்பொற் பதத்தின்பாற்
றெனக்கென்றப பொருட்டங்கத்*
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்
*தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்குஞ்சத்
தடக்கன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்
சமர்க்கெஞ்சிப் பதைத்துஞ்சக்
கதித்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே
திருக்கஞ்சத் தனைக்கன்றித்
துறந்†கங்குட் டிவிட்டெஞ்சற்
சிவற்கன்றப பொருட்கொஞ்சிப் பகர்வோனே
செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமானே. (௧௧)

---

தனதன தந்தாந் தந்தன தனதன தந்தாந் தந்தந்
தனதன தந்தாந் தந்தந் தனதான.

29. ‡அவனிபெறுந்தோட் டம்பொற் குழையடரம்பாற் றுண்பட்
டரிவையர்தம்பாற் கொங்கைக் கிடையேசென்
றணைதருபண்டாட் டங்கற் றருவியகொண்டாட்டம்பெற்
றழிதருதிண்டாட் டஞ்சற் றொழியாதே
பவமறநெஞ்சாற்சிந்தித் திலகுகடம்பார்த்தண்டைப்
பதயுகளம்போற் றுங்கொற் றமுநாளும்
பதறியஅங்காப்பும்பத் தியுமறிவும்போய்ச் சங்கைப்
படுதுயர்கண்பார்த் தன்புற் றருளாயோ

---

* தருத்தங்கப் பொலத்தண்டத்தினை - கற்பக விருக்ஷம் தங்கிய அந்தப் பொன்னுலகத்தை. † கம் - தலை. ‡ அவனி பெறும் தோட்டு அம்பொற் குழை - பூமியை விலைகேட்கும்படியான தோடாகிய அழகிய பொற்குழை

தவநெறிகுன் றப்பண்பிற் றுறவினருந்தோற்றஞ்சத்
தனி*மலரஞ்சார்ப்புங்கத் தமராடித்
தமிழினி †தென்காற்கன்றிற் றிரிதருகஞ்சாக்கன்றைத்
தழலெழவென் றோர்க்கன்றற் புதமாகச்
சிவவடிவங்காட்டுஞ்சற் குருபரதென்பாற்சங்கத்
திரள்மணிசிந்தாச்சிந்துக் கரைமோதும்
தினகரதிண்டேர்ச்சண்டப் பரியிடறுங்கோட்டிஞ்சித்
திருவளர்செந்தூர்க்கந்தப் பெருமாளே (௧௨)

30. தொடரியமன்போற்றுங்கப் படையைவளைந்தோட்டுந் ‡துட்
டரையிளகுந்தோட்கொங்கைக் கிடுமாயத்
துகில்விழவுநேர்சேர்த்தங்கத் துளைவிரகுஞ்சூழ்த்தண்டித்
துயர்விளையுஞ்சூட்டின்பத் தொடுபாயற்
கிடைகொடுசென் றீட்டும்பொற் பணியரைமென்றேற்றங்கற்
றனையெனஇன் §றோட்டென் ||றற் கிடுமாதர்க்
கினிமையிலொன் றப்ர்சென் றாட் படுமனமுன் றாட்கன்புற்
றியலிசைகொண்டேத்தென் றாட் டருவாயே
நெடிதுதவங்கூர்க்குஞ்சாற் புருடரும்நைந்தேக்கம்பெற்
றயர்வுறநின் றோர்த்தங்கட் கணையேவும்
நிகரிலமதன்தேர்க்குன்றற் றெரியில்விழுந்தோர்ப்பொன்றச்
சிறிதுநினைந்தாட்டங்கற் றிடுவார்முன்
திடமுறுஅன்பாற்சிந்தைக். ¶கறிவிடமுஞ்சேர்த்தும்பர்க்
கிடர்களையும்போர்ச்செங்கைத் திறல்வேலா
தினவரிவண்டார்த்தின்புற் றிசைகொடுவந்தேத்திஞ்சித்
திருவளர்செந்தூர்க்கந்தப் பெருமாளே.(௧௩)

* மலர் அஞ்சு ஆர் புங்கத்து - ஐவகை புஷ்ப பாணத்தால். † தென்கால்கன்றில் - இளந்தென்றற் காற்றில் ‡ துட்டரை - பணிடரை. ‡ துட்டர்க்கு பணியர்க்கு. இது உருபு மயக்கம் § ஓட்டென்று - ஓடென்று, || அற்கிடும் - அலகிடும், அன்பு சுருங்கும். ¶ அறிவிடம் - தெளிவு.

தந்தன தந்தனத் தந்தன தந்தனத்
தந்தன தந்தனத் தனதான.

31. சங்குபோல்மென்கழுத் தந்தவாய்தந்தபற்
சந்தமோகின்பழுத் தெனவானிற்
றங்குகார்பைங்குழற் கொங்கைநீள்தண்பொருப்
பென்றுதாழ்வொன்றறுத் துலகோரைத்
துங்கவேள்செங்கைபொற் கொண்டல்நீயென்றுசொற்
கொண்டு *தாய்கின்றுரைத் துழலாதே
துன்பநோய்சிந்தநற் கந்தவேளென்றுனைத்
தொண்டினு †லொன்றுரைக் கருள்வாயே
வெங்கண் ‡வ்யாளங்கொதித் தெங்கும்§வேமென்றெடுத்
துண்டுமேலண்டருக் கமுதாக
விண்டநாதன்திருக் கொண்டல்பாகன்செருக்
குண்டுபேரம்பலத் தினிலாடி
||செங்கண்மால்பங்கயக் கண்பெறாதந்தரத்
தின்கணுந்திறற் கதிராழித்
திங்கள்வாழுஞ்சடைத் தம்பிரானன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமானே. (௧௪)

---

32. பங்கமேவும்பிறப் பந்தகாரந்தனிற்
பந்தபாசந்தனிற் றடுமாறிப்
பஞ்சபாணம்படப் புண்படாவஞ்சகப்
பண்பிலாடம்பரப் பொதுமாதர்
தங்களாலிங்கனக் கொங்கையாகம்படச்
சங்கைமால்கொண்டிளைத் தயராதே
தண்டைசூழ்கிண்கிணிப் புண்டரீகந்தனைத்
தந்துநீயன்புவைத் தருள்வாயே

---

* தாய் - தாவி. †ஒன்று - பொருந்திய. ‡வ்யாளம் - பாம்பு. இங்கே அதனிடத்திருந்து எழுந்த விஷத்தைக்குறித்தது. § வேம் - வேகச்செய்யு மென்னும் பொருள்தர நின்றது. || செங்கண்மால் கண்பெறாத நாடும தம்பிரான் எனமுடிக்க.

அங்கைவேல்கொண்டரக் கன்பராதாபங்கெடுத்
தண்டவேதண்டமுட் படவேதான்
அஞ்சவேதிண்டிறற் *கொண்டலாகண்டலற்
கண்டலோகங் கொடுத் தருள்வோனே
திங்களார்கொன்றைமத் தந்துழாய்துன் றுபொற்
செஞ்†சடாபஞ்சரத் துறுதோகை
சிந்தையேய்தென்றிசைத் தென்றல்வீசும்பொழிற்
செந்தில்வாழ்செந்தமிழ்ப் பெருமாளே. (௩௨)

---

தந்தானந்தா தந்தானந்தா
தந்தானந்தத் தனதான.

33. தண்டேனுண்டே வண்டார்வநேசேர்
‡தண்டார்மஞ்சுக் குழல்மாதர்
தம்பாலன்பார் நெஞ்சேகொண்டே
சம்பாவஞ்சொற் றடிநாயேன்
மண்§டோயந்தீ மென்கால்விண்டோய்
வன்காயம்பொய்க் குடில்வேறாய்
வன்கானம்போ யண்டாமுன்பே
வந்தேநின்பொற் கழல்தாராய்
கொண்டாடும்பேர் கொண்டாடுஞ்சூர்
கொன்றாய்வென்றிக் குமரேசா
கொங்கார்வண்டார் பண்பாடுஞ்சீர்
குன்றுமன்றற் கிரியோனே
||கண்டாகும்பா லுண்டாயண்டார்
கண்டா ¶ கந்தப் புயவேளே

---

* கொண்டலாகண்டலற்கு - மேகவாகனனாகிய இந்திரனுக்கு.
† சடாபஞ்சரத்துறுதோகை-சடையாகிய கூட்டிலிருக்கும் கங்கை. ‡ தண்டார்மஞ்சு - குளிர்ந்த மாலையணிந்த மேகம். § தோயம் - நீர். || கண்டாகும்பால்-கற்கண்டுபோலும் இனிமையுள்ளபால், அதாவது—உமாதேவியார் பொற்கிண்ணத்துக் கறந்து ஊட்டிய திருமுலைப்பால். ¶ கந்தபுயம் - வாசனை தங்கிய புயம்.

*கந்தாமைந்தா ரந்தோள்மைந்தா
கந்தாசெந்திற் பெருமாளே. (௩௬)

---

34. வெங்காளம்பா ணஞ்சேல்கண்பால்
மென்பாகஞ்சொற் குயில்†மாலை
மென்கேசந்தா னென்றேகொண்டார்
மென்றோளொன்றப் பொருள்தேடி
வங்காளந்தே‡சோ னஞ்சீனம்போய்
வந்தேதுன்பப் படலாமோ
§மைந்தாருந்தோள் மைந்தா அந்தா
வந்தேயிந்தப் பொழுதாள்வாய்
கொங்கார்பைந்தே னுண்டேவண்டார்
குன்றாக்கொங்கைக் கினியோனே
குன்றோடுஞ்சூ ||ழம்பேழுஞ்சூ
ழும்போய்மங்கப் பொருகோபா
கங்காளஞ்சேர் மொய்ம்பாரன்பார்
கன்றேயும்பர்க் கொருநாதா
¶கம்பூர்சிந்தார் தென்பால்வந்தாய்
கந்தாசெந்திற் பெருமாளே. (௩௭)

---

35. விதிபோலு*முந்த விழியாலுமிந்து
நுதலாலுமொன்றி யிளைஞோர்தம்
விரிவானசிந்தை யுருவாகிநொந்து
விறல்வேறுசிந்தை வினையாலே

---

* கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா - கம்பத்துக்குச் சமானமாகி வலிமை பொருந்திய அழகிய தோள்களையுடைய பராக்கிரமனே.

† மாலை - இருள். ‡ சோனம் - சோனகம் § மைந்து - வலிமை

|| அம்பேழும் - எழுகடலும். ¶ கம்பு ஊர் சிந்து - சங்குகள் தவழும் சமுத்திரம். * உந்தவிழி - உந்து அ + விழி.

இதமாகியின்ப மதுபோதவுண்டுள்
இனிதாளுமென்று மொழிமாதா
இருளாயதுன்ப மருள்மாயபந்தம்
எனையீர்வதென்றும் ஒழியாதோ
மதிசூடியண்டர் பதிவாழமண்டி
வருமாலமுண்டு விடையேறி
மறவாதசிந்தை யடியார்கள்பங்கில்
வருதேவசம்பு தருபாலா
அதிமாயமொன்றி வருசூரர்பொன்ற
அயில்வேல்கொடன்று பொரும்வீரா
அழகானசெம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே. (கஅ)

36. விறல்மாரனைந்து மலர்வாளிசிந்த
மிகவானிலிந்து வெயில்காய
மிதவாடைவந்து தழல்போலவொன்ற
வினைமாதர்தந்தம் வசைகூறக்
குறவாணர்குன்றி லுறைபேதைகொண்ட
கொடிதானதுன்ப மயல்தீரக்
குளிர்மாலையின்க ணணிமாலைதந்து
குறைதீரவந்து குறுகாயோ
மறிமானுகந்த இறையோன்மகிழ்ந்து
வழிபாடுதந்த மதியாளா
*மலைமாவுசிந்த அலைவேலையஞ்ச
வடிவேலெறிந்த அதிதீரா
அறிவாலறிந்து னிருதாளிறைஞ்சும்
அடியாரிடைஞ்சல் களைவோனே
அழகானசெம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே. (க௯)

---

'ஒன்றி ... உருவாகிநொந்து ... மொழிமாதர்' எனக்கூட்டுக.

* மலைமாவுசிந்த - கிரௌஞ்சகிரியும் (சூரனாகிய) மாமரமுமொடிய.

தந்ததனதான தனதத்தான தந்ததனதான தனதத்தான
தந்ததனதான தனதத்தான தனதான

37. சந்தனசவாது நிறைகற்பூர குங்குமபடீர விரைகஸ்தூரி
தண்புழுகளாவு களபசீத வெகுவாசச்
சண்பக*கலார வகுளத்தாம வம்புதுகிலார வயிரக்கோவை
தங்கியகடோர தரவித்தார பரிதான
மந்தரமதான தனமிக்காசை கொண்டுபொருள்தேடு மதிகெட்டோர
வஞ்சகவிசார இதயப்பூவை யனையார்கள்
†வாதியிடுமாய விரகப்பார்வை அம்பிலுழல்வாரு மறிவற்றேனை
வந்தடிமையாள இனியெப்போது நினைவாயே
இந்த்ரபுரிகாவல் முதன்மைக்கார சம்ப்ரமமயூர துரகக்கார
என்றுமகலாத இளமைக்கார குறமாதின்
இன்பஅநுபோக சரசக்கார வந்தஅசுரேசர் கலகக்கார
எங்களுமைசேய னருமைக்கார மிகுபாவின்
செந்தமிழ்சொல்நாவர் கவிதைக்கார குன்றெறியும்வேலின் வலிமைக்கார
தென்சொலடியார்கள் எளிமைக்கார எழில்மேவும்
‡திங்கள்முடிநாதர் சமயக்கார மந்த்ரவுபதேச மகிமைக்கார
செந்தில்நகர்வாழும் அருமைத்தேவர் பெருமாளே. (௨0)

---

தந்ததனதான தானத்தான தந்ததனதான தானத்தான
தந்ததனதான தானத்தான தனதான

38. முந்துதமிழ்மாலை கோடிக்கோடி சந்தமொடுநீடு பாடிப்பாடி
§முஞ்சர்மனைவாசல் தேடித்தேடி யுழலாதே
முந்தைவினையே வராமற்போக மங்கையர்கள்காதல் தூரத்தேக
முந்தடிமையேனை யாளத்தானு முனைமீதே
திந்திதிமிதோதி தீதித்தீதி தந்தகததாத தானத்தான
செஞ்சரணநாத கீதத்தோடு நடமாடு

---

* கலாரம் - கலவாரம், செங்குவளை. † வாதியிடும் - வருத்தத்தை உண்டுபண்ணும். ‡ திங்கள் முடிநாதர் சமயம் - சைவசமயம். § முஞ்சர் - செத்துப்போவோர்.

செஞ்சிறியகால்வி சாலத்தோகை துங்கஅனுகூல பார்வைத்தீர
செம்பொன்மயில்மீதி லேயெப்போது வருவாயே
அந்தண்மறைவேள்விகாவற்காரசெந்தமிழ்சொல்பாவின்மாலைக்கார
அண்டருபகார சேவற்கார முடிமேலே
அஞ்சலிசெய்வோர்கள் நேயக்கார குன்றுருவவெவும்வேலைக்கார
அந்தம்வெகுவான ரூபக்கார எழிலான
*சிந்துரமின்மேவு போகக்கார விந்தைகுறமாது வேளைக்கார
செஞ்சொலடியார்கள் வாரக்கார சதிரான
செஞ்†சமரைமாயு மாயக்கார துங்கரணசூர சூறைக்கார
செந்தில்நகர்வாழு மாண்மைக்கார பெருமாளே. (௩௮)

தந்தத்தனனத் தந்தத்தனனத்
தந்தத்தனனத் தனதான.

39. ‡அம்பொத்தவிழித் தந்தக்கலகத்
தஞ்சிக்கமலக் கணையாலே
அன்றிற்குமனற் றென்றற்குமிளைத்
தந்திப்பொழுதிற் பிறையாலே
எம்பொற்கொடி§மற் றுன்பக்கலனற்
றின்பக்கலவித் துயரானள்
என்பெற்றுலகிற் பெண்பெற்றவருக்
கின்பப்புலியுற் றிடலாமோ
கொம்புக்கரிபட் டஞ்சப்பதுமக்
கொங்கைக்||குறவிக் கினியோனே
கொன்றைச்சடையர்க் கொன்றைத்தெரியக்
கொஞ்சித்தமிழைப் பகர்வோனே

---

* சிந்துரமின் - தெய்வயானை. † சமரைமாயும — யுத்தத்தில் (பகைவரை) மாய்க்கும. ‡ அம்பு ஒத்த விழி தந்த கலகத்து - அம்பு போன்ற கண்களாலும், தந்தம்போன்ற தனங்களாலும் விளைந்த கலகத்திற்கு. § மன் துன் பகலன் அற்று - தரித்திருக்கின்ற துன்பத்தைச் செய்யும் ஆபரணங்களை அறவிடுத்து. || குறவி - குறத்தி, வள்ளிநாயகி.

செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர்பொன்றவே
சென்றுமோ துப்ரதாபா
செங்கண்மால்*பங்கஜா னன்தொழானந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.(௨௫)

---

43. தந்ததந்தன தானதான தந்ததந்தன தானதான
தந்ததந்தன தானதான—தனதான.

அங்கைமென்குழலாய்வார்போலே சந்திநின்றயலோடேபோவா
ரன்புகொண்டிட நீரோபோறீ ரறியீரோ
அன்றுவந்தொருநாள்நீர்போனீர்பின்புகண்டறியோநாமீதே
அன்றுமின்றுமோர்போதோபோகா துயில்வாரா
எங்களந்தரம் வேறாரோர்வார் பண்டுதந்தது போதாதோமே
லின்றுதந்துறவோதானீதே னிதுபோதா
திங்குநின்றதென் வீடேவாரீ ரென்றிணங்கிகள்மாயாலீலா
இன்பசிங்கியில்வீணேவீழா தருள்வாயே
மங்குலின்புறு வானவ்வானா டன்றருப்பிய காலாய்நீள்கால்
மண்டுறும்புகை நீருவீறா எரிதீயாய்
வந்திரைந்தெழு நீராய்நீர்சூழ்அம்பரம்புனை பாராய்பாரேழ்
மண்டலம்புகழ் நீயாய்நானாய் மலரோனாய்
உங்கள்சங்கரர் தாமாய்நாமா ரண்டபந்திகள் தாமாய்வானாய்
ஒன்றினுங்கண்டதோயாமாயோன் மருகோனே
ஒண்தடம்பொழில் நீரேர்கோரேர் செந்திலம்பதி வாழ்வேவாழ்வோர்
உண்டநெஞ்சறி தேனேவானோர் பெருமாளே. (௨௬)

---

தந்தனந்தனந் தனனதனத்
தந்தனதனந்தனந் தனனதனத்
தந்தனதனந்தனந் தனதனந் தனதனத் தனதான

44. அந்தகன் வருந்தினம் பிறகிடச்
சந்தமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு †சங்கதந் தவிரமுக் குணமாள

---

* பங்கஜாஸனன் என்பது பங்கஜானன் என விகாரமாயிற்று. †சங்கதம்-நட்பு

காதலார்மைந்தருந் தாயராருஞ்சுடுங்
கானமேபின்தொடர்ந் தலாறுமுன்
சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோதண்டமுஞ்
சூடுதோளுந்தடந் திருமார்புந்
தூயதாள்தண்டையுங் காணஆர்வஞ்செயுந்
தோகைமேல்கொண்டுமுன் வரவேணும்
ஆலகாலம்பரன் பாலதாகஞ்சிடுந்
தேவர்வாழ்ன்றுகந் தமுதீயும்
ஆரவாரஞ்செயும் வேலைமீகண் *டுயின்
றாதிமாயன்றனன் மருகோனே
சாலிசேர்சங்கினம் வாவிசூழ்பங்கயஞ்
சாரலார்செந்திலம் பதிவாழ்வே
தாவுசூரஞ்சிமுன் சாயவேகம்பெறுந்
தாரைவேலுந்திடும் பெருமாளே. (உச)

—

தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்ததான.

42. சங்கைதானொன்றுதா னின்றியேநெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தொடேகுங்குமா லங்க்ருதாடம்பரா
சம்ப்ரமா னந்தமாயன்
மங்கைமார்கொங்கைசேர் அங்கமோகங்களால்
வம்பிலே துன்புறாமே
வண்குகாநின்சொரூ பம்ப்ரகாசங்கொடே
வந்துநீ யன்பிலாள்வாய்
கங்கைசூடும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா
கம்பியாதிந்த்ரலோ கங்கள் † காவென்றவா
கண்டலே சன்சொல்வீரா

* துயின்றாதி - துயின்ற ஆதி. † கா என்று அ ஆகண்டலேசன் எனப் பிரித்துக் கொள்க. ஆகண்டலேசன் — தேவேந்திரன்.

செம்பொற்சிகரப் பைம்பொற்கிரியைச்
சிந்தக்கறுவிப் பொரும்வேலா
செஞ்சொற்புலவோர்க் கன்புற்றதிருச்
செந்திற்குமரப் பெருமாளே (௨௨)

---

40 கொங்கைப்பணையிற் செம்பொற்செறியிற்
கொண்டற்குழலிற் கொடிதான
கொன்றைக்கணையொப் பந்தக்கயலிற்
கொஞ்சக்கிளியுற் றுறவான
*சங்கத்தொனியிற் சென்றிற்கடையிற்
சந்திப்பவரைச் சருவாதே
சந்தப்படியுற் †றென்றற்றலையிற்
சந்தப்பதமுற் றருள்வாயே
அங்கப்படைவிட் டன்றைப்படுகைக்
‡ கந்திக்கடலிற் கடிதோடா
§ அந்தப்பொழிலிற் || சந்துத்தலையுற்
றஞ்சப்பொருதுற் றெரியாதே
செங்கைக்கதிருற் றென்றக்கடலிற்
¶ சென்றுற்றவர்தற் பொருளானைச்
சிந்தைக்கனிவைத் தந்தப்பொழிலிற்
செந்திற்குமரப் பெருமாளே. (௨௩)

---

தான தானந் தனந தான தானந் தனந
தான தானந் தனந் தனதான

41. காலனாரவெங்கொடிய தூதர்பாசங்கொடுடன்
காலி* னார்த்துடன் கொடுபோக

---

* சங்கம் – சங்குபோன்ற கண்டம்: † என்றற்றலை - என்றன் தலை
‡ அந்திக்கடல்-செந்திலுக்கும் மகேந்திரபுரிக்கும் இடைச்சந்தியாகவுள்ள கடல்
§ அந்தப்பொழில் – அந்தப் பூமியாகிய மகேந்திரத்தில். || சந்துத் தலையுற்று தூதாகச்சென்று ¶ சென்றுற்றவர் போய்வந்தவராகிய வீரவாகுதேவர்.
* ஆர்த்து - கட்டி

* அந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புயப தங்களின் பெருமையைக் கவிபாடிச்
செந்திலை யுணர்ந் துணர்ந் துணர்வுறக்
†கந்தனை யறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் தணியாத
சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ
கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்
தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே (௨௭)

---

தனனதன தானதானன தனனதன தானதானன
தனனதன தானதானன தந்தத் தந்தத் தனதான.

45\. அருணமணி மேவு பூஷித ‡ம்ருகமத படீர லேபன
§அபினவ விசால பூரண அம்பொற்கும்பத்தனமோதி

---

* அந்திபகல் - கேவலசகலம். † கந்தனை - கந்தனாகிய நின்னை, இஃது இடவழுவமைதி. ‡ ம்ருகமதம்-கஸ்தூரி. படீரம் - சந்தனம். § அபிநவம் அதிசயம்.

அரிகுலவுமாதர் சீலையின் முழுகியபி ஷேகமீதெனை
அறவுமுறா வாடிநீடிய அங்கைக்கொங்கைக் கிதமாகி
*இருணிறைய மோதிமாலிகை சுருளியுறவானவேணியி
லிழைகலைய மாதரார்வழி யின்புற்றன்புற் றழியாநீள்
இரவுபகல் மோகமேகொடுபடியில்மடியாமல் யானுமுன்
இணையடிகள் பாடிவாழஎன் னெஞ்சிற்செஞ்சொற் றருவாயே
கருணைமணியாடராவணி குழலசடி லாதியோதிய
ரதுமாமறையி ஞதி யாகிய சகசத்துங்கக் குமையாளர்
கருமுருக மோகசாயலர் †தமரமக ராழிசூழ்புவி
தனைமுழுதும் வரியேயமுதுண்டிட்டண்டர்க் கருள்கூரும்
செருமுதலி மேவுபாவலி யதிமதகபோலமாமலை
தெளிவினுள் மூலமேயெனமுந்தச்சிக்கித்தருள் மாயன்
திருமருக நான்மார்பொடு சிலையுருவ வேலையேவிய
செயசரவணமனோகரசெந்திற்கந்தப் பெருமாளே (உஅ)

---

தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன
தனத்தந தானன தானன தானன தனதான.

46 அளிசங் ‡கார்முகம் வீசிட மாசறு
துகட்பஞ் சானதடாகம் விடாமட
அனத்தின் தூவிகுலாவிய சீரடி மடமாதர்
அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணிவார்முலை மேல்முகம
அழுத்தும் பாவியை ஆவி §யிடேறிட நெறிபாரா
வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டாணவ மானநிர் மூடனை
|| விடக்கன் பாய்துகர் பாழனை யோர்மொழி பகராதே

* இருள் நிறை அம் ஓதி - கருமை நிறைந்த அழகிய கூந்தல். † தமரம் - ஒலி. ‡ கார்முகம் - பஞ்சுகொட்டும் வில். § இடேறிட - ஈடேறிட, || விடக்கு - மாமிசம்.

விகற்பங் கூறிடு மோக விகாரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ

முனைச்சங் கோலிடு நீலமகோ ததி
அடைத்தஞ் சாதசி ராவண னீள்பல
முடிக்கன் றோர்கணை யேவுமி ராகவன் மருகோனே

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி* தாதகி† கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே

தினைக்குங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வே‡கணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா

சிறக்குந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூர்வரு சேவகனேசுரர் பெருமானே. (உ)

---

தனதனன தந்ததந்த தனதனன தந்ததந்த
தனதனன தந்ததந்த—தனதான.

47. அனைவரும ருண்டருண்டு கடிதெனவெ குண்டியம்ப
அமரஅடி பின்தொடர்ந்து பிணநாறும்
அழுகுபிணி கொண்டுவிண்டு புழுவுட னெலும்பலம்பும்
அவலவுட லஞ்சுமந்து தடுமாறி
மனைதொறுமி தம்ப கர்ந்து வரவரஇ ருந்தருந்தி
மனவழிதி ரிந்துமங்கும் வசைதீர
மறைசதுர்வி தந்தெரிந்து வகைசிறுச தங்கைகொஞ்சு
மலரடிவ ணங்க என்று பெறுவேனோ
தினைமிசை§சு கங்கடிந்த புனமயிலி ளங்குரும்பை
திகழிருத னம்பு ணர்ந்த திருமார்பா

* தாதகி - ஆத்தி. † கூவிளம் - வில்வம். ‡ கணி - வேங்கைமரம்
§ சுகம்கடிந்த - கிளிகளையோட்டிய.

தனனதன தந்த தானதன தனனதன தந்த தானதன
தனனதன தந்த தானதன தனதான.

50. உததியறல்மொண்டு சூல்கொள்கரு முகிலெனஇருண்ட நீலமிக
வொளிதிகழுமன்ற லோதிநரை பஞ்சுபோலாய்
உதிரமெழுதுங்க வேலவிழி மிடைகடையொதுங்கு பீளைகளு
முடைதயிர்பிதிர்ந்த தோஇதென வெம்புலாலாய்
மதகரடதந்தி வாயினிணை செருகுபிறைதந்த சூதுகளின்
வடிவுதருகும்ப மோதிவளர் கொங்கைதோலாய்
*வனமழியுமங்கை மாதர்களி னிலைதனையுணர்ந்து தாளிலுறு
வழியடிமையன்பு கூருமது சிந்தியேனோ
இதழ்பொதியவிழ்ந்த தாமரையின் மணமலருகந்த நான்முகனு
மெறிதிரையலம்பு பாலுததி நஞ்சுராமேல்
இருவிழிதுயின்ற நாரணனு முமைமருவுசங்கர சேகரனு
மிமையவரிணங்கு வாசவனு நின்றுதாழும்
முதல்வசுகமைந்த பீடிகையில் அகிலசகஅண்ட நாயகிதன்
முகிழ்முலைசுரந்த பாலமுத முண்டவேளே
முளைமுருகுசங்கு வீசியலைமுடுகி †மைதவழ்ந்த வாபெருகி
முதலிவருசெந்தில் வாழ்வுதரு தம்பிரானே. (௫௰)

— —

தத்ததன தத்தத் தனந்தந் தனந்ததன
தத்ததன தத்தத் தனந்தந் தனந்ததன
தத்ததன தத்தத் தனந்தந் தனந்ததன தனதான.

51. கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுனை
மிட்டபொறி தப்பிப் பிணங்கொண்ட திண்சிலர்கள்
கட்டணமெடுத்துச் சுமந்தும் பெரும்பறைகள் முறையோடே
வெட்டவிட வெட்டக் கிடந்தங் கிடந்தமென
மக்களொரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவருமித்தைத் தவிர்ந்துன் பதங்களுற வுணர்வேனோ

* வனம் - அழகு. † மை தவழ்ந்தவா - மேகம் தவழ்ந்ததுபோல.

பட்டுருவி நெட்டைக் க்ரௌஞ்சமபி ளந்துகடல்
முற்றுமலை வற்றிக் குழாம்புங் குழம்பமுனை
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண் டெதிர்ந்தவுணர்
[முடிசாயத்
தட்டழிய வெட்டிக் கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்தமணி
சற்சனாய வித்யாதப பலன் கண்டு செந்திலுறை
[பெருமாளே. (௫௪)

---

தந்ததன தந்ததந்த தந்ததன தந்ததந்த
தந்ததன தந்ததந்த தனதான.

52. கண்டுமொழி *கொம்புகொங்கை வஞ்சியிடை அம்புநஞ்சு
கண்கள்குழல் கொண்டலென்று பகலாலும்
கண்டுளம்வ ருந்திநொந்து மங்கையர்வ சம்புரிந்து
கங்குல்பக லென்றுநின்று விதியாலே
பண்டைவினை கொண்டுமுன்று வெந்துவிழு கின்றல்கண்டு
பங்கயப தங்கள்தந்து புகழோதும்
பண்புடைய சிந்தையன்பர் தங்களினு டன்கலந்து
பண்புபெற அஞ்சலஞ்சல் எனவாராய்
வண்டுபடு கின்றதொங்கல் கொண்டுபெரு ங்கிவிஞ்சு
வம்பினைய டைந்து†சந்தின் மிகமூழ்கி
‡வஞ்சிசைமுனிந்தகொங்கை மென்குறமடந்தைசெங்கை
வந்தழகு டன்கலந்த மணிமார்பா
திண்டிறல்பு னைந்தஅண்டர் தங்களப யங்கள்கண்டு
செஞ்§சமர்பு னைந்துதுங்க மயில்மீதே
சென்றசுர ரஞ்சவென்று குன்றிடை மணம்புணர்ந்து
செந்தில்நகர் வந்தமர்ந்த பெருமாளே. (௫௫)

---

* கொம்பு - யானைக்கொம்பு. † சந்து - சந்தனம். ‡ வஞ்சியை முனிந்த - கொடிபோலும் இடையை வருத்துகின்ற. § சமர்புனைந்து - போர்க் கோலங்கொண்டு.

தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன
தன்ன தனதன தனதன தனதன தனதான.

53. களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடும்

கலக மிடுகய லெறிகுழை யிகலியர்
பொருளி லொருவரை வழிகொடு மொழிகொடு
தரக மிடுபவர் தெருவினி லெவரையும் நகையாடிப்

பிளவு பெறினதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறி லமளியி லிதமொடு குழைவோடே

பிணையு மணையவர் வெறிதரு புணர்வினும்
அவச வனிதையர் முடிகொடு மணையவர்
*பெருமை யுடையவ ருறவினை விடவருள் புரிவாயே

†அளையி லுறைபுலி பெறு‡மக வயிறரு
பசுவி னிரைமுலை யமுதுண §நிரைமகள்
||வசவ னெடுபுலி முலையுண மலையுடன் உருகாநீள்

அடவி தனிலுள ¶உலவைகள் தளிர்விட
மருவ மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியபர் பறவைகள் நிலம்வர விரல்சேரேழ்

துளைகள் விடுகுழ லிரன்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி யுடையவ னெடியவன் மனமகிழ் மருகோனே

துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முககுக
துறையி லலையெறி திருநகருறைதரு பெருமாளே. (௫௬)

* பெருமை - இவண் சிறுமைப் பொருள் தரும். † அளை - மலைக்குகை. ‡ மக வயிறரு - மகவு + அயில்தரு. அயில்தரல் - குடித்தல். § நிரைமகள் - பசுவின் பெண்கன்று. || வசவன் - ஆண்கன்று. ¶ உலவைகள் - மரங்கள்.

வெம்பிணியு மன்ற*பவ சிந்தனைநி னைந்துனது
மின்சரண பைங்கழலொ டண்டஆளாய்
சங்கமுர சந்திமிலை துந்துமித தம்பமளி
தந்தனத னாதவென வந்துசூரர்
சங்கைகெட அண்டுதிசை யெங்குமுற மடிந்திடவொர்
தண்கடல்கொ ளுந்தநகை கொண்டவேலா
சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
தங்களின்ம கிழ்ந்துருகு மெங்கள்கோவே
சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தர†கு றம்பெணொடு
சம்புபுகழ் செந்தில்மகிழ் தம்பிரானே. (௫அ)

---

தந்தன தானான தானன தந்தன தானான தானன
தந்தன தானான தானன தனதான

56. கொம்பனை யார்காது மோதிரு கண்களி னாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு
கொங்கையி ‡னீராவி மேல்வளர் செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி னாதார சோபையில் மருளாதே
உம்பர்கள் ஸ்வாமீ நமோநம எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்
உன்புக ழேபாடி நானினி அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே
பம்பர மேபோல ஆடிய சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி
§ பங்கமி லாநீலி மோடிப யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்
டெம்புதல் வாவாழி வாழியெ னும்படி வீறான வேல்தர
என்றுமு ளானேம னோகர வயலூர
இன்சொல்வி சாகாக்ரு பாகர செந்திலில் வாவ்வாகியேயடி
யென்றனை யீடேற வாழ்வருள்பெருமாளே. (௫௯)

---

*பவசிந்தனை - பிறவிக்கடலில் அலைபவனை. † குறம்பெண் - குறப்பெண், மெலித்தல் விகாரம். ‡ நீராவி – நீர்த்தடாகம். § பங்கம் - குற்றம்.

தத்ததன தானதன தத்தான
தத்ததன தானதன தத்தான
தத்ததன தானதன தத்தான தனதான.

57. சத்தமிகு மேழுகட லைத்தேனை
யுற்றவது தோடுகனை வைப்போர்கொள்
சத்திதனை மானின்வடு வைக்காவி தனைமீறு
தக்கமணம் வீசுகமலப்பூவை
மிக்கவிடை வானகடு வைச்சீறு
*தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்
மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடநிகர் செப்பான தனமீதே
வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வஜ்ரமயில் மீதினி யெப்போது வருவாயே
சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனுவற்கார
திக்கினுமந் டாவுபுர விக்கார குறமாது
சித்தஅநு ராககல விக்கார
துட்டஅசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்
முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ப ராவுசர ணக்கார இனிதான
முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்துலவு வேலைநகர் முத்தேவர் பெருமானே, (௫௦)

---

* தத்து உகளும் வாளை - துள்ளுகின்ற. திரிகின்ற வாளை மீனை.

தனனதன தாந்ததந்தத் தனனதன தாந்ததந்தத்
தனனதன தாந்ததந்தத் தனதான.

58. * தகரநறை பூண்டவிந்தைக் குழலியர்கள் தேய்ந்தஇன்பத்
தளருமிடை யேந்து தங்கத் தனமானூர்
தமைமனதில் வாஞ்சைபொங்கக்கலவியொடுசேர்ந்துமந்த்ரச்
சமயசெப நீங்கியிந்தப் படிநாளும்
புகலரிய தாந்த்ரி சங்கத் தமிழ்பனுவ லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாய்ந்து வஞ்சித் துழல்மூடர்
புனிதமிலி மாந்தர் தங்கட் புகழ்பகர்தல் நீங்கிநின்பொற்
புளகமலர் பூண்டு வந்திக் கிடுவேனோ
தகுடதகு தாந்த தந்தத் திகுடதிகு தீந்த திந்தித்
தகுகணக தாங்க ணங்கத் தனதான
தனனதன தாந்த தந்தத் தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை யூர்ந்த சந்தத் திருமார்பா
திகையசுரர் மாண்ட மூந்தத் திறலயிலை வாங்கு செங்கைச்
சிமையவரை யீன்ற மங்கைக் கொருபாலா
திகழ்வயிர மேந்து கொங்கைக் குறவனிதை காந்த சந்த்ரச்
சிகரமுகி லோங்கு செந்திற் பெருமாளே. (கச)

---

தந்ததன தந்தனந் தந்ததன தந்தனந்
தந்ததன தந்தனந் தந்ததான.

59, தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்
தந்தையினை முன்பரிந் தின் † பவுரி கொண்டுநன்
‡ சந்தொடம ணைந்து நின் றன்புபோலக்
கண் § டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்

---

* தகரம் - மயிர்ச்சாந்து † பவுரி - கூத்து ‡ சந்தொடம் - சந்தோஷம்
§ உறகடம்பு, சந்தோஷக்கி யியல்பானது.

கண்களுமு கங்களுஞ் சந்திர *நிறங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ
புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது
†பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கணும்வ ளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்
கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே
கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுநி கும்பிடுந் தம்பிரானே. (௫௯)

---

தனத்த தத்தத் தனத்தனா தனத்த தத்தத் தனத்தனா
தனத்த தத்தத் தனத்தனா—தந்ததானதனனா.

60. தெருப்புறத்துத் துவக்கியாய் தனக்குவட்டைக் குலுக்கியாய்ச்
சிரித்துருக்கித் தருக்கியே பண்டைகூளமெனவாழ்
சிறுக்கிரெட்டைக் கிதக்கியாய் மனத்தலைத்தவைத்துக் கனத்தபேர்
தியக்கமுற்றுத் தவிக்கவே கண்டுபேசி யுடனே
இருப்பகத்துத் தளத்தநீரால் விளக்கெடுத்துப் படுத்துமேல்
இருத்திலைத்துப் பரப்பியே கொண்டுகாதலியா
திதுக்கதுக்குக் ‡கடப்படா மெனக்கைக கக்கக் கழற்றியே
இளைக்கவிட்டுத் துரத்துவார் தங்கள்கோவை தவிராய்
பொருப்பையொக்கப் பணைத்ததோர் இரட்டிபத்துப் புயத்தினே
பொறுத்தபத்துச் சிரத்தினே மண்டுகோபமுடனே
பொரப்பொருப்பிற் கதித்தபோ ரரக்கர்பட்டுப் பதைக்கவே
புடைத்துமுட்டத் துணித்தமா லன்புகூருமருகா
வரப்பையெட்டிக் குதித்துமே லிடத்தில்வட்டத் தளத்திலே
மதர்த்தமுத்தைக் §குவட்டியே நின்றுசேலினம்வாழ்
வயற்புறத்துப் புவிக்குள்நீள் திருத்தணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்தநித்தத் துவத்தனே செந்தில்மேவுகுகனே. (௬௦)

---

* நிறம் — காந்தி. † பொன்கிரியென் அஞ்சிறந்து எனப்பிரிக்க.
‡ கடப்படாம் — கடமைப்பாடாம். § குவட்டி — திரட்டி.

தந்ததனன தனனா தனனதன
தந்ததனன தனனா தனனதன
தந்ததனன தனனா தனனதன தனதான.

61. தொந்திசரிய மயிரே வெளிற*நிரை
தந்தமசைய முதுகே வளையஇதழ்
தொங்கவொருகை தடிமேல் வரமகளிர் நகையாடித்

தொண்டுகிழவ னிவனா ரெனஇருமல்
கிண்கிணென முனுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிடுபடு செவியாகி

வந்தபிணியு மதிலே †மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவே தனையுமிள
மைந்தருடைமை கடனே தெனமுடுகு துயர்மேவி

மங்கையழுது விழவே யமபடர்கள்
நின்றுசருவ மலமே யொழுகவுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்

எந்தைவருக ரகுநா யகவருக
மைந்தவருக மகனே யினிவருக
என்கண்வருக எனதா ருயிர்வருக அபிராம

இங்குவருக அரசே வருகமுலை
யுண்கவருக மலர்சூ டிடவருக
என்றுபரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்

சிந்தைமகிழு மருகா குறவரிள
வஞ்சிமருவு மழகா அமரர்சிறை
சிந்தஅசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா

திங்களரவு நதிசூ டியபரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
செந்திநகரி லினிதே மருவிவளர் பெருமாளே. (௬௧)

* நிரை - வரிசை. † மிடையும் - நெருங்கும்.

தானன தானன தானன தந்தத்
தானன தானன தானன தந்தத்
தானன தானன தானன தந்தத் தனதான.

62. தோலொடு மூடிய *கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலைநி ரம்பிச்
சூழ்பொருள் தேடிட வோடிவ ருந்திப் புதிதான
தூசொடு நாண்மணி மாலைப்ர பந்தக்
கோவையு லாமடல் கூறிய மூந்தித்
†தோமுறு காளையர் வாசல்தொ றும்புக் ‡கலமாருங்
காலனை விணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப் புலையேனைக்
காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற §நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞான தவஞ்சற் றருளாதோ
||பாலன மீதும னுன்முக செம்பொற்
பாலனை மோ¶தப ராதன பண்டப்
பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடிப்
பாவியி ராவண னுர்தலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக்கினியோனே
சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்
சேலொடு வாளைவ ரால்கள்கி ளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே. (௬௰)

* கூரை - சேலை. † தோம் - குற்றம். ‡ அலமரும் என்றபாலது அலமாரு மென நீண்டது. § நம்பில் - விருப்பத்தினால். நம்பு - விருப்பம். ||பால் அனம் மீது மன் நான்முக என்பபிரிக்க. ¶ அபராதன - தண்டஞ்செய்தவனே.

தானதந்த தானதான தானதந்த தானதான
தானதந்த தானதான தனதான.

63\. நாலுமைந்து வாசல்கீறு தூறுடம்பு கால்கையாகி
நாரியென்பி லாருமாக மதனாலே
நாதமொன்ற ஆதிவாயில் நாடகங்க ளானஆடி
நாடறிந்தி டாமலேக வளராமுன்
நூலநந்த கோடிதேடி மால்மிகுந்து பாருளோரை
நூறுமொன்றுசொல் கூறிமாறி விளைதீமை
நோய்கலந்த வாழ்வுறாமல் நீகலந்து ளாகுஞான
நூலடங்க வோதவாழ்வு தருவாயே
காலன்வந்து பாலனாவி நாயெனென்று பாரமீக
காலம்வந்து ஓலமோல மெனுமாதி
காமனைந்து பாணமோடு வேமினென்று காணுமோனர்
காளகண்ட ரோடுவேத மொழிவோனே
ஆலமொன்று வேலையாகி யானையஞ்சல் தீருமூல
ஆரியங்கை ஆயன்மாயன் மருகோனே
ஆரணங்கள் தாளைநாட *வாரணங்கை மேவுமாதி
யானசெந்தில் வாழ்வதான பெருமாளே. (௬௩)

---

தனத்தத் தந்தனந் தனத்தத் தந்தனந்
தனத்தத் தந்தனந் தனதான.

64\. நிதிக்குப் †பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினைவோரை
நிலத்திற் றன்பெரும் பசிக்குத் தஞ்சமென்
றரற்றித் துன்பநெஞ் சினில்நாளும்
புதுச்சொற் சங்கமொன் றிரைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டிடும் பழிமாயும்
புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டுன்பதம்
புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே

---

* வாரணம் – கோழிக்கொடி. † பிங்கலன் – குபேரன்.

மதித்துத் திண்புரம் சிரித்துக் கொன்றிடும்
மறத்திற் றந்தைமன் றினிலாடி
மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண்
டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே
குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பெனுங்
கொழித்துக் கொண்டசெந் திலின்வாழ்வே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே. (௬௪)

---

தனதனன தான தான தந்தன
தனதனன தான தான தந்தன
தனதனன தான தான தந்தன தந்ததான.

65. படர்புவியின் மீது மீறி வஞ்சகர்
வியனிலுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்
பனுவல்கதை காவ்ய மாமெ ணெண்கலை
திருவளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை யோதி யேயு ணர்ந்துபல் சந்தமாலை
மடல்பரணி கோவை யார்க லம்பக
முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்
வகைவகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு
மதுரகவி ராஜ னானென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொடு லாவு மால கந்தைத விர்ந்திடாதோ
அடல்பொருது *பூச லேவி ளைந்திட
எதிர்பொரவொ ணாம லேக சங்கர
அரஹர சிவாம ஹா†தெ வென்றுனி அன்றுசேவித்
தவனிவெகு கால மாய்வ ணங்கியு
ளுருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபெலக டோர மாச லந்தர னொந்துவீழ

---

* பூசல் - போர். † தெவென்று — தேவென்று.

உடல்தழுவு மாதர்*தாவெனம்புய
மலர்கள்தர நாறு தாளி ரும்பகல்
ஒருமலரி லாது†கோவ ணிந்திடு செங்கண்மாலுக்
குதவியம கோர பால இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலில்
உரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே.(௧௮)

---

தனத்தத்தந் தனத்தத்தந் தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந் தனதான.

66. பெருக்கச்சஞ் சலித்துக்கந் தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்பற்றும் பொதுமாதர்
ப்ரியப்பட்டங் கழைத்துத்தங் கலைக்குட்டங் கிடப்பட்சம
பிணித்துத்தந் தனத்தைத்தந் தலையாதே
புரக்கைக்குன் பதத்தைத்தந் தெனக்குத்தொண் டுறப்பற்றும
புலத்துக்கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்
புலப்பாட்டங் கொடுத்தற்கும் கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் புரிவாயே
தருக்கிக்கண் களிக்கத்தெண் டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே
சலிப்புற்றங் குரத்திற்சம் ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்
சிரத்தைச்சென் றறுத்துப்பந் தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்‡றக்குங் குமரேசா
சிறக்கற்§கஞ் செழுத்தத்தந் திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே. (௬௬)

---

* தாவெனம்புய - தா + என + அம்புய. † கோ - கண். ‡ தக்கும் - தங்கும். § அஞ்செழுத்து அத்தம் — பிரணவபஞ்சாக்ஷரப் பொருள்

தந்த தந்தன தந்தன தந்தன
தந்த தந்தன தந்தன தந்தன
தந்த தந்தன தந்தன தந்தன தந்ததான.

67. மஞ்செ னுங்குழ லும்பிறை யம்புரு
வங்க ளெனசிலை யுங்கணை யங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை

மண்ட லஞ்சுழ லுஞ்செவி யங்குழை
தங்க வெண்டர ளம்பதி யும்பலு
*மண்ட லந்திக ழுங்கமு கஞ்சிறு கண்டமாதர்

கஞ்ச கங்குர லுங்கமை யம்புய
கொங்கை செங்கரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேருங்

கஞ்ச மண்டலி னின்றிர சம்புகு
கண்டு பார்ந்திட நம்மைமெ னுந்துமை
கண்ணை யஞ்சர ணஞ்செயல் வஞ்சரை நம்புவேனோ

சஞ்ச கஞ்சக ணஞ்சக டுண்டுடு
டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை

சம்பு வின்குமர ன்புல வன்பொரு
கந்த னென்றிடு தந்தமி யுந்துவ
சங்க லங்கொளி ருங்குடை யுந்திசை விஞ்சவேகண்

டஞ்ச வஞ்சசு ரன்திர ளுங்குவ
டன்ற டங்கலும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னிஞ்சர ணம்புக வென்றவேளே

† அம்பு யந்தண ரம்பைகு றிஞ்சியின்
மங்கை யங்‡குடில் மங்கையொ டன்புடன்
அண்டருந்தொழு செந்திலி லின்புறு தம்பிரானே (௫0)

---

* மண்டலம் - மண்தலம். † அம்புய அந்தண் அரம்பை எனப் பிரித்துக்கொள்க. ‡ குடில் – ஆகாயம், விண்ணுலகம்; குடில் மங்கை - தெய்வயானை.

தான தானன தந்தன தந்தன
தான தானன தந்தன தந்தன
தான தானன தந்தன தந்தன தனதான.

68. மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சிலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள் பழையோர்மேல்

வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
*வாற பேர்பொருள் கண்டுவி ரும்பிகள் எவரேனும்

நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசிலாதவர் தங்களை யன்பற
நீதி போலநெ கிழ்ந்தப ரம்பிகள் அவர்தாய்மார்

நீலி நாடக மும்பயில் பண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு கொண்டிகள்
நீச ரோடுமி ணங்குக டம்பிகள் உறவாமோ

பாயுமாமத தந்திமு கம்பெறு
மாதி பாரத மென்ற பெருங்கதை
பார மேருவி லன்று வரைந்தவன் இளையோனே

பார்வை யாள்குற மங்கை செழுந்தன
பார மீதில ணைந்து முயங்கிய
பாக மாகிய சந்தன குங்கும மணிமார்பா

†சீய மாயுரு வங்கொடு வந்‡தசு
ரேசன் மார்பையி டந்து பசுங்குடர்
சேர வாரிய ணிந்த நெடும்புயல் மருகோனே

தேனு லாவுக டம்ப மணிந்தகி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவநாயக செந்திலு வந்தருள் பெருமாளே. (௫௧)

---

* 'வருகிற' என்பது 'வாற' என்று மருவிற்று. † சீயம் - சிங்கம். ‡ அசுரேசன் - இரணியன்.

தனதானன தனனந் தாத்த
தனதானன தனனந் தாத்த
தனதானன தனனந் தாத்த தனதான.

69\. முகிலாமெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி அமுதூறு

மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
முகமாகிய கமலங் காட்டி மலைபோலே

வகையாமிள முலையுங் காட்டி
இடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி யிதமான

மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவேதொழி லதிகங் காட்டு
மடமாதர்கள் மயலின் சேற்றில் உழல்வேனோ

நகையால்மத னுருவந் *தீத்த
சிவனாரருள் சுதனென் றார்க்கு
நலனேயரு ளமரெந் தூர்க்குள் உறைவோனே

நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே

அகமேவிய நிருதன் போர்க்கு
வரவேசமர் புரியுந் தோற்றம்
அறியாமனு மபயங் காட்டி முறைகூறி

அயிராவத முதுகின் தோற்றி
படையாமென இனிதன் பேத்தும்
அமரேசனை முழுதுங்காத்த பெருமாளே. (௫௨)

* தீத்த - தீயச்செய்த.

தந்தந்தந் தந்தன தானன தந்தந்தந் தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன தனதான.

71. *வஞ்சங்கொண்டுந்திடராவணனும்பந்தென்திண்பரிதேர்கரி
மஞ்சின்பண்புஞ்சரியாமென வெகுசேனை

வந்தம்பும்பொங்கிய தாகன கிரந்தங்கள் சம்பிர தாயமும்
வம்புந்தும்பும்பல பேசியு மெதிரேகை

மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு ரங்குந்தஞ் சுங்கனல் போலவெ
குன்றுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி

மிண்டுந்துங் கங்கவி குலைத கர்ந்தங்கங் கங்கர மார்பொடு
மின்பந்துஞ் சிந்திச் சாரர் வகைசேர

அஞ்சண்டன் தென்றிசை நாடி விழுந்தங்குஞ் சென்றெம தூதர்க
ளுந்துந்துந் தென்றிட வேதகமா னலவுளோ

கண்டுங்கண்டுஞ்சிலகூளிகள் டிண்டிண்டென் றுங்குதிபோடவு
யர்ந்தம்புங்கொண்டெல் மாதவன் மருகோனே

தஞ்சந்தஞ் சஞ்சிறியேன்மதி கொஞ்சங்கொஞ் சந்துரையேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே

சங்கஞ்சங் கங்கபல் சூழ்கட மெங்கெங்கும் பொங்க மகாபுனி
தந்தங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமாளே. (௫௪)

தந்ததந்த தந்ததந்த தந்ததந்த தந்ததந்த
தந்ததந்த தந்ததந்த தந்ததான.

72. வந்துவந்து முன்தவழ்ந்து †வெஞ்சுகந்த யங்கநின்று
‡மொஞ்சிமொஞ்சி யென்றழுங்கு ழந்தையோடு

மண்டலங்கு லுங்கஅண்டர் விண்டலம்பி ளந்தெழுந்த
செம்பொன்மண்ட பங்களும்ப யின்றவீடு

கொந்தளந்த குந்தளந்த ழைந்துகுங்கு மந்தயங்கு
கொங்கைவஞ்சி தஞ்சமென்று மங்குகாலம்

* வஞ்சம் கொண்டும் திடராவணனும் எனப் பிரித்துக் கொள்க.
† வெஞ் சுகம் - விருப்பமாகிய இன்பம். ‡ மொஞ்சி - முலை,

*கொங் †கடம்பு ‡கொங்குபொங்கு மைங்கடம்பு ||தண்டைகொஞ்சு
செஞ்சதங்கை தங்குபங்க யங்கள்தாராய்

சந்தடர்ந்த மூந்தருட்பு §மந்தரஞ்செ மூங்கரும்பு
||கந்தரம்பை ¶செண்பதங்கொள் செந்தில்வாழ்வே

தண்கடங்க டந்துசென்று ○பண்கடங்க டர்ந்த *இன்சொல்
திண்புனம்பு குந்துகண்டி றைஞ்சுகோவே

அந்தகன்க லங்கவந்து †கந்தரங்க லந்த ‡சிந்து
ரஞ்சிறந்து வந்தலம்பு ரிந்தமார்பா

அம்§புனம்பு குந்தநண்பர் அம்புயம்பு ரந்தரன்||த
ரம்பலும்பர் ¶கும்பர்நம்பு தம்பிரானே. (௫௫)

தந்த தான தான தந்த தானன தானன
தந்த தானன தானன தனதான.

73. ○வெஞ்சரோருக மோகடுந்தர மோகபாணமோ நெடு
விண்டபாசக மோவடு வகிரோமுன்

வெந்துபோன புராதன னம்ப ராரி புராரியை
வென்ற சாயக மோகரு விளையோகண்

கஞ்ச மோயம தூதவர் நெஞ்ச மோ வெறு மாயந
சஞ்ச மா தபோதன ரதில்மூழ்கு

சங்கை *யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே

* கொங்கு - கோங்கு. † அடம்பு - ஓர்வித கொடிப்பூ. ‡ கொங்கு பொங்கு - வாசனை மிகுந்த. § மந்தரம் - மந்தாரம். || கந்தரம்பை - கந்த அரம்பை இருங்கோடு கூடிய வாழை. ¶ செண் - சேண். ○ பண்கடங் கடர்த்த - பண்கள்+தங்கு - அடர்த்த. * இன்சொல் - இன்சொலுடைய வள்ளியம்மை. † கந்தரம் - (அன்பர்கள் மனமாகிய) குகை. ‡ சிந்துரம் - தெய்வயானையம்மை. § புனம் புகுந்த நண்பர் - முனிவர்கள். தரம்பலும்பர் - தரம்+பல் உம்பர் - தரம்பெற்ற பலதேவர்கள். ¶ கும்பர் - கும்பமுனி. ○ வெம்சரோருகம் - விருப்பத்தக்க தாமரை. * ஓவிரு - ஓவு+இரு. ஓவு - நீங்க.

பஞ்ச பாதக தாருக தண்டனீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்
பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடும் இளையோனே
செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாமதி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே
செண்பகாடவி யீடிய துங்க மாமதில் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே. (எசு)

---

தனனதன தனனதந்த தனதான.

74. இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்புத் தருவாயே
*மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே. (எஎ)

---

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந் தனதான.

75. இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ
புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்
தன்†பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்குமுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே (எஅ)

---

*மயில் தகர் கலிடையர் - மயிலும் ஆடும் நிறைந்த குன்றினிடத்தில் வசிக்கும் வேடவேர். † பொருநம் - தாமிரபர்ணி.

தானன தானன தானன தானன
தானன தானன தனதானு.

76. ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணு
ஈனனை வீணனை யேடெழு தாமுழு
ஏழையை மோழையை யகலாநீள்
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை யிகழாதே
மாமணி நூபுர சீதள தாள்தனில்
வாழ்வுற ஈவதும் ஒருநாளே
நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயில் உடையோனே
தேவிம னோன்மணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே. (௩௬)

---

தானு தந்தத் தானுதந்தத்
தானுதந்தத் தனதானு.

77. ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர
ஊடா நன்றுற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்
கூரா வன்பிற் சோரா நின்*றக்
கோயா நின்றுட் குலையாதே
கோடார் செம்பொற் றோளா நின்சொற்
கோடா தென்கைக் கருள்தாராய்

* அக்கு - எலும்போடுகூடிய சரீரம்.

*தோரா வென்றிப் போரா மன்றற்
றோளா குன்றைத் துளையாட
சூதா யொண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா
சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே
தேனே யன்பர்க் கேயா நின்சொற்
சேயே செந்திற் பெருமாளே. (௯௦)

தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான தனதான.

78. குன்றிலுறு மானை வென்ற விழியாலெ
கஞ்சமுகை மேவு முலையாலே
கங்குல்செறி கேச மங்குல்குலை யாலை
கந்தமலர் சூடு மதனாலே
நன்றுபொருள் திர வென்றுவிலை பேசி
நம்பவிடு மாதர் உடனுடி
†நஞ்சுபுசி தேரை யங்கமது வாக
நைந்துவிடு வேனை யருள் பாராய்
குன்றிமணி போல்வ செங்கண்வரி ‡போகி
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்
கொண்ட மயிலேறி அன்றசுரர் சேனை
கொன்றகும ரேச குருநாதா
மன்றல்கமழ் பூக தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழு
மந்திரட மாடு செந்திநகர் மேவு
மைந்தஅம ரேசர் பெருமாளே (௯௧)

* தோரா-தோலா, தோற்காத † நஞ்சு-நஞ்சுடைய பாம்பு. இஃது ஆகு பெயர். ‡ போகி-பாம்பு.

தனன தானனத் தனதன தனனத்
தந்தத் தந்தத் தனதான.

79. *குகர மேவுமெய்த் துறவினி னுறவாக்
கும்பிட் டுந்திக் கூடவு ழன்றிக்
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ
†டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே
அமிழு வேனைமெத் தெனவொரு கணைசேர்த்
தம்பொற் றண்டைக் கழல்தாராய்
ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்
கமல வாதனற் கவிட முடியாக்
கம்பர்க் கொன்றைப் புகல்வோனே
சிகரகோபுரத் தினுமதி லினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்
தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்
செந்திற் கந்தப் பெருமாளே. (௯௨)



தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தானந்தனன

80. குடர்நிண மென்பு சலமல மண்டு
குருதிந ரம்பு சீயூன் பொதிதோல்
குலவு குரம்பை முருடு சுமந்து
‡குனகிம கிழ்ந்து நாயேன் தளரா
அடர்மத னம்பை யனையக ருங்கண்
அரிவையர் தங்கள் தோடோய்ந் தயரா

* குகரம் - மலைக்குகை. †அகருதூளி - அகிற்பொடி.
‡ குனகி - குணங்கி என்பதன் மரூஉ.

அறிவழிகின்ற குணமற வென்றன்
அடியிணை தந்து நீயாண் டருள்வாய்
தடவியல் செந்தி லிறையவ னன்பு
தருகுற மங்கை வாழ்வாம் புயனே
சரவண கந்த முருகக டம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந் தவனே
சுடர்படர் குன்று தூளபட அண்டர்
தொழவொரு செங்கை வேல்வாங் கியவா
*துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந் தகனே (கூ௯)

தனதன தனதன தனதன தனதன தந்தத்தன தானா.

81. கொலைமத கரியன மிருகமத மொழுகிய கும்பத் தனமானார்
குமுதஅமுதஇதழ்பருகியுருகிமயல்கொண்டுற்றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்வழிநின் றுற்றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற நின்பற்றடைவேனோ
சிலையென வடமலை யுடையவ ரருளிய செஞ்சொற் சிறுபாலா
திரைகடலிடைவருமசுரனைவதைசெய்த செந்திற்பதிவேலா
†விலைகிகர் நுதலிபமயில்குறமகளும்விரும்பிப்புணர்வோனே
விருதணி மரகத மயில்வரு குமரவி டங்கப் பெருமாளே ()

தானத் தானன தானத் தானன தானத் தானன தந்ததான.

83. சேமக் கோமள பாதத்தாமரைசேர்தற்கோதுமநந்தவேதா
தீதத் தேயவி ரோதத் தேகுண சீலத் தேமிக அன்புறாதே
காமக் ரோதவு லோபப் பூதவி காரத் தேயழி கின்றமாயா
காயத் தேபசு பாசத் தேசிலர் காமுற் றேயும தென்சொலோதான்
நேமிச் சூரொடு மேருத் தூளெழ நீளக் காளபு யங்ககால
நீலக் ரீபக லாபத் தேர்விடு நீபச் சேவகசெந்தில்வாழ்வே
ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ லோகத் தேதரு மங்கைபாலா
யோகத்தாறுபதேசத்தேசிகவூமைத்தேவர்கள் தம்பிரானே.

---

* துரித பதங்க இரத ப்ரசண்ட - வேகத்தோடு செல்லும் மயிலாகிய இரதத்தையுடைய பிரசண்டனே. † விலை - வில்லை

தந்த தனதனன தந்த தனதனன
தந்த தனதனன தனதான.

83. தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்
மைந்தர் மனைவியர்*கம்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா
வந்து†தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க வொருமகிட மிசையேறி
அந்த கனுமெனையடர்ந்து வருகையினில்
அஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்ப னெனமொழிய வருவாயே
சிந்தை மகிழுமலை மங்கை நகிலிணைகள்
சிந்து ‡பயமயிலு மயில்வீரா
திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி னகரிலுறை பெருமாளே. (௬௬)



தனந்தந்தன தனத்தந்தன தனத்தந்தன தன்தான.

84. தரிக்குங்கலை நெகிழ்க்கும்பர தவிக்குங்கொடி மதனேவிற்
றகைக்குந்தனி திகைக்குஞ்சிறு தமிழ்த்தென்றலி னுடனேநின்
றெரிக்கும்பிறை யெனப்புண்படு மெனப்புன்கவி சிலபாடி
இருக்குஞ்சிலர் திருச்செந்திலை யுரைத்துய்ந்திட அறியாரே
அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர மனுக்குந்தெரி வரிதான
அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு மரற்கும்புரி தவபாரக்
கிரிக்கும்பரன் முநிக்குங்க்ருபை வரிக்குங்குரு பரவாழ்வே
கிளைக்குந்திற லரக்கன்கிளை கெடக்கன்றிய பெருமாளே.()

* கம்பு - சுற்றம். † தலைநவிர் - தலைமயிர். ‡ பயம் - பால்.

தனனாத் தனன தனனாத் தனன
தனனாத் தனன   தனதான.

85. நிலையாப் பொருளை *யுடலாக் கருதி
நெடுநாட் பொழுதும்   அவமேபோய்
நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள்   தடுமாறி
மலநீர்ச் சயன மிசையாய்ப் பெருகி
மடிவேற் குரிய   நெறியாக
மறைபோற் றரிய வொளியாய்ப் பரவு
மலர்தாட் கமலம்   அருள்வாயே
கொலைகாட் டவுணர் கெடமாய்ச் †சலதி
குளமாய்ச் ‡சுவற   முதுசூதம்
குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
கொதிவேற் படையை   விடுவோனே
அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புனித   வடிவாகும்
அரனார்க் கதிக பொருள்காட் டதிப
அடியார்க் கெளிய   பெருமாளே. (கூஅ)

—— ——

தனதன தனதன தந்தத் தந்தத் தனதானா.

86. பரிமள களபசு கந்தச் சந்தத்   தனமானார்
படையம படையென §அந்திக் குங்கட்   கடையாலே
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற்   குழலாலே
மறுகிடு மருளனை யின்புற் றன்புற்   றருள்வாயே
அரிதிரு மருகக டம்பத் தொங்கற்   றிருமார்பா
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித்   தெறிவேலா
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற்   குருநாதா
செயசெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.(கூகூ)

---

* உடல் - பொன். † சலதி – கடல். ‡ சுவற - வற்ற.
அந்திக்கும் - சந்திக்கும்.

தனனத் தந்தத் தனனத் தந்தத் தனனத் தந்தத் தனதான.

87. புகரப் புங்கப் பகரக் குன்றிற் புயலிற் றங்கிப் பொலிவோனும்
பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப் பொருளைப் பண்பிற் புகல்வோனும்
திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத் திகிரிச் செங்கைத் திருமாலும்
திரியப்பொங்கித்திரையற் றுண்டுட்டெளிதற்கொன்றைத் தரவேணும்
*தகரத் தந்தச் சிகரத் தோன்றித் †தடநற் கஞ்சத் துறைவோனே
தருணச் சாங்கைக் ‡குறவிக்கின்பத் தையளித்தன்புற் றருள்வோனே
பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப் படியிற் சிந்தத் தொடும்வேலா
பவளத்துங்கப் புரிசைச் செந்திற் பதியிற்கந்தப் பெருமாளே. (௭௰)

---

தந்த தனன தந்த தனன தந்த தனன தனதான.

88. மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர் வந்து கதற வுடல்தீயின்
மண்டி யெரிய விண்டு புனலில் வஞ்ச மொழிய விழஆவி
வெங்கண் மறலி தன்கை மருவ வெம்பி யிடறும் ஒருபாச
விஞ்சை விளையு மன்று னடிமை வென்றி யடிகள் தொழவாராய்
சிங்க முழுவை தங்கு மடவி சென்று §மறமி னுடன்வாழ்வாய்
சிந்தை மகிழ அன்பர் புகழு செந்தி லுறையு முருகோனே
எங்கு மிலகு திங்கள் கமல மென்று புகலு முகமாதர்
இன்பம் விளைய அன்பி னணையு மென்று மிளைய பெருமாளே.

---

தனதனன தந்த தனதனன தந்த
தனதனன தந்த தனதான.

89. மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமை குலநின்ற நிலையூர்பேர்
வளரிளமை தஞ்ச முனைபுனைவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாய
கனவுநிலை யின்ப மதனையென தென்று
கருதிவிழி யின்ப மடவார்தம்
கலவிமயல் கொண்டு பலவுடல்பு ணர்ந்து
கருவில்விழு கின்ற தியல்போதான்

* தகரத்து அந்தச்சிகரம் - தகரவித்தையின் முடிவாகிய உச்சி. † தடநற் கஞ்சம் - இருதயக்கமலம். ‡ குறவி - குறத்தியாகிய வள்ளிநாயகி. § மறமின் - வள்ளிநாயகி.

நினையுநின தன்பர் பழவினை களைந்து
நெடுவரை பிளந்த கதிர்வேலா
நிலமுதல் விளங்கு நலமருவு செந்தில்
நிலைபெற இருந்த முருகோனே
புனைமலர் புனைந்த புனமற மடந்தை
புளகஇரு கொங்கை புணர்மார்பா
பொருகுட னெதிர்ந்த நிருதர்மகு டங்கள்
பொடிபட நடந்த பெருமாளே. (௭௨)

---

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த தனதான.

90. முலைமுகந் திமிர்ந்த கலவையுந் துலங்கு
முறுவலுஞ் சிவந்த கனிவாயும்
முருகவிழ்ந் துதிர்ந்த மலர்களுஞ் சரிந்த
முகிலுமின் பசிங்கி விழிவேலும்
சிலைமுகங் கலந்த திலதமுங் குளிர்ந்த
திருமுகந் ததும்பு குறுவேர்வும்
தெரியவந் துநின்ற மகளிர்பின் சுழன்று
செயலழிந் துழன்று திரிவேனோ
*மலைமுகஞ் சுமந்த புலவர்†செஞ்சொல்கொண்டு
வழிதிறந்த செங்கை வடிவேலா
வளர்புனம் பயின்ற குறமடந்தைகொங்கை
மணிவடம் புதைந்த புயவேளே
அலைமுகந் தவழ்ந்து சினைமுதிர்ந்த சங்கம்
அலறிவந் துகஞ்ச மலர்மீதே
அளிகலந் திரங்க இசையுடன் துயின்ற
அரியசெந்தில் வந்த பெருமாளே. (௭௩)

---

* மலைமுகம் சுமந்த புலவர் - கற்கிமுகி என்னும் பூதத்தால் மலைக் குகையில் அடைக்கப்பட்ட நக்கீரர். † செஞ்சொல் - (அவரால் துதிக்கப்பட்ட) திருமுருகாற்றுப்படை.

தாத்தத் தத்தன தாத்தத் தத்தன
தாத்தத் தத்தன தனதான.

91. மூப்புற் றுச்செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி
மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி *யிளையோடும்
கோப்புக்கட்டி †யிருமிச் செற்றிடு
கூட்டிற் ‡புக்குயிர் அலையாமுன்
§கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரியாயோ
காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்பரர்
காப்பைக் ||கட்டவர் குருநாதா
காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே
வாய்ப்புற் றத்தமிழ் மார்க்கத் திற்பொருள்
வாய்க்குச் சித்திர முருகோனே
வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே. (எசு)

---

தந்தத்தன தன தந்தத்தன தன
தந்தத்தன தன * தனதான.

92. வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்
¶வந்திப் புதல்வரும் ○ அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூற

---

* இளை - ஈளை, அஃதாவது கோழை. † இருமிச்சு எற்றிடு கூட்டில் - துன்பம்சிதைத்து வருத்தும்உடலில் ‡ புக்கு உயிர்அலையாமுன் - புகுந்து உயிரை வதைப்பதற்குமுன். § கூற்றத்தத்துவம் - உடல் வேறு உயிர் வேறாகக் கூறுபடுத்தும் யம வேதனைத் தன்மை. || கட்டவர் - களைந்தவா. ¶ வந்தி வணங்கும். ○ அந்தி - நெருங்கிய.

*அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென உடன்மேவ
அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்
கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா
கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
†கண்டத் தழகிய திருமார்பா
செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநகர் உறைவோனே
செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்தப் பொரவல பெருமாளே. (௭௫)

தனனா தனந்த தனதான.

93. வரியார் கருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி
இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே
பரிபால னஞ்செய் தருள்வோனே
பரமேச னன்ற னருள்பாலா
அரிகேச வன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே. (௭௬)

தந்தன தான தந்தன தான தந்தன தான தனதான

94. புந்தநி றைந்த வந்தது காயம் வெந்ததுகோடி யினிமேலோ
விண்டுவிடாம லுன்பத மேவு விஞ்சையர்போல அடியேனும்
வந்துவி நாச முன்கலி தீர வண்சிவ ஞான வடிவாகி
வன்பத மேறி யென்களையாற வந்தருள் பாத மலர்தாரய்

* அஞ்சக் கலைபடு - அம்சம் கலைபடு - தத்துவப்பகுதிகள் பிரிபட்டுப் போகின்ற. † கண்டத்து - கண் தத்து.

எந்தனு ளேக செஞ்சுட ராகி யென்கணி லாடு தழல்வேணி
எந்தையர் தேடு மன்பர்ச காயர் எங்கள்சு வாமியருள்பாலா
சுந்தர ஞான மென்குற மாது தன்றிரு மார்பி லணைவோனே
சுந்தர மான செந்திலில் மேவு கந்தசு ரேசர் பெருமாளே

---

தந்தந்தந் தந்த தனந்தன
தந்தந்தந் தந்த தனந்தன
தந்தந்தந் தந்த தனந்தன தனதான.

95. துன்பங்கொண் டங்கமெலிந்தற
நொந்தன்பும் பண்புமறந்*தொலி
துஞ்சும்பெண் சஞ்சலமென்பதில் அணுகாதே
இன்பந்தந் தும்பர்தொழும்பத
கஞ்சந்தந் தஞ்சமெனும்படி
யென்றென்றுந் தொண்டுசெயும்படி அருள்வாயே
நின்பங்கொன் றுங்குறமின்சர
ணங்கண்டுந் தஞ்சமெனும்படி
நின்றன்பின் றன்படிகும்பிடும் இளையோனே
பைம்பொன்சிந் தின்றுறைதங்கிய
குன்றெங்குஞ் சங்குலலம்புரி
பம்புந்தென் செந்திலில்வந்தருள் பெருமாளே. (எஅ)

---

தனன தனதனந் தந்தத் தந்தத்
தனன தனதனந் தந்தத் தந்தத்
தனன தனதனந் தந்தத் தந்தத் தனதான.

96. பதுமவிருசரண் கும்பிட்டின்பக்
கலவிகலமிருந் துங்கக்கொங்கைப்
†பகடுபுளகிதந் துன்றக்கன்றிக் கயல்போலும்
பரியகரியகண் செம் பொற்கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற்கொஞ்சிப்
பதறவிதமுறுங் கந்தக்கொந்துக் குழல்சாயப்

*ஒளி-அறிவு. † பகடு - மலை.

காரணகாரியங்க ளானதெலாமொழிந்து
யானெனுமேதைவிண்டு பாவகமாயிருந்து
காலுடனோடியங்கி நாசியின்மீதிரண்டு விழிபாயக்
காயமுகாரமெஞ்சு மோர்வழியாகஅன்பு
காயம்விடாமலுன்றன் நீடியதாள்நினைந்து
காணுதல்கூர்தவஞ்செய்யோகிகளாய்விளங்க அருள்வாயே
ஆரணசாரமந்த்ர வேதமெலாம்விளங்க
ஆதிரையானுமன்று தாழ்வினைவணங்கும்
ஆதரவால்விளங்கு பூரணஞானமிஞ்சும் உடையோனே
ஆர்கலியூடெழுந்து மாவடிவாகிநின்ற
சூரனைமாளவென்று வானுலகாளுமன்ப
ரானவர்கூரரந்தை தீரமுளம்மகிழ்ந்த முருகோனே
வாரணமூலமென்ற போதினிலாழிகொண்டு
வாவியின்மாடிடங்கர் பாழ்படவேயெறிந்த
மாமுகில்போலிருண்டமேனியன்முகுந்தன்மருகோனே
*வாலுகமீது†வண்டல் மேலாடியகாவில்வந்து
கூல்நிறைவாவிசங்கு மாமணியீனவந்து
வாரிதிநீர்பரந்த சீரலைவாயுகந்த பெருமாளே. (அப)

---

தனதனதனதன தனதனதனதன
தத்தத்தத்தன தத்தத்தத்தன—தந்ததான.

98. படிதனிலுறவெனு மனைவர்கள்பரிவொடு
பக்கத்திற்பல கத்திட்டுத்துயர் கொண்டுசாரப்
பனைமரவிறகிடை யழலிடையுடலது
பற்றக்கொட்டுகள் தட்டிச்சுட்டிடு துன்பமேவிக்
கடியமனுயிர்தனை யிருவிழியனலது
கக்கச்சிக்கென முட்டிக்கட்டவு டைந்துபோமுன்
கதிதருமுருகனு மெனநினைபவரொடு
கற்பிற்புக்கறி வொக்கக்கற்பது தந்திடாயோ

* வாலுகம் - மணல். † வண்டல் - நீர்ச்சுழி.

வடகிரிதொளைபட அலைகடல்சுவறிட
மற்றைத்திக்கினு மெட்டுத்திக்கினும் வென்றிவாழ
வலியுடனெதிர்பொரு மசுரர்கள்பொடிபட
வட்டத்திட்டயர் வெற்பைக்குத்திம லைந்தவேளே
அடர்சடைமிசைமதி யலைசலமதுபுனை
யத்தற்குப்பொருள் கற்பித்துத்தரு செந்தில்வாழ்வே
யடிமுதன்முடியினும் வடிவொடுதொழுமவு
ளத்திற்பத்திகொ ணித்தப்ரசித்தர்கள் தம்பிரானே

---

தனத்ததந்தனந் தனத்ததந்தனந்
தனத்ததந்தனந் தனதான.

59. புரக்கவந்தநங் குறக்கரும்பைமென்
புனத்திலன்றுசென் றுறவாடிப்
புடைத்தலங்கிர்தம் படைத்தெழுந்ததண்
புதுக்குரும்பைதிண் புயமீதே
செருக்குநெஞ்சகங் களிக்குமன்புடன்
திளைக்குநின்றிறம் புகழாதிந்
த்ரியக்கடஞ்சுமந் தலக்கண்மண்டுமென்
றியக்கமென்றொழிந் திடுவேனோ
குரக்கினங்கொணர்ந் தரக்கர்தண்டமுங்
குவட்டிலங்கையுந் துகளாகக்
கொதித்துவெம்பியங் கதிர்த்துவந்துடன்
குதித்தகொண்டலின் மருகோனே
துரக்கவும்பரும் பரப்புசண்டனிற்
றுரத்தனும்பிறந் றவாத
சுகத்துளன்பருந் துதித்தசெந்தில்வந்
துதிக்குழும்பர்தம் பெருமாளே. (அஉ).

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான.

100. புகரில் சேவல செங்கர சங்கம
நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
பொருத வேலக குன்றவர் பெண்கொடி மணவாளா

புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
புயசு பூதர வென்றிரு கண்புனல்
பொழிய மீமிசை யன்புது ளும்பிய

அகிலபூதவு டம்பு முடம்பினில்
அமரு மாருயி ருங்கர ணங்களும்
மவுன வார்வழி குந்துதொ ழுந்தனி யுணர்வாலே

அகில வாதிக ருஞ்சம யங்களும்
அடைய ஆமென அன்றென நின்றதை
அறிவி லேனறி யும்படி யென்றருள் புரிவாயே

மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
மலையின் மாருத மும்பல வும்பரி
மள*சி லீமுக மும்பல †மஞ்சரி வெறியாடும்

‡மதுக ராரவ சிஞ்சினி யுங்கன
§மதுர கார்முக மும்பொர வந்தெழு
மதன ராசனும் வெந்து விழும்படி முனி||பால

முகுள்¶வி லோசன முஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் பாதியு டம்பில்வி ளங்கிய வபிராமி

முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரிக்ரி யம்பிகை தந்தருள்
முருகனேவளர்செந்திலில்வந்தருள் பெருமாளே. (௮௩)



* சிலீமுகம் - அம்பு † மஞ்சரி - பூங்கொத்து ‡ மதுகராரவ சிஞ்சினி - மதுகர அரவ சிஞ்சினி, வண்டாகிய ஒலிக்கின்ற நாண். § மதுர கார்முகம் - இனிய வில், கரும்புவில். || பாலம் - நெற்றி. ¶ முகுள் - தோன்றிய.

உ

மூன்றாவது

## திருவாவினன்குடி—பழநி.



தான தந்தன தானான தானன
தான தந்தன தானான தானன
தான தந்தன தானான தானன தனதான.

101. நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி
நாம சம்பு குமாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்
சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம *கிரிராஜ
தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்
ஈத லும்பல†கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீபாத சேவையு மறவாத
ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை
சோழமண்டலமீதேமனோகர
ராஜ‡கெம்பிர நாடாளு நாயக வயலூரா
ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
ஆதியந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே. (௧)

---

*கிரி ராஜன — குறிஞ்சி வேந்தன். †கோலாகலம் என்பது கோலாலம் என்றாயிற்று. கோலாகலம் — சம்ப்ரமம். ‡கெம்பிர - கெம்பீர.

102. போத கந்தரு கோவே நமோநம
நீதி தங்கிய தேவா நமோநம
பூத லந்தனை யாள்வாய் நமோநம பணியாவும்
பூணு கின்றபி ரானே நமோநம
வேடர் தங்கொடி மாலா நமோநம
போத வன்புகழ் ஸாமீ நமோநம அரிதான
வேத மந்திர ரூபா நமோநம
ஞான பண்டித நாதா நமோநம
வீர கண்டைகொள் தாளா நமோநம அழகான
மேனி தங்கிய வேளே நமோநம
வான பைந்தொடி வாழ்வே நமோநம
வீறு கொண்டவி சாகா நமோநம அருள்தாராய்
பாத கஞ்செறி சூரா திமாளவெ
கூர்மை கொண்டயி லாலே *பொராடியெ
பார அண்டர்கள் வானடு சேர்தர அருள்வோனே
பாதி சந்திர னேசூடும் வேணியர்
சூல சங்கர னார்கீத நாயகர்
பார திண்புய மேசேரு சோதியர் கயிலாயர்
ஆதி சங்கர னார்பாக மாதுமை
கோல அம்பிகை மாதா மனோன்மனி
ஆயி சுந்தரி தாயான நாரணி அபிராமி
ஆவல் கொண்டு†வி ருலே ‡சிராடவெ
கோம ளம்பல சூழ்கோ யில்மீறிய
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே. (உ)

---

103 வார ணந்தனை நேரான மாமுலை
மீதணிந்திடு பூணார மாரொளி
வால சந்திர னேராக மாமுகம் எழில்கூர

* பொராடிய-போராடிய. † விருலே – வீறுலே. ‡ சிராடிய-சீராடிய.

*வாரணங்கிடு சேலான நீள்விழி
யோலை தங்கிய வாராகாது வாவிட
வான இன்சுவை மேலான வாயிதழ் அமுதூறத்

தோரணங்குறு தாராவாழை யேய்த்துடை
மீதிலங்கின்றிடை நூலபோலு லாவியெ
தோகையென்றிட வாகாகவூரன நடைமாதர்

தோதகந்தனை மாமாயையேவடி
வாகனந்தெருஆய வேவாவது
தோணிடுமபடி நாயேனுமை நீயருள் தருவாயே

காரணந்தனை யோராஞ் சாசரா
தாமடங்கலு மிருக வானவா
காவலிந்தர னூடாள வேயயில் விடும்வீரா

கார்விடந்தனை யூணுக வானவா
வாழ்தருமப மேனெறி லேமிசை
காளசண்டமகா தேவனார் தரு முருகோனே

ஆரணன்றனை வாதாடி யோருரை
†ஓதுகின்றேனை வாராதெனா அவன்
ஆணவம்படு கோபாவலாமதில இடுமவேலா

ஆதவன்கதிர் ஓவாது லாவிய
கோபுரங்களா மாமாது மேவிய
ஆவினன்குடி யோனே சுராதிபா பெருமாளே. (௫)

---

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தனதான.

104 மூல மந்திர மோத மிங்கிலை
ஈவ திங்கிலை நேய மிங்கிலை
மோன மிங்கிலை ஞான மிங்கிலை மடவார்கள்

---

* வாரணங்கிடு - பெரிய துன்பஞ் செய்கின்ற. † ஓதுகின்றேனை-ஓதுக இன்று எனை, என்று பிரிக்க.

மோக முண்டதி தாக முண்டப
சாரமுண்டப ராத முண்டிடு
மூக னென்றொரு பேரு முண்டருள் பயிலாத
கோல முங்குண வீன துன்பர்கள்
*வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பிபி லேவி ழுந்திட நினைவாகிக்
கூடு கொண்டுழல் வேனை யன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்மை தந்தினி யாள வந்தருள் புரிவாயே
பீலி வெந்துய ராலி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டருள் எழுதேடு
பேணி யங்கெதி ராறு சென்றிட
மாற னுய்ம்பிணி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு வேற வென்றிடு முருகோனே
ஆல முண்டவர் சோதி யங்கணர்
பாக மொன்றிய வாலை யந்தரி
ஆதி யந்தமு மானசங்கரி குமரேசா
ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவலங்கொடி யான பைங்கர
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே. (ச)

---

105. வேயிசைந்தெழு தோள்கள் தங்கியமாதர்கொவ்வைகையிலேமுயங்கிட
வீணி லுஞ்சில பாத கஞ்செய அவமேதான்
வீறு கொண்டுட னேவ ருந்தியுமோயலைந்தவமே திரிந்துள
மேக வன்றறி வேக லங்கிட வெகுதூரம்
போயலைந்துழலாகிநொந்துபின்வாடிநைந்தெனதாவிவெம்பியே
பூத லந்தனி லேமயங்கிய மதிபோகப்

† வார்மை - ஒழுக்கம்.

போது கங்கையி னீர்சொரிந்திருபாதபங்கயமேவணங்கிய
பூசை யுஞ்சில வேபு ரிந்திட அருள்வாயே
தீயி சைந்தெழ வேயி லங்கையில்ராவணன்சிரமேயரிந்*தவர்
சேனை யுஞ்செல மாள வென்றவன் மருகோனே
தேச மெங்கணுமேபு ரந்திடு சூர்ம டிந்திடவேலின் வென்றவ
தேவர் தம்பதி யாள அன்புசெய் திடுவோனே
ஆயி‡சுந்தரி நீலி பிங்கலை‖போக அந்தரி சூலி குண்டலி
ஆதி யம்பிகை வேத தந்திரி யிடமாகும்
ஆல முண்டர னிறைஞ்சவொர்போதகந்தனையேயுகந்தருள்
ஆவி னன்குடி மீதி லங்கிய பெருமாளே. (ரு)

---

தனதான தந்தனத் தனதானா

106. †அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனோ
இபமாமு கன்றனக் கிளையோனே
இமவான்ம டந்தையுத் தமிபாலா
செபமாலை தந்தசற் குருநாதா
திருவாவி னன்குடிப் பெருமாளே. (சு)

---

தனனா தனந்தனத் தனனா தனந்தனத்
தனனா தனந்தனத் தனதான.

107. கனமா யெழுந்துவெற் பெனவே யுயர்ந்துகற்
புர‡மா ரணந்துளிர்த் திடுமானார்
கனிவா யுகந்துசிக் கெனவே யணைந்துகைப்
பொருளே யிழந்துவிட் டயர்வாயே
மனமே தளர்ந்துவிக் கலுமே யெழுந்துமட்
டறவே யுலந்துசுக் கதுபோல

*அவர்-இஃது ஒருமையிற் பன்மை. †'அபசார நிந்தை' என்றும் பாடம்.
‡மாரணம்-மந்திர வித்தையால் மரணத்தை உண்டுபண்ண எழும் தொழிலைக் கருவி; ‖அம்பிகாவுரு இங்கே கொள்க.

வசமே யழிந்தவுக் கிடுநோய் துறந்துவைப்
பெனவே நினைந்துனைப் புகழ்வேனோ
புனவேடர் தந்தபொற் குறமாது இன்புறப்
புணர்காதல் கொண்டஅக் கிழவோனே
புனவேழ மங்கையொற் றொடுசூர் சிரங்கள்பொட்
டெழவே லெறிந்தவுக் கிரவீரா
தினமேவு குங்குமப் புயவாச கிண்கிணிச்
சிறுகீத செம்பதத் தருளாளா
சிவலோக சங்கரிக் கிறைபால வைங்கயத்
திருவா வினன்குடிப் பெருமாளே. (எ)

---

தானனந் தனனத் தானனந் தனனத்
தானனந் தனனத் தனதான.

108. காரணிந் தவரைப் பாடார்ந் துவினைந்
காதல்நெஞ் சயரத் தடுமாறிக்
கானரம் புதிரத் தோல்வழும் புறுபொய்க்
காயமொன் றுபொறுத் தடியேனும்
தாரிணங் குகுழற் கூரணிந் தவிழிச்
சாபமொன் றுநுதற் கொடியார்தம்
தாள்பணிந் தவர்பொற் றோள்விரும் பிமிகத்
தாழ்வடைந் துலையத் தகுமோதான்
சூரனங் கம்விழத் தேவர்நின் றுதொழத்
தோயமுஞ் சுவறப் பொரும்வேலா
தூய்மைகொண் டகுறத் தோகைநின் றபுனச்
சூழ்பெருங் கிரியிற் றிரிவோனே
ஆரணன் கருடக் கேதனன் தொழமுற்
றாலமுண் டவருக் குரியோனே
ஆலையும் பழனச் சோலையும் புடைசுற்
றாவினன் குடியிற் பெருமாளே. (அ)

தன்னதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன தனதான.

109. சிவனார்ம னங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாத
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலும்
அடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
நவநீத முந்திருடி உரலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே
நவலோக முங்கைதொழு நிரதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே
*தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திரல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே. (௯)

---

தனதத்தன தானதந்தன தனதத்தன தானதந்தன
தனதத்தன தானதந்தன தனதான.

110. பகர்தற்கரி தானசெந்தமி ழிசையிற்சில பாடலன்பொடு
பயிலப்பல காவியங்களை யுணராதே
பவளத்தினை வீழியின்கனி யதனைப்பொரு வாய்மடந்தையர்
பசலைத்தன மேபெறும்படி விரகாலே
சகரக்கடல் சூழுமம்புவி மிசையிப்படி யேதிரிந்துழல்
சருகொத்துள மேயயர்ந்துடல் மெலியாமுன்
தகதித்திமி தாகிணங்கிண எனவுற்றெழு தோகையம்பரி
தனிலற்புத மாகவந்தருள் புரிவாயே

---

* தெவயானை - தேவயானையம்மை.

நுகர்வித்தக மாகுமென்றுமை மொழியிற்பொழி பாலையுண்டிடு
நுவல்மெய்ப்புள பாலனென்றிடும் இளையோனே
நுதிவைத்த கராமலைந்திடு களிறுக்கரு ளேபுரிந்திட
நொடியிற்பரி வாகவந்தவன் மருகோனே
*அகரப்பொரு ளாதியொன்றிடு முதலக்கர மானதின்பொருள்
அரனுக்கினி தாமொழிந்திடு குருநாதா
அமரர்க்கிறை யேவணங்கிய பழநித்திரு வாவினன்குடி
அதனிற்குடி யாயிருந்தருள் பெருமாளே. (௧0)

---

தனதன தனத்த தந்த தனதன தனத்த தந்த
தனதன தனத்த தந்த தனதான.

111. களபமு லையைத்திறந்து தளமணி வடத்தையணிந்து
கயலொடு பகைத்தகண்கள் குழைதாவக்
கரியகு ழலைப்பகிர்ந்து மலர்சொரு கு†கொப்பவிழ்ந்து
கடியிரு ளுடுக்குலங்கள் எனவீழ
முழுமதி யெனச்சிறந்த நகைமுக மினுக்கியின்ப
முருகிதழ் சிவப்பபின்று விலைகூறி
முதலுள தனைப்புகுந்து அழகுது கிலைத்திறந்து
முடுகும வருக்கிரங்கி மெலிவேனோ
இளமதி கடுக்கைதும்பை அரவணி பவர்க்கிசைந்த
இனியபொ ருளைப்பகர்ந்த குருநாதா
இபமுக வனுக்குகந்த இளையவ மருக்கடம்ப
எனதுத லையிற்பதங்கள் அருள்வோனே
‡குழகென எடுத்துகந்து உமைமுலை பிடித்தருந்து
குமர§சி வவெற்பமர்ந்த குகவேலா
குடிலொடு மிகச்செறிந்த இதணுள புனத்திருந்த
குறவர்ம களைப்புணர்ந்த பெருமாளே. (௧௧)

---

* அகரப்பொருளாதி ஒன்றிடு முதலக்கரம் - அகார உகார மகாரங்களடங்கிய பிரணவம். † கொப்பு - கோப்பு. ‡ குழகென - குழக எண. § சிவவெற்பு என்பது பழநி.

தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத் தனதான.

112. புடவிக் கணிதுகி லெனவள ரந்தக்
*சடலெட் டுறை†யறல் குடிமுகி லெண்கட்
புநிதச் சததள நிலைகொள்ச யம்புச் சதுர்வேதன்
புரமெட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தரகர பரசிவ னிந்தத் தனிமூவர்
இடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவுற் பனமொழி யுரைசெய்கு ழந்தைக் குருநாதா
எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திடஅவர் குலமுழு தும்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்
பொடிபட் டுதிரவும் விரிவுறு மண்டச்
சுவர்விட் டுதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சத் தமுமாகப்
‡பொருதுற் கையிலுள அயில்நுனை முண்டக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
புரவிக் கனமயில் நடவிடும் விந்தைக் குமரேசா
படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரஅர னந்தப்
§பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே
பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரவிலை யெனஅருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே. (கஉ)

---

* கடல் எட்டு - எட்டுத்திக்கிலுமுள்ள கடல். † அறல் - நீர்.
‡ பொருதுற்கை - பொருது உற்கை. § பலன் - பழம்.

தான தனனதன தான தனனதன
தான தனனதன தான தனனதன
தான தனனதன தான தனனதன தனதான.

113. கோல மதிவதனம் வேர்வு தரஅளக
பாரம் நெகிழவிழி வேல்கள் சுழலநுவல்
கோவை யிதழ்வெளிற வாய்மை பதறியிள முகையான

கோக னகவுபய மேரு முலைகளசைய
நூலி னிடைதுவள வீறு பறவைவகை
கூற இனியகள மோல மிடவளைகள் கரமீதே

காவி னணிகனக நூபு ரமுமொலிகள்
ஓல மிடஅதிக போக மதுமருவு
காலை வெகுசரச லீலை யளவுசெயு மடமாதர்

காதல் புரியுமதி போக நதியினிடை
வீழு கினுமடிமை மோச மறவுனது
காமர் கழலிணைக ளானவொரு சிறிது மறவேனே

ஞால முழுதுமம ரோர்கள் புரியுமிக
லாக வருமவுணர் சேர வுததியிடை
நாச முறவமர்செய் வீர தரகுமர முருகோனே

காடி யொருகுறமின் மேவு தினைசெய்புன
மீதி லியலகலகல நீற லிடைநிலவி
நாணம் வரவிரக மோரீது மொருசதுர புரிவேலா

மேலை யமரர்தொழு மானை முகரரனை
யோடி வலம்வருமுன் மோது திரைமகர
வேலை யுலகைவல மாக வருதுரக மயில்வீரா

வீறு*கலிசைவரு சேவ கனதிதய
மேவு முதல்வவயல் வாவி புடைமருவு
வீரை வருபழநி ஞான மலையில்வளர் பெருமாளே.(கங)

* கலிசைவருசேவகன் என்பதும் காவேரிசேவகன் என்று பின் வரும் செய்யுட்களில் வருவனவும் கலிசையென்னும் பதியில் அக்காலத்து அதிபனு யிருந்த ஓரன்பன்.

ஆயதார மன்கை போகவுயி ரந்த
நாழிகையில் விஞ்ச ஊசிநிமி டமப்ப
யாகியவு டம்பு போமிநிலை யென்று    மடவார்பால்
ஆசையைவி ரும்பி யேவிரக சிங்கி
தானுமிக வந்து மேவிட மயங்கும
ஆழ்துயர் விழுந்து மாளுமெனை யன்பு    பரிவாயே
மாயைவலை கஞ்ச னுய்விடவெ குண்டு
பாருமுழுது மண்ட கோளமுற நின்ற
வாய்பிளிறி நின்று மேசநிகர் தன்னை    யுதைமேலே
வாரியுற அண்டி விரைந்துமு றந்த
நீரைநுகர் கின்ற சோபமொரட திர்ந்த
வாரணஇ ரண்டு கோடடாடுப வென்று    ரொடுயோமமம
வேயினிசை கொண்டு கோநிரைபு ரந்து
மேயல்புரி செங்கண் மால்மருக துங்க
வேலகிர வுஞ்ச மால்வரையி டிந்து    பொடியாக
வேலைவிடு கந்த காவிரிவி ளங்கு
கார்சலிசை வந்த சேவகன்வ ணங்கு
வீரைநகர் வந்து வாழ்ப்பழநி யண்டர்பெருமாளே (௧௫).

---

தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன    தனதான

116. தோகைமயி லேகமல மானேபு லோசமிகு
காமதுரை யானமத வேள்பூவை யேயினிமை
தோயுமது போகரச லீலாவி நோதமுழு துணர்ந்தேனே
சூதணைய சீதஇள நீரான பாரமுலை
மீதணைய வாருமிதழ் தாரீரெ னாணமொழி
சோர்வதிலை யானடிமை யாவேனு மானமிகு மயலானேன்
ஆகமுற வேநகம தாலேவி டாதஅணை
யாளமிட வாருமென வோமாத ரார்களுடன்
ஆசைசொலி யேயுழலு மாபாத னீதியிலி உனையோதேன்

ஆமுனது நேயஅடி யாரோடு கூடுகிலன்
நீறுநுதல் மீதிடலி லாறுட னேதுமிலி
யாயினுமி யானடிமை யீடேற வேகழல்கள் தருவாயே

மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாஅமரர்
வாளிமுத லானவர்க ளேனோர்க ளாலமுதுகடைநாளில்

வாருமென வேயொருவர் நோகாம லாலவிடம்
ஈசர்பெற வாறுதவி யேதேவர் யாவர்களும்
வாழஅமு தேபகிரு மாமாய னாரினிய மருகோனே

மேகநிக ரானகொடை மானுப காதிபதி
வாரிகலி மாருதக ரோபாரி மாமதன
வேள்கலிசை வாழவரு காவேரி சேவகன தளமேவும்

வீரஅதி சூரர்கிளை வேர்மாள வேபொருத
தீரகும ராகுவளை சேரோடை சூழ்கழனி
வீரைநகர் வாழ்பரி வேளைபுகா அமர்பெருமாளே.()

---

தானதான தனத்தந்த தானன
தானதான தனத்தந்த தானன
தானதான தனத்தந்த தானன தனதான.

117. பாரியான கொடைக் கொண்ட லேதிரு
வாழ்விசால தொடைத் திண்பு யாஎழு
பாருமேறு புகழ்க் கொண்ட நாயக அபிராம

பாவலோர்கள் கிளைக் கென்றும் வாழ்வருள்
சீலஞால விளக் கின்ப சீவக
பாகசாத னவுத் துங்க மாதன எனவோதிச்

சீரதாக எடுத் தொன்று மாகவி
பாடினாலு மிரக் கஞ்செ யாதுரை
சீறுவார்க டையிற் சென்று தாமயர் வுறவீணே

சேயபாவ கையைக் கொண்டு போயறி
யாமலேக மரிற் சிந்து வார்சிலர்
சேயனார்ம னதிற் சிந்தி யாரரு குறலாமோ

ஆருநீர்மை மடுக் கண்க ராகெடு
வாயினேர்ப டவுற் றன்று ழைத்தமெ
ஞானவார மகத் தந்தி தாவுய   அருள்மாயன்
ஆதிநார ணனற் சங்க பாணியன்
ஓதுவார்க ளுளத்தன் பன் மாதவ
ஞானநான்மு கனற்றந்தை சீதரன்   மருகோனே
வீரவேல கவுத்தண்ட தேவகு
மாரஆறி ருபொற்செங்கை நாயக
வீசுதோகை மயிற்றுங்க வாகனம்   உடையோனே
வீறுகாவி ரியுட்கொண்ட சேகர
னனேசா கனற்சிந்தை மேவிய
வீரைவாழ்ப முநிக் துங்க வானவர்   பெருமாளே (கஎ)

---

தான தனதன தான தனதன
தான தனதன   தனதான.

118. ஆதா ளிகள்புரி கோலா கலவிழி
யாலே யமுதெனு   மொழியாலே
ஆழ்சீ ரிளநகை யாலே துடியிடை
யாலே மணமலி   குழலாலே
சூதா ரிளமுலை யாலே யழகிய
தோடா ரிருகுழை   யதனாலே
சோரா மயல்தரு மானா குறவிடர்
சூழா வகையருள்   புரிவாயே
போதா ரிருகழல் சூழா ததுதொழில்
பூணா ததெதிரு   மதியாதே
போரா டியஅதி சூரா பொறுபொறு
போகா தெனஅடு
வேதா வுடனெடு மாலா னவனறி
யாதா ரருளிய   குமரேசா
வீரா புரிவரு கோவே பழநியுள்
வேலா இமையவர்   பெருமாளே. (கஅ)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான.

119\. இருசெப் பெனவெற் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடுமாதர்

*இடையைச் சுமையைப் பெறுதற் கறவற்
றிறுகக் குறுகிக் குழல்சோரத்

தருமெய்ச் சுவையுற் றிதழைப் பருகித்
தழுவிக் கடிசுற் றணைமீதே

†சருவிச் சருவிக் குனகித் தனகித்
தவமற் றுழலக் கடவேனோ

அரிபுத் திரசித் தஜனுக் கருமைக்
குரிமைத் திருமைத் துனைவோனே

அடல்குன் குடைநற் கொடிபெற் றெறிநற்
றசுரக் கிளையைப் பொருவோனே

பரிவுற் றரனுக் கருணற் பொருளைப்
பயனுற் றறியப் பகர்வோனே

‡பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே. (கக)

120\. தகைமைத் தனியிற் பகைகற் றுறுகைத்
தருமுட் டவளைப் பவனாலே

தரளத் திரளிற் புரளக் கரளத்
தமரத் திமிரக் கடலாலே

§உகைமுத் தமிகுத் தெனப் பகல்புக்
கொளிமட் டுமிகைப் பொழுதாலே

---

* இடையை சுமை - இடை அழகிய. † சருவி - சரசஞ்செய்து. ‡ பவனப் புவனம் - வாயுமண்டலம். § உகைமுத்த மிகுத்ததெனப் பகல் புக்கு ஒளிமட்டும் மிகைப் பொழுதாலே - எறிந்த முத்துக்கள் மிக்கதுபோல இரவியும் வந்து ஒளி மழுங்கத்தக்க வருத்தத்தைத்தாக்கக்க இருட்காலத்தாலே முத்துக்களின் ஒளிபோல இரவி பொளி பட்கத்தக்க இருள் எனவே அதன் வலி கூறியவாறும். இது "கொள்ளிக்கும் விள்ளாத கூரிருள்" என்றதுபோலும்.

உரையற் றுணர்வற் றுயிரெய்த தகொடிக்
குறைநற் *பிணையற் றரவேணும்
†திசைபத் துமுகக் கமலத் தனைமுற்
சிறைபட் டபகைத் திறல்வீரா
திகழ்கற் பகமிட் டவனைக் கனகத்
திருவுக் குருகிக் குழைமார்பா
பகலக் கிரணைப் ‡பரணச் சுழவைப்
பரமற் கொருசொற் பகர்வோனே
பவனப் புவனச் செறிவற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே. (௨௦)

---

121. அணிபட் டணுகித் திணிபட் டமனத்
தவர்விட் டவிழிக் கணையாலும்
அரிசற் றுகமைந் தவரொப் பவனத்
தவன்விட் டமலர்க் கணையாலும்
பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்
பொருபக் குணமுற் றுயிர்மாளும்
பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்
பெறுதற் கருளைத் தரவேணும்
கணிநற் சொருபத் தையெடுத் துமலைக்
கனியைக் §கணியுற் றிடுவோனே
கமலத் தயனைப் ப்ரணவத் துரையைக்
கருதிச் சிறைவைத் திடுவோனே
||பணியப் பணியப் பரமர்ப் பரவப்
பரிவுற் றொருசொற் பகர்வோனே
பவளத் தவளக் கனகப் புரிசைப்
பழநிக் குமரப் பெருமாளே. (௨௧)

---

* பிணையல் - மாலை. † திசைபத்து முக - திசைபத்தும் உக - பத்துத் திக்கும் கலங்க. ‡ பரணம் - பாரம். § கணி - எண்ணி - கருதி. || பணி அப்பு - அணி அப்பரமர்.

122. புடைசெப் பெனமுத் தணிகச் சறவுட்
பொருசிக் கலசத் திணையாய
புளகக் களபக் கெருவத் தனமெய்ப்
புணரத் தலையிட் டமரேசெய்
அடைவிற் றினமுற் றவசப் படுமெற்
கறிவிற் பதடிக் கவமான
அரடற் குயர்வொப் பதில்நற் க்ருபையுற்
றடிமைக் கொருசொற் புகல்வாயே
குடமொத் தகடக் கரடக் கலுழிக்
குணமெய்க் களிறுக் கிளையோனே
குடிபுக் கிடமிட் டசுரப் படையைக்
குறுகித் தகரப் பொரும்வேலா
படலைச் செறிநற் கதலிக் குலைபிற்
பழமுற் றொழுகப் புனல்சேர்நீள்
பழனக் கரையிற் கழைமுத் துகுநற்
பழநிக் குமரப் பெருமானே. (உஉ)

---

தனன தனன தனன தனன தனன தனன தனதான.

123. கரிய பெரிய எருமை கடவு கடிய கொடிய திரிசூலன்
கறுவி யிறுகு கயிறொ டுயிர்கள் கழிய முடுகி யெழுகாலம்
திரியு நரியு மெரியு முரிமை தெரிய விரவி யணுகாதே
செறிவு மறிவு முறவு மனைய திகழு மடிகள் தரவேணும்
பரிய *வரையி னரிவை மருவு பரம ரருளு முருகோனே
பழன முழவர் கொழுவி லெழுது பழய பழநி யமர்வோனே
அரியு மயனும் வெருவ வுருவ அரிய கிரியை யெறிவோனே
அயிலு மயிலு மறமு நிறமு மழகு முடைய பெருமானே.

---

124. தமரு மமரு மனையு மினிய தனமு மரசும் அயலாகத்
†தறுகண் மறலி முறுகு கயிறு தலையை வளைய எறியாதே

* வரையினரிவை - பார்வதிதேவி. † தறுகண் - அஞ்சாமை.

கமல விமல மரகத மணி கனக மருவு மிருபாதங்
கருத அருளி யெனது தனிமை கழிய அறிவு தரவேணும்
குமர *சமர முருக பரம குலவு பழநி மலையோனே
†கொடிய பகடு முடிய முடுகு குறவர் சிறுமி மணவாளா
அமர ரிடரு மவுண ருடலு மழிய அமர்செய் தருள்வோனே
அறமு நிறமு மயிலு மயிலு மழகு முடைய பெருமாளே.

125 ‡திமிர வுததி யனைய நரக செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு சிறிது மிடியு மணுகாதே
அமரர் வடிவு மதிக குலமு மறிவு நிலையும் வரவேநின்
அருள தருளி யெனையு மனதொ டடிமை கொளவும் வரவேணும்
சமர முகவெ லசுரர் தமது தலைக ளுருள மிகவேநீள்
சலதி யலற நெடிய பதலை தகர அயிலை விடுவோனே
§வெமர வணையி லினிது துயிலும் விழிகள் நளினன் மருகோனே
மிடறு கரியர் குமர பழநி விரவு மமரர் பெருமாளே. (உரு)

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

126. தகர நறுமலர் பொதுளிய குழலியர்
கலக கெருவித விழிவலை படவிதி
தலையி லெழுதியு மனவழி யுறவிடு மதனாலே
தனயர் அனைதமர் மனைவியர் சினெகிதர்
தரணி விரவிய வகையென நினைவுறு
||தவன சலதியின் முழுகியெ யிடர்படு துயர்தீர
அகர முதலுள பொருளினை யருளிட
இருகை குவிசெய்து ளுநகிட வுருகியெ
அரக ரெனவல னிடமுற எழிலுன திருபாதம்

* 'சமர புரியின் முருக' என்றும் பாடம். † கொடிய பகடு - மதயானை. ‡ திமிரவுததி - இருட்கடல். § வெம் - அரவணை. || தவனம் - ஆசை.

அருள அருளுடன் மருளற இருளறு
கிரண அயில்கொடு குருகணி கொடியொடு
அழகு பெறமர கதமயில் மிசைவர இசைவாயே

சிகர குடையினி னிரைவர இசைதெரி
சதுரன் விதுரனில் வருபவ னளையது
திருடி யடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்

திகிரி வளைகதை வசிதனு வுடையவன்
எழிலி வடிவின னரவுபொன் முடிமிசை
திமித திமிதிமி யெனநட மிடுமரி மருகோனே

பகர புகர்முக மதகரி †யுழைதரு
வனிதை வெருவமுன் வரஅருள் புரிகுக
பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே

பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமாளே. (உசு)

---

127. முருகு செறிகுழல் முகிலென நகில்நறு
முளரி முகையென இயலென மயிலென
முறுவல் தளவென நடைமட வனமென இருபார்வை

முளரி மடலென இடைதுடி யதுவென
அதர மிலவென அடியிணை மலரென
மொழியு மமுதென முகமெழில் மதியென மடமாதர்

உருவ மிணையன எனவரு முருவக
வுரைசெய் தவர்தரு கலவியி னிலவிய
வுலையின் மெழுகென வுருகிய கசடனை யொழியாமல்

உவகை தருகலை பலவுணர் பிறவியின்
உவரி தனிலுறு மவலனை யசடனை
உனது பரிபுர கழலிணை பெறஅருள் புரிவாயே

---

* குருகு - கோழி. † உழை தரு வனிதை - வள்ளியம்மை.

அரவ மலிகடல் விடமமு துடனழ
அரிய யனு*நரை யிபன்முத லனைவரும்
அபய மிகவென அநுதயயி லிமையவன் அருள்பாலா
அமர்செய் நிசிசர ருடலவை துணிபட
அவனி யிடிபட அலைகடல் பொடிபட
அமரர் சிறைவிட அடலயில் நொடியினில் விடுவோனே
பரவு புனமிசை யுறைதரு குறமகள்
பணைகொ ளணிமுலை முழுகுப ணிருபுய
பணில சரவணை தனில்முளை ரியின்வரு முருகோனே
பரம குருபர னெனுமுறை பரவொடு
பரவி யடியவர் துதிசெய மதிதவழ்
பழநி மலைதனி லினிதுறை யமரர்கள் பெருமாளே. ()

---

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

128. கனத்திருகிப் பெருத்திளகிப்
பணைத்துமணத் திதத்துமுகக்
கறுப்புமிகுத் தடர்த்துநிகர்த் தலமேராய்
கவட்டையுமெத் தடக்கிமதர்த்
தறக்கெருவித் திதத்திடுநற்
கலைச்சவுளித் தலைக்குலவிக் களிகூருந்
தனத்தியர்கட் கிதத்துமிகுத்
தனற்குண்மெழுக் கெனப்புவியிற்
றவித்திழிசொற் பவக்கடலுற் றயர்வாலே
சலித்தவெறித் துடக்குமனத்
திடக்கனெனச் சிரிக்கமயற்
சலத்தின்வசைக் கிணக்கமுறக் கடவேனோ

* நரையிபன் - வெள்ளையானையையுடைய தேவேந்திரன்.

பரப்பிய*தந் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப்†புகட்டதிறற் கவிராச

செறித்தசடைச் சசித்தரியத்
தகப்பன்‡மதித் துகப்பனெனச்
§சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே

திகழ்ப்படுசெய்ப் பதிக்குளொளித்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே (உகூ)

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தந்ததான.

130. கலவியி லிச்சித் திரங்கி நின்றிரு
கனதனம் விற்கச சமைந்த மங்கையர்
கயல்கள் சிவப்பப் பரிந்து நண்பொடு மின்பமுறிக்

கனியித முற்றுற் றருந்தி யங்குறும்
அவச மிகுத்துப் பொருந்தி யின்புறு
கலகம் விளைத்துக் கலந்து மண்டணை ||யங்கமீதே

குலவிய நற்கைத் தலங்கொடங்கணை
கொடியிடை மெத்தத் துவண்டு தண்புயல்
குழலள கக்கட் டவிழ்ந்துபண்டையில்அங்கம்வேருய்க்

குறிதரு வட்டத் தடர்ந்த சிந்துர
முகதல முத்துப் பொலிந்தி லங்கிடு
கொடியமயற் செய்ப்பெருந்தடந்தனில் மங்கலாமோ

* தத் திருப்பதி - அந்தத் திருப்பதி - (துறை) †புகட்ட - புகவிட்ட என்பதன் மரூஉ. ‡பதித்த, உகப்பன், என, என்று பிரித்துக்கொள்க. §சிறக்க எழுத்து அருள் - சிற - புடம்படி பிரணவத்தை உபதேசஞ்செய்த.
|| அடகம் - காட்டில்.

இளகிய சித்ரப் புனந்த னிந்துறை
குறமகள் கச்சுக் கிடந்த கொங்கையின்
இனிதுறு பத்மப் பதம்ப ணிந்தருள் கந்தவேளே
எழுகடல் வற்றப் பெருங்கொ டுங்கிரி
யிடிபட மிக்கப் ப்ரசண்டம் விண்டுறும்
இகலர்ப தைக்கத் தடிந்திலங்கிய செங்கைவேலா
பலவித நற்கற் படர்ந்த சுந்தரி
பயில்தரு வெற்புத் தருஞ்செ ழுங்கொடி
பணைமுலை மெத்தப் பொதிந்து பண்புறு கின்றபாலை
பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ்
பகரென இச்சித் துகந்து கொண்டருள்
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே()

---

131 முகிலள கத்திற் கமழ்ந்த வண்பரி
மளஅலர் துற்றக் கலந்தி டந்தரு
முகிழ்துதி தைத்துத் துயர்ந்த மங்கையர் அங்கமீதே
முகம்வெயர் வுற்றுப் பரந்து செங்கயல்
விழியிணை செக்கச் சிவந்து குங்கும
ம்ருகமத மத்தத் தனங்க ளின்மிசை யெங்குமேவி
உகவுயி ரொத்துப் புயங்க ளின்புற
உறவினை யுற்றுத் திரண்டு கொங்கள
வுறுபனை யுற்றுத் திரங்கு மஞ்சமில் ஒன்றிமேவி
ஒளிதிகழ் பத்மக் கரங்க ளின்புறம்
உறுவளை யொக்கக் கலின்க லென்கவும்
உயர்மய லுற்றுற் றிரங்கு மன்பதொ ழிந்திடாதோ
செகமுழு தொக்கப் பயந்த சங்கரி
அடியவர் சித்தத் துறைந்த சம்ப்ரம
சிவனொரு பக்கத் துறைந்த மங்கைசு மங்கைநீடு

திகழ்வன பச்சைப் பசங்கி *பம்பண
கரதலி கச்சுற் றிலங்கு கொங்கையள்
திருவரு ணற்பொற் பரந்தி டும்பரை யன்டபீதே
பகலிர வற்றிட வுபாயக அமலைகை
திரிபுரை முற்றட் டிரண்டொ டொன்றலா
பரிவுற வொக்கச் செயுமாப ரம்பரை யன்புகூறும்
பதிவ்ரதை மிக்கச் சிறந்தெ ரிந்தருள்
பகிரதி வெற்பிற் பிறந்த பெண்தரு
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே.

---

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான

132. அவனிதனி லேபிறந்து மதலையென வேதவழ்ந்து
அழகுபெற வேநடந்து இளைஞோனாய்
அருமழலை யேமிகுந்து குதலைமொழி யேபகர்ந்து
அதிவிதம தாய்வளர்ந்து பதினாறாய்
சிவகலைக ளாகமங்கள் மிகவுமறை யோதுமன்பர்
திருவடிக ளேநினைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசைமிஞ்சி வெகுகவலை யாயுழன்று
திரியுமடி யேனையுன்ற னடிசேராய்
மவுனவுப தேசசம்பு மதியறுகு வேணிதும்பை
மணிமுடியின் மீதணிந்த மகதேவர்
மனமகிழ வேயணைந்து ஒருபுறம தாகவந்த
மலைமகள்கு மாரதுங்க வடிவேலா
பவனிவர வேயுகந்து மயிலின்மிசை யேதிகழ்ந்து
படியதிர வேநடந்த கழல்வீரா
பரமபத மேசெறிந்த முருகனென வேயுகந்து
பழநிமலை மேலமர்ந்த பெருமாளே (௬௨)

---

* அம்பணம் - ஒருவகை யாழ்.

133. கருவினுரு வாகிவந்து வயதளவி லேவளர்ந்து
கலைகள்பல வேதெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர்தங்கள் அடிசுவடு மார்புதைந்து
கவலைபெரி தாகிநொந்து மிகவாடி
அரகரசி வாயவென்று தினமுநினை யாமல்நின்று
அறுசமய நீதியொன்றும் அறியாமல்
அசனமிடு வார்கள்தங்கள் மனைகள்தலை வாசல்நின்று
அநுதினமு நாணமின்றி அழிவேனோ
உரகபட மேல்வளர்ந்த பெரியபெரு மாளரங்கர்
உலகளவு மால்மகிழ்ந்த மருகோனே
உபயகுல தீபதுங்க விருதுகவி ராஜசிங்க
உறை*புகலி யூரிலன்று வருவோனே
பரவைமனை மீதிலன்று ஒருபொழுது தூதுசென்ற
பரமனரு ளால்வளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனைகொன்று அமரர்சிறை மீளவென்று
பழநிமலை மீதில்நின்ற பெருமாளே. (௩௩)

---

தனதனன தந்ததந்த தனதனன தந்ததந்த
தனதனன தந்ததந்த தனதான.

134 மருமலரி னன்துரந்து விடவினைய ருந்தஅந்தி
†மதியொடுபி றந்துமுன்பெய் வதையாலே
வகைதனைம றந்தெழுந்து முகைதனைய ருந்தியந்த
மதலையென வந்துகுன்றின் வடிவாகி
இருமயல்கொ டுந்துவண்டு பொதுவையர கம்புகுந்து
இரவுபகல் கொண்டொடுங்கி அசடாகும்
இருவினைபொ திந்தஇந்த ஜனனமர ணந்துறந்துன்
இணையடிவ ணங்கஎன்று பெறுவேனோ
திருவொடுபெ யர்ந்திருண்ட வனமிசைந டந்திலங்கை
திகழெரியி டுங்குரங்கை ‡நெகிழாத

---

* புகலியூர்-ஸ்ரீகாழி. †மதியொடு-மதிபோல, ‡நெகிழாத-நெகிழவிடாத.

திடமுளமு குந்தர்கஞ்சன் வரவிடுமெல் வஞ்ரகங்கள்
செறியுடன றிந்துவென்ற பொறியாளர்
படுவொடும கிழ்ந்திறைஞ்ச மருதிடைதவழ்ந்துநின்ற
பரமபத நண்பரன்பின் மருகோனே
பதுமமிசை வண்டலம்பு சுனைபலவி ளங்குதுங்க
பழநிமலை வந்தமர்ந்த பெருமாளே (௩௪)

தனனதன தனனதந்த தனனதன தனனதந்த
தனனதன தனனதந்த தனதான.

135 விரைமருவு மலரணிந்த கரியபுரி குழல்சரிந்து
விழவதன மதிவிளங்க அதிமோக
விழிபுரள முலைகுலுங்க மொழிகுழற அணைபுகுந்து
விரகமயல் புரியுமின்ப மடவார்பால்
இரவுபக லணுகிநெஞ்ச மறவழிய வுருகுமந்த
இருளகல வுனது தண்டை யணிபாதம்
எனதுதலை மிசையணிந்து அழுதழுது னருள்விரும்பி
யினியபுகழ் தனைவிளம்ப அருள்தாராய்.
அரவில்விழி துயில்முகுந்த னலர்கமல மலர்மடந்தை
அழகினொடு தழுவுகொண்டல் மருகோனே
அடலசுர ருடல்பிளந்து நிணமதனில் முழுகியண்ட
அமரர்சிறை விடுப்ரசண்ட வடிவேலா
பரவைவரு விடமருந்து மிடறுடைய கடவுள்கங்கை
படர்சடையர் விடைய ரன்ப ருளமேவும்
பரமரரு ளியகடம்ப முருகஅறு முகவசந்த
பழநிமலை தனிலமர்ந்த பெருமாளே (௩௫)

தனனதன தானன தானதன தந்த
தனனதன தானன தானதன தந்த
தனனதன தானன தானதன தந்த தனதான.

136 இருகனக மாமேரு வோகளப துங்க
கடகமுன பாடீர வாரமுத கும்பம்
இணைசொலிள நீரோக ராசலஇ ரண்டு *சூவடோ

இலகுமல ரேவாளி யாகியஅ நங்கன்
அணிமகுட மோதனெ ழுமிகவ ளர்ந்த
இளமுலைகமி ஞர்மோக மாயையில்வி ழுந்து தணியாமல்

பெருகியொரு கோசேகொ டாதவனை யைந்து
கருவைக்க ரேயாக வேயெதிர்பு கழ்ந்து
பெரியதரி ஞேபாடி நாடொறுமி ரந்து நிலைகாணப்

பிணியினக மேயான பாழுடலை நம்பி
உயிரையவ மாய்நாய மேபவ கிரம
பிறவிதனி லேபோக மீளவுமு முன்று திரிவோனோ

கருணையுமை மாதேவி காரணிய நந்த
சயனகளி கூராய சோதரி*பு ரந்த
கடவுளுடன் வாதாடு காளிமலை மங்கை யருள்பாலா

கருடனுடன் வீறான சேதனமளி ளங்கு
மதிலிசிறைடு மாமாட மேடைகள்து லங்கு
கவினைவரு காவேரி சேலகரை டன்பு புரிவோனே

பரவையிடை யே†பாத காசுராவி ழுந்து
கதறிபிட தேபாக ராதன றுநெஞ்சு
‡பவிதமென வேயேக வேமயிலில் வந்த குமரேசா

பலமலர்க ளேதூவி யாரணாக வின்று
பரவியிமை யோர்குழ நாடொறுமி றைஞ்சு
பழநிமலை மீதோர்ப ராபரனி றைஞ்சு பெருமானே ()

---

தனதனன தானந்த தந்ததன தானதன
தனதனன தானந்த தந்ததன தானதன
தனதனன தானந்த தந்ததன தானதன தனதான

137. சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளியதாய்நின்றநிட்களசொருபமுதலொருவாழ்வே

---

* புரஅந்தக கடவுள் என்பது புரந்த கடவுள் என்றாயிற்று. † பாதகாசுரர் — பாதக அசுரர். ‡ பவிதம் — அழுக்கடைவு.

கரட தடமுமத நளின சிறுநயன
*கரிணி முகவரனு துணைவோனே
வடவ ரையின்முகடு அதிர வொருநொடியில்
வலம்வ ருமரகத மயில்வீரா
மகப திதருசுதை குறமி னொடிருவரு
மருவு சரசவித மணவாளா
அடல சுரர்கள்குல முழுது மடியவுயர்
அமரர் சிறையைவிட எழில்மீறும்
அருண கிரணவொளி யொளிரு மயிலைவிடு
மரக ரசரவண பவலோலா
படல வுடுபதியை யிதழி யணிசடில
பசுப திவரநதி அழகான
பழநி மலையருள்செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே. (௩அ)

---

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

139. குழல ளிமுகில் பொழில்†வி ரவில்நுதல்
குமுத வதரமு றுவொரம
குழைய கரம்‡வளை மொழிகு யிலமுது
குயமு ளரிமுகை கிரிசூது
விழிக யலயில்ப கழி§வ ருணிகரு
விளைகு வளைவிட மெனநாயேன்
மிகவ ரிவையரை அவநெ றிகள்சொலி
வெறிது ளம்விதனம் உறலாமோ
||கழல்ப ணியவினை ¶கழல்ப ணியையணி
கழல்ப ணியவருள் மயில்வீரா

* கரிணி - யானை † விரவில் - வீரவில். ‡ வளை - வள்ளை: ஓர்வித சண்டு § வருணி - கடல் || கழல் பணிய வினை - பண்ணிய வினை கழல. ¶ கழல் பணியை யணி - வீரக்கழலையும், தண்டை சிலம்பு முதலிய ஆபரணங்களையு மணிந்த

கமலை திருமரு க*மலை நிருதரு
கமலை துளைசெய்த கதிர்வேலா
†பழநி ‡மலைவரு பழநி மலைதரு
பழநி மலைமுரு கவிராசா
§பரவு பரவைகொல் ||பரவை வணஅரி
பரவு மிமையவர் பெருமாளே. (௩௬)

---

தனன தானன தானு தானு
தனன தானன தானு தானு
தனன தானன தானு தானு தனதான.

140 கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ கானோ துவரோவாய்
களமு நீள்கமு கோதோள் வேயோ
உதர மானது மாலோ பாயோ
களப வாருமுலை மேரோ கோடோ இவை தானும்
இழிய தோமை வேதா னானேன்
எழுதி ஞானிலை யோவாய் பேசா
இதென மோனமி னோ பாரா எனமாதா
இருகண் மாயையி லேயழ் காதே
யுனது காவிய நூலா ராய்வேன்
இடர்ப டாதருள் வாழ்வே நீயே தரவேணும்
அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமை யேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் ¶நீபார் மணிமார்பா

---

* மலை நிருத ருக - எதிர்த்த அசுரர் உதிர்ந்துபோக. † பழனி - கனியை யொத்தவள். ‡ மலைவரு பழநிமலை - மலையரசனுக்குப் புத்திரியாக வந்த பழைய நிர்மலி. § பரவு பரவை கொல் - பரவிய சமுத்திரத்தின்மீது பாணமெய்து வருத்திய. || பரவை வண அரி-கடல் வண்ணத்தையுடைய விட்டுணு. ¶ நீபார் - நீபம் ஆர்

அழகு லாவுஞ் சாகா வாகா
இபமி னான்மகிழ் கேள்வா தாழ்வார்
அயலு லாவிய சீலா கோலா கலவீரா

வலைப கேள்வர்பி னாய் கானார்
குறவர் மாதும ணாளா நாளார்
*வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே

மதுர ஞானவி நோதா நாதா
பழநி மேவுகு மாரா தீரா
மயுர வாகன தேவா வானோர் பெருமாளே. (௪0)

தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா தனதான.

141. கொந்துத் தருகுழ லிருளோ புயலோ
விந்தைத் திருநுதல் சிலையோ பிறையோ
கொஞ்சிப்பயில்மொழிஅமுதோ கனியோ விழிவேலோ

கொங்கைக் குடமிரு கரியோ கிரியோ
வஞ்சிக் கொடியிடை துடியோ பிடியோ
கொங்குற் றுய†ரது அரவோ ரதமோ எனுமாதர்

திந்தித் திமிதிமி திமிதா திமிதோ
தந்தித் திரிகிட கிடதா எனவே
சிந்திப் படிபயில் நடமா டியபா விகள்பாலே

சிந்தைத் தயவுகள் புரிவே னுனையே
வந்தித் தருள்தரு மிருசே வடியே
சிந்தித் திடமிகு மறையா கியசீர் அருள்வாயே

‡வெந்திப் புடன்வரு மவுனா சனையே
துண்டித் திடுமொரு கதிர்வே லுடையாய்
வென்றிக் கொருமலை யெனவாழ் மலையே தவவாழ்வே

* வனசம் - சரவணப் பொய்கையிலுள்ள பதுமப்பாயல்.
† அது - இடக்கரடக்கல். ‡ வெந்திப்பு - கொதிப்பு.

விஞ்சைக் குடையவர் தொழுவே வருவாய்
கஞ்சத் தயனுட னமரே சனுமே
விஞ்சைப் பனிவிடை புரிபோதவர்மேல் அருள்கூர்வாய்
தொந்திக் கணபதி மகிழ்சோ தரனே
செங்கட் கருமுகில் மருகா குகனே
சொந்தக் குறமகள் கணவா திறல்சேர் கதிர்காமா
சொம்பிற் பலவளர் முதிர்சோ லைகள்சூழ்
இஞ்சித் திருமதின் புடை சூ ழருள்சேர்
தங்கப் பழநியில் முருகா இமையோர் பெருமாளே. ()

தனதன தத்தா தத்தன தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன தனதான.

142. அகல்வினை யுட்சார் சட்சம யிகளொடு*வெட்கா தட்கிடும்
அறிவிலி வித்தா ரத்தன மலிகாரம்
அகில்கமழ் கத்தூ ரித்தனி அணைமிசை கைக்கா சுக்கள
வருள்பவர் நட்பே கொட்புறும் ஒருபோதன்
பகலிர விற்போ திற்பணி பணியற விட்டா ரெட்டிய
பரமம யர்சோ திச்சிவ மயமாகின்
பழநித னிற்போ யுற்பவ வினை †விள கட்சேர் வெட்சிகு
ரவுபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே
புகலிவ னப்பே றப்புகல் மதுரைமன் வெப்பா றத்திகழ்
‡பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேறப்
பொருதச மர்த்தா குத்திர §தாரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கீ ரர்க்குத வியவேளே
இகல்படு செட்டீர் பொட்டெழ இளநகை யிட்டே சுட்டருள்
எழுபுவி துய்த்தார் மைத்துனர் மதலாய்வெண்
திடரற முப்பால் செப்பிய கவிதையின் ||மிக்கா ரத்தினை
யெழுதி ¶வனத்தே யெற்றிய பெருமாளே (சஉ)

*வெட்கா + தட்கிடும் - அஞ்சாது தங்கித்து வாதஞ்செய்யும். †விள - விள்ள, நீங்க. ‡பொடி - திருநீறு. §தாரகமுகக் கோதை - கற்கிமுகி யென்கின்ற ஓர்பூதம். ||மிக்க ஆரத்தினை - மேலாகிய தேவாரத்தை ¶வனத்தே யெற்றிய – ஜலத்தில் எதிரேறவிட்ட.

தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன தந்ததான.

143. அதல விதலமுத லந்தத்த லங்களென
அவனி யெனஅமரர் அண்டத்த கண்டமென
அகில சலதியென எண்டிக்குள் விண்டுவென அங்கிபாநு
அமுத கதிர்களென அந்தித்த மந்த்ரமென
அறையு மறையெனஅ ருந்தத் துவங்களென
அணுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொரு சம்பரதாயம்
உதய மெழஇருள்வி டிந்தக்க ணந்தனிலெ
னுதய கமலமுகி ழுங்கட்ட விழ்ந்துணர்வில்
உனது மநுபவம னம்பெற்றி டும்படிமைய வந்துநீமுன்
உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென
மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்
உரிய அடிமையுனை யன்றிப்ர பஞ்சமதை நம்புவேனோ

தததத தததததத தந்தத்த தந்தததத
திதிதி திதிதிதிதி திந்தித்தி திந்திதிதி
தகுகு தகுதகுகு தந்தத்த தந்தகுகு திந்திதோதி
சகக சகசெணக தந்தத்த குஞ்செணக
டிடிடி டிடிடிடிடி டிண்டிட் டி டிண்டிடிடி
தகக தகதகக தந்தத்த தந்தகக என்றுதாளம்
பதலை திமிலைதுடி தம்பட்ட மும்பெருக
அகில நிசிசரர்நெ டுங்கக்கொ டுங்கழுகு
பரிய குடர்பழுவெ லும்பைப்பி டுங்கரண துங்ககாளி
பவுரி யிடநரிபு லம்பப்ப ருந்திறகு
கவரி யிடஇகலை வென்றச் *சிகண்டிதனில்
பழநி மலையின்மிசை வந்துற்ற இந்திரர்கள் தம்பிரானே()

---

* சிகண்டி - மயில்.

தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத் தனதான.

144. அரிசன வாடைச் சேர்வை குளித்துப்
பலவித கோலச் சேலை யுடுத்திட்
டலர்குழல் கோதிக் கோதி முடித்துச் சுருளோடே

அமர்பொரு காதுக் கோலை திருத்தித்
திருநுதல் நீவிப் பாளித பொட்டிட்
டகில்புழு காரச் சேறு தனத்திட் டலர்வேளின்

சுரத விநோதப் பார்வைமை யிட்டுத்
தருணக லாரத்*தோடைத ரித்துத்
தொழிலிடு தோளுங் கேறவ ரித்திட் டிளைஞோர்மார்

துறவினர் சோரச் சோர நகைத்துப்
பொருள்கவர் மாதர்க் காசைய ளித்தற்
றுயரற வேபொற் பாதமெனக்குத் தருவாயே

கிரியலை வாரிச் சூரரி ரத்தப்
புணரியின் மூழ்கிக் கூளிக ளிக்கக்
கிரணவை வேல்புத் தேளிர்பி ழைக்கத் தொடுவோனே

கெருவித கோலப் பாரத னத்துக்
குறமகள் பாதச் சேகர சொர்க்கக்
கிளிதெய்வ யானைக் கேபுய வெற்பைத் தருவோனே

பரிமள நீபத் தாரொடு வெட்சித்
தொடைபுனை சேவற்†கேதன துத்திப்
பணியகல் பீடத் தோகைம யிற்பொற் பரியோனே

பணிமல ரோடைச் சேலுக ளித்துக்
ககனம ளாவிப் போய்வரு வெற்றிப்
பழநியில் வாழ்பொற் கோமள சத்திப்பெருமாளே.()

* தோடை - தொடை, மாலை.
† கேதனம் - கொடி.

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான

145. ஆலகாலமெ னக்கொலை முற்றிய
வேல தாமென மிக்கவி ழிக்கடை
யாலு மோகம்வி ளைத்துவி தத்துடன் இளைஞோரை
ஆர வாணைமெ யிட்டும றித்துவி
கார மோகமெ ழுப்பிய தற்குற
வான பேரைய கப்படு வித்ததி விதமாகச்
சால மாலைய ளித்தவர் கைப்பொருள்
மான மேகிலு கிட்டும ருட்டியெ
சாதி பேதம றக்கல விக்கிரி மடமாதர்
தாக போகமொ ழிந்துனி னைக்கடி
யானெ ன்*வேள்விமு கத்தவ முற்றிரு
தாளை நாளும்வ ழுத்திநி னைத்திட அருள்வாயே
வால மாமதி மத்தமெ ருக்கறு
காறு பூளைத ரித்தச டைத்திரு
வால வாயனை ளித்தரு ளற்புத முருகோனே
மாய மாவுடை ரக்கரை வெற்றிகொள்
வாலி மார்புதொ ளைத்திட விற்கொடு
வாளி யேவிய மற்புய னச்சுதன் மருகோனே
நாலுவேதந விற்றுமு றைப்பயில்
வீணை நாதனு ரைத்தவ னத்தட
நாடி யோடுகு றத்திக ணைக்கொடு வருவோனே
நாளி கேரம் வருக்கைப ழுத்துதிர்
சோலை சூழ்பழ நிப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்திதரித்தருள் பெருமாளே. (சரு)

* வேள்வி - ஆராதனை.

தத்தா தனத்ததன தத்தா தனத்ததன
தானத் தனந்ததன தானத் தனந்ததன தனதனதான.

146. இத்தா ரணிக்குள்மனு வித்தாய் முளைத்தழுது
கேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்
தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்துநவ கோடிப் பாபந்தகலை
பிச்சீர் பயிற்றுவய தொட்டோடு மொட்டுவர
வாலக்குணங்கள்பயில் கோலப்பெதும்பையர்கள் உடனுறவாகி

ஆங்கார சரத்துமத னுக்கே யிளைத்துவெகு
வாகைக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல
திக்கோடு திக்குவரை மட்டே யடிப்பிரிக்கபொருள்
தேடிச் சுகந்தஅலை மீதிற் றுயின்றுசுகம்
இட்டா தரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக்கிடந்துமய லாகித்தளர்ந்துசில பிணியதுமூடி

சுத்தான புத்தியது கெட்டே கிடக்கநமன்
ஓடித் தொடர்ந்துகயி றாடிக் கொளும்பொழுது
பெற்றோர்கள் சுற்றியழ வுற்றார்கள் மெத்தஅழ
ஊருக் கடங்கலிலர் காலற் கடங்கவுயிர்
தங்கா திவர்க்குமய னிட்டான் விதிப்படியின்
ஓலைப்படும்படியி னாலிற்றிறந்ததென படுமெனவோடி

பட்டா நவாபறைகள் கொட்டா வரிச்சுடலை
ஏகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமய
இட்டே யனற்குளெரி பட்டா ரெனத்தழுவி
நீரிற் படிந்துவிடு பாசத் தகன்றனது
சற்போ தகப்பதும முற்றே தமிழ்க்கவிதை
பேசிப்பணிந்துருகுநேசத்தையின்றுதர இனிவரவேணும்

தித்தா திரித்திகுட தக்கா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுசெகுகு தித்தா திமித்ததிகு
தாதத்த செந்திகுத தீதத்த செந்தரிக
திக்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணென ஒருமயிலேறித்

*திட்டே ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் துளைந்துவரை யேழைப் பிளந்துவரு
சித்தா பரத்தமரர் கத்தா குறத்திமுலை
மீதிற் புணர்ந்துசுக லீலைக் கதம்பமணி
சுத்தா அனைத்துமொரு முத்தாய் முளைத்தகுரு
நாதக்குழந்தையெனவோதக்கடம்பமலர் அணிதிருமார்பா

†மத்தா மதக்களிறு பிற்றோ னுதித்தகுக
னேதத் திலங்கையினி லாதிக்க முண்டதொரு
முட்டா ளரக்கர்தலை யிற்றே விழக்கணைக
ளேதொட்ட கொண்டலுரு வாகிச் சுமந்ததிக
மட்டார் மலர்க்கமல முற்றா சனத்திருவை
மார்பிற் புணர்ந்தரகு ராமற்கு மன்புடைய மருமகனாகி

வற்றா மதுக்கருணை யுற்றே மறைக்கலைகள்
ஓதித் தெரிந்துதமிழ் சோதித்த லங்கலணி
அத்தா பரத்தையறி வித்தாவி சுற்றுமொளி
ஆகிப் பரப்பதமணி வேலைதொட்ட மைந்தாபய
வர்க்கா மருப்புகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடிய ராவிக்குள் நின்றுலவி வருபெருமாளே. (சுசு)

---

தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன தனதான.

147. இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைகளொரு நாலேவ இருதுகுயி லதுகூவ
எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின்மணி
யிசைகுறுகி யிருசெவியி னூடாசை யுருவவதென
இகல்புரியமதன‡குருவோராத அனையர்கொடுவசைபேச

* திட்டேரதம் - திண், தேர், ரதம். † மத்தா - களிப்பையுடையவனே.
‡ குரு - பாரம்.

அரஹரென வனிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயி லதுகருதி யாரோடு மிகல்புரிவள்
அவசமுற அவசமுற ஆ*ரோமல் தரவுரிக மெலிவாளுள்
† அகுதியிவள் தலையில்விதி யானாலும் விலகரிது
அடிமைகொள வுனதுபரம் ஆறுத வொருதனிமை
அவளையனை தரஇனிதி ‡ஓகார பரியின்மிசை வருவாயே
நிரைபரவி வரவரையு ளோர்சீத மருதினொடு
பொருசகடு முதைபதுசெய் தாமாய மருபொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவெகொள் கரகமலன் மருகோனே
நிருமலிய திரிநயனி வாள்வீர வருகுமரி
கவுரிபயி ரவியரவ பூஷணி திரிபுவனி
நிபுணமலை யரசனருள் வாழ்வான பூரணவுமைய ருள்பாலா
பரவைகிரி யசுரர்திரள் மாசேனை தவிடுபொடி
படஅமரர் துயரகல மேலேவி யமர்பொருத
பதுமகர தல்புருக நால்வேத காரணித மயில்வீரா
பரிதமருக மதகளப சேரார வளருமுலை
வனிதைகுற மகள்மகிழும் லீலாவி தராமதுர
பனுவல்தருப ரநிவநம்கோலாகலவ அமரர்பெருமாளே (௪௭.)

---

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தனதான

148. இலகிய களபசு கந்த வாடையின்
ம்ருகமத மதனைம கிழ்ந்து பூசியெ
இலைசுருள் பிளவைய ருந்தி யேயதை யிதமாகக்
கலவியி லவரவர் தங்கள் வாய்தனில்
இடுபவர் பலபல சிந்தை மாதர்கள்
§கசனையை விடுவது மெந்த நாளது பகர்வாயே

---

* ஓமல் ஊர்ப்பேச்சு. † அகுதி - திக்கற்றவள் ‡ ஓகாரம் — ஓகரம், மயில். § கசனை — ஈரம், அன்பு.

சிலைதரு குறவாம டந்தை நாயகி
 தினைவன மதனிலு கந்த நாயகி
 திரள்தன மதனில ணைந்த நாயக சிவலோகா
கொலைபுரி யசுரர்கு லங்கள் மாளவெ
 * அயிலயி லதனையு கந்த நாயக
 குருபர பழநியி லென்று மேவிய பெருமாளே. (சஅ)

---

தனத்தான தனதனன தனத்தான தனதனன
தனத்தான தனதனன தனதான.

149. உயிர்க்கூடு விடுமளவும் உமைக்கடி மருவுதொழில்
 ஒருக்காலு நெகிழ்வதில்லை யெனவேசூள்
உரைத்தேமுன் மருவினரை வெறுத்தேம திரவியமு
 துடைத்தாய்ப்பின் வருகுமவ ரெதிரேபோய்
பயிற்பேசி யிரவுபகல் அவாக்கான † பதமைபல
 படபேசி யுறுபொருள்கொள விலைமாதர்
படப்பார வலைபடுதல் தவிர்த்தாள மணிபொருவு
 பதத்தாள மயிலின்மிசை வரவேணும்
கயிர்ச்சோர னெனுமறை வசைக் ‡ கோவ வனிதையர்கள்
 கரத்தாடல் புரியுமரி மருகோனே
தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்
 தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே
§செயிற்சேல்வி னுடவிஞெடு பொரப்போய் ||விமமர்பொருது
 செயித்தோடி வருபழநி யமர்வோனே
·க்காவல் புரியவல குறப்பாவை முலைதழுவு
 திருத்தோள அமரர்பணி பெருமாளே (சகூ)

---

*அயில் - கூர்மை †பதமை - வார்த்தைகளை. பதங்களை. ‡கோவ வனிதையர் - கோபிகாஸ்திரீகள். § செயில் சேல்- வயல்களிலிருக்கும் சேண்டை மீன்கள். || விமமர் - விம்மு அமர்.

தான தான தனத்த தனத்தன
தான தான தனத்த தனத்தன
தான தான தனத்த தனத்தன தனதான.

150. ஓடி யோடி யழைத்து வரச்சில சேடி மார்கள் பசப்ப அதற்குமுன்
ஓதி கோதி முடித்த விலைச்சருள் அதுகோதி

நீடு வாச நிறைத்த அகிற்புழு கோட மீது திமிர்த்த தனத்தினில்
நேச மாகி யணைத்த சிறுக்கிகள் உறவாமோ

* நாடி வாயும் வயற்றலை யிற்புனல் ஓடை மீதி னி†லத்த திவட்கையின்
‡ நாத கீத மலர்த்துளி பெற்றளி யிசைபாடும்

கோடு லாவிய முத்தநி ரைத்தவை காவ ராடத னிற்பழ நிப்பதி
கோதி லாதகு றத்திய ணைத்தருள் பெருமாளே. (ரு0)

---

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான.

151. கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தையிரப் பகலோனைக்

கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பினில்மேவி

அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புகுவித் தயமப் ப்ரபுவைத் துகைவித்
தரிகட் கம்விதிர்த் தமுறித் தமதிக் தசகோரம்

அலறப் பணிரத் னமணிக் குழையைச்
சிலுகிட் டுமையிட் டொளிவிட் டுமருட்
டுதலுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனோ

* நாடி - பூந்தாள். † அத்த திவட்கையின் - அர்த்தம் விளங்கும்படி.
‡ நாதகீத மலர்த்துளி பெற்றளியிசை பாடும் - அளி மலர்த்துளி பெற்று நாத கீத இசைபாடும் எனக்கூட்டுக.

சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பியிடப் பரிவாலே

*சனகற் குமகஸ்த் யபுலஸ்த் யசனற்
குமரர்க் குமநுக் க்ரக †மெய்ப் பலகைச்
‡சதுபத் துநவப் புலவர்க் குர்§விபத் தியில்ஞான

படலத் துறைசெப் பரிய||தமிழ்த்
த்ரயமத் தினகப் பொருள்வ்ருத் தியினைப்
¶பழுதற் றுணர்வித் தருள்வித் தகநற் குருநாதா

பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலையிற் பலமுத் ததிர்செய்ப்
பழநிப் பதிவெற் பினில்நிற் குமரப் பெருமாளே. (நிக)

---

தனதன தத்த தானன தனதன தத்த தானன
தனதன தத்த தானன தனதான.

152. கதியைவி லக்கு மாதர்கள் புதியஇ ரத்ந பூஷண
கனதன வெற்பு மேல்மிகு மயலான

கவலைம னத்த னாகிலும் உனதுப்ர சித்த மாகிய*
கனதன மொக்க மேனியு முகமாறும்

அதிபல வஜ்ர வாகுவும் அயில்நுனை வெற்றி வேலதும்
அரவுபி டித்த தோகையும் உலகேழும்

அதிரவ ரற்று கோழியும் அடியர்வ ழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமு மறவேனே

○ இரவிகு லத்தி ராசத மருவியெ திர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான

* சனகற்கும் என்பது முதலாகக் கூறிய இவர்களே சனகாதி நால்வர். † மெய்ப்பலகை - சங்கப்பலகை. ‡ சதுபத்து நவப் புலவர் - சங்கத்தார் நாற்பத்தொன்பதின்மர். § விபத்தியில் — வேற்றுமை யில்லாத || தமிழ்த்த்ரயமத்தில் - தமிழ்த்திரயம் அதில். ¶ பழுதற்று - பழுதற. ○ இர என்பது எதுகை வழு அன்று, இது நூல் ஆரிடத்தை ஒத்தது, ஆதலால் தண்டியலங்கார ஒழிபியலிற் கூறிய வழுவமைதியாம் என்க. ஆரிடம் - இருடிகள் வாக்கு.

இளையவ னுக்குநீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொட ளித்த ராகவன் மருகோனே
பதினொரு ருத்தி ராதிகள் தபனம்வி ளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக
பரிமள கற்ப காடவி யரியளி சுற்று பூவுதிர்
பழநிம லைக்குள் மேவிய பெருமாளே.(௫௨)

---

தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தந்ததான,

153. கனக கும்பமி ரண்டு நேர்மலை
யெனநெ ருங்குகு ரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்கு லாவிய முந்துசூதம்
*கடையில் நின்றுப ரந்து நாடொறும்
இளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப குங்கும கொங்கை யானையை யின்பமாக
அனைவ ருங்கொளு மென்று மேவிலை
யிடும டந்தையர் தங்கள் தோதகம்
அதின்ம ருண்டுது வண்ட வாசையில் நைந்துபாயல்
அவச மங்கொளு நின்ப சாசர
முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
தருப தங்கதி யெம்பி ரானருள் தந்திடாயோ
தனத னந்தன தந்த னவென
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தகுதி திந்திகு திந்த தோவென உந்துதாளந்
தமர சஞ்சலி சஞ்ச லாவென
முழவு டுண்டுடு டுண்டு டூவென
ஞாமு முந்தவோதும்

---

* கடை - வாயில்.

தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன தனதான.

155. சிந்துர கூரம ருப்புச் செஞ்*சரி
செங்கைகு லாவந டித்துத் தென்பயில்
செண்பக மாலைமு டித்துப் பண்புள தெருவூடே

சிந்துகள் பாடிமு ழக்கிச் செங்கயல்
அம்புகள் போலவி ழித்துச் †சிங்கிடை
செம்பவ ளாடைது லங்கிய பொன்பறி விலைமாதர்

வந்தவ ரோடென ணைத்துக் கொங்கையை
அன்புற மூடிநெ கிழ்த்திக் கண்பட
‡மஞ்சணி ராடிமி னுக்கிப் பஞ்சணை தனிலேறி

மந்திர மோகமெ ழுப்பிக் கெஞ்சிட
முன்றலை வாயில டைத்துச் சிங்கிகொள்
மங்கைய ராசைவி லக்கிப் பொன்பதம் அருள்வாயே

இந்திர நீலவ னத்திற் செம்புலி
அண்டக டாகம ளித்திட் டண்டர்கள்
எண்படு §சூரைய ழித்துக் கொண்டருள் ஒருபேடி

இன்கன தேரைந டத்திச் செங்குரு
மண்டல நாடும ளித்துப் பஞ்சவர்
இன்புறு ||தோழ்மையு டைக்கத் தன்திரு மருகோனே

சந்திர சூரியர் திக்கெட் டும்புகழ்
அந்தமில் வாழ்வது பெற்றுத் தங்கிய
சங்கர னார்செவி புக்கப் பண்பருள் குருநாதா

சம்ப்ரம மானகு றத்திக் கின்புறு
கொங்கையின் மேவுச மர்த்தச் சுந்தர
தண்டமிழ் சேர்பழ நிக்குட்டங்கிய பெருமாளே.(௫௫)

* சரி - வளையல். † சிங்கிடை - சிங்க இடை. ‡ மஞ்சள் நீராடி.
§ சூர் - துன்பம். || தோழ்மை - தோழமை.

தனனதன தனனதன தத்தத் தனத்ததன
தனனதன தனனதன தத்தத் தனத்ததன
தனனதன தனனதன தத்தத் தனத்ததன தனதான.

156. சிறுபறைமு ரசுகுடி யத்தக் கணப்பறையு
மொகுமொகென அதிரவுட னொட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடுதுகொடு கட்டிட் டிழுக்கஇனி அணுகாதே
சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றிவிடு
சுடலைதனி லிடுகனலை யிட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் படிக்குமிலை ஒழியாதே
மறைமுறையி னிறுதிநிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணமொளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை யிச்சைப் படுத்துவதும் ஒருநாளே
வருதுரக மயில்மணிகள் சத்திக்க நிர்த்தமிட
ஒருபதுட னிருபுயமு மட்டித் தொடைக்கிசைய
மனமகிழ இனியமொழி செப்பிச் சிவத்தபதம் அருள்வாயே
நறையிதழி யறுகுபல புட்பத் திரட்களொடு
சிறுபிறையு மரவுமொழி லப்புத் திருத்தலையில்
நளினமுற அணிசடையர் மெச்சிப் ப்ரியப்படவு மயிலேறி
நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
அகிலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு முருகோனே
குறவர்முனை கெடமனது வெட்கப் படக்குடியில்
மலையிலெழு தினையிதணில் வைத்துச் சிறக்கியிரு
குவிமுலையு மணியிடையு மெச்சிப் புணர்ச்சிசெயு மணவாளா
குறுமுநிவ னிருபொழுதும் அர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய
குருகுமர பழநிவளர் வெற்புத் தனிற்*றிகழு பெருமாளே.()

---

* திகழு - உகரச்சாரியை.

தானந்த தனன தான தானந்த தனன தான
தானந்த தனன தான தனதான.

157. ஞானங்கொள் பொறிகள் கூடு வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி
நாவின்ப ரசம தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடுகு லாவி விளையாடி
ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவி லாமல்
ஓமங்கி யுருவ மாகி இருவோரும்
ஓரந்த மருவி ஞான மாவின்ப முதுகி னேறி
லோகங்கள் வலமதாட அருள்தாராய்
தேனங்கொ ளிதழி யான தாரிந்து *சலில வேணி
†சீரங்க னெனது தாதை ஒருமாது
சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன ஜோதி
சேர்பங்கி னமல நாதன் அருள்பாலா
கானங்கள் வரைகள் தீவு ‡ஓதங்கள் பொடிய நீற
§காடந்த மயிலி லேறு முருகோனே
காமன்கை மலர்கள் நாண வேடம்பெ ணமளி சேர்வை
காணெங்கள் பழநி மேவு பெருமாளே. (௫எ)

---

தனதன தனத்தான தானான தானதன
தனதன தனத்தான தானான தானதன
தனதன தனத்தான தானான தானதன தனதான.

158. தலைவலி மருத்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி யணுகாதே
தலமிசை யதற்கான பேரோடு கூறியிது
பரிகரி யெனக்காது கேளாது போலுமவர்
சரியும்வய துக்கேது தாரீர்சொ லீரெனவும் விதியாதே

* சலிலம் - கங்கை. † சீரங்கன - சீரிய அங்கத்தை யுடையவன். அங்கம் - எலும்பு ‡ ஓதங்கள் - கடல்கள். § காடந்த - சாடு அந்த, வன்த்தி யுள்ள அழகிய.

உலைவறவி ருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை யெடுத்தே*தொ டாமாலி காபரணம்
உனதடியி னிற்கூட வேநாடு மாதவர்கள் இருபாதம்
உளமது தரித்தேவி னாவோடு பாடியருள்
வழிபட எனக்கேது யாவோடு தானுதவ
உரகம தெடுத்தாடு †மேகார மீதின்மிசை வரவேணும்
அலைகட லடைத்தேம காகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேயான சானகியை
அடலுட னழைத்தேகொள் மாயோனை மாமனெனு மருகோனே
அறுகினை முடித்தோனை யகார மானவனை
மழுவினை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில் நடித்தோனை மாதாதை யேயெனவும் வருவோனே
பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
யிருசரண வித்தார வேலாயு தாவுயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவு மோகமுறு மணவாளா
பதுமவய லிற்பூக மீதேவ ரால்கள் தாவில்
மருவுபுனல் பெருங்காறு காவேரி சூழ்வளர்
பழநிவரு கற்பூர கோலாகலாமரர் பெருமானே. (ருஅ)

---

தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன தனதான.

159. ‡நிகமமெனி லொன்று மற்று நாடொறு
§நெருடுகவி கொண்டு வித்தை பேசிய
நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறு
நெளியமுது ||தண்டு சத்ர சாமரம்
¶நிபிடமிட வந்து கைக்கு மோதிரம்
நெடுகியதி குண்டலப்ர தாபமும் உடையோராய்

---

* தொடா - தொடுத்து. † மேகாரம் - மயில். ‡ நிகமம் - வேதம். § நெருடு - நூலிழையைப் பொருத்துதல்போலச் சேர்க்கின்ற || தண்டு - சிவிகை. ¶ நிபிடமிட - நெருங்க.

முகமுமொரு சம்ப மிக்க நூல்களு
முதுமொழியும் வந்தி ருக்கு மோவெனில்
முடிவிலவை யொன்று மற்று வேறொரு நிறமாகி

முறியுமவர் தங்கள் வித்தை தானிது
முடியவுனை நின்று பத்தி யால்மிக
மொழியும்வளர் செஞ்சொல்வர்க்கமேவர அருள்வாயே

திருதிகென மண்ட விட்ட தீயொரு
செழியனுடல் சென்று பற்றி யாருகர்
திகையினமண் வந்து விட்ட போதினும் அமையாது

சிறியகர பங்க யத்து நீறொரு
தினையளவு சென்று பட்ட போதினில்
தெளியவுடன் வென்றி விட்ட மோழைகள் கழுவேற

மகிதலம ணைந்த * அத்த மாதரை
வரைவறம ணந்து நித்த நீடருள்
வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்

வரவரம னந்தி கைத்த பாவியை
வழியடிமை கொண்டு மிக்க மாதவர்
வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே. (ருசு)

---

தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன தனதான

160. நெற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு
குத்துமு கைக்குட மசைத்து வீதியில்
நிற்பவர் மைப்படர் விழிக்க லாபியர் மொழியாலே

நித்தம யக்கிகள் மணத்த பூமலர்
மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுடல்
நெட்டிவ ரத்தொழில் கொடுத்து மேவியும் உறவாடி

---

* அத்த - அத்தனே.

உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு
மெத்தவு நட்பொடு பறித்து நாடோறும்
உற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்கள் உறவாமோ

உசித மெய்ப்புற அனைத்த யாவுடன்
மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற
உட்குளிர் புத்தியை யெனக்கு நீதா வருவாயோ

*கற்றதமிழ்ப்புல வனுக்கு மேமகிழ்
வுற்றொரு†பொற்கொடி கவிக்கவே பொரு
கற்பனை நெற்பல வளிக்க காரணன் அருள்பாலா

‡கற்பக நற்கனி தனிச்ச கோதனை
பொற்புய மைப்புயல் நிறுத்த வானவ
ர் சிறையு மிட அருட்கரு பாசர மனமாறும்

நற்றவ ராசனை யிடத்த பாபர
வஸ்திரவெ னப்புவி யிடத்தி லேவளர்
நத்தணி§செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே

நட்டுவர் மத்தள முழக்க மாமென
மைக்குல மொத்தவு முழக்க மேதரு
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே. (சுo)

---

தந்த தானனந தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன தனதான.

161. பஞ்ச பாதகன் பாவிமுழு மூடன்வெகு
வஞ்ச லோபியன் சூதுகொலை காரன்மதி
பண்கொ ளாதவன் பாவகட லூடுறழை பவுஷாசா

பங்கன் மோகியம் பாழ்நரகில் வீழவுறு
பெண்டிர் வீடுபொன் தேடிநொடி மீதில்மறை
பஞ்ச மாமலம் பாசமொடு கூடிவெகு சதிகார

---

* கற்றதமிழ்ப்புலவன் - சுந்தரமூர்த்திசுவாமிகள் † பொற்கொடி - பரவைநாச்சியார். ‡ கற்பகா - தேவலோகம் § செக்கரன் - செங்கரன்.

நிலவெறி யங்கக் குலுக்கிலேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கிலேகன
நிதிபறி யந்தப் பிலுக்கிலேசெயும் ஒயிலாலே
நிதமிய லுங்கூர்க் குணத்திலேபர
வசமுட னன்புற் றிணக்கிலேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்திலேவெகு மதிகேடாய்
அலையநி னைந்*துற் பனத்திலேயரு
தினமிகு மென்சொற் பனத்திலேவர
அறிவுமழிந்†தற் பனத்திலேநிதம் உலைவேனோ
அசடனை வஞ்சக சமர்த்த னாகிய
கசடனை யுன்சிற் கடைக்க னாடியும்
அலர்கொடு நின்பொற் பதத்தையே தொழ அருள்தாராய்
பலபல பைம்பொற் பதக்க மாரமும்
அழகமை சேரொளி தோற்ற முமிப்ப வனியொடு
பரிமள கிங்கிணிப் பாத மாலையும் அணிவோனே
பதியினில்‡மங்கைக் கதித்த மாமலை
யொடுசிலை முன்புற் றெரித்த வார்சடையர்
பரிவுயி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே (௧௬௩)

---

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான தனதான.

164. முலைமுளரி பரவைவிசு மெழில்கனக மலைபோலு
முதிர்விளி தனபார மடவார்தோள்
முழுகியமி ருகபோக விழலனென வுலகோர்கள்
மொழியுமது மதியாது கலைகீழ்வீழ்ந்
தகமகிழ விகடமான நமக்கமுத மெனவுறல்
அசடாக மெழுவாகி மிகவேயுண்

* உற்பனம் - தோற்றம். † அற்பனத்திலே - அற்பன் அதிலே.
‡ மங்கைக்கதித்த மாமலை - வள்ளிமலை.

டழியுமொரு தமியேனு மொழியுமுன திருகாலின்
அழகுபெறு நடஞானம் அருளாயோ
மகரமெறி திரைமோது பகரகடல் தடவாரி
மறுகுபுனல் கொடுவேலை விடுவோனே
வரிசையுடன் மகவோனை யுகமுடிய மயிலேறி
வருபனிரு கரதீர முருகோனே
பகர்வரிய ரெனவொருவர் புனைகொழுந்து தனிமேவு
பரமகுரு வெனநாடும் இளையோனே
பவளமணி வெயிலெறிக்க மணிசிகர மதியுருடு
பழநிமலை தனிலுமேவு பெருமாளே (௬௪)

---

தன்ன தன்ன தனத்த தனன தனன தனத்த
தனன தனன தனத்த தனதான.

165. முதிர வுழையை வனத்தில் *முடுகி வடிவை யழித்து
முதிர நயன நனை கயத்தி னிடையோடே
முரண வளருமை விழிக்கு மதன விரகு பயிற்றி
முறைமை கெடவு மயக்கி வருமாதர்
மதுர அமுத மொழிக்கு மகுட பணைய புணைக்கு
வலிய அடிமை புகுத்தி விடுமாய
மனதை யுடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்
மகிழ வுனது பதத்தை யருள்வாயே
சதுரன் வரையை யெடுத்த நிருத னுடலை வதைத்தொர்
சகடு மருத முதைத்த தகவோடே
தழையு மாமுநிலத்தில் மழையா அமரை விளைத்த
தனுவை யுடைய சமர்த்தன் மருகோனே
அதிர முடுகி யெதிர்ந்த அசுர ருடலை வகுத்தும்
அமரர் சிறையை விடுத்தும் வருவோனே.
அரிய புகழை யமைத்த பெரிய பழநி மலைக்குள்
அழகு மயிலை நடத்து பெருமாளே. (௬௫)

---

* முடுகி-முடுக்கி, துரத்தி.

தக்தத்தத் தத்தத் தத்தன தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன தனதான.

166. முத்துக்குச் சிட்டுக் குப்பிமு டித்துச*சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே

முக்யப்பச் சைப்பொட் டிட்டணி ரத்னச்சுட் டிப்பொற் புற்றிட
முர்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்

திக்திக்கச்சொற்சொற் குயிற்றழ்நற் சுக்கட்†கற்புச் சொக்கியர்
செப்புங்கொக் கக்கற் சுப்பெறு தனமேரு

திட்டத்தைப் பற்றிப் பற்பல லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச் சொக்கிக் கெட்டுப்படி யுழல்வேனோ

‡மெத்தத்துக் கத்தைத் தித்தியினிச்சித்தத் திற்பத் தத்தொடு
மெய்ச்சிப் பொற்கத் திற்சிற்பர மருள்வாயே

வித்தைக்குக் கர்த்ருத் தற்பர முங்கட்சித் தர்க்குப் புத்திர
விற்சித்ரச் செய்க்கைக்§கத்திகை புனைவோனே

நித்யக்கற் பத்திற் சித்தர்கள் எட்டுத்திக் குக்குட் பட்டவர்
நிஷ்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்

நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
நிக்குட்பட் டத்துக் குற்றுறை பெருமாளே.(௬௬)

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான.

167. முருகுசெறி குழல்விழ முலைபுளக மெழுநிலவு
முறுவல்தர விரகமெழ அநுராகம்

முதிரவச மறு||விதரி யெழுகைவளை கலகலென
முகநிலவு குறுவெயர்வு துளிவீச

அருமதுர மொழிபதற இதழமுது பருகிமிக
அகமகிழ இருகயல்கள் குழையேற

---

*சுக்கை - பூமாலை †கற்பு - சற்பனை - ‡ மெத்த துக்கத்தை தித்தியினி சித்தத்தில் பத்தத்தோடு என்று பிரித்துக் கொள்க. § கத்திகை - பூமாலை. || விதரி - பிளவுபட்டுள்ள விரல்கள்.

காலின்சழ லோசையு நூபுர வார்வெண்டைய வோசையு மேயுக
காலங்களி னோசைய தாநட மிடுவோனே
கானங்கலை மான்மக ளார்தமை நணக்கெடவேயணை வேள்பிர
காசம்பழ னாபுரி மேவிய பெருமாளே. (௬அ)

---

தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன தனதான

169. வாதம் பித்தமி டாவயி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
*மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்

மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தொ ணூறறு
வாருஞ் சுற்றினில் வாழ்சதி காரர்கள் வெகுமோகர்

சூழ்துன் சித்ர†க பாயமு வாசைகொ
டேதுஞ் சற்றுண ராமலெ மாயைசெய்
சோரம் பொய்க்குடி லேசுக மாமென இதில்மேவித்

தூசின் பொற்சர மோடுகு லாயுல
கேழும் பிற்பட வோடிடு மூடனை
‡தூவஞ் சுத்தடி யாரடி சேரநின் அருள்தாராய்

தீதந் தித்திமி தீதக தோதிமி
டூடுண் டுட்டுடு டூடுடு டூடுடு
சேசெஞ் செக்கெண தோதக தீகுட வெனபேரி

சேடன் சொக்கிட வேலைக டாகமெ
லாமஞ் சுற்றிட வேயசு ரார்கிரி
தீவும் பொட்டெழ வேயனல் வேல்விடு மயில்வீரா

---

* 'மாசங்கண்' என்பதை 'அங்கண்மாசு' என மாற்றுக. அங்கண் மாசு என்பது நேத்திர ரோகம். † கபாய் - கவசம், தேகம். ‡ தூவஞ் சுத்தடியார் - தூ அம் சுத்த அடியார் - தூய்மை வாய்ந்த அழகிய சுத்த அடியார்.

வேதன் பொற்சிர மீது*கடாவிந
லீசன் சற்குரு வாயவர் காதினில்
மேவும்†பற்றிலர் பேறருளோதிய முருகோனே

‡வேஷங் கட்டியு மேகிம காவலி
மாலின் பித்துற வாகிவி ணோர்பணி
வீரங் கொட்பழ னாபுரி மேவிய பெருமாளே. (௬௬)

---

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான.

170. விதமி சைந்தினி தாமலர் மாலைகள்
குழல ணிந்தநு ராகமு மேசொலி
விதர ணஞ்சொலி வீறுக ளேசொலி யழகாக

விரிகு ரும்பைக ளாமென வீறிய
கனக சம்ப்ரம மேருவ தாமதி
விரக§மொங்கிய மாமுலை யாலெதிர் அமர்நாடி

இதமி சைந்தன மாமென வே||யின
நடைந டந்தனர் வீதியி லேவர
எவர்க ளுந்¶சித மால்கொளு மாதர்கள் வலையாலே

எனது சிந்தையும் வாடிவி டாவகை
அருள்பு ரிந்தழ காகிய தாமரை
இருப தங்களி னாலெனை யாள்வது மொருநாளே

மதமி சைந்தெதி ரேபொரு சூரனை
யுடலி ரண்டு○கூ றாய்விழ வேசின
வடிவு தங்கிய வேலினை யேவிய அதிதீரா

---

* கடாவி - பிரயோகித்து, குட்டி. † பற்றிலர் பேறருள் - பற்றற்றவர் பெறத்தக்க அருளாகிய பிரணவப்பொருள். ‡ வேஷங்கட்டி - விருத்தாப்பிய வேஷங்கொண்டு. § மொங்கிய - பருத்த. || இன நடை - விதம் விதமான நடை. ¶ சிதம் - சித்தம் ○ கூறாய் என்பது குறாய் என்றாயிற்று.

மதுர இன்சொலி மாதுமை நாரணி
கவுரி யம்பிகை யாமளை பார்வதி
மவுன சுந்தரி காரணி யோகினி சிறுவோனே
மதமி சைந்தெழுலோகமு மேவலம்
நொடியில் வந்திடு மாமயில் மீதொரு
பவனி வந்தக்ரு பாகர சேவக விறல்வீரா
பருதி யின்ப்ரபை கோடிய தாமெனும்
வடிவு கொண்டருள் காசியின் மீறிய
பழநி யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே. (௭௦)

---

தனத்த தானன தனதன தனதன தனதான.

171. அருத்தி வாழ்வொடு*தனகிய மனைவியும் உறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூரு†மெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே
எருத்தி லேறிய இறையவர் செவிபுக உபதேசம்
இசைத்த நாவின இதஞறு குறமகள் இருபாதம்
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாதிரு புயபழநியினுறைபெருமாளே. (௭௧)

---

தனதனன தனதத்த தனதனன தனதத்த
தனதனன தனதத்த தனதான.

172. அறமிலா நிலைகற்ற கொடியவேல் விழிவிட்டுள்
அறிவுதா னறவைத்து விலைபேசி
அமளிமீ தினில்முத்து பவளவா யமுதத்தை
யதிகமா வுதவிக்கை வளையாலே
உறவினூ டலைத்தை யிழுகவே தழுவிக்கொ
ணுலையிலே மெழுகொத்த மடவாரோ
டுருகியே வருபெற்றி மதனநா டகபிந்தும்
ஒழியுமா றொருமுத்தி தரவேணும்

---

* தனகிய - சரசமாகப் பேசிய. † மெயெண - மெய்யென.

மறவர்மா தொருத்த விமலகோ கநகத்தி
மயிலனாள் புணர்செச்சை மணிமார்பா

மருள்நிசா சரன்வெற்பி னுருகிவீழ் வுறமிக்க
மயிலிலே றியவுக்ர வடிவேலா

பறைகள்பே ரியருத்ரி கரியரா ளகத்தி
பரமர்பா லுறைசத்தி யெமதாயி

பழையபார் வதிகொற்றி பெரிநா யகிபெற்ற
பழநிமா மலையுற்ற பெருமாளே. (எஉ)

---

தனனதன தந்த தனனதன தந்த
தனனதன தந்த தனதான.

173 இலகுகனி மிஞ்சு மொழியிரவு துஞ்சும்
இருவிழியெ னஞ்சு முகமீதே

இசைமுரல்சு ரும்பு மிளமுகைய ரும்பும்
இலகியக ரும்பு மயலாலே

நிலவினுடல் வெந்து கரியஅல மந்து
நெகிழுமுயிர் நொந்து மதவேளால்

நிலையழியு நெஞ்சி லவர்குடிபு குந்த
நினைவொடுமி றந்து படலாமோ

புலவினைய ளைந்து படுமணிக லந்து
புதுமலர ணிந்த கதிர்வேலா

புழுகெழும ணந்த குறமகள்கு ரும்பை
பொருமுலையு டைந்த தொடைமார்பா

பலநிறமி டைந்த விழுசிறைய லர்ந்த
பருமயில டைந்த குகவீரா

*பணைபணிசி றந்த தரளமணி சிந்து
பழநிமலை வந்த பெருமாளே. (எங)

*பணை - மூங்கில்

தனனதன தான தந்த தனதான.

174. உலகபசு பாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்றன் அருள்தாராய்
சலமறுகு பூளை தும்பை யணிசேயே
சரவணப வாமு குந்தன் மருகோனே
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே
பழநிமலை வாழவந்த பெருமாளே.(எ௪)

---

தனதனன தனதனன தானத் தானத் தனதான.

175. ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற்காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே(எரு)

---

தனதன தனன தான தனதன தனன தான
தனதன தனன தான தனதான.

176. ஒருவரை யொருவர் தேறி யறிகிலர் மதவி சாரர்
ஒருகுண வழியுறாத பொறியாளர்
உடலது*சதமெ னாடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வ ரதுபோக
வருமொரு வடிவ மேவி யிருவினை யலையு ளாடி
மறைவரி னனைய கோல மதுவாக
மருவிய பரமஞான சிவகதி†பெறுக நீறு
வடிவுற வுதவுபாதம் அருள்வாயே

---

* சதமெனாடி - சதம் எனநாடி. † பெறுக - பெற.

திரிபுர மெரிய*வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி யருள்மெய்ஞ் ஞான குருநாதன்
திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட மருளு நாதன் அருள்பாலா
சுரர்பதி யயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெய்ஞ் ஞான அயிலோனே
சுகக்குற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழுமுது பழநி மேவு பெருமாளே.(எசு)

---

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான.

177. கரியிணைக் கோடெனத் தனமசைத் தாடிநற்
கயல்விழிப் பார்வையிற் பொருள்பேசிக்
கலையிழுத் தேகுலுக் கெனநகைத் தேமயற்
கலதியிட் டேயழைத் தணையூடே
செருமிவிக் காசிற் றிடைதுடிக் காடமற்
றிறமளித் தேபொருட் பறிமாதர்
செயலிழுக் காமலிக் கலியுகத் தேபுகழ்ச்
சிவபதத் தேபதித் தருள்வாயே
திரிபுரக் கோலவெற் புழல்கொளச் சீர்நகைச்
சிறிதருட் டேவருட் புதல்வோனே
திரைகடற் கோவெனக் குவடுகட் டூள்படத்
திருடர்கெட் டோடவிட் டிடும்வேலா
பரிமளப் †பாகலிற் கனிகளைப் பீறிநற்
படியினிட் டேகுரக் கினமாடும்
பழநியிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே. (எஎ)

---

* வேழசிலை - கரும்பாகிய வில். † பாகல் - பலா.

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான,

178. *கருகிய கன்று வரிசெறி கண்கள்
கயல்நிக ரென்று துதிபேசிக்
கலைதரு கொன்றை யிடைபடு கின்ற
கடிவிட முண்டு பலநாளும்
விரகுறு சண்டை விளைவுடல் கொண்டு
வினைவழி நின்று தளராதே
விரைகமழ் தொங்கல் மருவிய துங்க
விதபத மென்று பெறுவேனோ
முருகக டம்ப குறமகள் பங்க
முறையென அண்டர் முறைபேச
முதுதிரை யொன்ற வருதிறல் வஞ்ச
†முரணசுரர் வென்ற வடிவேலா
பரிமள இன்ப மரகத துங்க
‡பகடித வென்றி மயில்வீரா
பறிதலை குண்டர் கழுநிரை கண்டு
பழநிய மர்ந்த பெருமாளே. (எஅ)

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான.

179. சுருளளக பார கொங்கை மகளிர்வச மாயி ளைந்து
சுரதக்ரியை யால்வி ளங்கு மதனாலே
சுருதியென வேநி னைந்து அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்குன் அடியார்போல்
அருமறைக ளேநி னைந்து மனுநெறியி லேந டந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி
அகிலபுவ னாதி யெங்கும் வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த அருள்வாயே

* 'கருமுகில் கொண்ட' என்னும் பாடல். † முரணசுரர் - வலிய அசுரர்
‡ பகடித வென்றி – பெருமையும் நன்மையும் வெற்றியுமுள்ள.

பருதிமகன் வாசல் மந்த்ரி அநுமனொடு நேர்ப ணிந்து
பரிவினொடு யாமுன் வந்து பரிவாலே
பரவியவி பீஷணன்பொன் மகுடமுடி சூட நின்ற
படைஞரொடு ராவ ணன்ற னுறவோடே
எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே
இளையகுற மாது பங்க பழநிமலை நாத கந்த
இமயவனித நல்ம கிழ்ந்த பெருமாளே (எகூ)

---

தனதனதத் தனதனதத் தனதனதத் தனதான.

180. திடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற்செபமிலிசொர்க் கமுமீதே
இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைப் பெறவேணும்
கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொருவேலா
கிரணகுறைப்பிறையறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா
பலவயலிற் றரளநிரைப் பழநிமலைப் பெருமாளே. (அ0)

---

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தந்ததான.

181. ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆமமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்
ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மான முற என்றமோதும்
ஏழைகள் வியாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையும் என்சொலாதோ

நீறுபடு * மாழைபொரு மேனியவ வேலஅணி
  நீலமயில் வாகவுமை  தந்தவேளே
நீசர்கடமோடெனது தீவினையெ லாமடிய
  நீடுதனி வேல்விடும  டங்கல்வேலா
சீறிவரு மாறவுண ஞவியுணு மாணமுக
  தேவர்துணை வாசிகிரி  அண்டகூடஞ்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
  தேவர்வர தாமுருக  தம்பிரானே.(அக)

---

தனதனன தாத்த  தனதான.

182. †வசனமிக வேற்றி  மறவாதே
  மனதுதுய ராற்றில்  உழலாதே
இசைபயில்ச டாக்ஷ  ரமதாலே
  யிகபரசெள பாக்யம்  அருள்வாயே
‡பசுபதி§சி வாக்யம்  உணர்வோனே
  பழநிமலை வீற்ற  ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி  மிகவாழ
  அமரர்சிறை மீட்ட  பெருமாளே.(அஉ)

---

தனனதனன  தனதான.

183. வரதாமணிநீ  யெனவோரில்
  வருகாதெது  னதில்வாரா
திரதாதிகளால்  நவலோகம்
  இடவே கரியாம்  இலது
சரதா மறையோ  தயனமாலும்
  சகலா கமநூ  லறியாத
பரதே வதையாள்  தருசேயே
  பழநி புரிவாழ்  பெருமாளே.(அங)

---

* மாழை - பொன். † வசனமேற்றல்-உருவேறச் செபித்தல். ‡ பசுபதி வாக்கியம் வேத சிவாகமங்கள். § சி-ஸ்ரீ என்பது ஸ்ரீ என்றாகி சி எனக் குறுகியது.

தந்தந் தந்தந் தந்தந் தந்தந்
தனதன தனதன தனதன தனதன தனதான.

184. *குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினில் மிருகமத மெழுகியர்
இந்துஞ் சந்தந் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வனிதையர்
கொஞ்சுங் கெஞ்சுஞ் †செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர் விரகாலும்

தும்பும் பம்புஞ் சொம்புந் தெம்புங்
குடியென வளர்தரு கொடியவர் கடியவர்
எங்கெங் கெம்பங் கென்றென் றென்றுந்
தனதரி வையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கிப் பந்தந் தென்றன்
பொருளுள தெனைக ளுடைமையொடு கவர்பவர் மயலாலும்

என்றென் றுங்‡கன் றுந்துன் புங்கொண்
டொருதிரு மலரடி பரவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டன்றுஞ் சென்றுந்
தொழுமகி மையினிலை புணர்வினை யருள்பெற
இன்பப் பண்புந் தென்புஞ் சம்பத்
தமுமிக வருள்பெற விடைதரு விதமினி அருள்வாயே

§எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு மலைகளை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை யிரணிய வலனுயிர்
தங்குஞ் சிங்கம் ||வங்கந் தன்கண்
துயில்பவ ¶னெகினனை யுதவிய கருமுகில் மருகோனே

* குன்றுங்குன்றும்படி, செண்டுங்கன்றும்படி எனத் தனித்தனி கூட்டுக. † செஞ்சும் - செய்தும் என்பதன் மரூஉ. ‡ கன்றுதலையும் துன்பத்தையுங் கொண்டேன். கொண்டு - கொண்டேன். § எங்கும் என்பது குறுகிற்று. || வங்கம் - தோணி; தோணிபோற் கடலிற் கண்வளர்பவன். ¶ எகினன் அன்னவூர்தியாகிய பிரமன்.

# திருப்புகழ்.

* ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுந்
துளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடிடியென விழுமெழு படிகளு மதிர்பட
ஒண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை யடுவோனே

உன்றன் றஞ்சந் தஞ்சந் தஞ்சஞ்
சிலையருள் குருபர வெனமுநி வரர்பணி
பந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொலிபட நடமிடு பரனரு ளறுமுக
உண்கண் வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை புயவீரா

† அன்றென் றொன்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமைமிகு சமணர்கள் கழுவினில்
அங்கங் கிங்கும் பங்கந் துஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி யெதிர்பட
அன்பிற் பண்பெண் குங்கண் டெண்பின்
அரிவையை யெதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே

அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயனை விரதமை நடவிய
துங்கன் வஞ்சன் சங்கன் றங்கைக்
கொருமகன் முனிதழல் வருதக ‡ இவர்வல
அங்கங் கஞ்சஞ் சங்கம் பொங்குங்
கயனிறை வளமுறு சிவகிரி மருவிய பெருமாளே. (அச)

---

* ஒன்றென்ற என்றுந் துன்றுங்குன்று - ஒன்றாகிற சூரியமண்டலத்தை யளாவுங் கிரவுஞ்சகிரி. † அன்றென்ற ஒன்றுங்கொண்டு அன்பின்று - பிற மதங்கள் முத்திவழியன்று என்ற ஒன்றைமாத்திரங்கொண்டு அன்பில்லாமல் அத்திநாத்தியென்ற ஒன்றையே கொண்டென்றாலும் பொருந்தும்.

‡ இவர்வல - ஏறிநடத்தவல்ல.

தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்தன தனதன தனதான

185 கருப்புவிலில் மருப்பகழி தொடுத்துமதன் விடுத்தனைய
கடைக்கணொடு சிரித்தணுகு கருத்தினால் விரகுசெய் மடமாதர்
சதக்களிறு திக்கமுற மதர்த்துமிக வெதிர்த்துமலை
கனத்தவிரு தனத்தின்மிசை கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருப்படுதல் விருப்புடைமை மனத்தில்வர நினைத்தருளி
யுனைப்புகழு மெனைப்படியி லொருத்தனும் வகைதிரு வருளாலே
உருத்திரனும் விருத்திபெற வனுக்கிரகி னெக்குறுகி
உரைக்கமறை யடுத்தபொரு ளுணர்த்துநா ளடிமையு முடையேனோ
பருப்பதமு முருப்பெரிய வரக்கர்களு மிரைக்குமெழு
படிக்கடலு மலைக்கவல பருத்ததோ கையில்வரு முருகோனே
பதித்தமர கதத்தினுட னிரத்நமணி நிரைத்தபல
பணிப்பனிரு புயச்சயில பரக்கவே யியல்தெரி வயலூரா
திருப்புகழை யுரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப்பகைமை
செயித்தருளு மிசைப்பிரிய திருத்தமா தவர்புகழ்குருநாதா
சிலைக்குறவ ரிலைக்குடிலில் புகைக்கழக முகிற்புடைசெல்
திருப்பழநி மலைக்குளுறை திருக்கைவே லழகிய பெருமாளே.(அ௫)

☞ குறிப்பு:— இப்பாடலில் ஒவ்வோரடியிலும் இறுதியிலுள்ள பாகத்தை யெடுத்தமைக்க அடியில் வருமாறு பிறிதொரு பாடலாமாறு காண்க.

---

கருத்தினால் விரகுசெய் மடமாதர்
கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருத்தனும் வகைதிரு வருளாலே
உணர்த்துநா ளடிமையு முடையேனோ
பருத்ததோ கையில்வரு முருகோனே
பரக்கவே யியல்தெரி வயலூரா
திருத்தமா தவர்புகழ் குருநாதா
திருக்கைவே லழகிய பெருமாளே.

---

தானதந்தன தத்தன தத்தந்
தானதந்தன தத்தன தத்தந்
தானதந்தன தத்தனதத்தந் தனதான.

186. கோலகுங்கும கற்புரமெட்டோன்
றுணாங்கன வித்துருமக்கின்
கோவைகொண்பக டம்பமகிழ்ச்செங் கழுநீரின்
கோதைதங்கிளி யுற்றகுழந்தும்
பூஷணம்பல வொப்பனை மெய்க்கங்
கூறுகொண்டப ணைத்தனம்விற்கும் பொதுமாதர்
பாலுடன்கனி சர்க்கரை சுத்தந்
தேனெனும்படி மெத்தருசிக்கும்
பாதகம்பகர் சொற்களிலிட்டம் பயிலாமே
பாதபங்கய முற்றிடவுட்கொண்
டோதுகின்றதி ருப்புகழ்நித்தம்
பாடுமென்பது செய்ப்பதிபெற்றுந் தவனீயே
பாலமுன்புப டைக்கப்புச்சக்
தேகமின்றிம திக்கவிதிர்க்குஞ்,
சாகரங்கவ றக்கிரி யெட்டுந் தலைசாயக்
சாடுகுன்றது பொட்டெழமற்றுஞ்
சூர்னும்பொடி பட்டிடயுத்தஞ்
சாதகஞ்செய்தி ருக்கைவிதிர்க்குந் தனிவேலா
ஆலமுண்டக ழுத்தினிலக்குந்
தேவரென்பும்நி ரைத்தெரியிற்சென்
றுடுகின்றத கப்பனுக்குங் குருநாதா
ஆடகம்புனை பொற்குடம்வைக்குங்
கோபுரங்களி னுச்சியுடுத்தங்
காவினன்குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே.(௧௮௬)

தனதன தனதன தக்தக் தக்தத் தாக்தாந் தனதான.

187 கொடியன பிணிகொடு விக்கிக் கக்கிக்
கூன்போந் தடாகும்

குடிலூற வருமொரு வித்தைச் சித்தக்
* கோணுடைத் தனையாதே

பொடியன பரமய பத்துத் தப்பிப்
போந்தேகல் தலைமேலே

பொருளது பெறுகிலி நட்புச் சற்றுப்
பூண்டாண் டருள்வாயே

துடிபட அலகைகள் கைக்கொட் டிட்டுச்
சூழ்ந்தாங் குடனடக்

தொகுதொகு திகுதிகு தொக்குத் திக்குத்
தோந்தாந் தரி† தாளம்

படிதரு பதிவ்ரதை யொப்பச் சுத்தப்
பாழ்ங்காண் தனிலாடும்

பழநியுள் குமரநக்கத் தைக்குப்
பாங்காம் பெருமாளே. (அ॰)

---

தனதன தனனத் தனனத் தனதன தனனத் தனனத்
தனதன தனனத் தனனத் தனதான.

188. கொலைவிழி சுழலச் சுழலச் சிலைநுதல் குனியக் குனியக்
கொடியிடை துவளத் துவளத் தனபாரக்

குவடணி சிதறச் சிதறக் கரவளை கதறக் கதறக்
குயில்மொழி பதறப் பதறப் ப்ரியமோகக்

கலவியி லொருமித் தொருமித் திலவிதழ் பருகிப் பருகிக்
கரமொடு தழுவித் தழுவிச் சிலநாளிற்

கையிலுள பொருள்கெட் டருள்கெட் டனைவரும் விடுசீ சீயெனக்
கவலைகள் பலபெற் றுலகிற் றிரிவேனோ

* கோண் - மாறுபாடு. † தாளம் படிதரு பதிவ்ரதை ஒப்ப - படிதரு பதிவ்ரதை தாளம் ஒப்ப எனக்கூட்டுக.

சலநிதி கதறச் சுவறத் திசைநிலை பெயரப் பெயரத்
தடவரை பிதிரப் பிதிரத் திடமேருத்
தமனிய நெடுவெற் பதிரக் கணபண சிரம்விட் டகலச்
சமனுடல் கிழியக் கிழியப் பொருசூரன்
பெலமிகு குறையக் குறையக் கழுதுகள் *பறையப் பறையப்
பெருநரி தொடரத் தொடரத் திரள்கூகை
பெடையொடு குழறக் குழறச் சுரபதி பரவச் சமரப்
பிரபல பழநிக் குமரப் பெருமாளே, (௮௮)

---

தானனதனன தானன தனன
தானனதனன — தனதான.

189. தோரணகனக வாசலின்முழவு
தோன்முரசதிர முதிராத
தோகையர்கவரி வீச †வயிரியர்
தோள்வலிபுகழ மதகோப
வாரணரதப தாதிநிரைக
மாதிரநிறைய அரசாகி
வாழினுமுமையை ஈதினுமுனது
வார்கழலொழிய மொழியேனே
பூரணபுவன காரண ‡சவரி
பூதரகுமரி தனபார
பூஷணிருதர் தூஷணவிபுதர்
பூபதிநகரி குடியேற
ஆரணவரத னீறிருகுடுமி
யானனன்வெருவ மயிலேறும்
ஆரியபழநி வாழ்குகவழகும்
ஆண்மையுமுடைய பெருமாளே. (௮௯)

---

* பறைதல் - ஒழிதல். † வயிரியர் - புகழ்ந்து பாடுவோர்
‡ சவரி - குறத்தி, வள்ளிநாயகி.

தனதன தனதனத் தனதன தனதனத்
தனதன தனதனத்—தனதான.

190. பரிமள மலரடுத் தகில்மண முழுகிமைப்
பரவிய ம்ருகமதக் குழன்மாதர்
பருமணி வயிரமொத் திலகிய முலைமிசைப்
படைபொரு வனைவிழிக் கயலாலே
எரியுறு மெழுகெனத் தனியன மனமுருக்
கினிமையொ டுருகிவிட் டவமேயான்
இருவினை கழியமெய்த் திறனுட னுயிர்கொட்
புடர்படு மதுகெடுத் தருள்வாயே
சொரிமத வருவிகட் டொழுகிய புகர்முகத்
தொளைபடு கரமலைக் கிளையோனே
துடியிடை யொருகுறக் குலமயி றனையணைத்
தருள்பெறு பழநியிற் றிருப்போனே
அரியய னமரருற் றடிதொழ நடமிடுக்
கையுமொரு மொருவெனச் சகதோடு
மலைகளு முடனடித் திடமடி பயிலெடுத்
தமர்செயு மறுமுகப் பெருமாளே.(௧௯0)



நான்காவது

## திருவேரகம் என்கின்ற

## சுவாமிமலை



தனனதன தனனதன தனனு தனத்ததன
தனனதன தனனதன தனனு தனத்ததன
தனனதன தனனதன தனனு தனத்ததன தனதான.

191. குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந லுரையுதவுமயிலாஎனத்தினமும்உருகாதே
குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவி *லனவரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்களுடைமைமன முடனே பறிப்பவர்கள் அனைவோரும்
தமதுவச முறவசிய முகமோ கினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவாவழைப்பியர்கள்வலையாலே
சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ திருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமா தரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியேவழுத்தஅருள்தருவாயே
சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருகொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள்படுத்திவிடுசெருமீதே
†தவனமொடு மலைகைநட மிடவீர பத்திரர்கள்
அதிரநினை மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் பலகோடி
திமிதமிட நரிகொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரஅமரர்பதிவாழ்வுபெற்றுலவுமுருகோனே
திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவேரகத்திலுறை பெருமானே.

* அனவரதம் — எப்போதும். † தவனம் - தாகம்.

தன்ன தனதன தனன தனதன
தனன தனதன — தனதான.

192. குமர குருபர முருக சரவண
குகசண் முககரி — பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு — மணியேயென்
றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதினம் — உனையோதும்
அமலை அடியவர் கொடிய வினைகொடும்
அபய மிடுகுரல் — அறியாயோ
*திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட — வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு — மயில்வீரா
நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் — குருநாதா
நளின †குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் — பெருமாளே (௨)

---

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன — தனதான.

193. கோமள வெற்பினை யொத்தத னத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவையி தழ்க்கனி நித்தமும் விற்பவர் — மயில்காடை
கோகில நற்புற வத்தொடு குக்குட
ஆரணி யப்புள்வ கைக்குரல் கற்றவர்
கோலவி ழிக்கடை யிட்டும ருட்டிகள் — விரகாலே

* திமிர — இருண்ட. † குருமலை என்பது சுவாமிமலை.

20

தாம மலர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்திம னைக்குள ழைப்பவர்
சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கிகள்
தோதக வித்தைப டித்துந டிப்பவர் உறவாமோ

*மாமர மொத்துவ ரிக்குள் நெருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குட லைக்கொடி
வாரண மெச்சஅ ளித்தஅ யிற்குக கதிர்காம

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றணி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை சுற்றிவ ளைத்திடும் அலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
ஞாலக தித்தினி லுற்றுறு பத்தர்கள்
பூதநி னைத்தது மெத்தஅ ளித்தருள் இளையோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கவ
வாமிம லைப்பதி மெச்சிய சித்தஜ
ராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் பெருமாளே.(௫)

---

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தந்ததான.

194. வார்குழ லைச்சொரு கிக்†கரு ‡விற்குழை
காதொடி ணைத்தசை யக்கதிர் பற்கொடு
வாயிதழ்§பொற்பம லர்க்குமி ழொத்துள துண்டக்ரீவ

வார்கமு கிற்புய நற்கழை பொற்குவ
டாமெனு மற்புத பொற்குட மொத்திணை
மார்பழ கிற்பொறி முத்தொளிர் சித்திர ரம்பைமாதர்

* மாமரம் ஒத்து உவரிக்குள் நெருக்கிய எனப்பிரிக்க உவரி-சமுத்திரம்.
† கரு – பெரிய. ‡ வில்-பிரகாசம் பொருந்திய. § பொற்ப - அழகுசெய்ய.

காருறும்*விக்கிடை யிற்கத விக்குடை
சேர்த்து நற்பிர சத்தட முட்கொடு
கால்மறை யத்துவ ளைத்தெறி பொற்கலை யோல்குழையாக்

கார்குழ லைக்குர லைக்கொடு நற்றெரு
வீதியில் நெளித்துந கைத்துந டிப்பவர்
காமனு கப்பம ளிச்சுழல் குக்கிரர் சக்குமாரோ

சூரர்†ப தைக்கர வுட்கிநெ ளித்துய
நாழியி ரைப்பரி ணக்குட லைப்புடை
சூழந கிக்கெநு டற்‡கொடி பற்பல சங்காமாகச்

சூழ்கிரி யைக்கைத டித்தும லைத்திசை
யானையு ழக்கிந டிக்கிம தப்பொறி
சோரந கைத்தம லைக்கொடு விட்டருள் செங்கைவேலா

ஏரணி நற்குழ லைக்கக னச்சசி
மோகினி யைப்புணர் சித்தவி ராற்புத
வேடமு தச்சொரு பத்தகு றத்திம ணங்கொள்வோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி நிற்குமி லக்ஷண
ராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் தம்பிரானே.(௪)

---

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான.

195. செகமாயை யுற்றெ னகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்பம் உடலூறித்
தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திரமாய ளித்த பொருளாகி
§மகவாவி னுச்சி விழியான னத்தில்
மலைநேர்பு யத்தில் உறவாடி

* வித்து - மின்னல். † பதைக்கரவுட்கி- பதைக்க அரவு உட்கி. ‡ கொடி காகம். § மகவாவின் - மக அவாவின்.

படிபீத டுத்து விளையாடி நித்த
மணிவாயில் *முத்தி தரவேணும்
முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க வருநீதா
முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள்
மொழியேயு ரைத்த குருநாதா
தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தில் முருகோனே
தருகாவி ரிக்கு வடபாரி சத்தொர்
சமர்வேலெ டுத்த பெருமாளே.(ரு)

---

196. மருவே செறித்த குழலார் மயக்கி
மதன கமத்தின் விரகாலே
மயலே யெழுப்பி யிதமே யருத்த
மலைபோல் முலைக்குள் உறவாகிப்
பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே
குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கா மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்
திருவே ரகத்தி லுறைவா யுமைக்கொர்
சிறுவா கரிக்கும் இளையோனே
திருமால் தனக்கு மருகா அரக்கர்
சிரமே துணிக்க பெருமாளே. (சு)

---

* முத்தி-முத்தம்.

தனனதன தானந் தனனதன தானந்
தனனதன தானந் தனதான.

197. இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்
இராகமொழி யாலும் பொறாதமுலை யாலும்
இராதஇடை யாலும் இளைஞோர்நெஞ்
சராவியிரு போதும் பராவிவிழ வேளைந்
தடாதவிலை கூறும் மடவாரன்
படாமலடி யேனும் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே
குராவினிழல் மேவுங் குமாரனென நாளுங்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே
*குணலையிடு சூரன் பணுமுடிக டோறுங்
குடாவியிட வேலைங் கெறிவோனே
†துராலுமிகு தீமுன் பிராதவனை போலும்
தொடாமல்வினை யோடும் படிநாளும்
‡ சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமானே. (எ)

198. கடாவினிடை வீரங் கெடாமலினி தேறுங்
கடாவினிக ராகுஞ் சமனாரும்
கடாவிவிடு தூதன் கெடாதவழி போலுங்
கனவில்விளை யாடுங் கதைபோலும்
§ இடாதுபல தேடுங் கிராதர்பொருள் போலிங்
கிராமலுயிர் சோரும் படிமாள்வேன்
இதாமெனிரு போதும் சதாவின்மொழி யாலின்
றியானுமுனை யோதும் படிபாராய்

* குணலம்-குணலை, வீராவேசத்தாற் கொக்கரித்தல். † துரால்-துரும்பு. ‡ சுபானம் - நன்மையாக உட்கொள்ளல். § இடாதுபல தேடுங்கிராதர் — கொடாது பல பொருளைத் தேடி வைக்குங் கொடியர்.

விடாதுநட நாளும் பிடாரியுட னாடும்
வியாகரண ஈசன் பெருவாழ்வே
விகாரமுறு சூரன் *பகாரமுயிர் வாழ்வும்
விகாசமுற வேலங் கெறிவோனே
தொடாதுநெடு தூரந் தடாதுமிக வோடுஞ்
சுவாசமது தானைம் புலனோடும்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே. (௮)

---

தனந் தனத்த தந்த தனந் தனத்த தந்த
தனந் தனத்த தந்த தனதான.

199. கடிமா மலர்க்கு ளின்ப முளவேரி கக்கு நண்பு
தருமா கடப்ப மைந்த தொடையாலே
கனமேரு வொத்திடும்ப னிருமா புயத்தணிந்த
கருணா கரப்ரசண்ட கதிர்வேலா
வடிவார் குறத்திதன்பொ னடிமீ துநித்தமுந்தன்
முடியான துற்றுகந்து பணிவோனே
வளவாய்மை சொற்ப்ரபந்த முளகீர னுக்குகந்து
மலர்வாயி லக்கணங்கள் இயல்போதி
அடிமோனை சொற்கிணங்க †வுலகாமு வப்பவென்றும்
அருளா ‡லளிக்குகந்த பெரியோனே
அடியே னுரைத்தபுன்சொ லதுமீ துநித்தமுந்தன்
அருளே தழைத்துகந்து வரவேணும்
செடிநே ருடற்குடம்பை தனின்மே வியுற்றிடிந்த
படிதா னலக்கணிங்ஙன் உறலாமோ
திறமா தவர்க்கணிந்து நிருபாத பத்மமுந்து
திருவே ரகத்தமர்ந்த பெருமாளே. (௯)

---

* பகாரம்-பகரம், அலங்காரம். † உலகம் என்பது உலகாம் என்றாயிற்று "உலகம் உவப்ப என்று உன் உருளால் அளிக்க" என்றது நக்கீரர் முருகக்கடவுளின் அருள்பெற 'உலகம் உவப்பவலனேர்பு திரிதரு' என்றெடுத்து அருளிச்செய்த திருமுருகாற்றுப்படையைக் குறித்தது. ‡ அளிக்க உகந்த எனப்பிரிக்க.

200. விழியால் மருட்டி நின்று முலைதூ சகற்றி மன்று
*விரகான லத்து ழுந்த நகையாடி
விலையாக மிக்க செம்பொன் வரவே பரப்பி வஞ்ச
விளையா டலுக்கி சைந்து சிலநாள்மேல்
மொழியாத சொற்கள் வந்து சிறுகாகி விட்ட தொந்த
முழுமாயை பிற்பி ணங்கள் வசமாகி
முடியாது பொற்ப தங்கை தருசித்த வொட்சி யின்ற
முதிராத நற்ப தங்கள் தருவாயே
பொழிகார் முகிற்கி ணைந்த யமராஜ னுட்க அன்று
பொருதா ளெடுத்த தந்தை மகிழ்வோனே
புருகூ தனுட்கு விர்ந்த கனகா புரிப்ர சண்ட
புனிதா †ம்ருகக்க ரும்பு புணர்மார்பா
செழுவா ரிசத்தி னொன்று முதுவே தனொட்க அன்று
திருவாய் மைசெப்பி நின்ற முருகோனே
திரளா மணிக்கு லங்கள் அருணோ தயத்தை வென்ற
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே. (கo)

---

தனாதனன தானதன தானதன தானதன
தானதன தானந் தனதான.

201, அவாமருவி னாவசுதை காணுமட வாரெனும
‡வார் கனலில் வாழ்வென் றுணராதே
அராநுகர வாதையுறு தேரைகதி நாடுமறி
வாகியுள மால்கொண் டதனாலே
சிவாயமெனு நாமமொரு காலுநினை யாத§திமி
ராகரனை வாவென் றருள்வாயே
திராதமல மாறுமடி யார்களரு மாதவர்தி
யானமுறு பாதந் தருவாயே

* விரக அனலம் - விரகாக்கினி. † ம்ருகக் கரும்பு-மான் மகளாகிய வள்ளியம்மை. ‡ அவார் - அவர் - அல்லது அ, ஆர் எனப்பிரித்து அந்த நிறைந்த எனக் கொள்ளினும் பொருந்தும். § திமிராகரன் - திமிர ஆகரன், இருட்டானவன்.

உவரியினிய காவிரியினு லாவுமயில் வாகனமு
லாசமுடனேறுங் கழலோனே
உலாவுதய பானுசத கோடியுரு வானவொளி
வாகுமயில் வேலங் கையிலோனே
துவாதசபு யாசலஷ டானனவ ராசிவசு
தாஎயினர் மானன் புடையோனே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடுசு
வாமிமலை வாழும் பெருமாளே. (கக)

---

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

202. *இருவினை புனைந்துஞான விழி†முனை திறந்துநோயின்
‡இருவினை யிடைந்துபோக மலமூட
இருளற விளங்கியாறு முகமொடு கலந்துபேதம்
இலையென இரண்டுபேரும் அழகான
§பரிமள சுகந்தவித மயமென மகிழ்ந்துதேவர்
பணியவின் மடந்தைபாத மலர்தூவப்
பரிவொடு நடந்தகோடி முநிவர்கள் புகழ்ந்துபாடு
பருமயி லுடன்குலாவி வரவேணும்
அரியய னறிந்திடாத அடியிணை சிவந்தபாதம்
அடியென விளங்கியாடு நடராஜன்
அழலுரு மிரும்பின்மேனி மகிழ்மர கதம்பெணாகம்
அயலணி சிவன்புராரி யருள்சேயே
மருவலர்க டிண்பணார முடியுடல் நடுங்கஆவி
மறலியு ணவென்றவேலை யுடையோனே
வளைகுல மலங்குகாவி ரியின்வட புறஞ்சுவாமி
மலைமிசை விளங்குதேவர் பெருமாளே. (கஉ)

---

* இருவினை - பெருஞ்செயல், சிவயோகம். † முனை - லலாட சந்திச் சுழி. ‡ இருவினை - புண்ணிய பாவங்கள். § பரிமள சுகந்த விதம் மயம் என - மலரும் அதன் மணமும் கலந்திருக்குந் தன்மையென்று சொல்லும்படி.

தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன தனதான

203. எந்தத் திகையினு மலையினு முவரியின்
எந்தப்படியினு முகடினு முளபல
எந்தச் சடலமு முயிரியை பிறவியின் உழலாதே

இந்தச் சடமுட னுயிர்நிலை பெறநளி
னம்பொற் கழலிணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமன முருகிநல் சுருதியின் முறையோடே

சந்தித் தரஹர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி யவைமௌன தலைமிசை
தங்கப் புளகித மெழஇரு விழிபுனல் குதிபாயச்

சம்பைக் கொடியிடை விபுதையி னழகுமு
னந்தத் திருநட மிடுசர ணழகுற
சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே

தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை யுவரியு மறுகர லரிபேரி

துன்றச் சிலைமணி கலகல கலினென
சிந்தச் சுரர்மல ரயன்மறை புகழ்தர
துன்புற் றவுணர்கள் நமனுல குறவிடு அயில்வேலா

கந்தைச்சடைமுடி கனல்வடி வடலணி
யெந்தைக் குயிரெனு மலைமகள் மரகத
சுந்தப்பரிமள தனகிரி யுமையருள் இளையோனே

கஞ்சப் பதமிவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடியிடை புணரரி மருகநல்
கந்தப் பொழில்திகழ் குருமலை மருவிய பெருமாளே.

தனதனன தனதனன தான தந்தனந்

தனதனன தனதனன தான தந்தனந்

தனதனன தனதனன தான தந்தனந் தனதான.

201 ஒருவரையு மொருவரறி யாம லுந்திரிந்
திருவினையி னிடாகலியொ டாடி நொந்துநொந்
துலையிலிடு மெழுகதென வாடிமுன்செய்வஞ் சனையாலே

ஒளிபெறவெ*யெழுபுமர பாவை துன்றிடுங்
கயிறுவித மெனமருவி யாடி விண்பறிந்
தொளிருமின லுருவமென வோடி யங்கம் வெந் திடுவேனோ

கருதியொரு பரமபொரு ளீது என் றுஎன்
செவியிணையி னருளியுரு வாகி வந்தஎன்
கருவினையொ டருமலமு நீறு கண்டுதண் டருமாமென்

கருணைபொழி கமலமுக மாறு மிந்துளந்
தொடைமருவு முடியுமொளிர் நூபு ரஞ்சரண்
சலசமென மயிலின்மிசை யேறி வந்துகந் தெனையாள்வாய

திரிபுரமு மதனுடலு மநீறு கண்டவன்
தருணமழ விடையனட ராஜ னெங்கணாந்
திகழருணை கிரிசொருப ஜோதி யந்தமாந் தறியாத

சிவயநம நமசிவய கார ணான்சுரந்
தமுதமதை யருளியெமை யாளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்ப யந்திடும் பதல்வோனே

குருகுகொடி புடன்மயிலி லேறி மந்தரம்
புவனகிரி சுழலமறை யாயி ரங்களும்
குமரகுரு வெனவலிய சேடனஞ்சவந் திடுவோனே

குறமகளி னிடைதுவள பாத செஞ்சிலம்
பொலிபி டொரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையின் மருவுகுரு நாத வுமபர்தம் பெருமானே.

---

* எழுபு - எழுந்து.

தனதனன தந்த தான தனதனன தந்த தான
தனதனன தந்த தான தனதான.

205. கதிரவனெ ழுந்து லாவு திசையளவு கண்டுமோது
கடலளவு கண்டுமாய மருளாலே
கனபணப யங்கராஜன் முடியளவு கண்டுதாள்கள்
கவினற நடந்துதேயும் வகையேபோய்
இதமிதமி தென்றுநாளு மருகருகி ருந்துகூடும்
இடமிடமி தென்றுசோர்வு படையாதே
இசையொடுபு கழ்ந்தபோது நழுவியபு சண்டர்வாசல்
இரவுபகல் சென்றுவாடி யுழல்வேனோ
மதுகரமி டைந்துவேரி தருநறவு முண்டுபூக
மலர்வளநி றைந்தபாளை மலர்நீடே
வளைவளைபெ ழுந்துசாம வதிமறை*வி யந்துபாட
மதி†நிழலி டுஞ்சுவாமி மலைவாழ்வே
அதிரவரு சண்டவாயு வெனவருக ருங்கலாப
அணிமயில்வி ரும்பியேறும் இளையோனே
அடைவொடுல கங்கள்யாவு முதவிநிலை கண்டபாவை
அருள்புதல்வ அண்டராஜர் பெருமாளே (கஉ)

---

தனதனன தந்த தானனத் தனதனன தந்த தானனத்
தனதனன தந்த தானனத் தனதான.

206. பறைபடுமு டம்பிராதெனக் கருதுதலொ ழிந்துவாயுவைக்
‡கருமவச னங்களால்மறித் §தனலூதிக்
கவலைபடு கின்றயோககற் பனைமருவு சிந்தைபோய்விடக்
கலகமிடு மஞ்சும்வேரறச் செயல்மாளக்
குறைவறநி றைந்தமோனநிற் குணமதுபொ ருந்திவீடுறக்
குருமலைவி ளங்குஞானசற் குருநாதா

* வியந்து – வியக்க. † நிழலிடும்-குளிர்ச்சியைத்தரும். ‡ கருமவசனம் மந்திரங்கள் § அனலூதல்–வாயுவால் மூலாக்கினியை யெழுப்பல்.

குமரசர ணென்றுகூதளப் புதுமலர்சொ ரிந்துகோமளப்
பதயுகள புண்டரீகமுற் றுணர்வேனோ
சிறைதனைவி ளங்குபேர்*முடிப் புயலுட்ன டங்கவேபிழைத்
திமையவர்கள் தங்களூர்புகச் சமராடித்
திமிரமிகு சிந்து வாய்விடச் சிகரிகளும் வெந்துநீறெழத்
திகிரிகொள நந்தகுடிகைத் திருமாலும்
பிறைமவுலி மைந்தகோவெனப் பிரமனைமு னிந்துகாவலிட்
டொருநொடியில் மண்டுசூரனைப் பொருதேறிப்
பெருகுமத கும்ப†லாளிதக் கரிபுதவு மண்டர்வாரணப்
பிடிதனைம ணந்தசேவகப் பெருமாளே. (கரு)

தனதனன தானதத்த தனதனன தானதத்த
தனதனன தானதத்த தனதான

207. சரணகழ லாலயத்தை அரிவிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்கம் உறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெசசை
கமழுமண மார்கடப்பம் அணிவோனே
‡தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுமெய்த்த வடிவேலா
அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே. (கஎ)

* முடிப் புயல் இந்திரன். † லாளிதம்-லளிதம், அழகு.
‡ தருணமிதையா - தருணம் இது ஐயா.

தத் ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன தந்ததான.

208. *சத்தியந ரப்புடனெ லுப்புறுத சைக்குடலொ
டப்புடனி ணச்சளிவ ழிப்புடனி ரத்தகுகை
சுக்கிலம்வி ளைப்புழு வொ டக்கையும ழுக்குமயிர் சங்குழூளை

துக்கம்வினை வித்தபிணை யற்கனறமு ளைப்பெருகு
குட்டமொடு விப்புருதி புற்றெழுதல் முட்டுவலி
துர்ச்சிபிள வெப்பொருமல் பித்தமொடு றக்கமிக் அங்கமூடே

எத்தனைநி னைப்பையும்வி ளைப்பையும யக்கமுறல்
எத்தனைச லிப்பொடுக லிப்பையுமி டற்பெருமை
எத்தனைக சத்தையும வத்தையுமெ டைத்தசடில் பஞ்சபூதம்

எத்தனைகு லுக்கையுமி னுக்கையும னக்கவலை
யெத்தனைக வட்டையுந டக்கையுமு யிர்க்குவரும்
எத்தனைபி றப்பையுமி றப்பையுமெ டுத்துலகில் மங்குவேனோ

தத்தனத னத்தனத னத்தனவெ னத்திமிலை
யொத்தமுர சத்துடியி டக்கைமுழ வுப்பறைகள்
சத்தமறை யத்தொகுதி யொத்தசெனி ரத்தவெள மண்டியோடச்

சக்கிரிநெ ளிப்பஅவு ணப்பிணமி தப்பமரர்
கைத்தலமி ரித்தர*ஹ ரச்சிவபி ழைத்தமென
சக்கிரகி ரிச்சுவர்கள் அக்கணமெ பக்குவிட வென்றவேலா

சித்தமதி லெத்தனைசெ கத்தலம்வி தித்துடன
ழித்துவன சத்தனைம ணிக்குடுமி பற்றிமலர்
சித்திரக ரத்தலம்வ லிப்பமிசை குட்டிநட னங்கொள்வேளே

செட்டிவடி வைக்கொடுதி னைப்புனம திற்சிறுகு
றப்பெணம ரிக்குள்மகிழ் செட்டிகுரு வெற்பிலுறை
சிர்மாம ருக்கொருகு ருக்களென மூத்தர்புகழ் தம்பிரானே(க௮)

* சத்திய – இது சற்றியவென்பதன் மரூஉ.

தானதன தந்ததத்த தானதன தந்ததத்த
தானதன தந்ததத்த தனதான.

209. சேலுமயி லுந்தரித்த வாளையட ருங்கடைக்கண்
மாதரைவ சம்படைத்த வசமாகிச்
சீலமறை யும்பணத்தி லாசையிலை யென்*றவத்தை
வேலையுமு டன்கிடக்கும் அவர்போலே
காலுமயி ரும்பிடித்து மேவுசிறு கும்பிணக்கு
நாளுமிக நின்றலைத்த விதமாய
காமகல கம்பிணித்த தோதகமெ னுந்துவக்கி
லேயடிமை யுங்கலக்கம் உறலாமோ
ஏலமில வங்கவர்க்க நாகம்வகு ளம்படப்பை
பூகமரு தந்தழைத்த கரவீரம்
யாவும் அலை கொண்டுகைத்த காவிரிபு றம்புசுற்றும்
ஏரகம மர்ந்தபச்சை மயில்வீரா
சோலைமடல் கொண்டுசக்ர மால்வரைய ரிந்தவஜ்ர
பாணியர்தொ ழுந்திருக்கை வடிவேலா
†சூர்முதிர்க்ர வுஞ்சவெற்பும் வேலைநில மும்பகைத்த
சூரனுட லுந்துணித்த பெருமாளே. (௧௬)

---

தனதனன தானதந்த தனதனன தானதந்த
தனதனன தானதந்த தனதான.

210. தருவரிவ ராகுமென்று பொருணசையி னுடிவண்டு
தனைவிடுசொல் தூது‡தண்ட முதலான
சரசகவி மாலைசிந்து கலிநிலைக ளேசலின்ப
§தரு முதல தானசெஞ்சொல் வகையாடி
மருவுகையு மோதிநொந்து அடிகள்முடி யேதெரிந்து
தரினுமிவர் வீதமெங்கள் இடமாக
வருகுமது போதுமென்ற வொருபணமு தாசினஞ்சொல்
மடையரிட மேநடந்து மனம்வேறாய்

*அவத்தை வேலையும்-நித்திரைப்போதும் † சூர்-அச்சம். ‡ தண்டம்-தண்டகம். § சரு-பதகீர்த்தனுதி இசைப்பாட்டு.

உருகிமிக வாகம்வெந்து கவிதைசொலி யேதிரிந்துன்
உழல்வதுவு மேதவிர்ந்து விடவேநல்

உபயபத *மால்விளங்கி யிகபரமு மேவஇன்பம்
உதவியெனை யாளஅன்பு தருவாயே

குருகினொடு நாரையன்றில் இரைகள்மிக நாடடங்கள்
குதிகொளிள வாளை கண்டு பயமாகக்

குரைகடல்க ளேயதிர்ந்து வருவதென வேவிளங்கு
குருமலையின் மேலமர்ந்த பெருமாளே. (உ0)

---

தானன தானதத்த தானன தானதத்த
தானன தானதத்த தனதான.

211. நாவேறு பாமணத்த †பாதார மேநினைந்து
‡நாலாறு நாலுபற்று வகையான

§நாலாரு மாகமத்தி னூலாய ஞானமுத்தி
நாடோறு நானுரைத்த நெறியாக

நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க
நேராக வாழ்வதற்கு னருள்கூர.

நீடார்||ச டாதரத்தின் மீதேப ராபரத்தை
நீகாணெ னா¶அனைச்சொல் அருள்வாயே

சேவேறு மீசர்சுற்ற மாஞான போதபுத்தி
சீராக வேயுரைத்த குருநாதா

தேரார்கள் நாடுசுட்ட சூரார்கள் மாளவெட்டு
தீராகு காகுறத்தி மணவாளா

காவேரி நேர்வடக்கி லேவாவி பூமணத்த
காவார்சு வாமிவெற்பின் முருகோனே

கார்போலு மேனிபெற்ற மாகாளி வாலைசத்தி
காமாரி வாமிபெற்ற பெருமாளே. (உக)

* மால் - ஆசை. † பாதாரம் - பாதாரவிந்தம் ‡ நாலாறு நாலுபற்று வகையான...ஆகமம் - உஅ சிவாகமங்கள். § நாலாரும் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாலு பாதங்கள் பொருந்திய. || சடாதாரம் - மூலாதாரம் முதலிய ஆறாதாரம். ¶ அனைச்சொல் - ஐக்கிய பதம்.

தனதன தானதந்த தனதன தானதந்த
தனதன தானதந்த தனதான

212. நிலவினி லேயிருந்து வகைமல ரேதெரிந்து
நிறைகுழல் மீதணிந்து குழைதாவும்
நிகரறு வேலினங்கள் வரிதர வாசகங்கள்
நினைவற வேமொழிந்து மதனூலின்
கலபம னோகரங்க ளவைவற லேபுரிந்து
கனியித ழேயருந்தி யநுராக
கலவியி லேமுயங்கி வனிதையர் பால்மயங்கு
கசடனை யாளவென்றன் அருள்கூராய்
உலகமொ ரேழுமண்ட ருலகமு மீசர்தங்கு
முயர்கயி லாயமும்பொன் வரைதானும்
உயிரொடு பூதமைந்து மொருமுத லாகிநின்ற
உமையரு ளால்வளர்ந்த குமரேசா
குலைபடு சூரனங்க மழிபட வேலெறிந்த
குமரக டோரவங்கண் மயில்வாழ்வே
கொடுமுடி யாய்வளர்ந்து புயனிலை போலுயர்ந்த
குருமலை மீதமர்ந்த பெருமாளே. (௨௨)

---

தனதன தானன தனதன தானன
தனதன தானன தனதான.

213. பரவரி தாகிய வரையென நீடிய
பணைமுலை மீதினி லுருவான
பணிகளு லாவிட இழையிடை சாய்தரு
பயில்விகள் வாள்விழி அயிலாலே
*நிரவரி யோடியல் குழல்களி னுண்மலர்
நிரைதரு மூரலி னகைமீது
நிலவியல் சேர்முக மதிலுயர் மாமயல்
நிலையெழ வேயலை வதுவாமோ
†அரவணை யார்குழை பரசிவ ஆரண
அரனிட பாகம துறைசோதி

---

* நிரவரியோடு நிரம்பிய வண்டுகளோடு † அரவணையார் குழை - விஷ்ணுவானவர் மனங்குழைந்து அன்பு செய்யப்பட்ட.

அமையுமை டாகினி திரிபுரை நாரணி
அழகிய மாதருள் புதல்வோனே
குரவணி பூஷணா சரவண தேசிக
குககரு ணாகர அமரேசா
குறமக ளானமின் மருவிய பூரண
குருகிரி மேவிய பெருமாளே. (உங)

தனன தானதத்த தனன தானதத்த
தனன தானதத்த தனதான.

214. மகர கேதனத்த னுருவி லாநெடுத்து
மதுர நாணியிட்டு நெறிசேர்வார்
மலைய வேவளைத்த சிலையி னூடொளித்த
வலிய * சாயகக்கண் மடமாதர்
இகழ வாசமுற்ற தலையெ லாம்வெளுத்தும்
இளமை போயொளித்து விடுமாறும்
இடைவி டாதெடுத்த பிறவி வேரறுத்துன்
இனிய தாளளிப்ப தொருநாளே
அகில மேழுமெட்டு வரையின் மீதுமுட்ட
அதிர வேநடத்து மயில்வீரா
அசுரர் சேனைகெட்டு முறிய வானவர்க்கு
அடைய வாழ்வளிக்கும் இளையோனே
மிகநி லாவெறித்த † அமுத வேணிநிற்க
விழைசு வாமிவெற்பில் உறைவோனே
விரைய ஞானவித்தை யருள்செய் தாதைகற்க
வினவ வோதுவித்த பெருமாளே. (உச)

தனன தான தனனதந்த தனன தான தனனதந்த
தனன தான தனனதந்த தனதான.

215. முறுகு காள விடமயின்ற இருகண் வேலி னுளமயங்கி
முளரி வேரி முகையடர்ந்த முலைமீதே

*சாயகம் - அம்பு. † அமுதவேணி - சிவபெருமான்.

தனனதன தான தனதன தந்தன
தனனதன தான தனதன தந்தன
தனனதன தான தனதன தந்தன தனதான.

217. விடமும் *வடி வேலு மதனச ரங்களும்
வடுவுநிக ரான மகரநெ டுங்குழை
விரவியுடன் மீளும் விழிகளு மென்புழு கதுதோயும்

ம்ருகமத படீர பரிமள குங்கும
மணியுமிள நீரும் வடகுல குன்றமும்
வெருவஅன பார புளகத னங்களும் வெகுகாம

நடனபத நூபு ரமுமுகில் கெஞ்சிட
மலர்சொருகு கேச †பரமுமி லங்கிய
நளினமலர் சோதி மதிமுக விம்பமும் அனநேராம்

நடையுநனிர் ‡மாதர் §நிலவுதொ ழுந்தனு
முழுதுமபி ராம மணியொளி தோன்றிய
நகையுமுள மாதர் கலவியி னைந்துரு கிடலாமோ

வடிவுடைய மாலு மிகல்கர னுந்திகழ்
எழுவகைம ராம ரமுநிக ரொன்றாமில்
வலியதிறல் வாலி யுரமுநெ டுங்கடல் அலையேழும்

மறநிருதர் சேனை முழுதுமி லங்கைமன்
வகைபிரவி போலு மணியும லங்க்ருத
மணிமவுலி யான வொருபதும் விஞ்சிருபதுதோளும்

அடைவலமு மாள விடுசர அம்புடை
தசரதகு மார ரகுகுல புங்கவன்
அருள்புனைமு ராரி மருகவி ளங்கிய மயிலேறி

அடையலர்கள் மாள வொருநிமி டந்தனில்
உலகைவல மாக நொடியினில் வந்துயர்
அழகியசு வாமிமலையிலமர்ந்தருள்பெருமாளே. (உஎ)

---

* வடி - கூர்மை. † பரம் - பாரம். ‡ மாதர் - அழகிய. § நிலவு தொழல் - நல்ல நாயகன் கிடைக்கவேண்டுமென்று சந்திரனைத்தொழுதல்.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான.

218. விரித்த பைங்குழ லொளிர்மல ரளிதன
தனத்த னந்தன தனதன வெனவொலி
விரிப்ப வண்கயல் விழியுறை குழையொடு மலைபாய

மிகுத்த வஞ்சிலை நுதல்மிசை திலதமொ
டசைத்த பொன்குழை யழகெழ முகவொளி
வெயிற்ப ரந்திட *நகையிதழ் முருகலர் வரிபோதத்

தரித்த தந்திரி மறிபுய மிசைபல
பணிக்கி லங்கிய பரிமள குவடிணை
தனக்கொ ழுந்துகள் ததைபடு கொடியிடை படுசேலை

தரித்த சுந்தர மிகவுடர் பரிபுர
பதச்சி லம்பொடு நடமிடு கணிகையர்
சமுக்கர்விஞ்சையர்மயல்களின்முழுகுவ தொழியாதோ

உரித்த வெங்கய மறியொடு புலிகலை
தரித்த சங்கரர் மதிநதி சடையினர்
ஒருத்தி பங்கின ரவர்பணி குருபர முருகோனே

உவட்டி வந்திடு பவுனரொ டெழுகடல்
குவட்டை யும்பொடி படமக முடிவுற
வுழைத்த இந்திரர் பிரமனு மகிழ்வுற விடும்வேலா

வரித்த ருந்துள வணிதிரு மருவிய
†வுரத்த பங்கயர் மரகத மழகிய
வணத்த ரம்பர முறவிடு கணையினர் மருகோனே

வனத்தில் வந்தொரு பழையவ னெனவொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே (உ௧அ)

* நகை இதழ் முருகு அலர் வரி போத - தந்தங்களும் அதரமும் பொருந்திய வாசனையுள்ள ஆம்பல் மலரை யொத்த வாயினின்றும் இசைபாட்டுக்கள் எழ; வரி - இசைபாட்டு. † உரத்த பங்கயர்-மார்பின்கண் தாமரையையுடையவர் அல்லது திருமருவுதலால் மார்பாகிய தாமரையையுடையவர்.

தான தந்ததந்த தனதான.

219. காமியத்தழுந்தி யிளையாதே
காலர் கைப்படிந்து மடியாதே
ஓமெழுத்திலன்பு மிகவூறி
ஒளி யத்திலந்தம் அருள்வாயே
தூமமெய்க்கணிந்த சுகலீலா
சூரனைக்கடிந்த கதிர்வேலா
ஏமவெற்புயர்ந்த மயில்வீரா
ஏரகத்தமர்ந்த பெருமாளே. (௨௯)

---

தனதன தனன தனன தனந் தனத்த தனதானா.

220. தெருவினில் நடவாமடவார் திரண்டொருக்கும் வசையாலே
தினகர னெனவே லையிலே சிவந் துதிக்கும் மதியாலே
பொருசிலை வளையா இளையா மதன் தொடுக்குங் கணையாலே
புளகித முலையா ளலையா மனம் சலிக்கவிடலாமோ
ஒருமலை யிருகூ றெழவே யுரம் புகுத்தும் வடிவேலா
ஒளிவளர் திருவே ரகமே யுகந்து நிற்கும் முருகோனே
அருமறை தமிழ்நூ லடைவே தெரிந்துரைக்கும் புலவோனே
*அரியரி பிரமா தியர்கால் விலங் கழிக்கும் பெருமாளே.

---

தானதந் தனதன்ன தன்ன தானத்த தந்த தனதான

221. நாசர்தங் கடையதினில்விரவிநான்மெத்தநொந்து தடுமாறி
ஞானமுங் கெடஅடைய வழுவியாழத்தழுந்தி மெலியாதே
மாசகந் தொழமுனது புகழினோர் சொற்பகர்ந்து சுகமேவி
மாமணங் கமழுமிரு கமல பாதத்தைநின்று பணிவேனோ
வாசகம் புகலவொரு பரமர் தாமெச்சுகின்ற குருநாதா
வாசவன் தரு†திருவையொருதெய்வானைக்கிரங்கு மணவாளா
‡கீசகஞ் சுரர்தருவு மகிழ மாவத்திசந்து புடைசூழுங்
கேசவன் பரவுகுரு மலையில் யோகத்தமர்ந்த பெருமாளே
(௩௧)

---

தனதன தனதன தனதானா.

222. நிறைமதி முகமெனும் ஒளியாலே
நெறிவிழி கணையெனு §நிகராலே

---

* அரி - தேவேந்திரன். † திருவை - திரு ஐ சாரியை. ‡ கீசகம் - மூங்கில். § நிகர் - யோர்.

உறவுகொள் மடவர்கள் உறவாமோ
உனதிரு வடியினி யருள்வாயே
மறைபயி லரிதிரு மருகோனே
மருவல ரசுரர்கள் குலகாலா
குறமகள் தனைமணம் அருள்வோனே
குருமலை மருவிய பெருமாளே. (கஉ)

---

தான தனதன தான தனதன
தான தனதன தனதான.

223. பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே
காலனெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரும் இளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே. (கக)

---

தானதன தந்ததானன தானதன தந்ததானன
தானதனதந்த தானன தனதான.

224. ஆனனமு கந்துதோளொடு தோளிணைக லந்துபாலன
ஆரமுது கண்டுதேனென இதழூறல்
ஆதரவி னுண்டுவேல்விழி பூசலிட நன்றுகாமனு
ஆனையுர மெங்குமோதிட அபிராம

மானனைய மங்கைமார்மடி நாபியில்வி ழுந்துவீணினில்
மாயுமனு வின்பவாரியை சறவேயுன்

வாரிசப தங்கள்நாயடி யேன்முடிபு னைந்துபோதக
வாசகம்வ ழங்கியாள்வதும் ஒருநாளே

ஈனவதி பஞ்சபாதக தானவர்ப் ரசண்டசேனைகள்
ஈடழிய வென்றுவானவர் குலசேனை

ஏவல்கொளு மிந்த்ரலோகவ சீகரவ லங்க்ருதாகர
ராசதம றிந்தகோமள வடிவோனே

சோணைசொரி குன்றவேடுவர் பேதையயில் கின்றஆறிரு
தோளுடைய கந்தனேவய லியில்வாழ்வே

சூளிகையு யர்ந்தகோபுர மாளிகைபொ லிந்துசூழ்தரு
ஸ்வாமிமலை நின்றுலாவிய பெருமாளே. (௨௨௪)

---

தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன தந்ததான

225. ஆனைபிருதிவிப் பாசநிகளமும்
மாமாயவிருளுமற் றேகிபவமென
ஆகாசபரமசிற் சோதிபரையைய டைந்துளாமே

*ஆறாறினதிகமக் க்ராயமனுதினம்
யோகீசரெவருமெட் டாதபரதுரி
யாதீதமகளமெய்ப் போதமுழையம ணைந்தமோகம்

வானாதிசகலவிஸ்த் தாரவிபவரம்
லோகாதிமுடிவுமெய்ப் போதமலரயன்
மாலீசரெனுமவர்க் கேதுவிபுலம சங்கையால்நீள்

மாளாததனிசமுற் றுயதரியநி
ராதாரமுலைவிலாச் சோதிருபமு
மாறாதசகவெளத் தானுவுடனினி தொன்றசேர்வேன்

நானாவிதகருவிச் சேனைவகைவகை
சூழ்போதுபிரபலச் சூரர்கொடுநெடு
நாவாய்செல்கடலடைத் தேறிநிலைமையி லங்கைசாய

---

* ஆறாறினதிகமக் க்ராயம்—முப்பத்தாறு தத்துவங்கட்கும் மேற்பட்ட தலைமையிடம்.

நாலாறுமணிமுடிப் பாதிதலையுடை
ஸ்ரீராமன்மருகமைக் காவிற்பரிமள
நாவீறவயலியச் சேர்குமரக டம்பவேலா

காணாறுமெயினர்தற் சாதிவளர்குற
மானோடுமகிழ்கருத் தாகிமருடரு
காதாடுமுனைதகட் பாணமெனதுடை நெஞ்சுபாய்தல்

காணாதுமபதைவிட் டாவியுயவருள்
பாராயெனுமெகுப் ப்ரீதியிளையவ
காவேரிவடகரைச் சுவாமிமலையுறை தம்பிரானே.(உஉரு)

---

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான.

226 வாதமொடு சூலைகண்ட மாலைகுலை நோவுசந்து
மாவலிவி யாதிகுன்ம மொடுகாசம்

வாயுவிட னேபரந்த தாமரைகள் பீனசம்பின்
மாதர்தரு பூஷணங்கள் எனவாகும்

பாதகவி யாதிபுண்கள் ஆனதுட னேதொடர்ந்து
பாயலைவி டாதுமங்க இவையால்நின்

பாதமல ரானதின்க ணேயமற வேமறந்து
பாவமது பானமுண்டு வெறியூடி

ஏதமுறு பாசபந்த மானவலை யோடுழன்று
ஈனமிகு சாதியின்க ணதிலேயான்

ஈடழித லானதின்பின் மூடனென வேதுமுன்புன்
ஈர அருள் கூரவந்து எனையாள்வாய்

சூதமகிழ் பாலைதெங்கு தாதுவளர் சோலைமுன்பு
சூழமதில் தாவிமஞ்சின் அளவாகத்

தோரணநன் மாடமெங்கு நீடுகொடி யேதழைந்த
ஸ்வாமிமலை வாழவந்த பெருமாளே. (உஉசு)

---

தனனத்தானன தாத்தத்தனாதன
தனனத்தானன தாத்தத்தனாதன
தனனத்தானன தாத்தததனாதன தனதான.

227. வறுமைப்பாழ்பிணி யாற்றப்படாதுளம்
உருகிப்போனது தேற்றப்படாதினி
மகிமைக்கேடுகள் பார்க்கப்படாதென அழையாயோ
வலியப்போயுடல் கூச்சப்படாமையும்
இடியப்பேசிய நாச்சிக்கலாமையு
மறுசொற்காதுகள் கேட்கப்படாமையும் வரலாமோ
கறுவிப்பாய்புலி வேட்டைக்குளேவரு
பசுவைப்போல்மிடி யாற்பட்டபாடெழு
கதையைப்பாரினி லார்க்குச்சொல்வேனினம் அறியாயோ
கவலைச்சாகர நீச்சுக்குளேயுயிர்
தவறிப்போமென வோட்டத்திலோடியெ
கருணைத்தோணியி லேற்றிக்கொள்வாயினி அலையாதே
குறைபட்டேயுயிர் காத்துக்கொள்வாயென
முறையிட்டோர்கரி கூப்பிட்டநாளொரு
குரலிற்போயுயிர் காத்துக்கொள்வோர்பணி முருகோனே
குளிர்முத்தாலணி மூக்குத்தியோடணி
களபப்பூண்முலை பார்த்துப்பெண்மோகினி
குவளைப்பார்வையில் மாட்டிக்கொளாதருள் குருநாதா
நிறையத்தேன்விழு பூக்கொத்திலேகனி
கிழியத்தான்விழு காய்க்கொத்திலேமயில்
நடனக்கால்படு தோப்புக்குளேவயல் கயலோடே
நதியைக்காவிரி யாற்றுக்குளேவரு
வளமைச்சோழநன் னாட்டுக்குளேரக
நகரிற்சீர்பெறு மோட்சத்தையேதருபெருமாளே. (௩எ)

---

தனதானதத்த தனதானதத்த
தனதானதத்த தனதான.

228. ஒழுகூனிரத்த மொடுதோலுடுத்தி
யுயர்கால்கரத்தின் உருவாகி

யொருதாய்வயிற்றி னிடையேயுதித்துள்
உழன்மாயபிக்கு வருகாயம்
பழசாவிரைப்பொ டிணையாவிருக்க
பரிதாபமுற்று மடியாமுன்
பரிவாலுளத்தின் முருகாவெனச்சொல்
பகர்வாழ்வெனக்கு மொழிவாயே
எழுவானகத்தி லிருநாலுதிக்கில்
இமையோர்தமக்கும் அரசாகி
யெதிரேறுமத்த மதவாரணத்தின்
இனிதேறுகொற்ற முடன்வாழுஞ்
செழுமாமணிப்பொ னகராயுதிக்க
திருவேரகத்தில் உறைவோனே
திடமோடரக்கர் கொடுபோயடைத்த
சிறைமீளவிட்ட பெருமாளே.(௯௮)

---

தானதனத் தனதான தானதனத் தனதான.

229. காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலவகத் தியஞான தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
சோலைமலைக் குரியானே ஸ்வாமிமலைப் பெருமாளே.

---



ஐந்தாவது.

## குன்றுதோறாடல்.

தந்தன தான தான தந்தன தான தான
தந்தன தான தான தனதான.

230. வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் *பாரி காரி யென்றிசை வாது கூறி
†வந்தியர் போல வீணில் அழியாதே
செஞ்சர ணாதகீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்மயூர முகமாறும்
செந்தமிழ்நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொல் அருள்வாயே
‡பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாபமோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேறவோது
பண்டித ஞான நீறு தருவோனே
குஞ்சரம் யாளிமேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ றாடல் மேவு பெருமாளே. (க)

தனனந் தனன தந்த தனதான.

231. அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உமைபாலா
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலும மர்ந்த பெருமாளே. (உ)

* பாரி-கடையெழுவள்ளல்களி லொருவன். காரி ஷெ
† வந்தியர் - புகழ்ந்து கூறுவோர் ‡பஞ்சவன் - பாண்டியன்.

தனதன தனன தனன தனன
தனதன தனன தனதான.

232, எழுதிசழ் புவன நொடியள வதனில்
இயல்பெற மயிலில் வருவோனே
இமையவர் பரவி யடிதொழ அவுணர்
மடிவுற விடுவ தொருவேலா
*வழுதியர் தமிழி†னொருபொரு ளதனை
வழிபட மொழியு முருகேசா
மலரடி பணியு மடமகள் பாலை
மயல்கொடு தளர்வ தழகோதான்
முழுகிய புனலி லினமணி தரள
முறுகிடு பவள மிகவாரி
முறையொடு குறவர் மடமகள் சொரியு
முதுமலை யழக குருநாதா
பழகிய வினைகள் பொடிபட அருளில்
படிபவ ரிதயம் உறுகோவே
பருவரை துணிய வொருகணை‡தெரிவ
பலமலை யுடைய பெருமாளே. (ரு)

---

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தந்ததான.

233. தறையின் மானுட ராசையி னல்மடல்
எழுது மாலருள் மாதர்கள் தோதக
சரசர் மாமல ரோதியி னலிரு கொங்கையாலுங்

---

* வழுதியர் தமிழ் - பாண்டியர்களால் விருத்தி செய்யப்பட்ட தமிழ்.

† ஒருபொரு ளதனை வழிபட மொழியும் முருகேசன் என்றது இறைய னாகப்பொருளுக்குச் சங்கப்புலவர் பலரும் செய்துவந்த உரைகளை யெல்லாம் தனித்தனி கேட்டு ஓரோரிடங்களிற் சிரக்கம்பஞ் செய்த, நக்கீரர் செய்த உரையை முற்றும் வியந்து சிரக்கம்பஞ் செய்து ஸ்தாபித்தருளிய உருத்திர சன்மரை. ‡ தெரிவ- தெரிபவனே.

தளர்மி னேரிடை யாலுடை யால்நடை
அழகி னல்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ
பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிகள்
அணுகொ ணாவகை நீடு*மி ராசிய
பவன பூரக வேகிக மாகிய விந்துநாதம்
பகரொ ணாதது சேரவொ ணாதது
நினையொ ணாதது வானத யாபர
பதிய தானச மாதிம னோலயம் வந்துதாராய்
சிறைவி டாதநி சாசரர் சேனைகள்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி நோத †ச மேளத யாபர அம்புராசி
திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூழ்தரு
திரிசி ராமலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்
மறவர் நாயக ஆதிவி நாயக
இளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக ஆனைத னாயக எங்கள்மானின்
மகிழ்நா யகதேவர்கள் நாயக
கவுரி நாயக னார்குரு நாயக
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே. (௪)

---

## கயிலைமலை.

தனதன தனனத்தான தனதன தனனத்தான
தனதன தனனத்தான தனதான.

234. திருநில மருவிக் காலி ‡னிருவழி யடைபட் டோடி
சிவவழி யுடனுற் றேக பரமீதே
சிவசுட ரதனைப் §பாவை மணமென மருவிக் கோல
||திரிபுர மெரியத் தீயி னகைமேவி

---

* இராசியம் - இரகசியம். † சமேளம் - சமேளனம், கலப்பு. ‡ இருவழி - இடைகலை பிங்கலை மார்க்கம். § பாவை மணம்என மருவல் - பதுமை விவாகம்போலப் பாவித்தல். || திரிபுரம் - மும்மலம்.

இருவினை பொரியக்கோல திருவரு ளுருவத்தேகி
யிருள்கதிரிலிபொற்பூமி தவசூடே
இருவரு முருகிக்காய நிலையென மருவித்தேவர்
இளையவ னெனவித்தாரம் அருள்வாயே
பரிபுர கழ*லெட்டாசை செவிடுகள் படமுத்தேவர்
பழமறை பணியச்சூல மழுமானும்
பரிவொடு சுழலச்சேடன் முடிநெறு நெறெனக் †கோவு
பரியினை மலர்விட்டாடி அடியோர்கள்
‡அரஹர வுருகிச்சேசெ யெனதிரு நடனக்கோலம்
அருள்செயு முமைபிற்பாகர் அருள்பாலா
அலரணி குழல்பொற்பாவை §திருமக ளமளிப்போரொ
டடியவர் கயிலைக்கான பெருமாளே. (ரு)

---

தானந்தனத்ததன தானந்தனத்ததன
தானந்தனதத்தன தனதான

235. தேனுந்துமுக்கனிகள் பால்செங்கருப்பிளநிர்
சீரும்ப ழித்தசிவம் அருளூறத்
தீதும்பிடித்தவினை யேதும்பொடிப்பவுறு
சீவன்சிவச்சொருபம் எனநாடி
நானென்பதற்றுயிரொ டேனென்பதற்றுவெளி
நாதம்பரப்பிரம ஒளிமீதே
ஞானஞ்சுரப்பமகி ழாநந்தசித்தியொடெ
நாளுங்களிக்குநிலை யருள்வாயே
வானந்தழைக்கஅடி யேனுஞ்செழிக்கஅயன்
மாலும்பிழைக்கஅலை விடமாள
வாருங்கரத்தனெமை யாளுந்தகப்பன்மழு
மானின்கரத்தனருள் முருகோனே
தானந்தனத்ததன ளைவண்டுசுற்றிமது
தானுண்க டப்பமலர் அணிமார்பா
தானங்குறித்துஎமை யாளுந்திருக்கயிலை
சாலுங்குறத்திமகிழ் பெருமாளே. (சு)

---

* எட்டாசை - அஷ்ட திக்கு. † கோவு பரியினை மலர்விட்டு - இடபமாகிய பரியைப் பூமியில் விட்டு. ‡ அரஹரவுருகி - அரஹர என உருகி § திரு மகள் - இலக்குமியின் புத்திரியாகிய வள்ளியம்மை.

தனத்த தனத்த தனத்த தனத்த
தனத்த தனத்த தனதான.

236. நகைத்து ளுருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தில் அதிமோகம்
நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து மொழியாலும்
திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி யெடுத்து வரவேசெய்
திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் விழுவேனோ
பகைத்த அரக்கர் சிரத்தை யறுத்த
படர்ச்சி கறுத்த மயிலேறிப்
பணைத்த கரத்த குணத்த மணத்த
பதத்த கனத்த தனமாதை
மிகைத்த புனத்தி லிருத்தி யணைத்து
*வெளுத்த பொருப்பில் உறைநாதா
விரித்த சடைக்கு ளொருத்தி யிருக்க
†ம்ருகக்கை கொளத்தர் பெருமாளே. (௯)

தனன தந்தன தானன தனதனன
தனன தந்தன தானன தனதனன
தனன தந்தன தானன தனதனன தனதான.

237. பனியின் விந்‡துளி யாகவே கருவினுறும்
அளவி லங்கொரு §சூசமாய் மிளகு||துவர்
பனைதெ னங்கனி போலவே ¶பலகனியின் வயிறாகிப்
பருவ முந்தலை கீழதாய் நழுவிநில
மருவி யொன்பது வாசல்சே ருருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறின் உடனாடி

---

* வெளுத்தபொருப்பு - வெள்ளி மலை, கயிலை. †ம்ருகக்கை கொளத்தர்- மானேந்திய கையையுடைய சிவபெருமான். ‡உளியாக - இடமாக. §சூசம் - குறி. ||துவர் - பாக்கு. ¶பல கனி - பலாக் கனி

மனவி தந்தெரி யாமலே மலசலமொ
டுடல்ந கர்ந்தழு தாறியே அனைமுலையின்
மயம யின்றொரு பாலனு யிகமுடைய செயல்மேவி
வடிவ முன்செய்த நிமையா *லெயுமுனையும்
அறம றந்†தக மீதுபோய் அநுதினமு
மனம ழிந்துடல் நாறினே னினியுனது கழல்தாராய்

தனன தந்தன தானனு தனதனன
தினன திந்தின நிதநதோ திகுததிகு
தகுத குந்ததி தாருதோ வெனமுழவு வளைபேரி
தவில்க ணம்பறை காளமோ டிமிலைதொனி
இனமு ழங்கெழு வேலைபோ லதிரவொரு
சமர்முகந்தனின் மேவியே விருதுசொலும் அவுணோர்கள்
சினம ழிந்துற தேர்கள் ‡தோ லரிபரிகள்
குருதி யெண்டிசை மூடவே அலகைநரி
சிறையி னங்களி கூரவே நகையருளி விடும்வேலா
சிவன்ம கிழ்ந்தரு ளானைமா முகன்மருவி
மனம கிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்
திகழ்குறிஞ்சியின் மாதுமாலமருவுபுகழ்பெருமாளே (அ)

---

தனனதனத் தனதான தனனதனத் தனதான.

238. §புமியதனிற் ப்ரபுவான புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக்கருள்வாயே
சமரி||லெதிர்த்தசுர்மாள த்தனியயில்விட்டருள்வோனே
நமசிவயப் பொருளானே ¶ரசதகிரிப்பெருமாளே.(கூ)

---

தனத்தக் தனத்த தத்த தனத்தக் தனத்த தத்த
தனத்தக் தனத்த தத்த தனதான.

239. முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் துடைத்து ரத்ந
முகைக்கச் சவிழ்த்த சைத்து முசியாதே

---

* எயு முனையும் - எயுட் உனையும் † அகம் - பாவம். ‡ தோல்-யானை.
§ பூரி என்பது புமி என்றாயிற்று. || எதிர்த்த சுர்-எதிர்த்த சூர, சூர்-சூரன்
¶ ரசதகிரி – வெள்ளியங்கிரி.

முழுக்கக் கழப்பி யெத்தி மழுப்பிப் பொருட்பறித்து
மொழிக்குட் படுத்த ழைத்த மளிப்பீதே
நகைத்திட் டழுத்தி முத்தம் அளித்துக் களித்து மெத்த
நயத்திற் கழுத்தி றுக்கி யணைவாரபால்
நடுக்குற் றவர்க்கு மெத்த மனத்தைப் பெருக்க வைத்து
நயத்துத் தியக்கி நித்தம் அழிவேனோ
செகக்க செகங்க செக்க தரிக்க தரிங்க தங்க
திமித்திக திமித்தி திதி யென ஆடும்
செகத்துக் கொருத்த புத்ர நிறைத்துக் குதித்த பத்த
செனத்துக் கிளித்த சித்தி யருள்வோனே
மிசைதத்தித் திடத்தொ டுற்று அசைத்துப் பொருத்தரக்கன்
மிகுத்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய
மிசைக்குற் றடுத்த யர்த்தபொற் றமைப்பொருத்தி யுத்து
மிதித்துத் துகைத்து விட்ட பெருமாளே (௧௦)

---

தன்னதன தன்னதன தன்னதன தன்னதன
தன்னதன தன்னதன தனதான.

240 குதபகுர லியவொடு பதியெதிர் கதறிமுக
குமுதமிடு பாசமயம் ஒழுகோடு
குருடர்செறி வரியதொரு பொருளறிய நிகழமனது
கொடியவிரு வினையுமனு ளறுபோக
உதறிவிசி றியகரண மரணமற விரணமற
வுருகியுரை பருகியறி வினைஞானம
உணர்வுகதி பெறவுனது மிருபத வெழிலொளியி
னுகளபத முணருமவகை யருள்வாயே
சிதறிவெளி முழுதுமொளி திகழுமுடு படலமலை
சிறுபொறிக ளெனவுரக பிலமேழுஞ்
செகதலமு முருககிரி கிகள்குலவு கஜ*புயக
திசையுமுட னுருகவரு கடைநாளிற்

* புயகம் - புயங்கம், பாம்பு.

கதறுமெழு கடல்பருகி வடவைவிடு கரியபுகை
யெனமுடிவில் ககனமுக டதிலோடுங்

கலபமயின் மிசையசுரர் கலகமற வமர்பொருது
கயிலைமலை தனின்மருவு பெருமாளே. (கக)

---

## ஸ்ரீ சைலம்.

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான. சுருட்டி

241. ஒருபது மிருபது மறுபது முடனாறும்
உணர்வுற இருபதம் உளநாடி

உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு மொளிபெற விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே

திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறஅருள் புரிவாயே

பரிவுடனழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்

பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி பிளையோனே

பெருமலை யுருவிட அடிமலர் பணிபவர்
பிணிகெட அருள்தரு குமரேசா

பிடியொடு களிறுகள் நடைபயில் கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே. (கஉ)

---

## திருவேங்கடம்.

தனதாந்தன தானன தானன தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன தனதான.

242 வரிசேர்ந்திடு சேல்கய லோவெனு
முழைவார்ந்திடு வேலையு நீலமும்
வடிவார்ந்திடு வாள்விழி மாதர்கள் வலையாலே

வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போல்நிற மாகிய வடிவாலே
இருள்போன்றிடு வார்குழல் நீழலில்
மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே
எனதாந்*தன தானவை போயற
மலமாங்கடு மோகவி காரமு
மிவைநீங்கிட வேயிரு தாண்மலர் அருள்வாயே
கரிவாம்பரி தேர்திரள் சேனையும்
உடனாந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரதம் அதிலேகிக்
கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்
திரைநீண்டிரை வாரியும் வாலியும்
நெடிதோங்கும ராமர மேழொடு
தெசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்
சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே. (கரு)

---

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான.

243. கோங்கிள நீரிளக வீங்குப யோதரமும்
வாங்கிய வேல்விழியும் இருள்கூரும்
கூந்தலு நீள்வளைகொள் காந்தளு நூலிடையும்
மாந்தளிர் போல்வடிவும் மிகநாடிப்
பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு
தீங்குட னேயுழலும் உயிர்வாழ்வு
பூண்டடி யேனெறியில் மாண்டிட னேகரகில்
வீழ்ந்தலை யாமலருள் புரிவாயே

---

* தனது - சிநேகம்.

பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுனியும்
வேங்கையு மாய்மறமின் உடன்வாழ்வாய்

பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக
பாண்டிய னீறணிய மொழிவோனே

வேங்கையும் வாரணமும் வேங்கையு மானும்வளர்
வேங்கட மாமலையின் உறைவோனே

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றாதுதவு பெருமாளே. (கச)

---

244. சாந்தமில் மோகவெரி காந்தி*ய வாவனில
மூண்டவி யாதசம யவிரோத

சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுழலு மாந்தர்
தாந்துணை யாவரென மடவார்போல்

ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு
தோய்ந்துரு காஅறிவு தடுமாறி

ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன்வசம்
யான்தனி போய்விடுவ தியல்போதான்

காந்தளி ணைகர மான்தரு கானமயில்
காந்தவி சாகசர வணவேளே

காண்டகு தேவர்பதி யாண்டவ னீனறுதி
யாண்டகை யேயிபமின் மணவாளா

வேய்ந்தகு மாதுகுக சேந்தம யூரவட
வேங்கட மாமலையில் உறைவோனே

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றாதுதவு பெருமாளே. (கரு)

---

தனத்ததன தனன தனந்த தனத்ததன தனன தனந்த
தனத்ததன தனன தனந்த தனதான.

245. கறுத்ததலை வெளிறு மிகுந்து மதர்த்தஇணை விழிகள் குழிந்து
†கதுப்பிலுறு தசைகள் வறண்டு செவிதோலாய்க்

கழுத்தடியு மடைய வளைந்து கனத்தநெடு முதுகு குனிந்து
கதுப்புறுப லுடைய விழுந்‡து தடுநீர்சோர்

---

* ஆவாஅநிலம்—ஆசைக்காற்று. † கதுப்பு - கன்னம். ‡ உதடு நீர்சோர் உறக்கம் வருமளவில் எனப்பிரிக்க.

உறக்கம்வரு மளவி லெலும்பு குலுக்கிவிடு மிருமல் தொடங்கி
உரத்தகன குரலு நெரிந்து தடிகாலாய்
உரத்தநடை தளரு முடம்பு பழுத்திடுமுன் மிகவும் விரும்பி
உனக்கடிமை படுமவர் தொண்டு புரிவேனோ
சிறுத்த*செலு வதனு ளிருந்து பெருத்ததிரை யுததி கரந்து
செறித்தமறை கொணர நிவந்த செயமா†லே
செறித்தவளை சடலில் வரம்பு புதுக்கியிலை யயொ டடைந்து
செயிர்த்தஅநு மனையு முகந்து படையோடு
மறப்புரிசை வளையு மிலங்கை அரக்கனொரு பதுமுடி சிந்த
வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே
மலர்க்கமல வடிவுள செங்கை அயிற்குமர ‡குகைவழி வந்த
மலைச்சிகர வடமலை நின்ற பெருமாளே. (கசு)

---

தனதனதத்தன தனதனதத்தன தனதனதத்தன தனதான.

246. கலகலெனச்சிலகலைகள்பிதற்றிடுகசடர்கள்பக்கமதணுகாதே
கருவின்வழிப்படு மிருவினையுட்படு கடுநரகுக்கிடை படியாதே
உலகுதனிற்பல பிறவிதரித்தற உழல்வதுவிட்டினி அடிநாயேன்
உனதடிமைத்திரளதனினுமுற்பட உபயமலர்ப்பதம்அருள்வாயே
குலகிரிபொட்டெழ வலைகடல்வற்றிட நிசிசரனைப்பொரும் அயில்வீர
குணதரவித்தகவெழில்வனமிக்குள குறமகளைப்புணர் மணிமார்பா
அலைபுனலிற்றவழ் வளைநிலவைத்தரும் அலைசெய்திருப்பதி யுறைவோனே
யடியவரிச்சையி லெவையெவையுற்றன வவை தருவித்தருள் பெருமாளே

---

* செலு - மீன்சிறை, † ஏ செறித்து அவளை கடலில் - பாணப்பிர யோகஞ் செய்து அந்த வளைந்த கடலில்.

‡ "அண்டமன்னுமீன்றவ ளுடன்முனி வாகித்
தொண்டகங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்" என்று
கந்தபுராணம் வழிநடைப்படலத்திற் கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் கூறியிருத்தலை உணர்க.

## திருத்தணிகை.

தனனத் தனனத் தனனத் தனனத் தனனத் தனனத் தனதான

247. அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் கிசையாதே
அடையப் பொருள்கைக் கிளமைக் கெனவைத்
தருள்தப் பிமதத் தயராதே
தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சமனெட் டியிரைக் கொடுபோகுஞ்
சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் கடவேனோ
இமயத் துமையிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே
*இரணத் தினில்வெற் றவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா
†சமயச் சிலுகிட் டவரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்
‡சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே. (கஅ)

---

248. பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே
புரளப் புரளக் கறுவித் துறுகட்
பொருவிற் சுறவக் கொடிவேள்§தோள்
தெரிவைக்‖கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே
செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் குணர்வைத் தரவேணும்

* இரணம் - யுத்தம். † சமயச்சிலுகு - மதச்சண்டை. ‡ சடுபத்மம்-ஆறுதாமரை. § தோள்-தெரிவை - கை தெரிந்தெய்யும் கூர்மையான பாணம். ‖ அரிவைப்பரவைக்கு-பெண்களாகிய சேனைசமுத்திரத்துக்கு.

சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சுரருக் கருளைப் 　　　　புரிவோனே
சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையச்
சுருதிப் பொருளைப் 　　　　பகர்வோனே
* தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் 　　　　தொடும்வீரா
தவளப் பணிலத் தரளப் பழனத்
தணிகைக் குமரப் 　　　　பெருமாளே. (௧௯)

---

249. குவளைக் கணைதொட் டவனுக் குமுடிக்
குடையிட் டகுறைப் 　　　　பிறையாலே
குறுகுற்ற † அலர்த் தெரிவைக் குமொழிக்
குயிலுக் குமினிக் 　　　　களராதே
இவளைத் துவளக் கலவிக் குநயத்
திறுகத் தழுவிப் 　　　　புயமீதே
இணையற் றழகிற் புனையக் கருணைக்
கினிமைத் தொடையைத் 　　　　தரவேணும்
சுவளக் கரடக் கரியொட் டறைக்
கனகக் கிரியைப் 　　　　பொருவோனே
கருதிச் ‡ செயலைப் புயனுக் குருகிக்
கலவிக் கணையத் 　　　　தெழுமார்பா
பவளத் தரளத் திரளைக் குவைவெற்
பவையொப் புவயற் 　　　　புறமீதே
பணிலத் திரள்பொய்த் ததிருத் தணிகைப்
பதியிற் குமரப் 　　　　பெருமாளே. (௨௦)

---

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் 　　　　தனதான.

250. கடற்செகத் தடக்கிமற் றடுத்தவர்க் கிடுக்கணைக்
கடைக்கணிற் கொடுத்தழைத் 　　　　தியல்காமக்

---

* தரிகெட்டு - தரிப்பின்றி. † அலர்த்தெரிவை - பழிதூற்றும் பெண்.
‡ செயலை - அசோகு. செயலைப்புயன் - அசோகமலர்க் கணையைக் கையிலுடைய மன்மதன்.

கலைக்* கதற் றுரைத்தபுட் குரற்கள்விட் டுளத்தினைக்
கரைத்துடுத் தபட்டவிழ்த் தணைமீதே
சடக்கெனப் புகத்தனத் தணைத்திதழ்க் கொடுத்துமுத்
தமிட்டிருட் குழற்பிணித் துகிரேகை
சளப்படப் புதைத்தடித்†திலைக்குணக் கடித்தடத்
தலத்தில்வைப் பவர்க்கிதப் படுவேனோ
‡இடக்கடக் குமெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித்
தெழிற்றினைக் கிரிப்புரித் துறைவேலா
இகற்செருக் கரக்கரைத் தகர்த்தொலித் துரத்தபச்
சிறைச்சிலைப் பசித்திரைக் கிசைகூவும்
பெடைத்திரட் களித்தருக் குடக்கொடிக் கரத்தபொய்ப்
பிதற்றறப் படுத்துசற் குருவாய்முன்
பிறப்பிலிக் குணர்த்துசிக் கறுற்றநெற் பெருக்குறப்
பெருக்குசெய்த் திருத்தணிப் பெருமாளே. (உக)

---

251. கனத்தறப் பனைத்தபொற் கழைப்புயத் தனக்கிரிக்
§கனத்தையொத் துமொய்த்தமைக் குழலார்தங்
கழுத்தமைக் கயற்கணிற் கருத்துவைத் தொருத்தரிற்
கழற்பதத் தடுத்திடற் கறியாதே
இனப்பிணிக் கணத்தினுக் கிருப்பெனத் துருத்திபொத்
திசைத்தசைத் தசுக்கிலத் தசைதோலால்
எடுத்தபொய்க் கடத்தினைப் பொறுக்குமிப் பிறப்பறுத்
தெனக்குநித் தமுத்தியைத் தரவேணும்
||பனைக்கரச் சினத்திபத் தனைத்துரத் தரக்கனைப்
¶பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா
பருப்பதச் செருக்கறத் துகைக்குமுட் பதத்தினைப்
படைத்தருக் குடக்கொடிக் குமரேசா

---

* கதற்று - கதறுதலுடைய, † இலைக்குணம் - அரசிலையின் தன்மையையொத்த ‡ இடக்கு - குதர்க்கம் § கனம் - மேகம் || பனைக்கரச்சினத்திபத்தன் - தேவேந்திரன். ¶ பயம் - (சமுத்திரமாகிய) ஜலம்.

தினைப்புனப் பருப்பதத் தினிற்குடிக் குறத்தியைச்
செருக்குறத் திருப்புயத் — தணைவோனே
திருப்பறப் புறத்தியற் றிருத்*தகுத் தநித்திலத்
திருத்திசைத் திருத்தணிப் — பெருமாளே. (உஉ)

---

252. பருத்தபற் சாத்தினைக் குருத்திறற் காத்தினைப்
பரித்தவப் பதத்தினைப் — பரிவோடே
படைத்தபொய்க் குடத்தினைப் பழிப்பவத் திடத்தினைப்
பசித்துடற் கடத்தினைப் — பயமேவும்
பெருத்தபித் தருத்தனைக் கருத்திடற் றருத்தியைப்
பிணித்த†முக் குறத்தொடைப் — புலனாலும்
பிணித்தவிப் பிணிப்பையைப் பொறுத்தமிழ்ப் பிறப்பறக்
குறிக்கருத் தெனக்களித் — தருள்வாயே
கருத்திலுற் றுறைத்தபத் தரைத்துனித் திருக்கறக்
கழித்தமெய்ப் பதத்தில்வைத் — திடுவீரா
கதித்தநற் றினைப்புனக் கதித்தநற் குறத்தியைக்
கதித்தநற் றிருப்புயத் — தணைவோனே
செருக்கெழுத் தெதிர்த்தமுப் புரத்துரத் தரக்கரைச்
சிரித்தெரித் தநித்தர்போற் — குமரேசா
சிறப்புறப் பிரித்தறத் திறத்தமிழ்க் குயர்த்திசைச்
சிறப்புடைத் திருத்தணிப் — பெருமாளே. (உ௩)

---

தனத்தன தானந் தனத்தன தானந்
தனத்தன தானந் தனதான.

253. எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் — தனிலோயா
எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் — பவமாற
உனைப்பல நாளுந் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் — குழுமேவி

* தகுத்த.- தகுந்த. † முக்குறத் தொடைப்புலனாலும்-முக்குற்றத்தொடு ஐம்புலனாலும்.

உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணுனுந் தொழுவேனோ
வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேல்கொண் டவனீயே
*விளப்பென †வேழொன் றிடக்கய னாரும்
விருப்புற வேதம் புகழ்வோனே
சினத்தொடு சூரன் தனைப்பொரு போரின்
சிரத்தினை மாறும் முருகோனே
தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமானே (உச)

254. பெருக்கமு பாயங் கருத்துடை யோர்தம்
ப்ரபுத்தன பாரங் தனிலேசர்
ப்ரமத்துட னாளும் ப்ரமித்திருள் கூரும்
ப்ரியக்கட லூடுந் தணியாத
கருக்கட லூடுங் கதற்றும நேகங்
கலைக்கட லூடுஞ் சுழலாதே
கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசுங்
கழற்புணை நீதந் தருள்வாயே
தருக்கிய வேதன் சிறைப்பட நாளுஞ்
சதுர்த்தச லோகந் தளும்வாழத்
சமுத்திர மேழுங் குலக்கிரி யேழுஞ்
சளப்பட மாவுந் தனிவீழத்
திருக்கையில் வேலொன் றெடுத்தம ராடுஞ்
செருக்குமயூரந் தனில்வாழ்வே
சிறப்பொடு ஞானந் தமிழ்த்ரய நீடுந்
திருத்தணி மேவும் பெருமாளே. (உரு)

255. மருக்குல மேவுங் குழற்கனி வாய்வெண்
மதிப்பிள வாகும் நுதலார்தம்
மயக்கினி லேநண் புறப்படு வேனுன்
மலர்க்கழல் பாடுந் திறநாடாத்

* விளப்பென - விளம்பென. †ஏழொன் றிடக்கயன் — எண்கண்ணன், பிரமன்

தருக்கனு தாரந் துணுக்கிலி லோபன்
சமத்தறி யாவன் பிலிமுகன்
தலத்தினி லேவந் துறப்பணி யாதன்
தனக்கினி யார்தஞ் சபைதாராய்
குருக்குல ராஜன் தனக்கொரு தூதன்
குறட்பெல மாயன் நவநீதம்
குறித்தயில் நேயன் திருப்பயில் மார்பன்
குணத்ரய நாதன் மருகோனே
திருக்குள நாளும் பலத்திசை முசுஞ்
சிறப்பத ருளண் டிசையோடும்
திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகுந்
திருத்தணி மேவும் பெருமாளே (உ௬)

---

256. விளைக்கின மாகுந் தனத்தினர் வேளம்
பிணுக்கெதி ராகும் விழிமாதர்
மிகப்பல மாயந் தனிற்புகு தா*வெஞ்
சமத்திடை போய்வெந் துயர்மூழ்கிக்
கனத்தவி சாரம் பிறப்படி தோயுங்
கருக்குழி தோறுங் கவிழாதே
கலைப்புல வோர்பண் படைத்திட வோதுங்
கழற்புக ழோதுங் கலைதாராய்
புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே
பொருப்பிரு கூறும் படக்கடல் தானும்
பொருக்கெழ வானும் புகைமூளச்
சினத்தொடு சூரன் கனத்திணி மார்பந்
திறக்கம ராடுந் திறல்வேலா
திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி மேவும் பெருமாளே. (உ௭)

---

* வெஞ்சமம்- வெம்மையாகிய போர்.

தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந்        தனதான.

257. கரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந்                    தனபாரக்
கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொழித்துங்
கலைத்துகில் மினுக்கும்                    பணிவாரைத்
தரித்துள மரிக்குங் கவட்டர்க ளிணக்கந்
தவிர்த்தன தசித்தங்                    களிகூரத்
தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற்றுன்
தலத்தினி லிருக்கும்                    படிபாராய்
புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தொண்
*பொடிப்பணி யெனப்பன்                    குருநாதா
புயப்பணி கடப்பந் தொடைச்சிக ரமுற்றின்
புகழ்ச்சிய முதத்தின்                    புலவோனே
திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
தெறிப்புற விடுக்குங்                    கதிர்வேலா
சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி சயத்தென்
திருத்தணி யிருக்கும்                    பெருமாளே. (உ௮)

---

வியாளனி
258. சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவ ருயுர்க்குஞ்                    சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென்                    றறிவோம்யாம்
நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும்                    பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ்                    செயல்தாராய்
தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தனத்துட னடக்குங்                    கொடுசூரர்

* பொடி பணி என் அப்பன் எனப்பிரித்து, திருநீற்றினையும் பாம்பினையும் அணிந்த என் ஐயன் எனக்கொள்க.

சினத்தையு முடற்*சங் கரித்தமலை முற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தொடு சுகித்தொண்
திருத்தணி யிருக்கும் பெருமாளே.(உகூ)

தத்தனத் தனன தத்தனத் தனன
தத்தனத் தனன தனதான.

259\. தொக்கறாக் குடிலை யுக்கவேற் றசுக
துக்கமாற் கடமு மலமாயை
துற்றகாற் பதலை சொற்படாக் குசலை
துப்பிலாப் புலைய மயநூலைக்
கைக்கொளாக் கதறு கைக்கொளாக் கையமை
லப்புலாற் றசைகு ருதியாலே
கட்டுகூட் டுருவ முட்டுமேட் டிமலை
பட்டவாக் கறிவ தொருநாளே
அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குறவர்
அர்ச்சியாத் தொழுமு நிவனுய
அப்பமோப் பணிரு வெற்பழுந் தமியல்
வெற்பபாய்ப் பதிகு திகுமாரா
இக்கிறுற் குளம்வெ ளுப்பநோக் குமுத
வத்திஞேர்க் குதவும் இளையோனே
†எத்திடார்க் கரிய முத்தயாக் கமிழ்கொ
‡டெத்தினுர்க் கெளிய பெருமாளே.(கூ0)

260\. வட்டவாட் டனமனைச்சிபாற் குதலை
மக்கள்தாய்க் கிழவி பதிநாடு
வைத்ததோட் டமனை யத்தமீட் டுபொருள்
மற்றகூட் டமறி வயலாக
முட்டவோட் டிமிக வெட்டுமோட் டெருமை
முட்டர்பூட் டியெனை யழையாமுன்

* சங்கரித்து அம்மலை முற்றும் எனப் பிரிக்க. † எத்திடார்க்கு-வத்தி டார்க்கு. ‡எத்தினுர்க்கு -வத்தினுர்க்கு.

முத்திவிட் டணுக முத்தராக் குகுரு
திக்குராக் கொளிரு கழல்தாராய்
பட்டநாற் பெருமருப்பினுற் கரஇ
பத்தின்வாட் பிடியின் மணவாளா
பச்சைவேய்ப் *பணவை கொச்சைவேட் டுவர்ப
திச்சிதோட் புணர்த ணியில்வேளே
எட்டுநாற் கர†வொருத்தல்மாத் திகிரி
யெட்டுமாக் குலைய எறிவேலா
எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெந்திஞர்க் கெளிய பெருமாளே. (௬௧)

---

தனந்தனந்தன தனதன தனதன
தனத்தனத்தன தனதன தனதன
தனத்தனத்தன தனதன தனதன தனதான

261. ‡சினத்தி லத்தினை சிறுமணை வளையுடல்
செறித்த தெத்தனை சிலைகடை யினிலுயிர்
செனித்த தெத்தனை திரள்கய லெனபல வதுபோதா
செனித்த தெத்தனை மலைசுனை யுலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தி லெத்தனை நமனுயிர்பறிகொள்வ தளவேதோ
மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
கெடுத்த தெத்தனை மிருகம தெனவுயிர்
யளவிலை விதிகரம் ஒழியாமல்
வகுத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மதியழி விரகனை
மலர்ப் பதத்தினி லுருகவு மினியருள் புரிவாயே
தனத்த னத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ

* பணவை - பரண் † ஒருத்தல் - யானை.
‡சின இலம் தினை - சிறிய எள்ளு தினை.

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டடுடுடு டுடுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்

சினத்த மர்க்கள மிசைதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி யசுரர்கள் பரிசிலை
தெறித்த டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா

செழிக்கு முத்தம சிவசர ணர்கள்தவ
முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருக்க ணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே.(ருஉ)

---

262. தொடத்து ளக்கிகள் அபகட நினைவிகள்
குருட்டு மட்டைகள் குமரிகள் கமரிகள்
சுதைச்சி றுக்கிகள் *குசலிக †ளிசலிகள் முழுமோசம்

துறுத்த மட்டைகள் அசடிகள் கசடிகள்
முழுப்பு ரட்டிகள் நழுவிகள் ‡மழுவிகள்
§துமித்த மித்திரர் விலைமுலை யினவலை புகுதாமல்

அடை||த்த வர்க்கியல் சரசிகள் விரசிகள்
தரித்த வித்ரும நிறமென வரவுடன்
அழைத்து சக்கர கிரிவளை படிகொடு விளையாடி

¶அவத்தை தத்துவ மழிபட ○இருளறை
விலக்கு வித்தொரு சுடரொளி பரவநல்
அருட்பு கட்டியு னடியிணை யருளுவ தொருநாளே

படைத்த னைத்தையும் வினையுற நடனொடு
துடைத்த பத்தினி மரகத சொரூபியொர்
பரத்தி னுச்சியி னடநவி லுமையருள் இளையோனே

*குசலிகள் — தந்திரவாதிகள் †இசலிகள் — பிணங்கிகள். ‡மழுவிகள் - (தங்கள்சூது வெளியாகாமல் மழுப்புவோர். §துமித்த மித்திர்-கெடுத்த நட்பினர் ||அவர்க்கியல்...விளையாடி - அப்பொதுமாதர்கட்குச் சமானமாக இயல்கின்ற சரசிகளும் விரசிகளும் ஆகிய அணிமாதி அஷ்ட சித்திகளும் பவளம் போலும் சிவந்த நிறத்துடன் வரும்படி அழைப்பித்து (அவர்களோடு) சக்ரவாளகிரியாற் சூழப்பட்ட இப்பூமியில் விளையாடச்செய்து. ¶அவத்தை தத்துவம் அழிபட. (பின்) ஜாக்கிராதி மலாவஸ்தைகளும் தத்துவ சேஷ்டைகளும் ஒடுங்க. ○இருளறை - ஆணவமலம்.

பகைத்த ரக்கர்கள் யமனுல குறஅவர்
தொடுத்த சக்கர வளைகர மழகியர்
படிக்க டத்தையும் வயிறடை நெடியவர் மருகோனே
திடுக்கி டக்கட லசுரர்கள் முறிபட
கொளுத்தி சக்கிரி பொடிபட கடாயில்
திருத்தி விட்டொரு நொடியினில் வலம்வரு மயில்வீரா
தினைப்பு னத்திரு தனகிரி குமரிநல்
குறத்தி முத்தொடு சசிமக ளொடுபுகழ்
திருத்தணிப்பதி மலைமிசை நிலைபெறு பெருமாளே.(௩௩)

---

தனதன தான தனதன தான தனதன தான தனதான

263. இருமலு ரோக முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழு*கள மாலை இவையோடே
பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்கள் அருள்வாயே
வருமொரு கோடி யசுரப தாதி
மடியஅ நேக இசைபாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.(௩௪)

---

தனதன தானந் தனதன தானந்
தனதன தானந் தனதான.

264. கலைமட வார்தஞ் †சிலையத னாலுங்
கலையாலுங் கரைமேலே

---

* களமாலை கண்டமாலை. †சிலை- (வசை) ஒலி.

கருகிய காளம் பெருகிய தோயங்
    கருதலை யாலுஞ் *சிலையாலும்
கொலைதரு காமன் பலகணை யாலுங்
    கொடியிடை யாள்நின் றழியாதே
குரவணி நீடும் புயமணி நீபங்
    குளிர்தொடை நீதந் தருள்வாயே
சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
    திருமகள் நாயன் தொழும்வேலா
தினைவன மானுங் †கநவன மானுஞ்
    செறிவுடன் மேவுந் திருமார்பா
தலமகள் மீ‡தெண் புலவரு ளாவு
    தணிகையில் வாள்செங் கதிர்வேலா
தனியவர் கூறுந் தனிநெடு நாளுந்
    தனிமயி லேறும் பெருமாளே. (௩௫)

---

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான.

265. அரகர சிவனரி அயனிவர் பரவிமுன்
    அறுமுக சரவண பவனேயென்
றநுதின மொழிதர அசுரர்கள் கெடஅயில்
    அனலென எழவிடு மதிவீரா
பரிபுர கமலம தடியிணை யடியவ
    ருளமதி லுறவருள் முருகேசா
பகவதி வரைமகள் உமைதர வருகுக
    பரமன திருசெவி களிகூர
உரைசெயு மொருமொழி பிரணவ முடிவதை
    உரைதரு குருபர உயர்வாய
உலகம னலகில வுயிர்களு மிமையவர்
    அவர்களு முறுவர முனிவோரும்

---

*சிலை ஆலும் - வில்லினிடத்து அலைசகின்ற † கநவனமான் - தெய்வானை கனம் வனம் பொன்மயமாகியகற்பகவனம். ‡ எண் புலவர் - மதிக்கப்படும் தேவர்.

பரவிமு னறுதின மனமகிழ் வுறவணி
பணிதிகழ் தணிகையில் உறைவோனே
பகர்தரு குறமகள் தருவமை வனிதையும்
இருபுடை யுறவரு பெருமாளே (௬௫)

---

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான.

266. *இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை யறுத்திடும் எனவோதும்
இசைத்தமிழ் †நடத்தமி ழெனத்துறை விருப்புடன்
இலக்கண இலக்கிய கவிநாலும்
தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
தலத்தினில் நவிற்றுதல் அறியாதே
தனத்தினின் முகத்தினின் மனத்தினி லுருக்கிடு
சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ
கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்
கணிப்புட னெறிதெய்த மதவேளைக்
கருத்தினி னினைத்தவ னெருப்பெழ நுதற்படு
கனற்கணி லெரித்தவர் கயிலாய
பொருப்பினி லிருப்பவர் பருப்பத வுமைக்கொரு
புறத்தினை யளித்தவர் தருசேயே
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
பொருப்பினில் விருப்புறு பெருமாளே.(௬௬)

---

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான.

267. உடலி னூடு போய்மீளு முயிரி னூடு மாயாத
உணர்வி னூடு வானூடு முதுதீயூ
டலைவை யூடு நீரூடு புவியி னூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத தனிஞானச்

*இருப்பவல் - இரும்பாலாகிய அவல். † நடத்தமிழ் - நாடகத்தமிழ்.

சுடரி னூடு நால்வேத முடியி னூடு மூடாடு
துரிய வாகு லாதீத சிவரூபம்
தொலைவி லாத பேராசை துரிச றுதவோர்பேதை
தொடுமுபாய மேதோசொல் அருள்வாயே
மடல றுத வாரீச அடவி சாடி மாறுன
வரிவ ரால்*கு வால்சாய அமராடி
மதகு தாவி மீதோடி யுழவ ரால டாதோடி
மடையை மோதி யாறூடு தடமாகக்
கடல்பு காம காமீனை முடுகி வாளை தான்மேவு
கமல வாவி மேல்வீழு மலர்வாவி
கடவுள் நீல மாறாத தணிகை காவ லாவீர
கருணைமேரு வேதேவர் பெருமாளே. (௯அ)

---

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான.

268. உடையவர்க ளேவ ரெவர்களென நாடி
யுளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேரு கிரியளவு மான
தெனவுரமு மான மொழிபேசி
நடைபழகி மீள வழியவர்கள் நாளை
நடவுமென வாடி முகம்வேறாய்
நலியுமுன மேயுன் அருணவொளி வீசு
நளினஇரு பாதம் அருள்வாயே
விடைகொளுவு பாகர் விமலர்திரி சூலர்
விகிர்தர்பர யோகர் நிலவோடே
விளவுசிறு பூளை நகுதலையொ டாறு
விடவரவு சூடும் அதிபாரச்
சடையிறைவர் காண உமைமகிழ ஞான
தளர்நடையி டாமுன் வருவோனே
†தவமலரு நீல மலர்சுனைய நாதி
தணிமலையு லாவு பெருமாளே. (௯௯)

---

* குவால் - கூட்டம், † தவ - மிகுதி.

தையதா னத்தனன தையதா னத்தனன
தையதா னத்தனன தனதான

269. உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது
முள்ளவே கத்துறைகொ டுணர்வோதி

உள்ளமோகத்திருளை விள்ளமோ கப்பொருளை
யுள்ளமோ கத்தருளி உறவாகி

வையமே ழுக்குநிலை செய்புநீ திப்பழைய
வல்லமீ* துற்பலச யிலமேவும்

வள்ளியா நிற்புதியவெள்ளில்தோய் முத்தமுறி
கிள்ளிவீ சுற்றுமலர் பணிவேனோ

பையரா வைப்பணையு மையர்பா கத்தலைவி
துய்யவே ணிப்பகிர திகுமாரா

பையமால் பற்றிவளர் சையமேல் வைக்குமுது
†நெய்யனே சுற்றியகு றவர்கோவே

செய்யுமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு
கையமால் வைத்ததிரு மருகோனே

‡தெய்வயானைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே.(௪௦)

---

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான.

270. எலும்பு நாடிக ளப்பொடி ரத்தமொ
டழுக்கு மூளைகள் மச்சொடு கொட்புழு
விருக்கும் வீடிதி லெத்தனை தத்துவ சதிகாரர்

இறப்பர் சூதக வர்ச்சுத ரப்பதி
யுழப்பர் பூமித ரிப்பர்பி றப்புடன்
இருப்பர் வீடுகள் கட்டிய லட்டுறு சமுசாரம்

கெலிப்பர் மால்வலை பட்டுறு துட்டர்கள்
அழிப்பர் மாதவ முற்றுநி னைக்கிலர்
கெடுப்பர் யாரையு மித்திர குத்தரர் கொலைகாரர்

---

* உற்பலசயிலம் - திருத்தணிகை. † நெய்யனே - நேயனே.
‡ தெய்வயானை - விநாயகக்கடவுள்.

* கிருத்தர் கோளகர் பெற்றுதி ரிக்கள
வரிப்பர் சூடக ரெத்தனை வெப்பிணி
கெலிக்கும் வ்டதை நத்தியெடுத்திவண் உழல்வேளே

ஒலிப்பல் பேரிகை யுக்ரவ மர்க்களம்
எதிர்த்த சூரரை வெட்டியி ருட்கிரி
யுடைத்து வானவர் சித்தர்து தித்திட விடும்வேலா

உழுத்த ராவண னைச்சிர மிற்றிட
வதைத்து மாபலி யைச்சிறை வைத்தவன்
†உலக்கை ராவிநடுக்கடல் விட்டவன் மருகோனே

வலிக்க வேதனை யெற்றிநடித்தொரு
செகத்தை யீனுமெய் பச்சைநிறத்தியை
மணத்த தாதைப ரப்பிரம ருக்கருள் குருநாதா

வனத்தில் வாழும யிற்குல மொத்திடு
குறத்தி யாரைம யக்கிய ணைத்துள
மகிழ்ச்சி யோடுதி ருத்தணி பற்றிய பெருமாளே (உசு)

---

தனன தந்த னத்த தனன தந்த னத்த
தனன தந்த னத்த தனதான.

சாவேரி
ஏ
ரூபகம்

271. எனைய டைந்த குட்டம் விலைமி குந்த பித்த
மெரிவ ழங்கு வெப்பு வலிபேசா

இகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
டிருமலென்று ரைக்கும் இவையோடே

மனைகள் பெண்டிர் மக்கள் தமைநினைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே

மருவி யின்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்

நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா

நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கு முருகோனே

---

* கிருத்தர் - செருக்குள்ளவர். † உலக்கைராவி. உலக்கையோலும் பருத்த உருக்குத் துண்டத்தை அராவிப் பாணமாக்கி.

திணைவி ளங்க ஞூற்ற புனஇ ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா
திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே. (சஉ)

---

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன தந்ததான.

272. ஏது புத்திஐ யாஎ னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றத்தல்கொ லோஎ னக்குநி தந்தைதாயென்
றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவர்
ஏச விற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்
பாதம் வைத்திடை யாத ரித்துன
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்
பால்மொ ழிக்குர லோல மிட்டிடில்
யாரெ னப்பெறு ஞவெ றுப்பொடு
பார்வி டுப்பர்க ளோஎ னக்கிது சிந்தியாதோ
ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
யோட வெட்டிய பானு சத்திகை யெங்கள்கோவே
ஓத மொய்ச்சடை யாட வுற்றமர்
மான்ம ழுக்கர மாட நற்கழல்
ஓசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே
மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே
மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே. (சங)

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தனதான.

273. ஓலை யிட்டகு ழைச்சிகள் சித்திர
ரூப மொத்தநி றத்திகள் விற்கணை
யோடி ணைத்தவி ழிச்சிகள் சர்க்கரை அமுதோடே

ஊறி யொத்தமொ ழிச்சிகள் புட்குர
லோடு வைத்துமி ழற்று மிடற்றிகள்
ஓசை பெற்றது டிக்கொளி டைச்சிகள் மணம்வீசும்

மாலை யிட்டக ழுத்திகள் முத்தணி
வார ழுத்துத னத்திகள் குத்திர
மால்வி ளைத்தும னத்தை யழித்திடு மடமாதர்

மார்ப ளைத்தும ருட்டியி ருட்டறை
வாவெ னப்பொருள் பற்றிமு யக்கிடு
*மாத ருக்குவ ருத்தமி ருப்பது தணியாதோ

வேலை வற்றிட நற்கணை தொட்டலை
மீத டைத்துமு னைப்படை விட்டிற
வீற ரக்கன்மு டித்தலை பத்தையு மலைபோலே

மீத றுத்துநி லத்தில டித்துமெய்
வேத லட்சுமி யைச்சிறை விட்டருள்
வீர அச்சுத னுக்குந லற்புத மருகோனே

நீலி நிட்களி நிர்க்குணி நித்தில
வாரி முத்துந கைக்கொடி சித்திர
நீல ரத்தின மிட்டஅ றக்கிளி புதல்வோனே

நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
நேச மெத்தஅ ளித்தருள் சற்குரு
நீல முற்றதி ருத்தணி வெற்புறை பெருமாளே. (௬௬)

---

* மாதருக்கு வசப்படு புத்திகள் தவிரேனோ என்றும் பாடம்.

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

274 கச்சணி யிளமுலை முத்தணி பலவகை
கைச்சரி யொலிவர மயல்கூறிக்
கைப்பொருள் கவர்தரு மைப்பயில் விழியினர்
கட்செவி நிகர்குறி மடமாதர்
இச்சையி னுருகிய கச்சைய னறிவிலி
யெச்சமி லொருபொருள் அறியேனுங்
கிப்புவி மிசைகமழ் பொற்பத மலரிணை
யிப்பொழு தனுகவுன் அருள்தாராய்
கொச்சையர் மனையிலி டைச்சியர் தயிர்தனை
நச்சியெ திருடிய குறையாலே
குற்றுற லொடுபிணி நற்றிற வகையறி
கொற்றவு வணமிசை வருமாயன்
அச்*சுதை நிறைகடல் நச்சர வணைதுயில்
அச்சுதன் மகிழ்திரு மருகோனே
அப்பணி சடையரன் மெச்சிய தணிமலை
அப்பென யழகிய பெருமாளே. (சுரு)

---

தனதத்த தத்தனத் தனதத்த தத்தனத்
தனதத்த தத்தனத் தனதான.

275. கவடுற்ற சித்தர்சட் சமயப்ர மத்தர்நற்
கடவுட்ப்ர திஷ்டைபற் பலவாகக்
கருதிப்பெ யர்க்குறித் தருவர்க்க மிட்டிடர்க்
கருவிற்பு கப்பகுத் தழல்வானேன்
†சவடிக்‡கி லச்சினைக் கிருகைச்ச ரிக்குமிக்
கசரப்ப ளிக்கெனப் பொருளீவார்
சகலத்து §மொற்றைபட் டயல்பட்டு நிற்குநிற்
சரணப்ர சித்திசற் றுணராரோ

---

* சுதை-பால். †சவடி - ஓர்வித ஆபரணம் ‡ இலச்சினை - முத்திரை மோதிரம். § ஒற்றைபட்டு ஏகீபாவமாக வியாபித்து.

குவடெட்டு மட்டுநெட் டுவரிக்க ணத்தினைக்
குமுறக்க லக்கிவிக் ரமசூரன்
குடலைப்பு யத்திலிட் டுடலைத்த றித்துருக்
குதிரத்தி னிற்குளித் தெழும்வேலா
சுவடுற்ற அற்புதக் *கவலைப்பு னத்தினிற்
றுயரற்று நிற்குமிப் பவள்காணத்
தொழுதெத்து முக்கபொற் புரிசைத்தி ருத்தணிச்
†சுருதித்த மிழ்க்கவிப் பெருமாளே. (௬௬)

---

தனத்த தத்தனத் தந்த தாத்தன தந்ததான.

276 கனைத்த திர்க்குமிப் பொங்குகார்க்கடல் ஒன்றினாலே
கறுத்த றச்சிவத் தங்கி வாய்த்தெழு திங்களாலே
தனிக்க ருப்புவிற் கொண்டு வீழ்த்தச ரங்களாலே
தகைக்கொ ருத்தியெய்த் திங்கு யாக்கைக ளேங்கலாமோ
தினைப்பு னத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா
திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே
பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய மங்கைபாலா
படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே.()

---

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான.

277. கிரியு லாவிய முலைமிசை துகிலிடு
கபட நாடக விரகிக ளசடிகள்
கெடுவி யாதிக ளடைவுடை யுடலினர் விரகாலே
க்ருபையி லுறவொடு மணமிசை நழுவிகள்
முழுது நாறிக ளிதமொழி வசனிகள்
கிடையின் மேல்மன முருகிடு தழுவிகள் பொருளாலே
பரிவி லாமயல் கொடுசமர் புரிபவர்
அதிக மாவொரு பொருள்தரு பவரொடு
பழைய பேரென இதமுற அணைபவர் விழியாலே

---

* கவலை-செந்தினை. † சுருதித் தமிழ் - தமிழ் வேதமாகிய தேவாரம்.

பகழி போல்விடு விழிகவர் திருடிகள்
தமையெ ணுவகை புறுகதி பெறும்வகை
பகர மாமயில் மிசைவர நினைவது மொருநாளே

அரிய ராதியர் மலரய னிமையவர்
நிலைபெ ருதிடர் படவுடன் முடுகியெ
அசுரர் தூள்பட அயில்தொடு மறுமுக இளையோனே

அரிய கானக முறைகுற மகளிட
கணவ ளுகிய அறிவுள விதரனை
அமரர் நாயக சரவண பவதிறல் உடையோனே

தரும நீதியர் மறையுளர் பொறையுளர்
சரிவு றாநிலை பெறுதவ முடையவர்
தளர்வி லாமன முடையவ ரறிவினர் பரராஜர்

சகல லோகமு முடையவர் நினைபவர்
பரவு தாமரை மலரடி யுறவளர்
தணிகை மாமலை மணிமுடி யழகியபெருமாளே.(உஅ)

---

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான.

278. *இறுமொழிக் கிருதரைப் பொறிவழிச் செறிஞரைக்
கெடுபிறப் புறவிழிக் கிறபார்வைக்
கெடுமடக் குருடரைத் திருடரைச் சமயகர்க்
கிகள் தமைச் செறிதலுற் றறிவேதும்
அறிதலற் றயர்தலுற் றவிழ்தலற் றருகலுற்
றறவுநெக் கழிகருக் கடலூடே
அமிழ்தலற் றெழுதலுற் றுணர்தலுற் றயர்தலுற்
றடியிணைக் கணுகிடப் பெறுவேனோ
பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலிச் சமணரைத் தனைபேரும்
பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் புலவோனே

* இறுமொழிக்கிருதர் - பொய்சொல்லுந் தொழிலுடையோர்

தழிவளைத் துறநகைப் பொறிபெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வநற் கணமேவுந்
தனிமனக் குவளைநித் தருமலர்த் தருதிருத்
தணியினிற் சரவணப் பெருமாளே. (சகூ)

---

தனனந் தனனத் தனனந் தனனத்
தனனந் தனனத் தனதான.

279. குயிலொன்று *மொழிக் குயிலின் †றலையக்
கொலையின் பமலர்க் கணையாலே
குளிருந் தவளக் கலசத் தனொளிக்
கொடியொங் கையின்மூக் கனலாலே
புயல்வந் தெரியக் கடலின் றலறப்
பொருமங் கையர்‡ருக் கலராலே
புயமொன் றரிகத் தனர்கின் றதனிப்
பயம்வந் தனையக் கிடையாதோ
சயிலங் குலையத் தடமுந் தகரச்
§சமனின் றலையப் பொருவீரா
தருமங் கையனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் திருமார்பா
பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே
பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் ||கழுநிப் பெருமாளே. (ரு0)

---

தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன தனதான

280. குருதி யெனப்பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை மிருக மெனப்புழு
குறவை யெனக்கரி மரமு மெனத்திரி புறவாகா

---

* மொழி - மொழியை யுடையவள். † அலைய - அலைக்க. ‡ உக்க அலராலே தூற்றிய அலர் மொழியினாலே § சமன் - யமன்
|| கழுநி - இது கழுநீர் என்பதன் மரூஉ.

குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை யெனப்பிணி கலக மிடத்திரி
குலைய னெனப்புலை கலிய னெனப்பலர் நகையாமல்

மருவு புயத்திடை பணிக ளணப்பல
கரிபரி சுற்றமெய் கலைகள் தரித்தொரு
மதன சரக்கென வொளிசெய்பலக்குட னதுதேடேன்

வரிய பதத்தினி னருவி யிருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்
மருவு திருப்புக ழருள எனக்கினி யருள்வாயே

விருது தனத்தன தனன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி யெனக்குகு வெகுதாளம்

வெருவ முகிழ்த்திரை யுரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை யதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு அசுரர் தெறித்திட விடும்வேலா

அரிய திரிப்புர மெரிய விழித்தவன்
அயனை முடித்தலை யரியு மழுக்கையன்
அகில மனைத்தையு முயிரு மளித்தவன் அருள்சேயே

அமண ருடற்கெட *வசியி லழுத்திவின்
அமரர் கொடுத்திடு மரிவை குறத்தியொ
டழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமானே. ()

---

தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

281. குலைத்துமயிர்க் கலைத்துவளைக் கழுத்துமணித் தனத்தின்மிசைக்
குறித்தவிழிக் கயற்சுழலப் பிறைபோலக்

குனித்தநுதற் புரட்டிநகைத் துருக்கிமயற் கொளுத்திபிணைக்
குழைச்செவியிற் றழைப்பமணத் தனபாரப்

† பொலிப்புமதத் தெடுத்தகரிக் குவட்டுமுலைப் பசப்புமிகப்
புனைத்ததுகிற் பிடித்தஇடைப் பொதுமாதர்

* வசி-கழு †. பொலிப்பு-பொலிவு.

புயத்தில்வளைப் பிலுக்கில்நடைக் குலுங்கிலறப் பசப்பியயற்
புகட்டிவிடுத் தழிப்பவருக் குறவாமோ
தலத்தனுவைக் குனித்தொருமுப் புரத்தைவிழக் கொளுத்திமழுத்
தரித்துவலிக் கரித்துகிலைப் பரமாகத்
தரித்துதவச் சுரர்க்குலமுற் பிழைக்கவிடற் றடக்குவிடச்
சடைக்கடவுட் கினித்தபொருட் பகர்வோனே
சிலுத்தசுரர்க் கெலித்துமிகக் கொளுத்திமறைத் துதிக்க அதிற்
செழிக்கஅருட் கொடுத்தமணிக் கதிர்வேலா
தினைப்புனமிற் குறத்திமகட் டனத்தின்மயற் குளித்துமகிழ்த்
திருத்தணியிற் றரித்தபுகழ்ப் பெருமாளே. (ருஉ)

---

தாந்த தனத்தன தத்தன தத்தன
தாந்த தனத்தன தத்தன தத்தன
தாந்த தனத்தன தத்தன தத்தன தனதான.

282. கூந்த லவிழ்த்துமு டித்துமி லுக்கிகள்
பாய்ந்த விழிக்குமை யிட்டுமி ரட்டிகள்
*கோப்பு படைத்தமொ ழிச்சொல்ப ரத்தையர் புயமீதே
கோங்கு படைத்தத னத்தைய ழுத்திகள்
வாஞ்சை யுறத்தழு விச்†சிலு கிட்டவர்
‡கூன்பிறை யொத்தந கக்குறி வைப்பவர் பலநாளும்
ஈந்த பொருட்பெற இச்சை யுரைப்பவர்
ஆந்துணை யற்றழு கைக்குர லிட்டவர்
ஈங்கிசை§யுற்றவ லக்குண மட்டைகள் பொருள்தீரில்
ஏங்கி யிடக்கடை யிற்றளி வைப்பவர்
பாங்க கலக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்திலை யெப்படி நற்கதி புக்கிடல் அருள்வாயே
காந்தள் மலர்த்தொடை யிட்டெதிர் விட்டொரு
|| வேந்து குரக்கர ணத்தொடு மட்டிடு
காண்டிப அச்சுத னுத்தம சற்குணன் மருகோனே

* கோப்பு - சினக்குறிப்பு - சிலுகு - துன்பம். ‡ கூன் - வளைந்த §உற்றவலக்குணம் - உற்ற × அவலம் + குணம். || வேந்துகுரக்கு - குரக்கரசாகிய வாலி.

* காங்கிசை மிக்கமதக்கொடி வெற்றியில்
வாங்கிய முக்கனி சர்க்கரை மொக்கிய
கான்கனி முற்கியல் கற்பக மைக்கரி யிளையோனே
தேந்தினை வித்தின ருற்றிட வெற்றிலை
வேங்கை மரத்தெழி லைக்கொடு நிற்பவ
தேன்சொலி யைப்புணரப்புணருற்†றுறை குலைவானந்
தீண்டு கழைத்திர ளூற்றது துற்றிடு
வேங்கை தனிற்குவ ளைச்சுனை சுற்றலர்
சேர்ந்த திருத்தணி கைப்பதி வெற்புறை பெருமாளே (௫௩)

---

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான.

283. கூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டியிரு
கோடா லழைத்துமலர் அணைமீதே
‡கோபா விதழ்ப்பருக மார்போ டணைத்துவிழி
நோல்போல் சுழற்றியிடை யுடைநாணக்
கார்நேர் குழற்சரிய வேவா யதட்டியிரு
காதோலை யிற்றவிழ விளையாடுங்
காமா மயக்கியர்க ளூடே களித்துநவி
காமா துரக்கலகம் ஒழியாதோ
§வீராணம் வெற்றிமுர சோடே தவிற்றிமிலை
வேதாக மத்தொலிகள் கடல்போல
வீறாய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்
வேலா திருத்தணியில் உறைவோனே
||மாரோ னிறக்கவிழி தாதா திருச்செவியில்
மாபோ தகத்தையருள் குருநாதா
மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு
மாலோ டணைத்துமகிழ் பெருமாளே. (௫௪)

---

* காங்கிசை - விருப்பம். † உறைகுலை - உறைபவனே. ‡ கோபா - இந்திரகோபமொக்கிய. § வீராணம் என்பது ஓர் விதவாத்தியம். || மாரோன் - மாரன், மதன்.

தன்னதன்னத் தன்னதன்னத்
தன்னதன்னத் தனதான.

284\. சொரியு முகிலைப் பதும நிதியைச்
சுரபி தருவைச் சமமாகச்
சொலியு மனமொட் டுனையு நெகிழ்விற்
சுமட ரருகுற் றியல்வாணர்
தெரியு மருமைப் பழைய மொழியைத்
திருடி நெருடிக் கவிபாடித்
திரியு மருள்விட் *டுனது †குவளைச்
சிகரி பகரப் பெறுவேனோ
கரிய புருவச் சிலையும் வளையக்
கடையில் விடமெத் தியநீலக்
கடிய கணைபட் டுருவ வெருவிக்
கலைகள் பலபட் டனகானிற்
குரிய குமரிக் கபய மெனநெக்
குபய சரணத் தினில்வீழ
உழையின் மகளைத் தழுவ மயலுற்
றுருகு முருகப் பெருமாளே. (௫௫)

---

தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன தனதான.

285\. தாக்கம ருக்கொரு சாங்ரயை வேறொரு
சாக்ஷிய றப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ரவ ழிக்கதி தூரனை வேர்விழ கவமூழ்கும்
தாற்பர்ய மற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றனை யேகரு தாதிகல்
சாற்றுத மிழ்க்குளை ஞானியைநாள்வரை தடுமாறிப்
போக்கிட மற்றவரு தாவனை ஞானிகள்
போற்றுத லற்றது ரோகியை மாமருள்
பூத்தம லக்ரய பூரியை‡நேரிய புலையேனைப்

---

* 'உனது புகழைத் தினமு முணர' எனவும் பாடம்.
† குவளைச்சிகரி - திருத்தணி, ‡ நேரிய - ஒத்த

போக்கிவி டக்கட னோநர கோகதி
போய்ப்பெறு கைக்கிலை யோகதி யானது
போர்ச்சுடர் வஜ்ரவை வேல்மயி லாஅருள் புரிவாயே
ஆர்க்கறை மட்டைமட காபல காரணி
சூர்ப்பந கைப்படு மூளியு தாசனி
மூர்க்ககு லைத்திவி பீஷணா சோதரி முழுமோடி
மூத்தவ ரக்கனி ராவண னோடியல்
போற்றிவி டக்கம லாலய சீதையை
மோட்டன்வ ளைத்தொரு தேர்மிசை யேகொடு முகிலேசாய்
மாக்கன சித்திர கோபுர நீள்பதை
வீட்டிலி ருத்திய நாளவன் வேரற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே
வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கழு நீர்தரு நீள்சுனை
வாய்த்ததி ருத்தணி மாமலை மேவியபெருமாளே (ருக)

---

தத்தா னந்தா தத்தா னத்தா
தத்தா தனனத் தனதான.

286. துப்பா ரப்பா டற்றே மொய்க்கால்
சொற்பா வெளிமுக் குணமோகம்
துற்றா யப்பீ றற்றோ லிட்டே
சுற்றா மதனப் பிணிதோயும்
இப்பா வக்கா யத்தா சைப்பா
*டெற்றே யுலகிற் பிறவாதே
†எத்தார் வித்தா ரத்தே கிட்டா
எட்டா அருளைத் தரவேணும்
தப்பா மற்பா டிச்சே விப்பார்
தத்தாம் வினையைக் களைவோனே
தற்கா ழிச்சூர் செற்றாய் மெய்ப்போ
தத்தாய் தணிகைத் தனிவேலா

* எற்றே - எத்தன்மைத்து. † எத்தார் - பொருந்தார்.

அப்பா கைப்பா லைப்போல் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே
அத்தா நித்தா முத்தா சித்தா
அப்பா குமரப் பெருமாளே. (௫௭)

---

தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான தனதான.

287. நிலையாத சமுத்திர மான சமுசார துன்றக்கணின் மூழ்கி
நிசமான தெனப்பல பேசி யதனூடே
நெடுநாளு முழைப்புள தாகிப்பெரியோர்களிடைக்கரவாகி
நினைவால்நி னடித்தொழில் பேணித் துதியாமல்
தலையான வுடற்பிணி யூறிப் பலநோயி னலைப்பல வேகிச்
சலமான பயித்திய மாகித் தடுமாறித்
தவியாதுபிறப்பையுநாடியதன்வேரையறுத்துனை யோதித்
தலமீது பிழைக்கிட வேநின் அருள்தாராய்
கலியாண சுபுத்திர னைக்குறமாது தனக்கு விநோதக்
கனிதரு புயத்திலு லாவி விளையாடிக்
களிகூரு முனைத்துணைதேடி மடியேனையருட்பெற வேனை
கடைதரு முனக்கருளான முருகோனே
பசைகாலு முனைத்தொழுவோர்கள் மறவாது திருப்புகழ்கூறிப்
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே
பதியான திருத்தணி மேவு சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமாளே. (௫௮)

---

தனத்த தத்தனத் தனதான.

288. நினைத்த தெட்டனையிற் றவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமற்
கனத்த தத்துவமுற் றழியாமற்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்தணிப்பதியிற் பெருமாளே. (௫௯)

தனன தானனந் தனன தானனந்
தனன தானனந் தனதான.

289. பகலி ராவினுங் கருவி யாலனம்
பருகி யாவிகொண் டுடல்பேணிப்
பழைய வேதமும் புதிய நூல்களும்
பலபு ராணமுஞ் சிலவோதி
அகல நீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோனே
அசடர் மூகரென் றவல மேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ
சகல லோகமும் புகல நாடொறுஞ்
சறுகி லாதசெந் தமிழ்தேறுந்
தவள நீபமும் புனையு மார்பதென்
தணிகை மேவுசெங் கதிர்வேலா
சிகர பூதரந் தகர நான்முகன்
சிறைகு வாசவன் சிறைமீளத்
திமிர சாகரங் கதற மாமரந்
திதற வேல்விடும் பெருமாளே. (௬0)

---

தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன தனதான.

290. பழமை செப்பிய ழைத்துர மித்துடன்
முறைம சக்கிய ணைத்துந கக்குறி
படஅ ழுத்துமு கத்தைமு கத்துற வுறவாடிப்
பதறி யெச்சிலை யிட்டும ருத்திடு
விரவு குத்திர வித்தைவி ளைப்பவர்
பலவி தத்திலு மற்பரெ னச்சொலு மடமாதர்
அழிதொ ழிற்குவி ருப்பொடு நத்திய
அசட னைப்பழி யுற்றஅ வத்தனை
அடைவு கெட்டபு ரட்டனை முட்டனை அடியேனை
அகில சத்திபு மெட்டுறு சித்தியு
மெளிதெ னப்பெரு வெட்டவெ ளிப்படும்
அருண பொற்பத முற்றிட வைப்பதும் ஒருநாளே

குழிவிழிப்பெரு நெட்டலைகைத்திரள்
கரணமிட்டுநடிக்தமிதப்படு
*குலிலியிட்டகளத்திலெதிர்த்திடும் ஒருசூரன்

குருதிகக்கியதிர்த்துவிழப்பொரு
நிசிசரப்படைபொட்டெழவிக்ரம
குலிசசத்தியைவிட்டருள்கொர்ச்சித மயில்வீரா

தழையுடுத்தகுறத்தியதத்தையை
வருடிவட்டமுகத்திலதக்குறி
தடவிவெற்றிகதித்தமுகைக்குவ டதன்மீதே

†தரளபொற்பணிகச்சுவிசித்திரு
குழைதிருத்தியருத்திமிகுத்திடு
தணிமலைச்சிகரத்திடையுற்றருள் பெருமாளே. (௯௧)

---

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதான.

291. புருவநெறித்துக் குறுவெயர்வுற்றுப்
புளகிதவட்டத் தனமானார்
பொருவிழியிற்பட் டவரொடுகட்டிப்
புரளுமசட்டுப் புலையேனைக்
கருவழியுற்றுக் குருமொழியற்றுக்
கதிதனைவிட்டிட் டிடுதீய
கயவனைவெற்றிப் புகழ்திகழ்பக்மக்
கழல்கள்துதிக்கக் கருதாயோ
செருவசுரப்பொய்க் குலமதுகெட்டுத்
திரைகடலுட்கப் பொரும்வேலா
தினைவனமுற்றுக் குறவர்மடப்‡பைக்
கொடிதனைவெற்பைப் புணர்மார்பா
பெருகியநித்தச் சிறுபறை§கொட்டிப்
||பெரிகைமுழக்கப் புவிமீதே
பிரபலசுத்தத் தணிமலையுற்றுப்
ப்ரியமிகுசொக்கப் பெருமாளே. (௯௨)

*குலலி – வீராவேச ஒலி. †'சதிர்பெறத்தமுழ விப்புணர் வித்தக முநிவர் சித்தர் சணத்சர் துதித்திடு தலைமைபெற்றருணைப்பதி யிற்றிகழ்பெருமாளே' என்று பாடம். ‡பைக்கொடி-பைங்கொடி. §'கொட்டப்' பெருகியசத்தப்புவியோனே - பிணமலை வைத்துக் கணமலை சுற்றப் பிசினருயுத்தப்பெருமாளே' என்று பாடம். || பெரிகை - பேரிகை.

தானனத் தத்த தத்த தானனத் தத்த தத்த
தானனத் தத்த தத்த தனதான.

292. பூசலிட் டுச்சரத்தை நேர்கழித் துப்பெருத்த
போர்விடத் தைக்கெடுத்து வடிகூர்வாள்
போலமுட் டிக்குழைக்கு ளோடிவெட் டித்திளைத்த
போகமிக் குப்பரிக்கும் விழியார்மேல்
ஆசைவைத் துக்கலக்க மோகமுற் றுத்துயர்க்கு
ளாகிமெத் தக்களைத்துள் அழியாமே
ஆரணத் துக்கணத்து ணுண்மலர்ப் பொற்பதத்தை
யான்வழுத் திச்சுகிக்க அருள்வாயே
வாசமுற் றுத்தழைத்த தாளிணைப் பத்த*ரத்த
மாதர்சித் தச்சிறைக்குள் அழியாமே
வாழ்வுறப் புக்கிரத்ன ரேகையொக் கச்சிறக்கு
மாமயிற் பொற்கழுத்தில் வரும்வீரா
வீசமுத் துத்தெறிக்க வோலைபுக் குற்றிருக்கும்
வீறுடைப் பொற்குறத்தி கணவோனே
வேலெடுத் துக்கரத்தி †னீலவெற் பிற்றழைத்த
வேளெனச் சொற்கருத்தர் பெருமாளே. (௬௯)

---

தனனத்தந்த தனத் தனனத் தந்த தனத்
தனனத் தந்த தனத் தனதான.

293. பொருவிக் கந்தொடரச் §செருவிக் கன்றெடுமிப்
புதுமைப் புண்டரிகக் கணையாலே
புளகக் கொங்கையிடத் திளகக் ¶கொங்குதழற்
பொழியத் தென்றல்துரக் குதலாலே
தெருவிற் பெண்கள்மிகக் கறுவிச் சண்டையிடத்
திரியத் திங்களுதிப் பதனாலே
செயலற் றிங்கணையிற் றுயிலற் றஞ்சியயர்த்
தெரிவைக் குன்குரவைத் தரவேணும்
அருவிக் குன்றடையப் பரவிச் செந்தினைவித்
தருமைக் குன்றவருக் கெளியோனே

---

* அத்த மாதர்கள் — பொருட் பெண்டிர் †நீலவெற்பு - திருத்தணிகை.
‡ பொருவிக்கம் - வருத்தும் விக்கல். § செரு இக்கன் தொடும் இக்கன் - கரும்பு வில்லையுடைய மன்மதன், ¶ கொங்கு - பூந்தாது.

அசுரர்க் கங்கயல்பட் டமரர்க் கண்டமளித்
தயில்கைக் கொண்டதிறற் குமரேசா
தருவைக் கும்பதியிற் றிருவைச் சென்றணுகித்
தழுவிக் கொண்டபுயத் திருமார்பா
தரளச் சங்குவயற் றிரளிற் றங்குதிருத்
தணிகைச் செங்கழுநிப் பெருமாளே. (கூச)

---

தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதான.

294. பொற்ப தத்தி னைத்து தித்து நற்ப தத்தி னுற்ற பத்தர்
பொற்பு ரைத்து*நெக்கு ருக்க அறியாதே
புத்த கப்பி தற்றை விட்டு வித்த கத்தி னைத்து திக்க
புத்தி யிற்க லக்க மற்று நினையாதே
முற்ப டைத்த லைத்து தித்து பிற்ப டைத்த கிர்த்ய முற்றி
முற்க டைத்த வித்து நித்த முழுமூலவேனே
முட்ட விக்க டைப்பி றப்பி னுட்கி டப்ப தைத்த விர்த்து
முத்தி சற்றெ னக்க ளிப்ப தொருநாளே
வெற்ப ளித்த தற்ப ரைக்கி டப்பு றக்கை யுற்ற ளிக்க
வித்த கத்தர் பெற்ற கொற்ற மயில்வீரா
வித்தை தத்வ முத்த மிழ்ச்சொ லத்த சத்தம் வித்த ரிக்கு
மெய்த்தி ருத்த ணிப்பொ ருப்பில் உறைவோனே
கற்ப கப்பு ணக்கு றத்தி கச்ச டர்த்த சித்ர முற்ற
கற்பு றத்தி ருத்த னத்தில் அணைவோனே
கைத்த ரக்கர் கொத்து கச்சி னத்து வஜ்ர னுக்க மைத்த
கைத்தொ ழுத்த றித்து விட்ட பெருமாளே. (கூரு)

---

தனதனத்தன தனதனத்தன தனந்தந்தந் தனந்தா
தனதனத்தன தனதனத்தன தனந்தந்தந் தனந்தா
தனதனத்தன தனதனத்தன தனந்தந்தந் தனந்தா
தனனதா தனனா.

295. விலையிறுக்கவு முலைமருட்டவு மணந்துன்றுஞ் செழுந்தார்
புனைமுகற்குழ றனையவிழ்க்கவும் விடங்கஞ்சஞ் சரஞ்சேர்

*நெக்குருக்க-நெகிழ்ந்துருக

விழிவெருட்டவு மொழிபுரட்டவு நினைந்தொன்றுஞ் சிலம்பார்
அரியபூணுடனே

வெளியினிற்கவும் வலியமுட்டரையெதிர்ந்தும்பின் றொடர்ந்தே
யிலைசுணப்பொடி பிளவளித்திடு திரும்பும்பண் பரன்றே
யெனவுரைத்தவர் தமைவரப்பணியுடன்கொண்டன்புடன்போய்
சயனபாயலிலே

நிலைநெகிழ்க்கவு மயல்விளைக்கவும் நயங்கொண்டங் கிருந்தே
யணுகியிட்டுள பொருள்பறித்தற முனிந்துங்கண் சிவந்தே
கலகமிட்டென மிகநடித்தபின் வருந்தொந்தங் கடந்தார்
புதியபேருடனே

கதைகள்செப்பவு மெனதுபுத்திகள் மனங்கொண்டுங் கலங்கா
மனைதனிற்சிறு பொழுதிருக்கினும் நினைந்துங்கொண் டிருந்தே
கடிமலர்ப்பத மணுகுதற்கறி வின்பங்கன் பெரும்பா
தகனை நீயருள்வாய்

சிலைகணைக்கொடு மிகநடத்தென தனந்தந்தந் தனந்தா
திரிபுரத்தெரி புகநகைத்தருள் சிவன்பண்டங் கிருந்தே
மலர்வனப்பிர மனைநடுத்தலை யரிந்துங்கொண் டிரந்தோன்
அருளுமாமுருகா

செருவிடத்தலை களையுறுக்கிய தினந்தொந்தொந் தினந்தோ
மெனவுடுக்கைகள் மணிகளப்பறை டகுண்டங்குண் டகுண்டா
டிகுகுடிக்குகு டிகுகுடிக்குகுடிகுண்டிங்குண் டிகுண்டீ
யெனவிராவணனீள்

மலையெனத்திகழ்முடிகள்பத்தையுமிரண்டஞ்சொன்பதொன்றேய்
**பணைபுயத்தையுமொருவகைப்படவெகுண்டம் பொன்றெறிந்தோன்**
மகனன்மைத்துன னசுரரைக்குடல் துளைந்தங்கம் பிளந்தே
மயிலின்மேல்வருவாய்

வயல்முதுக்கய லினமதர்த்தெழு வரம்பின்கண் புரண்டே
பெருதடத்திடை செலவுநித்திலம் நிறைந்தெங்குஞ் சிறந்தே
வரிசைபெற்றுயர் தணிமலைப்பதி புரந்தென்பங் கிருந்தாய்
இளையவாபெருமாளே. (௬௬)

---

தானதத்தன தானனதானன
தானதத்தன தானனதானன
தானதத்தன தானனதானன—தனதான.

296. ஓதிவைத்தவர் கூலிகொடாதவர்
மாதவர்க்கதி பாதகமானவர்
பூசலிற்கன லாயெரிகாளையர் மறையோர்கள்
ஊர்தனக்கிட ரேசெய்வரேழையர்
ஆர்தனக்குமு தாசினமானவர்
துமுத்தம நீதியைநாடிலர் இரவோருக்
கேதுமித்தனை தானமிடாதவர்
பூதலத்தினி லோரமதானவர்
ஏதினிற்சிவ ஞானியை மோனியை யிகழ்வோரும்
ஏகசித்தறி ஞானமிலாதவர்
யோகபற்றிடு போகிகமீறினர்
ஈனரித்தனை பேர்களுமேழ்நர குழல்வாரே
தாததத்தத தாதததாதத
தூதுதுத்துது தூதுதுதூதுது
சாசசச்சச சாசசசாசச சசசாச
டாடடட்டட டாடடடாடட
டுடுடுட்டுடு டுடுடுடுடு
டீடிடிட்டிடி டீடிடிடீடிடி டிடிடீடி
தீதிதித்திதி தீதிதிதீதிதி
தோதிகுத்திகு தோதிகுதோதிகு
சேகுசெக்குகு சேகுகுசேகுகு செகுசேகு
சேயெனப்பல ராடிடமாகலை
ஆயுமுத்தமர் கூறிடும்வாசகர்
சேர்திருத்தணி மாமலைமேவிய பெருமாளே. (சுசு)

---

தனதனத்தன தனதனத்தன தனதனத்தன தனதான.

297. மலைமுலைச்சியர் கயல்விழிச்சியர் மதிமுகத்தியர் அழகான
மயில்நடைச்சியர்குயில்மொழிச்சியர்மனதுருக்கிகள் அணைமீதே
கலைநெகிழ்த்தியெ உறவணைத்திடு கலவியிற்றுவள் பிணிதீராக்
கசடனைக்குணா அசடனைப்புகல் கதியில்வைப்பதும் ஒருநாளே
குலகிரிக்குல முருவவிட்டமர் குலவுசித்திர முனைவேலா
குறவர்பெற்றிடு சிறுமியைப்புணர் குமரசற்குண மயில்வீரா

தலமதிற்புக மொருக்கிடர் தனையகற்றிய அருளாளா
தருநிரைத்தெழுபொழில்மிகுத்திடு தணிமலைக்குயர்பெருமானே.

---

தனத்த தனத்தன தனதன தனதன
தனத்த தனத்தன தனதன தனதன
தனத்த தனத்தன தனதன தனதன தனதான.

298. முகத்தை மினுக்கிக ளசடிகள் கபடிகள்
விழித்து மருட்டிகள் கெருவிகள் திருடிகள்
மொழிக்குள்மயக்கிகள்வகைதனில்நகைதனில் விதமாக
முழித்து மயற்கொளு மறிவிலி நெறியிலி
புழுக்கு டலைப்பொரு ளெனமிக எணிபவர்
முயக்க மடுத்தறி தருமடி யவனிடர் ஒழிவாக
மிகுத்த முகைப்பெறு மறுமுக சரவண
புயத்தி ளகிக்கமழ் நறைமலர் தொடைமிக
விசைக்கொ டுமைப்பெறு மரகத கலபியும் வடிவேலும்
வெளிப்பட வுற்றினி யிரவொடு பகலற
விருப்பொ டுனைப்புக ழுமுதியல் கவிசொல
விதித்த னெழுத்*தினை தரவருமொருபொருளருளாயே
புகைத்த முலைக்கொடு திரிபுர மெரிபட
நகைத்த வருக்கிட முறைபவள் அலைமகள்
பொருப்பி லிமக்கிரி பதிபெறு மிமையவள் அபிராமி
†பொதுற்று திமித்திமி நடமிடு பகிரதி
எழுத்த றிருத்திரி பகவதி கவுரிகை
பொருட்ப யனுக்குரையெனுநிலைசமைபவள்அமுதாகச்
செகத்தை யளப்பவர் நெடியவர் கடையவர்
அறத்தை வளர்த்திடு பரசிவை குலவதி
திறத்த மிழைத்தரு பழையவ ளருளிய சிறியோனே
செருக்கு மரக்கர்கள் பொடிபட வடிவுள
கரத்தி லயிற்கொடு பொருதிமை யவர்பணி
திருத்த ணிநற்பதி தனில்மயில் நடவிய பெருமாளே.

---

* இனைதர - மெலிய. † பொது உற்று. பொது - அம்பலம்.

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

299. முகிலு மிரவியு முழுகதிர் தாளமு
முடுகு சிலைகொடு கணைவிடு மதனனு
முடிய வொருபொரு ளுதவிய புதல்வனும் எனநாடி

முதிய *கனனென தெய்வதரு நிகரென
முதலை மடுவினி †லதவிய புயலென
முகமு மறுமுக முடையவ னிவனென வறியோரைச்

சகல பதவியு முடையவ ரிவரென
வலிய தருவல விஜயவ னிவனென
தபனன் வலம்வரு கிரிதனை நிகரென இசைபாடிச்

‡சயில பகலவ ரிடைதொறும் நடைசெயும்
இரவு தவிரவெ யிருபத மடையவெ
§சவித வடியவர் தவமதில் வரஅருள் புரிவாயே

அகில புவனமு மடைவினி லுலவிய
இமய கிரிமயில் குலவரை தருவென
அதிர வருபுர னொடியினி லெரிசெய்த அபிராமி

அமரு மிடனன லெனுமொரு வடிவுடை
யவ¶னி லுரையவன் முதுதமி ழுடையவன்
அரியொ டயனுல கரியவ னடநவில் சிவன்வாழ்வே

திகிரி நிசிசரர் தடமுடி பொடிபட
வலைக ளெறிகடல் சுவறிட களமிசை
திரடு குறடுகள் புரள்வெகு குருதிகள் பெருகாறுக்

கிகர கிரிநெரி படவலி கொடுபொரு
திமிர தினகர குருபர இளமயில்
சிவணி வருமொரு தணிகையில் நிலைதிகழ் பெருமாளே.

* கனன் – கர்ணன். † அதவிய – சம்மாரஞ்செய்த.
‡ சயில பகலவர் – கற்பிளவை யொத்தவர்.
§ சவித – இதத்தொடுகூடிய.
¶ இல் உரையவன் – உரையிறந்தவன், வாக்குக் கெட்டாதவன்.

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனதான.

300. முடித்த குழலினர் வடித்த மொழியினர்
முகத்தி லிலகிய விழியாலும்
முலைக்கி ரிகள்மிசை யசைத்த துகிலினும்
இளைத்த இடையினு மயலாகிப்
படித்த அணைதனி லணைத்த அவரொடு
படிக்கு ளநுதினம் உழலாதே
பருத்த மயில்மிசை நினைத்த பொழுதுன
பதத்து மலரிணை யருள்வாயே
துடித்தொர் தசமுகன் முடித்த
எடுத்த சரம்விடு ரகுராமன்
துகைத்தி வுலகையொ ரடிக்கு ளளவை
துலக்க அரிதிரு மருகோனே
தடத்து ளுறைகயல் வயற்கு ளெதிர்படு
தழைத்த கதலிகள் அவைசாயத்
தருக்கு மெழிலுறு திருத்த ணிகைமிசை
தழைத்த சரவண பெருமாளே. (எஙு)

---

தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
தத்தத் தனத்த தனதான.

301. முத்துத் தெறிக்கவள ரிக்குச் சிலைக்கைமதன்
முட்டத் தொடுத்த மலராலே
முத்தத் திருச்சலதி முற்றத் *துதித்தியெனு
முற்பட் டெறிக்கு நிலவாலே
எத்தத் தையர்க்குமித மிக்குப் பெருக்கமணி
இப்பொற் கொடிச்சி தளராதே
எத்திக் குமுற்றபுகழ் வெற்றித் திருத்தணியி
லிற்றைத் தினத்தில் வரவேணும்
மெத்தச் சினத்துவட திக்குக் குலச்சிகர
வெற்பைத் துளைத்த கதிர்வேலா

---

* உதித்தி – உதி, தீ. உதி – உலைத்துருத்தி.

மெச்சிக் குறத்திதனை யிச்சித் தணைத்துருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா
மத்தப் ப்ரமத்தரணி *மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே
வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே. (௭௪)

---

தனதனன தனதந்த தனதனன தனதந்த
தனதனன தனதந்த தனதான.

302. முலைபுளக மெழஅங்கை மருவுசரி வளைகொஞ்ச
முகிலளக மகில்பொங்க அமுதான
*மொழிபதற அருமந்த விழிகுவிய மதிகொண்ட
முகம்வெயர்வு பெறமன்றல் அணையூடே
கலைநெகிழ வளர்வஞ்சி யிடைதுவள வுடலொன்று
படவுருகி யிதயங்கள் ப்ரியமேகூர்
கலவிகரை யழியின்ப அலையிலலை படுகின்ற
கவலைகெட நினதன்பு பெறுவேனோ
அலையெறியு மெழில்சண்ட உததிவயி றழல்மண்ட
அதிரவெடி படஅண்டம் இமையோர்கள்
அபயமென நடுநின்ற அசுரர்பட அடியுண்டு
அவர்கள்முனை கெடநின்று பொரும்வேலா
தலைமதிய நதிதும்பை யிளவறுகு கமழ்கொன்றை
சடைமுடியி லணிகின்ற பெருமானார்
தருகுமர விடைவந்து தலையரவர் தொழுகின்ற
தணிமலையி லுறைகின்ற பெருமாளே. (௭௫)

---

தந்தந் தனதன தந்தந் தனதன
தந்தந் தனதன தனதான.

303. வங்கம் பெறுகட லெங்கும் பொருதிரை
வந்துந் தியதிரு மதனாலே

---

* மத்தம் - ஊமத்தம்.

வஞ்சம் பெறுதிட நெஞ்சன் கழலுற
வஞ்சம் பதும்விடு மதனாலே
பங்கம் படுமென தங்கந் தனிலுதி
பண்பொன் றியமொரு கொடியான
பஞ்சொன் றியமயில் நெஞ்சொன் றிடுமழல்
பொன்றுந் தனிமையை நினையாயோ
தெங்கந் திரளுட னெங்குங் கதலிகள்
சென்றோன் றியபொழில் அதனூடே
தெந்தெந் தெனதென என்றண் டுறஅளி
நின்றுந் திகழ்வொடு மயிலாடப்
பொங்குஞ் சுனைகளி லெங்குங் குவளைக
ளென்றும் புகழ்பெற மலரீனும்
பொன்றென் றணிகையில் நின்றங் கெழுப்புவி
யென்றுஞ் செயவல பெருமாளே. (௩௯)

---

தானத்தன தானன தந்தன தானத்தன தானன தந்தன
தானத்தன தானன தந்தன தனதான.

304 வாகுற்றெழு பூண்முலை வஞ்சியர் காருற்றெழு நீள்குழல்மஞ்சியர்
வாலக்குயில் போல்மொழி கொஞ்சியர் தெருமீதே
மாணுற்றெதிர் மோகன விஞ்சையர் சேலுற்றெழு கூர்விழி விஞ்சியர்
வாகக்குழை யாமப ரஞ்சியர் மயலாலே
சீருற்றெழு ஞானமு டன்கல்வி நேரற்றவர் மால்கொடு மங்கியெ
சேருற்றறி வானத ழிந்துயிர் இழவாமுன்
சேவற்கொடி யோடுசி கண்டியின் மீதுற்றறி ஞோர்புகழ்பொங்கிய
தேசுக்கதிர் கோடியெ னும்பதம் அருள்வாயே
போருற்றிடு சூரர்சி ரங்களை வீரத்தொடு பாரில ரிந்தெழு
*பூதக்கொடி சோரிய ருந்திட விடும்வேலா
பூதக்குலை யேவிழ மென்கயல் தாவக்குலை வாழைக ளுஞ்செறி
போகச்செநெ லேயுதி ருஞ்†செய்கள் அவைகோடி
சாரற்கிரி தோறுமெ ழும்பொழில் தூரத்தொழு வார்வினை சிந்திடு
‡தாதுற்றெழு கோபுரமண்டபம் அவைசூழுந்

---

* பூதக்கொடி – பூதங்களும் காக்கைகளும். கொடி - காக்கை,
† செய்கள் – வயல்கள். ‡ சாது - பொன்.

தார்மெத்திய தோரண மென்தெரு தேர்சுற்றிய வார்பதி அண்டர்கள்
தாமெச்சிய நீள்தணி யம்பதி பெருமாளே. (எஎ)

---

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்த தனதான.

305. வெற்றிசெய வுற்றகழை விற்குதைவ ளைத்துமதன்
விட்டகணை பட்ட விசையாலே
வெட்டவெளி யிற்குமுறி யிட்ட *பணை யிற்கனல்வி
ரித்தொளிப ரப்பு மதியாலே
பற்றிவசை கற்றபல தத்தையர்த மக்கும் †இசை
பட்ட ‡கிகி ரிக்கும் அழியாதே
பத்தியையெ னக்கருளி முத்தியைய ளித்துவளர்
பச்சைமயி லுற்று வரவேணும்
நெற்றிவிழி பட்டெரிய நட்டமிடு முத்தமர்தி
னைக்குமன மொத்த கழல்வீரா
நெய்க்கமல மொக்குமுகை மெய்க் ||குறவி யிச்சையுற
நித்தமிறு கத்த ழுவுமார்பா
எற்றியதி ருச்சலதி சுற்றியதி ருத்தணியி
லெப்பொழுது நிற்கு முருகோனே
எட்டசல மெட்டதில முட்டமுடி நெட்டசுர
ரிட்டசிறை விட்ட பெருமாளே. (எஅ)

---

வள்ளிமலை.

தையதன தான தையதன தான
தையதன தானத் தனதான.

306, அல்லில்விழி யாலு முல்லைநகை யாலு
மல்லல்பட ஆசைக் கடலீயும்
அள்ளவினி தான கள்ளவிர வுபோலு
முள்ளவினை யாரத் தனமாரும்
இல்லுமிளை யோரு மெல்லஅய லாக
வல்லெருமை மாயச் சமனாரும்

---

* பணை — பறை. † இசைபட்ட கிகிரி - புல்லாங்குழல். ‡ கிகிரி - மூங்கில், || குறவி - வள்ளிநாயகி.

வள்ளியெனு தாவி கொள்ளைகொளு நாளி
லுய்யவொரு நீபொற் கழல்தாராய்
தொல்லைமறை தேடி யில்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா
துள்ளிவிளை யாடு புள்ளியுழை மேவு
வெள்ளிவன மீதுற் றுறைவோனே
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லவடி வேலைத் தொடுவோனே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமானே. (௭௯)

307. ஐயுமுறு நோயு மையலும வாவி
னைவருமு பாயப் பலநூலின்
அள்ளல்கட வாது துள்ளியதின் மாயு
முள்ளமுமில் வாழ்வைக் கருதாசைப்
பொய்யுமக லாத மெய்யையவ மாகி
யுய்யும்வகை யோகத் தணுகாதே
புல்லறிவு பேசி யல்லல்படு வேனை
நல்லஇரு தாளிற் புனைவாயே
மெய்யபொழில் நீடு தையலை*முநாலு
செய்யபுய மீதுற் றணைவோனே
வெள்ளையிப மேறு வள்ளல்கிளை வாழ
†வெள்ளமுது மாவைப் பொருதோனே
வையமுழு தாளு மையமயில் வீர
வல்லமுரு காமுத் தமிழ்வேளே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமானே. (௮0)

---

தையத்த தான தந்த தையத்த தான தந்த
தையத்த தான தந்த தனதான.

308. கையொத்து வாழுமிந்த மெய்யொத்த வாழ்விகந்து
பொய்யொத்த வாழ்வுகண்டு மயலாகிக்

---

* முநாலு - பன்னிரண்டு. † வெள்ளமுதுமாவை - சமுத்திரத்திலுள்ள
ழையமாமரத்தை.

கல்லுக்கு நேரும் வஞ்ச வுள்ளத்தர் மேல்விழுந்து
கள்ளப்ப யோதரங்கள் உடன்மேவி
உய்யப்ப டாமல்நின்று கையர்க்கு பாயமென்று
பொய்யர்க்குமெய்யர்க்குள் உடைநாயேன்
உள்ளத்தி னூடு நின்று தொய்யப்ப டாமலென்றும்
* உள்ளத்தின் மாய்வதொன்றை மொழியாயோ
ஐயப்ப டாத † ஐந்து பொய்யற்ற சோலைதங்கு
தெய்வத்தெய் வானைகொங்கை புணர்வோனே
அல்லைப்பொ ருமுழங்கு சொல்லுக்க சேவலொன்று
வெல்லப்ப தாகைகொண்ட திறல்வேலா
வையத்தை யோடிமைந்து கையர்க்கு விந்தங்கை
மெய்யொத்த நீதிகண்ட பெரியோனே
வள்ளிக்கு ழாமடர்ந்த வள்ளிக்கல் மீதுசென்று
வள்ளிக்கு § வேடைகொண்ட பெருமாளே. (அசு)

309. முல்லைக்கு மாரனங்கை வில்லுக்கு மாதர்தங்கள்
|| பல்லுக்கும் வாடியின்ப முயலாநீள்
முள்ளூற்ற கால்மடிந்து கொள்ளிக்குள் மூழ்கிவெந்து
பள்ளத்தில் வீழ்வதன்றி யொருஞான
எல்லைக்கு மாரணங்கள் சொல்லித்தொ ழாவணங்கு
மெல்லைக்கும் வாவிநின்றன் அருள்நாமம்
எள்ளற்கு மாலயர்ந்து வுள்ளத்தி லாவுமென்றும்
உள்ளப்பெ ரு¶ரிணங்கை யொழிவேனோ
○ அல்லற்ற வானைதந்த வல்லிக்கு மார்பிலங்க
அல்லிப்பொன் மார்பலங்கல் புனைவோனே
அள்ளற்ப டாதகங்கை வெள்ளத்து வாவிதங்கி
மௌ்ளச்ச ரோருகங்கள் பயில்நாதா
வல்லைக்கு மாரகந்த தில்லைப்பு ராரிமைந்த
மல்லைப்பொ ராறிரண்டு புயவீரா
வள்ளிக்கு ழாமடர்ந்த வள்ளிக்கல் மீதுசென்று
வள்ளிக்கு வேடைகொண்ட பெருமாளே. (அஎ)

---

* உள்ளத்தின் மாய்வு—மனோலயம். † ஐந்து சோலை—ஐவகைத் தெய்வ தருக்கள் நிறைந்த சோலை. § வேடை—ஆசை. || பல்லுக்கும் — நகைக்கும் ¶ ரிணங்கை—இணக்கத்தை. ○ அல்லற்ற—ஒளிவிளங்கிய.

சொல்லுமரவிந்த வல்லிகனிகின்று
தொல்லைவினையென்று முனியாதே
தூய்யவரிவண்டு செய்யமதுவுண்டு
துள்ளியகடம்பு தரவேணும்
*கல்லசலமங்கை யெல்லையில்விரிக்க
கல்விகரைகண்ட புலவோனே
கள்ளொழுகுகொன்றை வள்ளல்தொழுதன்று
கல்லலறவொன்றை பகர்வோனே
வல்லசுரரஞ்ச நல்லசுரர்விஞ்ச
வல்லமைதெரிந்த மயில்வீரா
வள்ளிபடர்கின்ற வள்ளிமலைசென்று
வள்ளியையணைந்த பெருமாளே. (அசு)

---

தனதன தனதன தனதன தனதன
தையத்தனத்த தனதான.

312. ககனமு †மனிலமு மனல்புனல் நிலமமை
கள்ளப்புலாற்கி ருமிவீடு
கனவிழ வொழிதரு சினமென மதமிரு
கள்வைத்த சேற்றை மருவாதே
யுகமுடி விகளினு மிறுதியி லொருபொருள்
உள்ளக்கணோக்கு மறிவூறி
ஒளிதிக ழுருவரு வெனுமறை யிறுதியில்
உள்ளத்தை நோக்க அருள்வாயே
ம்ருகமத பரிமள விகசித ‡கமலன்
வெள்ளைப்பிராட்டி இறைகாண
விடதர குடிலசடிலமிசை வெகுமுக
வெள்ளத்தையேற்ற பதிவாழ்வே
வகுளமு முகுளித §வழைகளு மலிபுன
வள்ளிக்||குலாத்தி கிரிவாழும்
வனசரர் மரபினில் வருமொரு மரகத
வள்ளிக்குவாய்த்த பெருமாளே. (அரு)

குறிப்பு:—இப்பாடலில் ஒவ்வோரடியினும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்கப் பின் வருமாறு பிறிதொரு பாடலாம்.

---

* சுப்பிரமணிய பராக்ரமம் சகலகலா வல்லப மூர்த்தி சரித்திரம் இங்கே கவனிக்கத் தக்கது. † அனிலம் - காற்று. ‡ கமலன் வெள்ளைப்பிராட்டி இறை சரஸ்வதி தேவியின் நாயகனான பிரமன். § வழை-சுரபுன்னை || குலத்திகிரி குலாத்திகிரி என்றாயிற்று. வள்ளிக்குலத்திகிரி சிரேஷ்டமாகிய வள்ளிமலை.

இரசதை மெய்க்கொண்டிடப் புவி பாலர் பொன்
மயக்கி லுற்றம் பற்றைவிடா துட
லினைப்பிணைப் புந்தித்தமு மாய்நரை முதிர்வேனை
எமக்க யிற்றின் சிக்கினி லாழுறுன்
மலைப்ப தத்தின் பத்திவிடா மனை
திருந்து நற்றொண்டர்க்கிணை யாகவுன் அருள்தாராய்
புகழ்ச்சி லங்கந் தர்ப்பனு மேடிபாடி
படைச்சி ரித்தன் முப்புரம் நீறுசெய்
புகைக்க னற்கண் பெற்றவர் காதலி பயும்பாலா
புவிக்குள் யுத்தம் புத்திரர் சேர
வளைத்து முற்றுஞ் செற்றிட வேபகை
புகட்டி வைக்குஞ் சக்கர பாணிதன் மருகோனே
திகழ்க்க டப்பம் புட்பம தார்புய
மறைத்து ருக்கொண் டற்புத மாகிய
தினைப்பு னத்தின் புற்றுறை பாவையை யணைசீலா
செகத்தி லுச்சம் பெற்றம ராவதி
யதற்கு மொப்பென் றுற்றழ கேசெறி
திருக்க ழுக்குன் றத்தினில் மேவிய பெருமாளே.(அஅ)

தான தத்த தனந்த தனு தனுதன
தான தத்த தனந்த தனு தனுதன
தான தத்த தனந்த தனு தனுதன தனனதான.

316. ஓலமிட்ட சுரும்பு தனு தனுவென
வேசிரத்தில் விழுந்*கை பளீர்பளீரென
வோதை பெற்ற சிலம்பு கலீர் கலீரென விராகலீலை
ஓர்மி டற்றி லெழும்புள் குகூ குகூவென
வோர்வை மொத்த வெழுந்து சலா சலாவென
ரோமகூர்ச மிறைந்து சிலீர் சிலீரென அமுதமாயன்
ஆலயத்து விருந்து குபீர் குபீரென
வேரு திக்க வுடம்பு விரீர் விரீரென
ஆர முத்த மணிந்து அளா வளாவென மருவுமாதர்

*கை-ஒழுங்கு

அசை பிறக்கை கலந்து சமர சமரபய
சாகரத்தி லெழுந்து முழா முழாதுளம்
ஆடிறழுக்கை நினைந்து குகா குகாவென வகைவராதே
பாலைவிட்ட சிரங்கள் செவேல் செவேலென
வேலை முழ்சி குதம்பால் வெளேல் வெளேலென
வாகைபெற்ற புயங்கள் கறேல் கறேலென எதிர்கொள்சூரன்
மார்பு மொக்க நெரிந்து கரீல் கரீலென
பேய்க்குதிக்க கிணங்கள் குழூ குழூவென
வாய்புதைத்து விழுந்து ஐயோ ஐயோவென வதிமாறும்
வேலை வற்றி வரண்டு சுறீல் சுறீலென
மாலைவெற்பு மிடிந்து திமீர் திமீரென
மேன்மைபெற்ற ஜனங்கள் ஜயா ஜயாவென இமையவர்கூற
வேலெடுத்து நடந்த திவாகராசல
வேடுவப்பெண் மணந்த புயாசலாதமிழ்
*வேதவெற்பிலமர்ந்த க்ருபாகரசிவ குமாரவேளே (அசை)

---

தனன தன தான தனன தன தான
தனன தன தான தனதான.

317. †எழுகுநிறை நாபி அரிபிரமர் சோதி
இலகுமரன் மூவர் முதலானோர்
இறைவியெனு மாதி பரைமுலையி லூறி
யெழுமமிர்த நாறு கனிவாயா
புழுகொழுகு காழி கவுணியரில் ஞான
புநிதனென ஏடு தமிழாலே
புனலிலெதி ரேற அமணர்கழு வேற
அமர்பொருத வீர குருநாதா
மழுவுழைக பால டமரகத்ரி சூல
மணிகரவி நோதர் அருள்பாலா
மலரயனை நீடு சிறைசெய்தவன் வேலை
வளமைபெற வேசெய் முருகோனே

---

* வேதவெற்பு - திருக்கழுக்குன்றம். † எழுகு-எழுலகம்.

கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு
கதிருலவு வாசல் நிறைவானோர்
கடலொலியு தான தமிழ்மறைக ளோது
*கதலிவன மேவு பெருமாளே. (சுo)

---

## மயிலம்.

தனதந்த தானன தானா தானா
தனதந்த தானன தானா தானா தனதான.

318. கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்

குயில்தங்கு மாமொழி யாலே நேரே
யிழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானோ விதமாகி

உலைகொண்ட மாமெழு காயே மோகா
யலையம்பு ராசியி னூடே மூழ்கா
வுடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ

உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனையண்டி யேகம னார்தா தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள்நீ மீதா அருள்வாயே

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூர்
அணியஞ்†ச ராசனம் வேறாய் நீறா யிடவேதான்

அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீர்
அனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ரூபக ஏகா வேறோர் வடிவாகி

மலைகொண்ட வேடுவர் காணா டேபோய்க்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண்‡டு லாயவள் தாள்மீ தேவீழ் குமரேசா

மதிமிஞ்சு போதக மேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே. கூக

---

* கதலிவனம்—திருக்கழுக்குன்றம். † சராசனம்—வில். ‡ உலாய்—உலாவி.

## திரிசிராபள்ளி.

---

தந்த தாத்தன தத்தத் தானன
தந்த தாத்தன தத்தத் தானன
தந்த தாத்தன தத்தத் தானன தனதான.

19. அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய
கொங்கை காட்டிம றைத்துச் சீரிய
அன்பு போற்பொய்ந டித்துக் காசளவுறவாடி
அம்பு தோற்றக ணிட்டுத் தோதக
இன்ப சாத்ரமு ரைத்துக் கோகிலம்
அன்றில் போற்குர லிட்டுக் கூரிய நகரேகை
பங்க மாக்கிய லைத்துச் சாதனை
கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்
பண்பில் வாய்க்கம யக்கிக் கூடுதல் இயல்பாகப்
பண்டி ராப்பகல் சுற்றிச் சூளைகள்
தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி
பங்கர் போற்றிய பத்மத் தாள்தொழ அருள்வாயே
எங்கு மாயக்குறை வறுசே தன
அங்க மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்
இன்ப மாய்ப்புகழ் முப்பத் தாறினின் முடிவேறாய்
இந்த்ர கோட்டிம யக்கத் தான்மிக
மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத
மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல வயலூரா
செங்கை வேற்கொடு துட்டச் சூரனை
வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்
தின்று கூத்துந டிக்கத் தோகையில் வரும்வீரா
செம்பொ னுற்றிகழ் சித்ரக் கோபுர
மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு
தென்சி ராப்பளி வெற்பிற் றேவர்கள்பெருமாளே (௬௨)

---

தந்தானன தானன தாத்தன
தந்தானன தானன தாத்தன
தந்தானன தானன தாத்தன தனதான.

320. அந்தோமன மௌனம தாக்கையை
நம்பாதெயி தாகித சூத்திர
மம்போருக ளுடிய பூட்டிது இனிமேல்நாம்

அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ ஞர்க்கிய
லங்காருவம் வாஇனி தாக்கையை ஒழியாமல்

வந்தோரிரு வேகதி யாட்சிபு
ரிந்தாமயில் வாகனர் சீட்டிது
வந்தாளுவம் நாமென வீக்கிய சிவநீறும்

வந்தேவெகு வானமை யாட்கொளும்
*வந்தார்மத மேதினி மேற்பட
மைந்தாருடம ராவென வார்த்துள மறவாதே

கிந்தோதிமி கிதத மாத்துடி
தந்தாதன ளுதன தாத்தன
செம்பூரிகை பேரிகை யார்த்தெழ மறையோதச்

செங்காடென வேவரு மூர்க்கர்கள்
சங்காரசி காமணி வேற்கொடு
திண்டாடம காமயில் மேற்கொளு முருகோனே

இந்தோடிதழ் நாக†ம காப்புனல்
கங்காளமி ளுர்சடை சூட்டிய
என்தாதைச தாசிவ கோத்திரன் அருள்பாலா

எண்கூடரு ளால்நௌவி நோக்கியை
நன்பூமண மேவுசி ராப்பளி
யென்பார்மன மேதனி நோக்கிய பெருமாளே. (௩௯)

---

தனதன தந்தன தாத்தன தனதன தந்தன தாத்தன
தனதன தந்தன தாத்தன தனதான.

321. அரிவையர் நெஞ்சுரு காப்புணர் தருவிர கங்களி ளுற்பெரி
தவசம்வி ளைந்துவி டாய்த்தடர் முகைமேல்வீழ்ந்

* வந்தார்—தென்றற்றேருடையார், மதன். †மகாப்புனல்—கங்கை.

தகிலொடு சந்தனசேற்றினில்முழுகியெழுந்தெதிர்கூடப்புகை
யடியின கம்பிறை போற்பட விளையாடிப்
பரிமளம் விஞ்சிய பூக்குழல் சரியாம ருங்கிடை போய்ச்சில
பறவைக ளின்குர லாய்க்கயல் விழிசோரப்
பனிமுக முங்குறுவேர்ப்பெழஇதழமுதுண்டிரவாய்ப்பகல்
பகடியி டும்படி தூர்த்தனை விடலாமோ
சரியையு டன்க்ரியை போற்றிய பரமப தம்பெறுவார்க்கருள்
தருகணன் ரங்கபு ரோச்சிதன் மருகோனே
சயிலமெறிந்தகைவேற்கொடு மயிலினில்வந்தெனையாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய குருநாதா
திரிபுவ னந்தொழு பார்த்திபன் மருவிய மண்டபகோட்டிகழ்
தெருவில்வி ளங்குசி ராப்பளி மலைமீதே
திரியஇ ருந்தப ராக்ரம உருவளர் குன்றுடை யார்க்கொரு
திலதமெ னும்படி தோற்றிய பெருமாளே. (கூச)

---

தனதன தானன தானன தனதன தானன தானன
தனதன தானன தானன தந்ததான.

322. அழுதழு தாசாரநேசமுழுமையவர்போலே பொய்சூழ்வுறும்
அசடிகள் மாலான காமுகர் பொன்கொடாநாள்
அவருடன் வாய்பேசிடாமையு முனிதலுமாறாதசேஷிகள்
அறுதியில் காசாசை வேசைகள் நஞ்சுதோயும்
விழிகளி னல்மாட வீதியில் முலைகளை யோராம லாரொடும்
விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத
விரகிகள் வேதாள மோவெனமுறையிடுகோமாளிமூளிகள்
வினைசெய லாலேயெ னவிம யங்கலாமோ
வழியினில் வாழ்ஞான போதக பரமசு வாமீவ ரோதய
வயலியில் வேலாயு தாவரை யெங்குமானாய்
மதுரையின் மீதால வாயினில் எதிரம ணரோரெ ணாயிரர்
மறிகழு மீதேற நீறுப ரந்துலாவச்
செழியனு மாளாக வாதுசெய் கவிமத சீகாழி மா*முனி
சிவசிவ மாதேவ காவென வந்துபாடுந்

---

* முனி — யானைக்கன்று.

திருவுடை யாய்தீதி லாதவர் உமையொரு பாலான மேனியர்
*சிரகிரி வாழ்வான தேவர்கள் தம்பிரானே (௬௫)

---

தனதன தந்தத் தனதன தந்தத்
தனதன தந்தத் தனதான.

323. இளையவர் நெஞ்சத்†தளையமெ னுஞ்சிற்
றிடைகொடி வஞ்சிக் கொடிபோல்வார்
இணையடி கும்பிட் டணியுடல் கம்பித்
திதழமு துந்துய்த் தணியாரக்
களபசு கந்தப் புளகித இன்பக்
கனதன கும்பத் திடைமூழ்கும்
கலவியை நிந்தித் திலகிய நின்பொற்
கழல்தொழு மன்பைத் தருவாயே
தளர்வறு பன்பர்க் குளமெனு மன்றிற்
சதுமறை சந்தத் தொடுபாடத்
தரிகிட தந்தத் திரிகிட திந்தித்
தகுர்தியெ னுங்கொட் டெடுடித்
தெளிவுற வந்துற் றொளிர்சிவ னன்பிற்
சிறுவஅ லங்கற் றிருமார்பா
செழுமறை யஞ்சொற் பரிபுர கொண்டற்
‡திரிசிர குன்றப் பெருமாளே. (௬௬)

---

தனதன தத்தந் தனதன தத்தந்
தனதன தத்தந் தனதான.

324. பகலவ னொக்குங் கனவிய ரத்நம்
பவளவெண் முத்தந் திரமாகப்
பயிலமு கைக்குன் றுடையவர் சுற்றம்
பரிவெனவைக்கும் பணவாசை
அகமகிழ் துட்டன் பகிடிம ருட்கொண்
டழியுமவத்தன் கு

---

* சிரகிரியென்பது திருசிராப்பள்ளி. † தளையம் - விலங்கு. ‡ திரிசிர குன்றம் - திரிசிராப்பள்ளி.

அறிவிலி சற்றும் பொறையிலி பெற்றுன்
டலைததொ ழித்தென் றருள்வாயே
சகலரு மெச்சும் பரிமள பத்மத்
தருணப தத்திண் சுரலோகத்
தலைவர்ம கட்குங் குறவர்ம கட்குந்
தழுவஅ ணைக்குந் திருமார்பா
செகதல மெச்சும் புகழ்வய லிக்குந்
திகுதிகெ னப்பொங் கியவோசை
*திமிலைத விற்றுந் துமிகள்மு ழக்குஞ்
சிரகிரி நிற்கும் பெருமாளே. (௯௭)

---

தனனதன தந்த தனனதன தந்த
தனனதன தந்த தனதான.

325. ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடு செங்கை யுறவாடி
ஒருவரொடு சிந்தை ஒருவரொடு நிந்தை
ஒருவரொடு ரண்டு முறையாரை
மருவமிக அன்பு பெருகவுள தென்று
மனநினைவு மிந்த மருள்தீர
வனசமென வண்டு தனதனனவென்று
மருவுசர ணங்கள் அருளாயோ
அரவமெதிர் கண்டு நடுநடுந டுங்க
அடவிடுப்ர சண்ட மயில்வீரா
அமரர்முத லன்பர் முநிவர்கள்வ ணங்கி
அடிதொழவி ளங்கு வயலூரா
திருவையொரு பங்கர் கமலமலர் வந்த
திசைமுகன் மகிழ்ந்த பெருமானார்
திருதகுதியென்று நடமிட முழங்கு
திரிசிரகல் வந்த பெருமாளே (௯௮)

---

* திமிலைதவிற்றுந்துமி - திமிலை, தவில் துந்துமி.

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

326 குமுத வாய்க்கனி யமுத வாக்கினர்
சோலை வேலை சேலை போலை அழகான
குழைகள் தாக்கிய விழிக ளார்க்களி
கூரா வீறு தீரா மாரா யவரோடே
உமது தோட்களி லெமது வேட்கையை
ஓரீர் பாரீர் வாரீர் சேரீர் எனவேவகின்
றுடைதொ டாப்பணி யிடைபொ ருத்தன
றோடே வீழ்வே னீடேறுதே யுழல்வேனோ
தமர வாக்கிய அமரர் வாழ்த்திய
தாதா வேமா ஞாதா வேதோ கையிலேறி
சயில நாட்டிறை வயலி நாட்டிறை
சாவா மூவா மேவா நீவா இளையோனே
திமிர ராக்கதர் சமர வேற்கர
தீரா வீரா நேரா தாரா உமைபாலா
திரிசி ராப்பளி மலையின் மேற்றிகழ்
தேவே கோவே வேளே வானோர் பெருமானே

தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன தனதான

327 குவளை பூசல்வி ளைத்திடு மங்கயல்
கடுவு தாமெனு மைக்கண் மடந்தையர்
குமுத வாயமு தத்தை நுகர்ந்திசை பொருகாடை
குயில்பு றாமயில் குக்கில் சுரும்பினம்
வன†ப தாயுத மொக்கு மெனும்படி
குரல்வி டாஇரு பொற்குட மும்புள கிதமாகப்
பவள ரேகைப டைத்தத ரங்குறி
யுறவி யாளப டைத்தை யணிந்துகை
பரிச தாடன மெய்க்கர ணங்களின் மதநூலின்

* குக்கில் – செம்போத்து. † புதாயுதம் - கோழி.

படியி லேசெய்தா ருக்கிமு யங்கியெ
அவச மாய்வட பத்ர நெடுஞ்சுழி
படியு மோகச முத்ர மழுந்துதல் ஒழிவேனோ
தவள ரூப*சரச்வதி யிந்திரை
ரதிபு லோமசை க்ருத்திகை ரம்பையர்
சமுக சேவித துர்க்கை பயங்கரி புவனேசை
சகல காரணி சத்தி பரம்பரி
யிமய பார்வதி ருத்ரி நிரஞ்சனி
சமய நாயகி நிட்களி குண்டலி யெமதாயி
சிவம நோன்மணி சிற்சுக சுந்தரி
கௌரி வேதவி தக்ஷணி யம்பிகை
த்ரிபுரை யாமளை யற்பொடு தந்தருள் முருகோனே
சிகர கோபுர சித்திர மண்டப
மகர தோரண ரத்ந அலங்க்ருத
திரிசி ராமலை அப்பர் வணங்கிய பெருமாளே. (௧௦௦)

---

தத்த தானா தனாதன தத்த தானா தனாதன
தத்ததானா தனாதன தந்ததான.

328. சத்தி பாணீ நமோநம முத்தி ஞானீ நமோநம
தத்வ வாதீ நமோநம விந்துநாத
சத்த ரூபா நமோநம ரத்ந தீபா நமோநம
தற்ப்ர தாபா நமோநம என்றுபாடும்
பத்தி பூணா மலையுல கத்தின் மாணர் சவா தகில்
பச்சை பாம ரபூஷித கொங்கைமேல்வீழ்
பட்டி மாடா னநாணாளை விட்டி ராமே †யுலோகித
பத்ம சீபா தநீயினி வந்துதாராய்
அத்ர தேவா யுதாகர ருக்ர சேனா பதீசுசி
யர்க்ய‡சோமா சியாகுரு சம்ப்ரதாயா
அர்ச்ச னாவா கனாவய லிக்குள் வாழ்நா யகாபுய
§அட்ச மாலா தராகுற மங்கைகோவே

---

* சரச்வதி - சரசுவதி. † உலோகிதம் - செம்மைநிறம். ‡ சோமாசி - யாகர்த்தா. § அட்சமாலா - ருத்திராக்ஷ மாலிகை.

சித்ர கோலா கலாவிர லக்ஷ்மி சாதா ரதாபல
திக்கு பாலா சிவாகம தந்த்ரபோதா
சிட்ட நாதா சிராமலை யப்பர் ஸ்வாமி மகாவ்ருத
தெர்ப்பை யாசா ரவேதியர் தம்பிரானே. (௧௦௧)

---

தனன தனனத் தனதான.

329. பகலிரவினிற் றடுமாறு பதிகுருவெனத் தெளிபோத
ரகசியமுரைத் தநுபூதி ரதநிலைதனைத் தருவாயே
இகபரமதற் கிறையோனே இயலிசையின்முத் தமிழோனே
சகசிரகிரிப் பதிவேளே சரவணபவப் பெருமாளே. (௧௦௨)

---

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான.

330. புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற்
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித் திடலாவி
புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே
தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
தணியற் கனுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்முட் டியிசித் திடவாய்கண்
சலனப் படஎற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் தும்யம* ப்ரகரத் துயர்தீராய
பவனத் தையொடுக் குமனக் கவலைப்
ப்ரமையற் றைவகைப் புலனிற் கடிதிற்
படரிச் சையொழித் ததவச் சரியைக் க்ரியையோகர்
பரிபக் குவர்கிட் டைநிவிர்த் தியினிற்
பரிசுத் தர்விரத் தர்கருத் ததனிற்
பரவப் படுசெய்ப் பதியிற் பரமக் குருநாதா

* ப்ரகரத்துயர் - மிக்ககொலைத் துன்பம்.

சிவனுந் தமனித் தவுருத் திரன்முக்
கணனக் கன்மழுக் கானுக் ரரணத்
த்ரிபுரத் தையெரித் தருள்சிற் குணசிற் குணகி
செகவித் தனிசப் பொருள்சிற் பரனற்
புதனைப் பிலியுற் பவபத் மதடத்
த்ரிசிரப் புரவெற் புறைசற் குமரப் பெருமாளே.(௮௦௬)

---

தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன தந்ததான.

837. பொருளின் மேற்பரிய காமா காரிகள்
பரிவு போற்புணர க்ரீடா பீடிகள்
புருஷர் கோட்டியில் நாணா மோடிகள் கொங்கைமேலே
புடைவை போட்டிடு மாயா ரூபிகள்
மிடிய ராக்குபொ லாமூ தேவிகள்
புலையர் மாட்டுமெ ருதே கூடிகள் நெஞ்சமாயம்
கருதொ ணாப்பல கோடா கோடிகள்
விரகி னாற்பலர் மேல்வீழ் வீணிகள்
கலவி சாத்திர நூலே யோதிகள் தங்களாசைக்
கவிகள் கூப்பிடு மோயா மாரிகள்
அவச மாக்கிடு பேய்நீ ரூணிகள்
கருணை நோக்கமி லாமா பாவிகள் இன்பமாமோ
குருக டாக்ஷக லாவே தாகம
பரம வாக்கிய ஞானா சாரிய
குறைவு தீர்த்தருள் ஸ்வாமீ கார்முக வன்பரான
கொடிய வேட்டுவர் கோகோ கோவென
மடிய நீட்டிய கூர்வே லாயுத
குருகு க்ஷேத்ரபு ரேசா வாசுகி அநேசமாறும்
செருப ராக்ரம*கேகே வாகன
சரவ ணோற்பவ மாலா லாளித
திரள்†பு யாத்திரி யீரா றுகிய கந்தவேளே

---

* கேகயம் — மயில். † புயாத்திரி — புயமலை.

சிகர தீர்க்கம காசி கோபுர
முகசு டாக்கர சேணு டாக்ருத
திரிசி ராப்பளி வாழ்வே தேவர்கள் தம்பிரானே. (க0சு)

---

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான.

332. பொருள்கவர் சிந்தை அரிவையர் தங்கள்
புழுககில் சந்து பனிநீர்தோய்
புளகித கொங்கை யிளகவ டங்கள்
புரளம ருங்கில் உடைசோர
இருள்வளர் கொண்டை சரியஇ மைசந்து
இணைதரு பங்க அநுராகத்
திரிதலொ ழிந்து மனதுக சிந்துன்
இணையடி யென்று புகழ்வேனே
மருள்கொடு சென்று பரிவுட னன்று
மலையில்வி ளைந்த தினைகாவல்
மயிலை மணந்த அயிலவ எங்கள்
வயலியில் வந்த முருகோனே
தெருளுறு மன்பர் பரவவி ளங்கு
திரிசிர குன்றில் முதல்வனில்
தெரியஇ ருந்த பெரியவர் தந்த
சிறியவ அண்டர் பெருமாளே. (க0ரு)

---

தானத்தத் தான தானன தானத்தத் தான தானன
தானத்தத் தான தானன தந்ததான.

333. வாசித்துக் காணொ ணாதது பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது நெஞ்சினாலே
மாசர்க்குத் தோணொ ணாதது நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது விந்துநாத
ஓசைக்குத் தூர மானது மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி யானது கண்டுநாயேன்

யோகத்தைச் சேரு மாறுமெய் ஞானத்தைப் போதி யாயினி
யூனத்தைக் கீழ்வி டாதும யங்கலாமோ
ஆசைப்பட் டேனல் காவல்செய் வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி கந்தவேளே
*ஆலித்துச் சேல்கள் பாய்வய லூரகத்திற் காள மோடட
ராரத்தைப் பூண்ம யூரது ரங்கவீரா
நாசிக்குட் ப்ராண வாயுவை ரேசித்தெட் டாத யோகிகள்
நாடுற்றுக் காணொ ணாதென நின்றநாதா
நாகத்தீச ராலைக போயுயர் மேகத்தைச் சேர்கி ராமலை
நாகாக்கு ராசாரியே சுரர் தம்பிரானே (க0சா)

---

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தனதான.

334. வெருட்டி யாட்கொளும் விடபிகள் புடவையை
நெகிழ்த்த ணுப்பிகள் படிறிகள் சடுதியில்
விருப்ப மாக்கிகள் விரவிய திரவிய மிலராணல்
வெறுத்து நோக்கிகள் கபடிகள் நடமிடு
பதத்தர் தூர்த்திகள் ம்ருகமத பரிமள
விசித்ர மேற்படு முலையினு நிலையினு மெவரோடும்
மருட்டி வேட்கைசொல் மொழியினும் விழியினு
மகிழ்த்த பூக்கமழ் குழலினு நிழலினும்
மதிக்கொ ணாத்தள ரிடையினு நடையினு மவமேயான்
மயக்க மாய்ப்பொருள் வரும்வகை க்ரிஷிபணு
தடத்து மோக்ஷம தருளிய பலமலர்
மணத்த வார்க்கழல் கனவினு நனவினு மறவேனே
இருட்டி லாச்சுர ருலகினி லிலகிய
சகத்ர நேத்திர முடையவன் மிடியற
இரக்ஷை வாய்த்தருள் முருகபனிருகர குகவீரா
இலக்ஷமீச்சுர பசுபதி குருபர

---

* ஆலித்து-களித்து.

சமஸ்த ராச்சிய பதிபுகழ் வயமியல்
இலக்க ரேய்ப்படை முகடெழு ககபதி களிகூரத்
திருட்டு ராக்ஷதர் பொடிபட வெடிபட
எடுத்த வேற்கொடு கடுகிய முடுகிய
செருக்கு வேட்டுவர் திறையிட முறையிட மயிலேறும்
செருப்ப ராக்ரம நிதிசர வணபவ
சிவத்த பாற்கர னிமகரன் வலம்வரு
திருச்சி ராப்பளிமலைமிசை நிலைபெறு பெருமாளே (க0எ)

---

## திருக்கற்குடி (உய்யக்கொண்டான்)

---

தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத் தனதான.

335 குடத்தைத் தகர்த்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்
குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துத் தவர்சோரப்
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட் டகச்சுத் தனமாதர்
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
†புரித்துப் பதத்தைத் தருவாயே
கடத்துப் புனத்துக் குறத்திக் குமெத்தக்
கருத்திச் சையுற்றுப் பரிவாகக்
கனக்கப் ப்ரியப்ப டகப்பட் டுமைக்கட்
கடைப்பட் டுநிற்கைக் குரியோனே
தடத்துற் பவித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித் தகொற்றத் தனிவேலா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே.(க0அ)

---

* திரிசிரபுரத்துக்குத் தென் மேற்கு 2-மைல் தூரத்திலுள்ளது.
† புரித்து—புரிந்து, செய்து.

தனத்தக் தனத்தத் தத்த தனத்தக் தனத்தத் தத்த
தனத்தக் தனத்தக் தத்த தனதான.

338 நெறித்துப்பொருப்புக்கொத்தமுலைக்குத் தனத்தைக்கொட்டி
நிறைத்துச் சுகித்துச் சிக்கி வெகுநாளாய்
நினைத்துக் கொடுத்துக் கத்தை யவத்தைக் கடுக்கைப் பெற்று
நிசத்திற் கழுத்திப் பட்ட அடியேனை
இறுக்கிப் பிடித்துக்கட்டி யதைத்துத் துடிக்கப் பற்றி
யிழுத்துத் துவைத்துச் சுற்றி யமதூதர்
எனக்குக் கணக்குக் கட்டு விரித்துத் தொகைக்குட் பட்ட
இலக்கப் படிக்குத் தக்க படியேதான்
முறுக்கித் திருப்பிச் சுட்டு மலத்திற் புகட்டித் திட்டி
முழுக்கக் கலக்கப் பட்டு அலையாமல்
மொழிக்குத் தரத்துக் குற்ற தமிழிக்குச் சரித்துச் சித்தி
முகத்திற் களிப்புப் பெற்று மயிலேறி
உறுக்கிச் சினத்துச் சத்தி யயிற்குத் தரத்தைக் கைக்குள்
உதிக்கப் பணித்துப் பக்கல் வருவாயே
உனைச்சொற் றுதிக்கத் தக்க கருத்தைக் கொடுத்துச் சித்தி
யுடைக்கற் குடிக்குட் பத்தர் பெருமாளே (கoசு)

---

## இரத்நகிரி - (வாட்போக்கி

---

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

337. கயலைச் சருவிப் பிணையோத் தலர்பொற்
கமலத் தியல்மைக் கணினாலே
கடிமொய்ப் புயலைக் கருதிக் கறுவிக்
கதிர்விட் டெழுமைக் குழலாலே
நயபொற் கலசத் தினைவெற் பினைமிக்
குளநற் பெருசெப் பிணையாலே
நலமற் றறிவற் றுணர்வற் றனனற்
கதியெப் படியுற் றிடுவேனே

புயலுற் றியல்மைக் கடலிற் புகுகொக்
கறமுற் சரமுய்த் தமிழ்வோடும்
பொருதிட் டமரர்க் குறுதுக் கமும்விட்
டொழியப் புகழ்பெற் றிடுவோனே
செயசித் திரமுத் தமிழுற் பவநற்
செபமுற் பொருளூற் றருள்வாழ்வே
சிவதைப் பதிரத் தினவெற் பதனிற்
றிகழ்மெய்க் குமரப் பெருமாளே. (கக0)

---

தத்தன தானனத் தனதான.

338. பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே. (கககக)

---

## விராலிமலை.

---

தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன தனதான

339. இதமுறு விரைபுனல் முழுகி யகில்மண
முதவிய புகையினி லளவி வகைவகை

சொக்கலர்க ளின்றொடையல் வைத்துவளர் கொண்டலெனை
அறலென இசையளி யெனநு விருளெனு
நிறமது கருகிநெ டுகிநெ றிவுபட
நெய்த்துமுசு வின்றிரிகை யொத்தசுருள் குந்தளமும்
இலகிய பிறையென எயினர் கிலையென
*விலகிய திலதநு தலும திமுகமும்
உற்பலமும் வண்டுவடு விற்கணைய மன்படரு முனைவாளும்
இடர்படு கவுநடு வனும்வ லடல்பொரு
கடுவது மெனநெடி தடுவ கொடியன
இக்குசிலை கொண்டமதன் மெய்த்தவநி றைந்தவிழி
தளவன முறுவலு மமுத குமுதமும்
விளைநற வினியமொ ழியுமி னையதென
ஒப்பறுந கங்கள்விரல் துப்பெனவு றைந்துகமு
கிடியொடி படவிணை செயும்வின் மதகலை
நெடிய †கவுடியிசை முரலு சுரிமுகம்
நத்தனைய கண்டமும்வெண் முத்துவிளை ‡விண்டனைய எழில்தோளும்
விதரண மனவித னமதை யருள்வன
சததள மரைமுகி ழதனை நிகர்வன
புத்தமிர்து கந்தகுடம் வெற்பெனநி ரம்புவன
இமசல மிர்கமத களப பரிமள
தமனிய ப்ரபைமிகு தருண புளகித
சித்ரவர மங்கலவி சித்ரவிரு துங்ககன
விகசித மிருதுள ம்ருதுள நவமணி
முகபட விகடின தனமுமுயர் §வட
பத்திரமி ருந்தகடி லொத்தசுழி யுந்தியுள மதியாத
விபரித முடையிடை யிளைஞர் களைபட
அபகட மதுபுரி யரவ சுடிகைய
ரத்நபண மென்பவழ குற்றவரை யும்புதிய
துணியத ளிரெனவு லவிய பரிபுர
அணிநட னபதமு முடைய வடிவினர்

* விலகிய - விசாலமான. † கவுடி என்பது ஓர் விதபண். ‡ விண்டு மூங்கில் § வடபத்திரம் இருந்த அகடில் - ஆலிலை போன்ற அடிவயிற்றில்.

பொற்கவின் யின்பமதி துக்கமென லன்றியவர்
விரகினி லெனதுறு மனம துருகிய
பிரமையு மறவுன தருள்கை வரவுயர்
பத்திவழி யும்பரம முத்திநெறி யுந்தெரிவ தொருநாளே

தததத தததத் ததத தததத
திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி
தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி
டகுடகு டிகுடிகு டிகுகு டிகுடிகு
டிகுடிகு டகுடகு டிகுகு டகுடகு
தத்ததிமி டங்குகுகு தித்திதிமி டிங்குகுகு
தமிதமி தமிதகக தமித திமிதக
திமிதிமி செககண திமித திகதிக
தக்திமித திந்திமித தித்திமிதி திந்திமிதி யெனவோதான்

தபலைகு டமுழவு திமிலை படகம
தபுதச லிகைதவில் முரசு கரடிகை
மத்தளித வண்டையற வைத்தகுணி துந்துமிகள்
மொகுமொகு மொகுவென அலற விருதுகள்
திருதிரு திருவென அலைகை குறளிகள்
விக்கிடமி ணம்பருக *பக்கியுவ ணங்கழுகு
சதிர்பெற அதிர்தர உததி சுவறிட
எதிர்பொரு நிருதர்கள் †குருதி பெருகிட
வப்புவின்மி தந்தெழுப தற்புதக வந்தமெழ வொருகோடி

மதகஜ துரகர தமுமு டையபுவி
பதலமு தல்முடிய இடியநெடியதொர்
மிக்கொலிமு ழங்கஇரு ளக்கணம்வி டிந்துவிட
இரவியு மதியமு நிலைமை பெறஅடி
பரவிய அமரர்கள் தலைமை பெறஇய
லத்திறல ணங்குசெய சத்திவிடு கந்ததிரு
வயலியி லடிமைய குடிமை யினலற
மயலொடு மலமற அரிய பெரியதி
ருப்புகழ்வி ளம்புவென் முனற்புதமெ ழுந்தருள் கு கவிராலி

---

* பக்கி - பக்ஷி. † 'குருதி பெருகிட அவ் அப்புவில் மிதந்து எழுபது அற்புத கவந்தம் எழ' எனப்பிரிக்க.

மலையுறை குரவர னிறைவ வருகலை
பலதெரி விதரண முருக சரவண
உற்பவக்ர வுஞ்சகிரி நிக்ரகவு தண்டமய
நிருபனி மலசக சொருப பரசிவ
குருபர வெளிமுக டுருவ வுயர்தரு
சக்ரகிரி யுங்குலைய விக்ரமக டம்புரிய
மரகத கலபமெ ரிவிடு மயில்மிசை
மருவிய பெருமையு இளமையு முருவொடு
சொர்க்கதல மும்புலவர் வர்க்கமும்வி ளங்கவரு பெருமாளே. (௧௧௨)

---

தனதான தான தந்த தனதான தான தந்த
தனதான தான தந்த தந்ததான.

340. உருவேற வேசெபித்து வொருகோடி யோமசித்தி
யுடனாகை ஆகமத்து கந்துபேணி
உணர்வாசை யாரிடத்து மருவாமல் ஓரெழுத்தை
யொழியாம லுள்ளதைவிட் டுந்துநாளும்
துரியாத போதகத்தர் குருவாவ ரோரொருத்தர்
தருவார்கள் ஞானவித்தை தஞ்சமாமோ
*தழலாடி வீதி†வட்ட மொளிபோத வாலசித்தி
தருமாகி லாகுமத்தை அண்டிலேனே
குருநாடி ராசரிக்கர் துரியோத னாதிவர்க்க
குடிமாள மாயமிட்ட குந்திபாலர்
குலையாமல் நீதிகட்டி யெழுபாரை யாளவிட்ட
குறளாக மாகிநெட்டை கொண்டஆதி
மருகாபு ராரிசித்தன் மகனே விராலிசித்ர
மலைமேனு லாவுசித்த அங்கைவேலா
மதுராபு ரேசர் மெய்க்க அரசாளு மாறன் வெப்பு
வளைகூனை யேநிமிர்த்த தம்பிரானே. (௧௧௩)

---

* தழலாடிவீதி — நெற்றி. † வட்டம் — புருவமத்திய ஸ்தானம்.

தனதனதந் தானதாத்த தனதனதந் தானதாத்த
தனதனதந் தானதாத்த தனதான.

341. எதிரெதிர்கண் டோடியாட்கள் களவதறிந் தாசையூட்டி
இடறிவிழும் பாழிகாட்டு மடமாதர்
இறைவைகொளுங் *கூவல் மூத்த கறையொழுகுந் தாரைபார்க்கி
லிளமைகொடுங் காதலாற்றில் நிலையாத
அதிவிகடம் பீழலாற்ற அழகிவிழும் பீறலூத்தை
அடையுமிடஞ் சீலைநீற்று கருவாயில்
அருவிசலம் பாயுமோட்டை அளவுகெடுந் தூரைபாழ்த்த
†அளறிலழுந் தாமலாட்கொ டருள்வாயே
விதுரனெடுந் த்ரோணமேற்று எதிர்பொருமம் பாதியேற்றி
விரகினெழுந் தோயநாற்று வருமாள
விரவுசெயன் ‡காளிகாட்டில் வருதருமன் தூதநீற்ற
விஜயனெடும் பாகதீர்த்தன் மருகோனே
மதியணையுஞ் சோலையார்த்து மதிவளர்||சந் தானகோட்டின்
வளமைமிகும் பேறுகாட்டி யவிராலி
மலைமருவும் பாதியேற்றி மணமுமிழ்**சந் தானகோட்டு
வழியருளின் பேறுகாட்டு பெருமாளே. (௩௪௧)

---

தந்த தானன தான தனதன தந்த தானன தான தனதன
தந்த தானன தான தனதன தனதான.

342. ஐந்துபூதமு மாறுசமயமு மந்த்ரவேதபு ராணகலைகளும்
ஐம்பதோர்வித மான லிபிகளும் வெகுரூப
அண்டராதிச ராசரமுமுயர் புண்டரீகனுமேகநிறவனும்
அந்திபோலுரு வானும் நிலவொடு வெயில்காலும்

* கூவல் – கிணறு. †அளறு – சேறு. ‡காளிகாடு – இடும்பாவனம்
§நீற்ற விஜயன்–பாசுபதாஸ்திரம் பெற நீறுபூசித் தவஞ்செய்த அருச்சுனன்.
|| சந்தான கோட்டின் வளமைமிகும் பேறுகாட்டிய–சந்தானம் என்னும் தெய்வவிருக்ஷம் தன்னை அடைந்தோர்க்கு அவர்கள் வேண்டிய பொருள்களைக் கொடுக்கும் என்பதை உலகத்தோர்கருத் தெரிவித்த ௦விராலிமலை மருவும் பாதி ஏற்றி–விராலிமலைக்குப் பாதியளவு வரையில் அவர்களை ஏறச்செய்து–**சந்தானகோட்டுவழி–அவ்விடத்துற்ற சந்தானகோடு என்னுமிடத்தில்.

சந்த்ர சூரியர் தாமு *மசபையும் விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம்
தங்க ளாணவ மாயை கருமமலங்கள் போயுப தேசகுருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ
வந்த தானவர் சேனை கெடிபுக இந்த்ர லோகம் †வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி
வன்கண் வீரிபி டாரி அரஹர சங்க ராஎன மேரு கிரிதலை
மண்டு தூளெழ வேலை யுருவிய வயலூரா
வெந்த நீறணி வேணி யிருடிகள் பந்த பாசவி கார பரவச
வென்றி யானச மாதி முறுகுகைம் முறைகூடும்
விண்டு மேல்மயி லாட இனியக ளுண்டுகாரளி பாட ‡இதழிபொன்
விஞ்ச வீசவி ராலி மலையுறை பெருமாளே. (கக௫)

---

தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன தனதான.

343. கரதல முங்குறி கொண்ட கண்டமும்
விரவியெ ழுந்தசு ருண்டு வண்டடர்
கனவிய கொண்டைகு லைந்த லைந்திட அதிபாரக்
களபசு கந்தமி குந்த கொங்கைக
ளிளகமு யங்கிம யங்கி யன்புசெய்
கனியித ழுண்டுது வண்டு பஞ்சணை மிசைவீழா
இரதம ருந்தியு றுங்க ருங்கயல்
பொருதுசி வந்துகு விந்தி டும்படி
§யிதவிய வுந்தியெ னுந்த டந்தனில் உறமூழ்கி
இனியதொ ரின்பம்வி ளைந்து ளைந்துபொய்
வனிதையர் தங்கள்ம ருங்கி ணங்கிய
இளமை கிழம்படு முன்ப தம்பெற வுணர்வேனோ
பரத சிலம்புபு லம்பு மம்பத
வரிமுக ◊எண்கினு டன்கு ரங்கணி
பணிவிடை சென்றுமு யன்ற குன்றணி யிடையேபோய்ப்

* அசபை என்பது ஹம்ஸமந்திரம். † விபூதர் — தேவர். ‡ இதழி — கொன்றை. § இதவிய - இதமான. ◊ எண்கு — கரடி.

பகடியி லங்கைக லங்க அம்பொனின்
மகுடசி ரந்தச முந்து ணிந்தெழு
படியுற டுங்கவி ழும்ப னம்பழ மென*வாகும்

மருதமு தைந்தமு குந்த னன்புறு
மருககு விந்தும லர்ந்த பங்கய
வயலியில் வம்பவிழ் சண்ப கம்பொரி யவிராலி
மலையில் விளங்கிய கந்த என்றனை
மகிழ்வொடு †வந்திசெய் மைந்த னென்றனை
வழிவழி யன்புசெய் தொண்டுகொண்டருள் பெருமாளே.

---

தானத்தன தான தனதன தானத்தன தான தனதன
தானத்தன தான தனதன தனதான.

344. ‡காமாஸ்திர மாகி யிளைஞர்கள் வாழ்நாட்கொடு போகிய ழகிய
காதாட்டிய பார இருகுழை யளவோடிக்
கார்போற்றவ ழோதி நிழல்தனி லார்வாட் §கடையீடு கனலொடு
காலேற்றுவை வேலின் ||முனைகடை யமதூதர்
ஏமாப்புற மோக வியல்செய்து நீலோற்பல ஆசில் மலருட
னேராட்டவி னோத மிடும்விழி மடவார்பால்
ஏகாப்பழி பூணு மருளற நீதோற்றிமு னாளு மடிமையை
யீடேற்றுத லாலுன் வலிமையை மறவேனே
சீமாட்டியு மாய திரிபுரை காலாக்கினி கோப பயிரவி
சீலோத்தமி நீலி சுரதிரி புவனேசை
சீகார்த்திகை யாய அறுவகை மாதாக்கள்கு மார னெனவெகு
சீராட்டொடு பேண வடதிசை கயிலாசக்
கோமாற்குப தேசமுபனிட வேதார்த்தமெய்ஞ் ஞான நெறியருள்
கோதாட்டிய ஸ்வாமி யெனவரு மிளையோனே
கோடாச்சிவ பூசை¶பவுருஷ மாறுக்கொடை நாளுமருவிய
கோனாட்டுவி ராலி மலையுறை பெருமாளே. (ககஎ)

---

* ஆகும் – ஆக்கும். † வந்திசெய்–வந்தனைசெய். ‡ காமாஸ்திரம்–காம–அஸ்திரம்–மன்மத பாணம். § கடையீடு–கடையிடுகின்ற. || முனை கடை–கடை முனை. ¶ பவுருஷம் – புருஷத்தன்மை, புகழ்பெறுதல்.

தானான தான தான தனதன தானான தான தான தனதன
தானான தான தான தனதன தனதான.

345. சீரான*கோல கால நவமணி மா†லாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்
சீராடு வீர மாது மருவிய ஈராறு தோளும் நீளும் வரியளி
சீராக மோது நீப பரிமள இருதாளும்
ஆராத காதல் வேடர் மடமகள் ‡சீமூத மூர்வ லாரி மடமகள்
ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்
ஆராயும் நீதி வேலு மயிலுமெய் ஞானாபிராம சோதி வடிவமும்
§ஆபாத னேனும் நாளும் நினைவது பெறவேணும்
ஏராரு மாட கூட மதுரையில் மீதேறி மாறி யாடு மிறையவர்
‖ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்
ஈடாய ¶ஊமர் போல வணிகரி லூடாடி யாலவாயில் விதிசெய்த
லீலாவி சார தீர வரதர குருநாதா
○கூராழி யால்முன் வீயநினைபவ னீடேறு மாறு பானு மறைவுசெய்
கோபால ராய னேய முளதிரு மருகோனே
கோடாம லார வார அலையெறி காவேரி யாறு பாயும் வயலியில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே. (௧௧௭)

---

346. பாதாள மாதி லோக நிகிலமு மாதார மானமேருவெனவளர்
பாடீர பார மான முலையிணை விலைகூறிப்
பாலோடு பாகுதேனெனினியசொ லாலேய நேக மோக மிடுபவர்
பாதாதி கேச மாக வகைவகை கவிபாடும்
வேதாள ஞான ஈனன் விதரண நாதானி லாத பாவி யநிஜவன்
வீணன் படாத போத கவமிலி பசுபாச
வியாபார மூடன் யானு முனதிரு சீபாத தூளி யாகி நரகிடை
வீழாம லேசு வாமி திருவருள் புரிவாயே

---

* கோலாகலம் என்பது கோலகாலம் என நிலைமாறியது. கோலாகலம்—சம்பிரமம். † அபிஷேகம்-முடி. ‡ சீமூதம்-மேகம். § ஆபாதனேனும் ஆபாசனாகிய யானும். ‖ ஏழேழுபேர்கள் - சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர். ¶ ஊமர்போலவணிகர். இல்—செட்டிவீட்டில் ஊமைப்பிள்ளைபோல் தோன்றி. ○ கூராழியால் பானுமறைவுசெய் எனக் கூட்டுக,

ஆதாள ரோடு காலன் வெருவிட வேதாமு ராரி யோட அடைவிடை
சேரார்வ லாரி சேனை பொடிபட மறைவெள்ளி
சோமாசி மார்சி வாய நமவென மாமாய வீர கோர முடனிகல்
சூர்மாள வேலை யேவும் வயலியில் இளையோனே
*கூதாள நீப நாக மலர்மிசை ராதாரி தேசி நாம க்ரியைமுதல
†கோலால நாத கீத மதுகரம் அடர்சோலை
கூடார லேறு நாரை மருவிய காவேரி பாயு மேரி வயல்பயில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே. (௩௪௬)



தானான தான தானான தான தானான தான தனதான.

347. மாலாசை கோப மோயாதெ நாளு மாயாவி கார வழியேசெல்
மாபாவி ‡காளி தானேனும் நாத மாதா பிதாவு மினிநீயே
நாலான வேத நூலாக மாதி நானோதி னேனு மிலைவீணே
நாள்போய் விடாம லாறாறு மீதில் ஞானோப தேசம் அருள்வாயே
பாலா க§ல்லார ஆமோத லேப பாடீர வாக அணிமீதே
பாதாள பூமி யாதார மீன ||பானீய மேலை வயலூரா
வேலாவி ராலி வாழ்வே சமூக வேதாள பூத பதிசேயே
வீராக டோர சூராரி மேருசெ வேளேசு ரேசர் பெருமாளே. ()



தனதன தனதன தனதன தனதன
தனதன தனதனன தனதான.

348 இளையமில் பொலாவுரை சொலாமன தபோதன
ரியாவரு மிராவுபகல் அடியேனை
இராகமும விநோதமு முவாபமு டன்மோகமு
மிலாநிலை யுமாபுருஷன் எனவியல்
சராபவ மலாகர சரீரவி தாரண
சதாசிவ மயேசுர சகலலோக
சராசர வியாபக பராபர மநோலய
சமாதிய னுபூதிபெற நினைவாயே

* கூதாளம் - வில்வம். † கோலாலம் - கோலாகலம். ‡ காளி - விஷ தணமுள்ளவன். § கல்லாரம் - செங்குவளை. || பானீயம் - நீர்.

*நிலாவிரி நிலாமதி †நிலாதவ நிலாசன
‡நியாயபரிபால அர நதிசூடி
நிசாசர குலாதிப திராவண §புயாரிட
||நிராமய சரோருக ரருள்பாலா
¶விலாசுகம் வலாரெனு முலாசவி தபோவாகவ
*வியாதர்கள் விநோதமகள் மணவாளா
விராவுவ யலார்புரி சிராமலை பிரான்மலை
விராலிமலை நீதிலுறை பெருமாளே. (கஉ௩)

---

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதனத் தனதான.

349. நிராமய புராதன பராபர வராமிருத
நிராகுல சிராதிகப ராபரையாகி
நிராசைசி வராஜத வராஜர்கள் பராவிய
நிராயுத புராரியச் சுதன்வேதா
†சுராலய தராதல சராசர பிராணிகள்
சொரூப ‡மிவராதியைக் குறியாமோ
துராலபுகழ் பராதின கராஜன ராமுக
துரோகரை நிகாரமை யுற்றடைவேனோ
இராகவ இராமன் §முன் இராவண ||இராவண
இராவண இராஜனுட் குடன் ¶மாயவென்

---

* நிலாவிரி நிலாமதி — சந்திரிகை விரிந்து பிரகாசிக்கின்ற மதியையும். † நில்லாத அநில அசன — நிற்காது அலைகின்ற காற்றைப் புசிக்கின்ற. ‡ நியாயபரிபாலன அர — நியாய பரிபாலனஞ் செய்வதில் வல்ல ஆதிசேஷனாகிய சர்ப்பத்தையும். § புயாரிட - புயஅரிட, புயங்களுக்கு அரிட்டத்தை யுண்டாக்கிய. அரிட்டம் — கேடு. || நிராமயசரோருகரன் — மலரகித பாதாரவிந்தத்தையுடைய சிவபிரான். சரோருக அரன் - சரோருகரன் என்றாயிற்று. ¶ வில் ஆசுகம். ஆசுகம் - அம்பு. ○ ஆகவம் - போர்.

* வியாதர்கள் — வேடர்கள். † சுராலயம் — தேவலோகம். ‡ இவாதல் — கலத்தல். § முன் இராவண (கைலாசமலையை அசைத்துச் சிவபெருமானால் அழுத்தப்பட்ட) அந்நாளில் அழுதரவோலமிட்ட. || இராவணன் — இருளின் வண்ணமாகிய கருநிறத்தையுடையவன். ¶ மாயவென்றிராகன் மலரான் நிஜ புராணர் - மாயவென்ற இராகன் மலரான் நிஜபுராணர், மாயும்படி வென்ற அன்புடையவராகிய விஷ்ணுவின் கண்ணையே மலராகக் கொண்டருளிய நிஜ புராணர்.

மோச மிடுமவர்கள் மாயை தனில்முழுகி
மூடனென அறிவு — கொண்டதாலே
காதி வருமியம தூதர் கயிறுகொடு
காலி லிறுகளினை — வந்திழாதே
காவ லெனவிரைய வேயடி யுனதடிமை
காண வருவதினி — யெந்தநாளோ
ஆதி மறையவனு மாலு முயர்கடலை
யாடு மரனுமிவர் — ஒன்றதான
ஆதி யமலைதிரி சூலி குமரிமக
மாயி கௌரியுமை — தந்தவாழ்வே
சோதி நிலவுகதிர் வீசு மதியின்மிசை
தோய வளர்கிரியின் — உந்திமேலே
* சோலை செறிவுளவி ராலி நகரில்வளர்
தோகை மயிலுலவு — தம்பிரானே. (௩௫௨)

---

## விநாயகமலை.

---

தனதன தானாதனாதன தனதன தானாதனாதன
தனதன தானாதனாதன தனதானா.

353. சரவண† ஜாதா நமோநம கருணையதீதா நமோநம
சததளபாதா நமோநம — அபிராம
கருணாகிரீடா நமோநம நிருபமவீரா நமோநம
‡ சமதலையூரா நமோநம — சகதீச
பரமசொரூபா நமோநம சுரர்பதிபூபா நமோநம
பரிமளநீபா நமோநம — உமைகாளி
பகவதிபாலா நமோநம இகபரமூலா நமோநம
பவுருஷசீலா நமோநம — அருள்தாராய்
இரவியுமாகாசபூமியும் விரவியதூளேறவானவ
ரெவர்களுமீடேற ஏழ்கடல் — முறையோவென்

---

* "சோலை செறியுமியல் வாதநகரில் வளர்" என்றும். "சோலை செறியுமியல் வாகைநகரில் வளர்" என்றும்பாடம். † சாதா—பிறந்தவனே. ‡ சமதலையூர்-திருப்போரூர்.

றிடர்படமாமேருபூதர மிடிபடவேதாளிசாசர
ரிகல்கெடமாவேகநீடயில் விடுவோனே
*மரகத ஆகாரஆயனு மிரணிய ஆகாரவேதனும்
†வசுவெனுமாகாரஈசனும் அடிபேண
மலிதுறை வாழ்வேவிநாயக மலையுறைவேலாமகீதர
வனசரராத்தாரமாகிய பெருமாளே. (௧௨௬)

---

## திருச்செங்கோடு.

---

தந்தான தந்த தந்தான தந்த
தாந்தான தந்த தனதான.

354. அன்பாகவந்து நின்றாள்பணிந்து
ஐம்பூதமொன்ற நினையாமல்
அன்பால்மிகுந்து நஞ்சாருகண்க
ளம்போருகங்கள் முலைதானும்
கொந்தேமிகுந்து வண்டாடிநின்று
கொண்டாடுகின்ற குழலாரைக்
கொண்டேநினைந்து மன்பேது‡மின்றி
குன்றா§மலைந்து அலைவேனோ
மன்றாடிதந்த மைந்தாமிகுந்த
வம்பார்கடம்பை யணிவோனே
வந்தேபணிந்து நின்றார்பவங்கள்
வெந்தேபொடிந்து விழவேலை
சென்றேயிடங்கள் கந்தாஎன்முன்பு
செஞ்சேவல்கொண்டு வரவேணும்
செஞ்சாலிகஞ்ச மொன்றாய்வளர்ந்த
செங்கோடமர்ந்த பெருமாளே. (௧௨௭

---

355. பந்தாடியங்கை நொந்தார்பரிந்து
பைந்தார்புனைந்த குழல்மீதே

---

*மரகத ஆகாரம்-பச்சைமேனி. † வசுவெனுமாகார-அக்கினியென்னும்உருவத்தையுடைய. ‡இன்று - இல்லாமல். §மலைதல்-ஒருவழிப்படாதுநிற்றல்.

பண்பார்சுரும்பு பண்பாடுகின்ற
பங்கேருகங்கொள் முகமீதே
மந்தாரமன்றல் சந்தாரமொன்றி
வன்பாதகஞ்செய் தனமீதே
மண்டாசைகொண்டு விண்டாவிணைந்து
மங்காமலுன்றன் அருள்தாராய்
கந்தா அரன்றன் மைந்தாவிளங்கு
கன்ருமுகுந்தன் மருகோனே
*கன்ரு†விலங்க லொன்ருறுகண்ட
கண்டா அரப்பை மணவாளா
செந்தாநடார்ந்த கொந்தார் கடம்பு
திண்டோள்நிரம்ப அணிவோனே
திண்‡கோடரங்க §ளெண்கோடுறங்கு
செங்கோடமர்ந்த பெருமாளே. (கஉஅ)

---

356. வண்டார்மதங்க ளுண்டேமயங்கி
வந்தாரு||கொண்டல் அதனேடும்
வண்காமனம்பு தன்கால்மடங்க
வன்போர்மலைந்த விழிவேலும்
கொண்டேவளைந்து கண்டார்தியங்க
நின்ருர்குரும்பை முலைமேவிக்
கொந்தாரரும்பு நின்தாள்மறந்து
குன்ருமலுன்றன் அருள்தாராய்
பண்டாழிசங்கு கொண்டாழிதங்கு
பண்போனுகந்த மருகோனே
பண்சாரணைந்து நண்போதுமன்பர்
பங்காகிநின்ற குமரேசா
செண்டாடியண்டர் கொண்டாடமன்றில்
நின்ருடிசிந்தை மகிழ்வாழ்வே

---

* கன்ரு - கோபித்து. † விலங்கல் ஒன்று ஆறு கண்ட - ஓர் மலையை வழிகண்ட. ‡ கோடரங்கள் - குரங்குகள். § எண்கு - கரடி. || கொண்டல் - மேகம் போன்ற குழல்.

செஞ்சாலிமிஞ்சி மஞ்சாடுகின்ற
செங்கோடமர்ந்த பெருமாளே. (கஉஎ)

---

தனதன தனதன தனதன தனதன
தந்தான தந்த தனதான

357. கரையற வுருகுதல் தருகயல் விழியினர்
கண்டானசெஞ்சொல் மடமாதர்
கலவியில் முழுகிய நெறியினி லறிவுக
லங்காமயங்கும் வினையேனும்
உரையையும் அறிவையும் உயிரையும் உணர்வையும்
உன்பாத கஞ்ச மலர்மீதே
உறவொடு புனைதர நினைதரு மடியரொ
டொன்றாக என்று பெறுவேனோ
வரையிரு துணிபட வளைபடு சூர்குடி
வந்தேற இந்த்ர புரிவாழ
மதவித கஜரத துரகத பததியின்
வன்சேனை மங்க முதுரீனை
திரைமலி சலநிதி முறையிட நிசிசரர்
திண்டாட வென்ற கதிர்வேலா
செகதல மிடிகெட விளைவன வயலணி
செங்கோடமர்ந்த பெருமாளே. (கஅ0)

---

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான.

358. சாலநெடு நாள்மடந்தை காயமதி லேயலைந்து
சாமளவ தாகவந்து புவிமீதே
சாதகமுமானபின்பு சீறியழு தேகிடந்து
தாரணியி லேதவழ்ந்து விளையாடிப்
பாலனென வேமொழிந்து பாகுமொழி மாதர்தங்கள்
பாரதன மீதணைந்து பொருள்தேடிப்
பார்மிசையி லேயுழன்று பாழ்நரகெய் தாமலொன்று
பாதமலர் சேர அன்பு தருவாயே

ஆலமமு தாகவுண்ட ஆறுசடை நாதர்திங்கள்
ஆடரவு பூணர் தந்த முருகோனே
ஆனைமடு வாயிலன்று மூலமென வோலமென்ற
ஆதிமுதல் நாரணன்றன் மருகோனே
கோலமலர் வாவியெங்கு மேவுபுனம வாழ்மடந்தை
கோவையமு தூறலுண்ட குமரேசா
கூடிவரு சூரடங்க மாளவடி வேலெறிந்த
*கோடைநகர் வாழவந்த பெருமாளே. (கஙக

---

தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தானதன தந்ததான

359. நீலமுகி லானகுழல் மானைவென் றோடுகதி
நீடுபந் தாடுவிழி யார்பளிங் கானநகை
நீலபொன் சாபநுத லாமையின் தோளமைசெயு
நீள்முகந் தாமரையி னார்மொழிந் தாரமொழி
நேர்கநம் பூகமட லான†கந் தாரர்புய
நேர்‡சுணங்§காவி¶கிளை போர்சிறந் தார்மலையி ரண்டுபோல
நீளிபங் கோடுமெனிர் தேனிருந் தாரமுகை
நீடலங் காரசர மோடடைந் தார்மருவி
நீள்மணஞ்*சாறுபொழி மாவளம் போதினையி
†னீலவண் டேவியமல் காம‡னங் காரநிறை
நேசசந் தானமனை காமபண் டாரமுலை
நேசரும் போகரிடை நூலொளிர்§தாசையுயிர் ||சம்பையா¶ரம்
சாலு○பொன் தோகையணை பாளிதஞ் சூழ்சரண
தாள்சிலம் போலமிட வேநடந் தானநடை

---

* கோடைநகர் - திருச்செங்கோடு. † கந்தாரர்-கந்தரர்- கழுத்தையுடையவர். ‡ சுணங்கு-தேமல் § ஆவி-வாசனை. ¶ கிளை -மூங்கில்.

* சாறு பொழி மாவளம் எனப்பிரிக்க வளம் — வள்ளம். இன்னும் † நீலவண்டு - நீலோற்பலக்கணை. ‡ அங்காரம் — ஆங்காரம். § ஆசை உயிர் ம்பையார் - திக்குகள் உயிர்ப்பமின்னும் மின்னல்போன்ற இடையையுடையவர்கள் - || சம்பை - மின்னல். ¶ அம் சாலு — அழகு நிறைந்த ○ பொன தோகை அமை பாளிதம் - பொன் சரிகையிட்ட முன்தானையமைந்த புடவை பாளிதம் - புடவை."

சாதிசந் தானெகின மார்பரந் தோகையென
தானெழுந் கோலவிலை மாதரின் பார்கலவி
தாவுகொண் டேகலிய நோய்கள்கொண் டேபிறவி
கானடைந் தாழுமடி யேனிடஞ்சாலுவினை யஞ்சியோடத்
தார்கடம் பாடுகழல் பாதசெந் தாமரைகள்
தாழ்பெரும் பாதைவழி யேபடிந் தேவருகு
தாபம்விண் டேயமுத வாரியுண் டேபசிகள்
தாபமுந் தீரதுகிர் போல்நிறந் காழ்கொளுரு
சாரவுஞ் சோதிமுரு காவெனுங் காதல்கொடு
நானிருந் தோத*இரு‡வோரகம் பேறுபெற விஞ்சைதாராய்
சூலிபெந் தாய்கவுரி மோகசங் காரிகுழை
தோடுகொண் டாடுசிவ காமசந் தாரிநல
‡தூளணைந் தாளிதிரு வாணியங் காளி§கலை
தோகைசெந் தாமரையின் மாதுநின் றேதுதிசெய்
தூயஅம் பாகமைகொள் தோளிபங் காளக்ருபை
தோய்பரன் சேயெனவு மேபெரும் பார்புகழும் விந்தையோனே
சூரசங் காரசூரர் லோகபங்கா அறுவர்
தோகைமைந் தாகுமர வேள்கடப் பாரதொடை
தோளகண்டா ‖ பரம தேசிகந் தா அமரர்
தோகைபங் காளனவெ தாகமஞ் சூழ்சுருதி
தோதகம் பாடமலை யேழுதுண் டாயெழுவர்
சோரிகொண் டாறிவர வேலெறிந் தேகடன முங்கொள்வேலா
மாலியன் ¶பாறவொரு 0ஆடகன் சாகமிகு
வாலியும்**பாழிமர மோடு††கும் பாகனனும்
ஆழியுங் கோரவலி ராவணன் பாறவிடும்
‡‡ஆசுகன் கோலமுகி லோனுகந் தோதிடையர்
மாதுடன் கூடிவிளை யாடுரம் போகதிரு
மார்பகன் §§காணமுடி யோனணங் கானமதி பொன்னுமானே
மார்புடன் கோடுதன பாரமுஞ் சேரஇடை
வார்துவண் டாடமுக மோடுகந் தீரசு

* இரு - பெருமை பொருந்திய † ஓர் - ஒப்பற்ற. ‡ தூள் விபூதி § கலை தோகை-சரஸ்வதி- ‖ பரமதேசிக அந்தா எனப்பிரிக்க ¶ பாற-கெட 0 ஆடகன் - இரணியன், ** பாழி - பருத்த, வலிய. †† கும்பானன் - கும்பகர்ணன். ‡‡ ஆசுகன் - அம்பையுடையவன், §§ காணம் – பொன்.

வாயிதங் கோதிமணி நூபுரம் பாடமணை
வாசைகொண் டாடுமயி லாளிதுங் காகுறவர்
மாதுபங் காமறைகு லாவுசெங் கோடைநகர்
வாழவந் தாய்கரிய மாலயன் தேவர்புகழ் தம்பிரானே. (கூஉ

---

தானத்த தான தந்த தானத்த தான தந்த
தானத்த தான தந்த தனதான.

360. வாசித்த நூல்பல தங்கள் பேசிக்கொ டாத விந்து
வாய்மைபர நாச மென்ன நிலையாக
மாசிக்க பால மன்றில் நாசிக்கு ளோடு கின்ற
வாயுபயி ராண மென்று மடைமாறி
*யோசித்த யாரு டம்பை பேசித்து ருந்த லைந்து
ரோமந்து வார மெங்கு முயிரோக
யோகசத மாதி கொண்டு போகப்பு ராண மண்டு
லோகத்தில் மாய்வ தென்று மொழியாதோ
வீரப்ர யோதி துஷ்ட வேதக்கு லால னஷ்ட
வேளிட்ட ழுந்த டிந்த கதிர்வேலா
வீரப்ர தாப பஷ்ட பாவைத்தி ரைய யங்கி
வேடிச்சி காலி லன்று விழுவோனே
கூசிப்பு காலொ துங்க †மாமற்சி காஅ ரிந்து
‡கூளப்பு ராரி தந்த சிறியோனே
கோழிப்ப தாகை கொண்டு கோலக்கு மார கண்ட
கோடைக்குள் வாழ வந்த பெருமாளே. (ஙகூங.)

---

தனத்தந் தானன தனத்தந் தானன
தனத்தந் தானன தனதான.

361. கலக்குங் கோதற வடிக்குஞ் சீரிய
கருப்பஞ் சாறெனு மொழியாலே
கருத்தும் பார்வையு முருக்கும் பாவிகள்
கடைக்கண் பார்வையி லழியாதே

---

* யோசித்து - கூட்டி. † மாமன் சிகா அரிந்த - மாமனாகிய தக்கனது தலையை யரிந்த. ‡ கூளப் புரம் - எளிய திரிபுரம்.

கொஞ்ச வார்த்தைக் கிளித்தன் சேற்கட்
குன்ற வேட்டிச் சிலைக்கண் காட்டிக்
கொண்டு வேட்டுப் புனப்பைங் காட்டிற் புணர்வோனே

கொங்கு வாத்தித் தழைக்குங் காப்பொற்
கொண்ட வார்த்தூர் சிறக்குங் காட்சிக்
கொங்கு நாட்டுத் திருச்செங் கோட்டுப் பெருமாளே. ()

---

தந்தத் தனத்தந் தாத்தன தந்தத் தனத்தந் தாத்தன
தந்தத் தனத்தந் தாத்தன தனதான.

363. மந்தக் கடைக்கண் காட்டுவர் கந்தக் குழற்பின் காட்டுவர்
மஞ்சட் பிணிப்பொன் காட்டுவர் அநுராக
வஞ்சத் திரக்கங் காட்டுவர் நெஞ்சிற் பொருத்தங் காட்டுவர்
வண்பற் றிருப்புங் காட்டுவர் தனபார
சந்தப் பொருப்புங் காட்டுவர் உந்திச் சுழிப்புங் காட்டுவர்
சங்கக் கழுத்துங் காட்டுவர் விரகாலே
சண்டைப்பிணக்குங்காட்டுவர்பண்டிட்டொடுக்கங்காட்டுவர்
தங்கட் கிரக்கங் காட்டுவ தொழிவேனோ
பந்தித் தெருக்கந் தோட்டினை யிந்துச் சடைக்கண் சூட்டுமை
பங்கிற் றகப்பன் தாட்டொழு குருநாதா
பைம்பொற்பதக்கம்பூட்டிய அன்பற்கெதிர்க்குங்கூட்டலர்
பங்கப் படச்சென் றோட்டிய வயலூரா
கொந்திற் புனத்தின் பாட்டிய லந்தக் குறப்பெண் டாட்டொடு
குப்பிட் டிடக்கொண் டாட்டமொ டணைவோனே
குன்றிற் கடப்பந் தோட்டலர் மன்றற் பரசித்தங்கோட்டிய
கொங்கிற் றிருச்செங் கோட்டுறை பெருமாளே. (கககூ

---

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்
தனந்தாத் தனத்தந் தனதான.

364. இடம்பார்த் திடம்பார்த் திதங்கேட் டிரந்தேற்
றிணங்காப் பசிப்பொங் கனல்மூழ்கி

---

* கும்பு ஏற்றி-கும்பு கூட்டி.

இறங்காற் கிறங்காற் கிரும்பார்க் குநெஞ்சார்க்
கிரங்கார்க் கியற்றண்                    டமிழ்நூலின்
உடம்பாட் டொடன்பாட் டியம்பாத் தயங்காத்
துளங்காத் திடப்புன்                    கவிபாடி
ஒதுங்காப் பொதுங்காப் பதுங்காப் பிகன்றேத்
துறும்பாற் குணக்கன்                    புறனைமோ
*கடந்தோற் கடந்தோற் றறிந்தாட் கருந்தாட்
கணைந்தாட் கணித்தின்                    புயமீவாய்
† கரும்போற் கரும்போர்க் குளங்காட் டிகண்டேத்
துசெங்கோட் டில்நிற்கும்                    கதிர்வேலா
அடைந்தோர்க் குணர்ந்தோர்க் கவிந்தோர்க் கமைந்தோர்க்
கவிழ்ந்தோர்க் குணற்கொண்                    றிலதாகி
அலைத்தோர்க் குலைந்தோர்க் கிணைந்தோர்க் கலந்தோர்க்
கறிந்தோர்க் களிக்கும்                    பெருமாளே. (கசுஎ)

---

தான தான தனத்தந் தான தான தனத்தந்
தான தான தனத்தந்                    தனதான.

365. கோவை வாயி தழுக்குந் தாக போக மளிக்குங்
கோதை மாதர் முகைக்குங்                    குறியாலும்
கோல மாலை வளைக்குந் தோளி னாலு மணைத்தங்
கோதி வாரி முடிக்குங்                    குழலாலும்
ஆவி கோடி யவிக்குஞ் சேலி னாலு மயக்குண்
டாசை யாயி னுநித்தந்                    தளராதே
ஆசி லாத மறைக்குந் தேடொ ணாதொ ருவர்க்கொண்
ருடல் தாள்க ளெனக்கின்                    றருள்வாயே
சேவி லேறு நிருத்தன் தோகை பாக னளிக்குந்
த்யாக சீல குணத்தன்                    திருமாலும்
தேடொ ணாத பதத்தன் நீதி லாத மனத்தன்
தேயு வான நிறத்தன்                    புதல்வோனே
காவி டாத திருச்செங் கோடு நாடு தனக்குங்
காவி சூழ்வ யலிக்கும்                    ப்ரியமானாய்

---

* கடம் தோல் கடம் தோற்று - மதயானை காட்டில் எதிர்ப்படல் †கரும் போழ்கு அரும்போர்க்குளம்காட்டி - மன்மதனுக்கு அரியபோராக நெற்றிக் கண் காட்டிய பரமசிவன்.

காதி மோதி யெதிர்க்குஞ் சூரா தீரர் ப்ரமிக்குங்
கால னுடல் தவிர்க்கும் பெருமாளே. (கரு-அ)

---

தனத்தந் தான தானன தனத்தந் தான தானன
தனத்தந் தான தானன தனதான.

366. வருத்தங் காண நாடிய குணத்தன் பான மாதரு
மயக்கம் பூண மோதிய திரமீதே
மலக்கங் கூடி யேயின வுயிர்க்குஞ் சேத மாகிய
மரிக்கும் பேர்க ளோடுற வணியாதே
பெருத்தும் பாவ நீடிய மனத்தின் தீமை கூடிய
பிறப்புந் தீர வேயுன திருதாளே
பெறத்தந் தாள வேயுயர் சுவர்க்கஞ் சேர வேயருள்
பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே
இரத்தப் பாய மேனிக ளுரத்துஞ் சாடி வேல்கொடு
எதிர்த்துஞ் சூரர் மாளவெ பொரும்வேலா
இசைக்குந் தாள மேளமெ தனத்தந் தான தானன
எனத்தின் கூளி கோடிகள் புடைசூழத்
திருத்தன் பாக வேயொரு மயிற்கொண் டாடி யேபுகழ்
செழித்தன் பாக விறிய பெருவாழ்வே
திரட்சங் கோடை வாவிகள் மிகுத்துங் காவி சூழ்தரு
திருச்செங் கோடு மேவிய பெருமாளே. (கரு-கூ)

---

தந்த னத்தத் தந்த னத்தத் தந்த னத்தத் தந்த னத்தத்
தந்த னத்தத் தந்த னத்தத் தனதான.

367. பொன்றலைப்பொய்க்கும்பிறப்பைத்தும்பறுத்திட்டின்றுநிற்கப்
புந்தி யிற்சற் றுங்கி றிக்கைக் கறியாமே
பொங்கி முக்கிச் சங்கை பற்றிச் சிங்கி யொத்தச் சங்க டத்துப்
பண்பு டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்
துன்று மிச்சைப் பண்ட னுக்குப் பண்ப ளித்துச் சம்ப்ர மித்துத்
தும்பி பட்சிக் கும்ப்ர சச்செய்ப் பதிமீதே
தொண்டு பட்டுத் தெண்டனிட்டுக்கண்டுபற்றத்தண்டைவர்க்கத்
துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயே

குன்றெ டுத்துப் பந்த டித்துக் கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்ட லொத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா
கொம்பு குத்திச்*சம்ப ழுத்தித்†திண்ட லத்திற் றண்டுவெற்பை
கொண்ட ழுத்திச் சண்டை யிட்டுப் பொரும்வேழம்
சென்று ரித்துச் சுந்த ரிக்கச் சந்த விர்த்துக் கஞ்ச கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நித்தக் களிகூரும்
செண்ப கத்துச் சம்பு வுக்குத் தொம்ப தத்துப்‡பண்புரைத்துச்
||செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே. (௧௪௦)

---

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

368. ¶ ஏறா னாலே நீறாய் மாயா ௦வேளே வாசக் கணையாலே
ஏயா வேயா மாயா வேயா லேபோ லேமாசைத் துணையாலே
மாறு யூறு வீறாய் மாலாய் வாடா மானைக் கழியாதே
வாராய் பாராய் சேரா யானால் வாடா நீபத் தொடைதாராய்
சீறு வீறு ஈரேழ் பாராழ் சீரார் தோகைக் குமரேசா
தேவா தாவா மூவா நாதா நீரா கோடைப் பதியோனே
வேறாய் மாறு யாறு மாசூர் வேர்போய் வீழப் பொருதோனே
வேதா போதா வேலா பாலா வீரா வீரப் பெருமாளே. (௧௪௧)

---

தான தந்த தனத்த தத்த தனதான.

369. ஞால மெங்கும் வளைத்தரற்று கடலாலே
நாளும் வஞ்சி யருற்றுரைக்கும் வசையாலே
ஆல முந்து மதித்தழற்கும் அழியாதே
ஆறி ரண்டு புயத்தணைக்க வருவாயே
கோல மொன்று குறத்தியைத்த ழுவுமார்பா
கோடை யம்ப தியுற்றுநிற்கு மயில்வீரா
கால னஞ்ச வரைத்துளைத்து முதல்வானோர்
கால்வி லங்கு களைத்தறித்த பெருமாளே. (௧௪௨)

---

* சம்பு - சம்பங்கோரை. † திண் தலத்தில் எனப்பிரிக்க. ‡ பண் புணர்த்தித் தென்றலைக்குட்டங்கு சொக்கப்பெருமாளே என்றும்பாடம். || செங்குவடு என்பது திருச்செங்கோடு. ¶ ஏறு ஆனாலே - இடபமும், பசுவும் கலத்தலால். ௦வேள் ஏ வாசம் கணையாலே-மன்மதன் எவுகின்ற புஷ்பபாணத்தாலும்

தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன   தனதான.

370. தோழமை கொண்டுசலஞ்செய் குண்டர்கள்
ஓதிய நன்றிமறந்த குண்டர்கள்
சூழ்விரதங்கள்கடிந்த குண்டர்கள்   பெரியோரைத்
தூஷணநிந்தைபகர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டுதகைந்த குண்டர்கள்
சூளுறவென்பதொழிந்த குண்டர்கள்   தொலையாமல்
வாழநினைந்துவருந்து குண்டர்கள்
நீதியறங்கள்சிதைந்த குண்டர்கள்
மானவகந்தைமிகுந்த குண்டர்கள்   வலையாலே
மாயையில்நின்றுவருந்து குண்டர்கள்
தேவர்கள் † சொங்கள்கவர்ந்த குண்டர்கள்
வாதைநமன்றன்வருந்திடுங்குழி   விழுவாரே
ஏழுமரங்களும்வன்குரங்கெனும்
வாலியுமம்பரமும்பரம்பரை
ராவணனுஞ்சதுரங்கலங்கையு   மடைவேமுன்
ஈடழியும்படி சந்த்ரனுஞ்சிவ
சூரியனுஞ்சுரரும்பதம்பெற
ராமசரந்தொடுபுங்கவன்திரு   மருகோனே
கோழிசிலம்பலம்பயின்றக
லாபநடஞ்செயமஞ்சுதங்கிய
கோபுரமெங்குமிளங்குமங்கல   வயலூரா
கோமளஅண்டர்கள்தொண்டர்மண்டலர்
வேலனெனும்பெயரன்புடன்புகழ்
கோடையெனும்பதிவந்தஇந்திரர் பெருமாளே. கசரு

---

*சொம்-சொத்து, உடைமை.

தானத் தானத் தானத் தானத்
தானத் தானத் தனதான.

371. தோடப் பாமற் றேய்தப் பாணிச்
சூழ்தூற் றார்தூற் றழுவாருந்

தூரப் போகக் கோரப் பாரச்
சூலப் பாசச் சமனாரும்

பாடைக் கூடத் தீயிற் றேறிப்
பாழ்பட் டேபட் டழியாதே

பாசத் தேனைத் தேசுற் றார்பொற்
பாதத் தேவைத் தருள்வாயே

ஆடற் சூர்கெட் டோடத் *தோயத்
தாரச் சீறிப் பொரும்வேலா

ஆனைச் சேனைக் கானிற் றேனுக்
காரத் தாரைத் தரும்வீரா

† கூடற் பாடிக் கோவைப் பாவைக்
கூடிப் பாடித் திரிவோனே

கோலச் சாலிச் சோலைச் சீலக்
கோடைத் தேவப் பெருமாளே. (கசுசு

---

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான.

372. ஆல காலம டப்பைம டப்பியர்
ஈர வாளற வெற்றும்வி ழிச்சியர்
யாவ ராயினும் நத்திய ழைப்பவர் தெருவூடே

ஆடி யாடிந டப்பதொர் பிச்சியர்
பேசி யாசைகொ டுத்தும ருட்டிகள்
ஆசை வீசிய ணைக்குமு லைச்சியர் பலரூடே

மாலை யோதிவி ரித்துமு டிப்பவர்
சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்
வாசம் வீசும ணத்தில்மி னுக்கிகள் உறவாலே

---

* தோயம் - சமுத்திரம் † கூடல்பாடி - மதுரைநகர்.

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான.

376. *புற்புதமெ னாவ அற்பநிலை யாத
பொய்க்குடில்கு லாவு மனையாளும்

புத்திரரும் வீடு மித்திரரு மான
புத்திசலி யாத பெருவாழ்வு

நிற்பதொரு கோடி கற்பமென மாய
நிட்டையுடன் வாழு மடியேன்யான்

நித்தநினை தாளில் வைத்ததொரு காதல்
நிற்குமுறை யோது நினைவாயே

சற்பகிரி நாத முத்தமிழ்வி நோத
சக்ரகதை பாணி மருகோனே

தர்க்கசமண் மூகர் மிக்ககழு வேற
வைத்தவொரு காழி மறையோனே

கற்புவழு வாது வெற்படியின் மேவு
கற்றைமற வாணர் கொடிகோவே

கைத்தஅசு ரேசர் மொய்த்தகுல கால
கற்பதரு நாடர் பெருமாளே. (௧௪௧)

---

தத்தத்தத் தத்தத் தத்தத் தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத் தனதான.

377. பொற்சித்ரப் பச்சைப் பட்டுக் கச்சிட்டுக் கட்டிப் பத்மப்
புட்பத்துக் கொப்பக் கற்பித் திளைஞோர்கள்

புட்பட்டுச் செப்பத் துப்பற் கொத்தப்பொற் றித்தத்திட்டப்
பொற்பிற் †பெற் றுக்ரச் சக்ரத் தனமானார்

கற்சித்தச் சுத்தப் பொய்ப்பித் தத்திற்புக் கிட்டப் பட்டுக்
கைக்குத்திட் டிட்டுச் சுற்றித் திரியாமல்

தற்றாற்றுச் சித்திக் கைக்குச் சித்திப்பப் பக்ஷத் திற்சொற்
கற்பித்தொப் பித்துக் கொற்றக் கழல்தாராய்

குற்சித்துக் கொட்டுக் கொட்டுத் தாக்கச்சத் தூக்குக் குக்குக்
குக்குக்குக் குக்குக் குக்குக் கெனமாறுக்

* புற்புதம்-நீர்க்குமிழி. † பெற்றுக்ர-பெற்றுஉக்கிர.

குட்சிக்குப் பக்ஷிக் கைக்குக் கக்ஷத்திற் பட்சத் தக்கக்
கொட்டிச்சட் டிக் *கொக் க்ரிக்குக் குடதாரி

சற்சித்துத் தொற்புத் திப்பட் சக்தக்கொப் பித்தட் சத்தச்
. சத்தத்தைச் சத்திக் கொச்சைப் பதிவாழ்வே

கக்ஷப்பற் றுக்கொப் பக்திற் †செப்பற்றைத் தெற்றிட்டுச்சச்
‡ சர்ப்பப்பொற் றைக்குட் சொக்கப் பெருமாளே. ()

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன. தனதான.

378. கொடிய மறலியு மவனது கடகமு
மடிய வொருதின மிருபதம் வழிபடு
குதலை யடியவ னினதருள் கொடுபொரும் அமர்காணக்

குறவர் மகள்புணர் புயகிரி சமுகமும்
அறுமு கமும்வெகு நயனமும் ரவியுமிழ்
கொடியு மகிலமும் வெளிபட இருதிசை யிருநாலும்

படியு நெடியன எழுபுண ரியுமுது
§கிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறிப்

பழைய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ ¶ வருமதி லருணையி லொருவிசை வரவேணும்

சடில தரவிட தரபணி தரதர
பரசு தரசசி தரசசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தரபாரத்

தரளி தரதனு தரவெகு முகசல
தடினி தரசிவ சுதகுண தர ○பணி
சயில விதரண தருபுர சசிதரு மயில்வாழ்வே

நெடிய வடவரை இருளெழ நிலவெழ
எயிறு சுழல்விழி தழலெழ எழுகிரி
நெரிய அதிர்குரல் புகையெழ இடியெழ நெடுவானும்

* கொக்க்ரி-கொக்கரி—கூவுதலுடைய. † செற்றிட்ட உச்ச எனப்பிரிக்க
‡ சர்ப்பப்பொற்றை—நாகமலை. § கிரிதிகிரி—சக்கரவாளகிரி. ¶ வரும் அதில்-வந்தது போல ○பணிசயில-நாகமலையிலிருப்போனே.

நிலனும் வெருவர வருநிசி சரர்தள
நிகில சகலமு மடியவொர் படைதொடு
நிருப குருபர சுரபதி பரவிய பெருமாளே. (௩௭௮)

கொல்லிமலை.

தையதன தானந்த தையதன தானந்த
தையதன தானந்த தனதான.

379. தொல்லைமுதல் தானென்று *மெல்லியிரு பேதங்கள்
சொல்லு †குண மூவந்த மெனவாகித்
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னைந்து
தொய்யுபொரு ளாறங்க மெனமேவும்
பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி யிசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லவொரு பாகந்த
பௌவமுற வேநின்ற தருள்வாயே
கல்லுருக வேயின்கண் அல்லல்படு ‡கோவம்பு
கல்வருக வேநின்று §குழலூதுங்
கையன்மிசை யேறும்பன் நொய்யசடை யோனெந்தை
கைதொழுமெய் ஞானஞ்சொல் கதிர்வேலா
கொல்லைமிசை வாழ்கின்ற வள்ளிபுன மேசென்று
கொள்ளைகொளு மாரன்மை யலராகிக்
கொய்துதழை யேகொண்டு செல்லு ||மழ வாகந்த
கொல்லிமலை மேனின்ற பெருமாளே. (௩௭௯)

தத்த தன்ன தைய தத்த தன்ன தைய
தத்த தன்ன தைய தனதான.

380. கட்ட மன்னு மன்னல் கொட்டி பண்ணு மைவர்
கட்கு மன்னு மில்லம் இதுவேனிக்

*மெல்லி இருபேதங்கள் - சிவம் சத்தி இரண்டு. †குணம் மூவந்தம் - இராசத, தாமத, சாத்துவீகம் என்னும் முக்குணமும், அவற்றையுடைய திரிமூர்த்களும். ‡கோ அம்பு கல் வருக. பசுக்கள் அழகிய புகுமிடம் வந்துசேர. §குழலூதும் கையன் மிசை ஏறு உம்பன் - விஷ்ணுவாகிய ரிஷபவாகனத்தையுடையபரமசிவன். ||மழவன் - இளையோன்.

கற்ற *விஞ்ஞை சொல்லி யுற்ற வெண்மை யுள்ளு
கக்க எண்ணி முல்லை நகைமாதர்
இட்ட மெங்ங னல்ல கொட்டி யங்ங னல்கி
யிட்டு பொன்னை யில்லை யெனஏகி
எத்து பொய்ம்மை யுள்ள ஓற்று மின்மை யுள்ளி
யெற்று மிங்ங னைவ தியல்போதான்
மூட்ட வுண்மை சொல்லு செட்டி தின்மை கொள்ள
மூட்ட நன்மை விள்ள வருவேனோ
முத்து வண்ண வல்லி சித்ர வண்ண வல்லி
முத்தி விண்ண வல்லி மணவாளா
பட்ட மன்ன வல்லி மட்ட மன்ன வல்லி
பட்ட துன்று கொல்லி மலைநாட
பச்சை வன்னி யல்லி செச்சை சென்னி யுள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே. (கருரு)

---

## ராஜகெம்பீரவளநாட்டுமலை.

---

தானதந் தானதன தாந்த தனதன
தானதந் தானதன தாந்த தனதன
தானதந் தானதன தாந்த தனதன தந்ததான.

381. மாகசஞ் சாரமுகில் தோற்ற குழல்கொடு
போகஇந்த ராதிசிலை தோற்ற நுதல்கொடு
மானவண் டேறுகணை தோற்ற விழிகொடு கண்டுபோல
மாலர்கொண் டாடுகனி தோற்ற இதழ்கொடு
சோலைசென் றாதுகுயில் தோற்ற இசைகொடு
வார்பொரும் பாரமலை தோற்றமுலைகொடு மன்றுளாடி
சீகரம் பேணுதுடி தோற்ற இடைகொடு
போகபண் டாரபணி தோற்ற அரைகொடு
தேனுகுஞ் சீர்கதலி தோற்ற தொடைகொடு வந்துகாசு

---

* விஞ்ஞை-விஞ்ஜை, வித்தை.

தேடுகின் றவரொடுமெய் தூர்த்த னெனவுற
வாடுகின் றேனைமல நீக்கி யொளிதரு
சீவனென் றணபர மார்த்த தெரிசனை   வந்துதாராய்

வேகமுன் டாகியுமை சாற்று மளவினில்
மாமகங் கூருமது கிர்க்க வடிவுடை
வீரனென் பானொருப ராக்ர னெனவர   அன்றுசோமன்

மேனியுந் தேயகதிர் தோற்ற எயிறுக
* ஆனுகுந் தீகையற †சேட்டவிதிதலை
வீழநன் ‡பாரதியு மூக்கு நழுவிட   வந்தமாயன்

ஏகநின் றுகியமர் தோற்று *வதறிட
வேகவுங் கார மொடு ஆர்க்க அலைகக
ஊறிவென் றுடுகள நீக்கி முகிலோர்   வந்துசேயென்

றீசநம் பானபுரு ஷார்த்த தெரிசனை
தாவெனுங் கேள்விநெறி கீர்த்தி மருவிய
ராஜகெம் பீரவள நாட்டு மலைவளர் தம்பிரானே.(க[illegible]ச)

---

## ஞானமலை

---

தானதன தான தானதன தான
தானதன தான   தனதான.

382. சூது கொலை கார ராசைபண மாதர்
†தூவையர்கள் சோகை   முகநீலர்
சூலைவலி வாத மோடளைவர் பாவர்
தூமையர்கள் கோளர்   தெருவூடே
சாதனைகள் பேசி வாருமென நாழி
தாழிவிலை கூறி   தெனவோதி
சாயவெகு மாய தூளியுற ‡வாக
தாடியிடு வோர்கள்   உறவாமோ
வேதமுநி வோர்கள் பாலகர்கள் மாதர்
வேதியர்கள் பூச   லென §ஏகி

* ஆன் உகும் தீ - யாகப்பசுவை(தகித்து)பொடியாக்கும் அக்கினி.
† சேட்டவிதி - முதன்மையான தக்ஷப்பிரஜாபதி. ‡ பாரதி – சரசுவதி.
* வத்றிட - மொழிகுழற. † தூவையர்கள் - மாமிச பக்ஷணிகள். ‡ ஆக தாடியிடுவோர் - சரீரத்தைத் தட்டிக்கொடிப்போர்; § ஏகி - வருவித்து.

வீரசுரர் பாறி வீழஅலை யேழு
வேலையள றாக — விடும்வேலா
நாதரிட மேவு மாதுசிவ காமி
நாரியபி ராமி — யருள்பாலா
நாரணசு வாமி யீனுமக ளோடு
ஞானமலை மேவு — பெருமாளே. (௧௫௫)

---

தனதன தனத்த தான தனதன தனத்த தான
தனதன தனத்த தான தனதான.

383 மனையவள் நகைக்க வூரி னனைவரு நகைக்க லோக
மகளிரு நகைக்க தாதை — தமரோடும்
மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும்
வசைமொழி பிதற்றி நாளும் — அடியேனை
அனைவரு மிழிப்ப நாடு மனவிருண் மிகுத்து நாடி
னகமதை யெடுத்த சேமம் — இதுவோவென்
றடியனு நினைத்து நாளு முடலுயிர் விடுத்த போது
மணுகிமு னளித்த பாதம் — அருள்வாயே
தனதன தனத்த தான எனமுர சொலிப்ப வீணை
தமருக மறைக்கு ழாமும் — அலைமோதத்
* தடிநிக ரயிற்க டாவி யசுரர்க ளிறக்கு மாறு
சமரிடை விடுத்த சோதி — முருகோனே
எனைமன முருக்கி யோக † அநுபூதி யளித்த பாத
எழுதரி யபச்சை மேனி — யுமைபாலா
இமையவர் துதிப்ப ஞான மலையுறை குறத்தி பாக
இலகிய சசிப்பெண் மேவு — பெருமாளே. (௧௫௬)

---

## ஊதிமலை

---

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான.

384. ஆதிமக மாயி யம்மை தேவிசிவ னார்ம கிழ்ந்த
ஆவுடைய மாது தந்த — குமரேசா

---

* தடி - மின்னல் † அநுபுதி – அ.

ஆதரவ தாய்வ ருந்தி யாதியரு ணைச ரென்று
ஆளுமுனை யேவ ணங்க அருள்வாயே
பூதமது வான வைந்து பேதமிட வேய லைந்து
பூரணசி வாக மங்கள் அறியாதே
பூணுமுலை மாதர் தங்கள் ஆசைவலை யேநி னைந்து
போகமுற வேவி ரும்பும் அடியேனை
நீதயவ தாயி ரங்கி நேசவரு ளேபு ரிந்து
நீதிநெறி யேவி ளங்க வரவேணும்
நேர்மைசிவ னார்நி கழ்ந்த காதினுரை வேத யந்த்ர
நீலமயி லேறி வந்த வடிவேலா
ஓதுமறை யாக மஞ்சொல் யோகமது வேபு ரிந்த
ஊழியுணர் வார்கள் தங்கள் வினைதீர
ஊனமுயி ராய்வ ளர்ந்து ஓசையுடன் வாழ்வு தந்த
ஊதிமலை மீத மர்ந்த பெருமாளே. (கநிஎ)

---

தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன தனதான.

387. கோதி முடித்துக் கனத்த கொண்டையர்
சூது விதத்துக் கிதத்து மங்கையர்
கூடிய அற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே
கோழை மனத்தைக் கெடுத்து வன்புல
ஞான குணத்தைக் கொடுக்கு முன்செயல்
கூறு மிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே
நாத நிலைக்குட் கருத்து கந்தருள்
*போத கமற்றோர் சகத்தை யுந்தரு
நான்மு கனுக்குக் கிளத்து தந்தைபின் மருகோனே
நாடு மகத்தெற் கிடுக்கண் வந்தது
தீரி டுதற்குப் பதத்தை யுந்தரு
நாயகர் †புத்ரக் குருக்க ளென்றருள் வடிவேலா
தோதி மிதித்தித் திமித்த டிங்குகு
டகு குடிக்குட் டிகுக்கு டிண்டிமி
தோதி மிதித்தித் தனத்த தந்தவெ னிசையோடே

* போதக - ஞானகுருவே. † புத்ரக் குருக்கள் - தகப்பன் சாமி.

சூழ நடித்துச் சடத்தில் நின்றுயி
ரான துறத்தற கிரக்க முஞ்சுப
சோப னமுப்பக்க கருத்தும் வந்தருள் புரிவோனே

ஓத*வெ ழுத்துக் கடக்க முஞ்சிவ
கார ணபத்தர்க் கிரக்க முந்தகு
ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு †மென் கட ரொளியோனே

‡ஓதி யிணர்த்திக் குழைக்கி டுங்கன
காப ரணைந்திற் பொருட் பயன்றரு
ஊதி கிரிக்குட் கருந்த நந்தருள் பெருமாளே. (கஙஅ)

---

§குருடிமலை

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

386. கருடன் மிசைவரு கரிய புயலென
கமல மணிவொடு வலகோரைக்

கதறி யவர்பெயர் சொருக மனமது
கருதி முதுமொழி கனோடிக்

திருடி யொருபடி நெருடி யறிவிலர்
செவியில் நுழைவன கவிபாடித்

திரியு மவர்சில புலவர் மொழிவது
சிறிது முணர்வகை யறியேனே

|| வருடை பினமது முருடு படுமகில்
மரமு மருதமும் அடிசாய

மதுர மெனுநதி பெருகி யிருகரை
வழிய வகைவகை குதிபாயும்

குருடி மலையுறை முருக குலவட
குவடு தவிடெழ மயிலேறும்

குமர குருபர திமிர தினகர
குறைவி லிமையவர் பெருமாளே. (கஙக)

---

* எழுத்து — மந்திரம். † என் - என்னும். ‡ ஓதி - ஓதியமாம். § இந்த ஸ்தலம்கோயமுத்தூருக்குத் தெற்கேயுள்ள துடியலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தி லுள்ளது. || வருடை, மலையாடு.

## * தென்சேரிகிரி.

---

தந்தான் தனதனன தந்தான தனதனன
தந்தான தனதனன தனதான.

387. எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு
இங்கேவ ருனதுமயல் தரியாரென்

றிந்தாவெ னினியஇதழ் தந்தேனை யுறமருவ
என்றுசை குழையவிழி யிணையாடித்

தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்
சந்தேக மறவெபறி கொளுமாதர்

சங்கீத கலவிநல மென்றேது முதவிவிட
† தண்பாரு முனதருளை யருள்வாயே

சங்கோடு திகிரியது கொண்டேயு நிரைபிறகு
சந்தாரும் ‡ வெதிருகுழ லதுவூதித்

தங்காதல் தனை § யுகள என்றேழு மடவியர்கள்
தங்கூறை கொடுமரமி லதுவேறுந்

சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள
சென்றேயும் அமரருறு சிறைமீளச்

செண்டாடி அசுரர்களை வென்றுவெல அடியர்தொழ
தென்சேரி கிரியில்வளர் பெருமாளே. (கசுo)

தந்தானத் தந்ததனதன தந்தானத் தந்ததனதன
தந்தானத் தந்ததனதன தனதான.

390. கொண்டாடிக் கொஞ்சுமொழிகொடு கண்டாரைச் சிந்துவிழிகொடு
கொந்தாரச் சென்றகுழல்கொடு வடமேருக்

குன்றொடொப் பென்றமுலைகொடு விண்டாலிக் கின்றமயிலன
கொம்பாயெய்ப் புண்டவிடைகொடு பலரோடும்

பண்டாடச் சிங்கியிடுமவர் விண்டாலிக் கின்றமயிலன
பண்பாலிட் டஞ்செல்மருளது விடுமாறு

பண்டேசொற் றந்தபழமறை கொண்டேதர்க் கங்களறவுமை
பங்காளற் கன்றுபகர்பொருள் அருள்வாயே

* இந்தஸ்தலம் காயமுத்தூர் ஜில்லா பல்லடம் தாலூகா கஸ்பா பல்லடத்துக்குத் மேற்கே, கஉ மைல் தூரத்திலுள்ளது. † தண்பு தண்மை. ‡ வெதிர் மூங்கில். § உகள - சடக்க.

வண்டாடத் தென்றல் தடமிசை தண்டாதப் புண்டரிகமலர்
மங்காமற் சென்று மதுவைசெய் வயலூரா
வங்காலக் கொண்டல்வடிவொரு சங்க்ராமக் கஞ்சன் விழவுதை
மன்றூடிக் கன்றுதருதிரு மருகோனே
திண்டாடச் சிந்துநிசிசரர் தொண்டாடக் கண்டவமர்பொரு
செஞ்சேவற் செங்கையுடையசண் முகதேவே
சிங்காரச் செம்பொன்மதிளத லங்காரச் சந்த்ரகலைதவழ்
தென்சேரிக் குன்றிலினிதுறை பெருமாளே. (கசுக)

---

## * கொங்கணகிரி.

---

தந்ததன தத்ததன தந்ததன தத்ததன
தந்ததன தத்ததன தனதான.

389. ஐங்கரனையொத்தமன மைம்புலமகற்றிவளர்
அந்திபகலற்றநினை வருள்வாயே
அம்புவிதனக்குள்வளர் செந்தமிழ்வழுத்தியுனை
அன்பொடு துதிக்கமனம் அருள்வாயே
தங்கியதவத்துணர்வு தந்தடிமைமுத்திபெற
சந்திரவெளிக்குவழி யருள்வாயே
தண்டிகைகனப்பவுசு எண்டிசைமதிக்கவளர்
சம்ப்ரமவிதத்துடனெ யருள்வாயே
மங்கையர்சுகத்தைவெகு இங்கிதமெனுற்றமன
முன்றனைநினைத்தமைய அருள்வாயே
மண்டலிக†ரப்பகலும் வந்தசுபரக்ஷைபுரி
வந்தணைசுபுத்தியினை யருள்வாயே
கொங்கிலுயிர்பெற்றுவளர் தென்கரையிலப்பரருள்
கொண்டு உடலுற்றபொருள் அருள்வாயே
குஞ்சரமுகற்கிளைய கந்தனெனவெற்றிபெறு
கொங்கணகிரிக்குள்வளர் பெருமாளே. (கசுஉ)

---

* இத்தலம் கோயமுத்தூர் ஜில்லா தாராபுரம் தாலூகாவில் திருப்பூர் ரெயில்வேஸ்டேஷனுக்கு 2மைல் தூரத்திலுள்ளது. † ராப்பகல் என்பது அப்பகல் என்றாயிற்று.

## *கொடுங்குன்றம்.

---

தனந்த னந்தந் தந்தந் தந்தந் தந்ததான

390. அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே
அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங் கொங்கையாலே
முனிந்து யன்றங் கண்டுந் தண்டும பெண்களாலே
முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின் றின்புறாதோ
தெனத்தெ னந்தெ னந்தெ னந்தெ னந்த தெந்தனுனு
செறிந்தடர்ந்து யர்ந்தெ சென்றும் பண்பின் தும்பிபாடக்
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலைக்
கொழுங்கொ டுந்தின் குன்றந் தங்குந் தம்பிரானே.

தனதனன தனதனன
தத்தத் தனந்ததன தந்தத் தனந்ததன
தனதனன தனதனன
தத்தத் தனந்ததன தந்தத் தனந்ததன
தனதனன தனதனன
தத்தத் தனந்ததன தத்தத் தனந்ததன தந்ததான.

361. எதிர்பொருது கவிகடின
கச்சுக் கனும்பொருது முத்திக் கிறந்துமலை
யிளைகளென வதிம்ருகம
தப்பட் டுமின்மருவி முத்துச செறிந்தவட
மெனு†ந்களா மவையறவு
தைத்திட் டணைந்துகிரி னிற்கொத துமங்குசமொ ருங்குபாகர்
எதிர்பரவ உரமிசைது
கைத்துக் கிடந்துடல்ப தைக்கக் கடிந்துமிக
இரதிபதி மணிமவுலி
வெற்றித் த்ரியம்பகனு முட்கத் திரண்டிளசி
யிளைஞருயிர் கவள மென
மட்டித் தலைசந்தெதிர்பு டைசூழ்ச் சினந்த பெருகொங்கையானை

---

* கொடுங்குன்றம் என்பது பிரான்மலை † கிளம் - யானைகட்டும் சங்கிலி.

பொது வில்விலை யிடுமகளிர்
பத்மக் கரந்தழுவி யொக்கத் துவண்டமளி
புகஇணைய வரிபரவு
நச்சுக் கருங்கயல்கள் செக்கச் சிவந்தழுது
பொதியுமொழி பதற அள
கக்கற் றிறையுங்குலைய முத்தத் துடன்கருணை தந்துமேல்வீழ்

புதுமைதரு கலவிவலை
யிற்பட் டழுந்தியுயிர் தட்டுப் படுந்திமிர
புணரியுக திமில்மறுகி
மட்டற் றஇந்த்ரிய சட்டைக் குரம்பையழி
பொழுதிளினும் அருள்முருக
சுத்தக் கொடுங்கிரியி னிர்த்தச் சரண்களைம றந்திடேனே

திகிகிகி கிகிகிகி
கித்திக் கிதிங்கிகிகி தத்தக் ததந்ததத
தெதததெதத தெததத தெதத
தெத்தெத் தெதந்ததெதத திக்கட் டிகண்டிகட
ஜெகணகெண கெணஜெகுக
தெத்திக் த்ரியக்கிரித தக்கந் தகுந்தகுர்த திந்திநீதோ

திகுடதிகு தொகுடதொகு
திக்கட் டிகண்டிகட டக்கட் டகண்டகட
டிடிடுடு டிடிடுடு
டிக்கட் டிகண்டிகட டிட்டிட் டுடிண்டுடு
திகுகுதிகு திகுகுகுகு
திக்குத் திகுந்திகுகு குக்குக் குகுங்குகுகு என்றுதாளம்

முதிர் திமிலை கரடிகையி
டக்கைக் கொடுந்துடியு டுக்கைப் பெரும்பதலை
முழவுபல மொகுமொகென
வொத்திக் கொடும்பிரம கத்திக் களும்பரவ
முகடுபுகு வெகுகொடிகள்
பக்கத் தெழுந்தலைய மிக்கக் கவந்தநிரை தங்கியாட

மூதுகழுகு கொடி கருட
னொக்கத் திரண்டுவர வுக்ரப் பெருங்குருதி

முழுகியெழு பயிரவர்ந
டித்திட் டகண்டமும்வெ டிக்கத் துணிந்ததிர
முடுகிவரு திரிசிரரை
முட்டிச் சிரந்திருகி வெட்டிக் களம்பொருத தம்பிரானே. (௧௬௪)

---

## குன்றக்குடி

---

தனதன தந்தத் தனதன தந்தத்
தனதன தந்தத் தனதான

392. பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்
பருவம தன்கைச் சிலையாலே
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றுக் குணமேவிச்
சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலுமு ழிந்தற் பமதான
தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ
செறுவித வஞ்சக் கபடமொ டன்றுந்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட வென்றிப் பொருகோனே
குறுமுனி யின்பப் பொருள்பெற அன்றுற்
பன*மனு வஞ்சொற் குருநாதா
குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமானே. (௧௬௫)

---

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தநத தந்த தனதான.

393. அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இனசொல் மொழியாலே
அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே

---

* மனு-மந்திரம்.

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து
தொடுமி ரண்டு கண்க ளதனாலே
துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
துயரை யென்றொ ழிந்து விடுவேனோ
எழுது *கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
யெதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே
இதம கிழ்ந்தி லங்கை யசுர ரந்த ரங்க
மொழிய வென்ற கொண்டல் மருகோனே
மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
மனுவி யம்பி நின்ற குருநாதா
வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க
மலைவி ளங்க வந்த பெருமாளே.(கசுசு)

---

தனனதன தந்த தானன தனனதன தந்த தானன
தனனதன தந்த தானன தனதான.

396. கடினதட கும்ப நேரென வளருமிரு கொங்கை மேல்விழு
கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்
கனவளக பந்தி யாகிய நிழல்தனிலி ருந்து தேனுமிழ்
கனியிதழை மென்று தாடனை செயலாலே
துடியிடைநு டங்க வாள்விழி குழைபொரநி தம்ப மூடிய
துகில்நெகிழ வண்டு கோகில மயில்காடை
தொனியெழவி ளைந்தசூரியகொடுநகமி சைந்துதோள்மிசை
துயிலவச இன்ப மேவுதல் ஒழிவேனோ
இடிமுரச றைந்து பூசல்செய் அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப
எமபடரு மென்செய் வோமென நடுநடுந டுங்க வேல்விடு
இரணமுக சண்ட மாருத மயிலோனே
வடிவுடைய அம்பி காபதி கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநகர் உறைவோனே
வகைவகைபு கழ்ந்து வாசவன் அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே.(கசுஎ)

---

* கும்பகன்பின் இளையதம்பி - கும்பகர்னன் தம்பியாகிய விபீஷணன்.

தனதனன தனதனன தனதனன தனதனன
தந்தத்த தத்ததன தந்தத்த தத்ததன தனதான.

395. *கருபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய
தந்தத்தி னைத்தடிவ தொந்தத்தி ரத்தையுள
அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்
அம்பொற்ப தத்தந்தனு வம்பொற்பொ ருப்படர்வ
களபபரி மளமெழுகும் எழிலில்முழு குவமுளரி
யஞ்சப்ப டைத்தெழுவ வஞ்சக்க ருந்துமதனபிஷேகம்

கடிவபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
வின்பச்சு டர்க்கனக கும்பத்த ரச்செருவ
பிறிதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக்கி டர்த்தருவ பந்தித்த கச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பி முத்தணிவ பொங்கிக்கனத்தொளிர்வ முலைமாதா

†வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்க ருத்துமுகில் வென்றிட்டு நெய்த்தகுழ
லளையருசி யமிர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்புட்கு ரற்பகர வம்புற்ற மற்புரிய
வருமறலி யரணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச்சி வக்கமகிழ் நன்றிச்ச மர்த்துநக நுதிரேகை

வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவித
ழூண்டுட்ப்ர மிக்கநசை கொண்டுற்ற ணைத்தவதி
செறிகலவி வலையிலென தறிவுடைய கலைபடுந
லுந்திப்பி றப்பறநி னைந்திட்ட முற்றுனடி
வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
துன்றட்ட சிட்டகுண குன்றக்கு டிக்கதிப அருளாதோ

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத்த குத்தகுகு திங்குத்தி குத்திகிகு
சகணசக சகசகண செகணசெக செகசெகெண
சங்கச்ச கச்சகண செங்கச்செ கச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன தனனான

* கருபம் - திசை. † வகுளம் -

தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி
தங்குத்த குத்தகுகு திங்குத்தி குத்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
தாரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி
தன்றத்த ரத்தரர தின்றித்தி ரித்திரிரி யெனதாளந்

தொகுதிவெகு முரசுகர டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட்ட டங்கைபறை
பதலைபல திமிலைமுத லிரவுதிர் பெரியதலை
மண்டைத்தி ரட்பருகு சண்டைத்தி ரட்கழுகு
தொடர்நிபிட கருடனடர் தரகரட மொகுமொகென
வந்துற்றிடக்குடர்நி ணந்துற்றிசைத்ததிர முதுபேய்கள்

*சுனகனரி நெறுநெறென வினிதினிது தினவினைசெய்
வெங்குக்கு டத்தகொடி குங்குக்கு குக்குகென
†அடனமிடு திசைபரவி நடனமிட வடவிரவி
திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ர சித்தகுல
துரககஜ ரதகடக முரணரண நிருதர்விறல்
மிண்டைக்கு லைத்தமர்செய்தண்டர்க்கு ரத்தையருள் பெருமாளே.

---

தானனதனதான தானனதனதான
தானனதனதான தனதான.

396. நாமேவுகுயிலாலு மாமாரனயிலாலு
நாடோறுமதிகாயும் வெயிலாலும்
நார்மாதர்வசையாலும் வேயூதுமிசையாலு
நாடாசைதருமோக வலையூடே
ஏமாறிமுழுநாளு மாலாகிவிறுதாவி
லேவாடிவிழிமாதர் துயரூடே
ஏகாமலழியாத மேலானபதமீதி
லேகியுனுடன்மேவ அருள்தாராய்
தாமோகமுடனூறு பால்தேடியுரலோடு
தானேறி விளையாடும் ஒருபோதில்

---

* சுனகன் - நாய். † அடனமிடு - போகின்ற.

தாயாகவருசோதை காணுதுகளவாடு
தாமோதரன்முராரி மருகோனே
மாமாதுவனமாது கார்மேவுசிலைமாது
மாலாகிவிளையாடு புயவீரா
வாளுடுபுகழ்நாடு தேனாறுபுடைசூழு
*மாயூரகிரிமேவு பெருமாளே.(கசுகூ)

---

தானதான தந்தனதத்தன
தானதான தந்தனதத்தன
தானதான தந்தனதத்தன தனதான.

397. நேசாசாரா டம்பரமட்டைகள்
பேசாதேயே சுங்களமட்டைகள்
†நீசாளோடே யும்பழகிக்கவர் பொருளாலே
நீயேநானே யென்றொருசத்தியம்
வாய்கூசாதே தாங்கபடத்திகள்
நேராலேதா னின்றுபிலுக்கிகள் எவர்மேலும்
ஆசாபாசா தொந்தரையிட்டவர்
மேல்வீழ்வார்பால் சண்டிகள்கட்டழ
கர்யேமீதோ லெங்குமினுக்கிகள் வெகுமோகம்
ஆகாதாவே சந்தருதிப்பொழு
தோகோவாவா வென்றுபகட்டிக
ளாகாமோகா வம்பிகள்கிட்டினும் உறவாமோ
பேசாதேபோய் நின்றுறியிற்றயிர்
வாயாவாவா வென்றுகுடித்தருள்
பேராலேநீள் கஞ்சன்விடுத்தெதிர் வருதூது
பேய்வாழ்வேதா ளம்பகடைப்பகு
வாய்நீள்மாளு ளுஞ்சரளத்தொடு
பேயோடேபோர் வென்றெதிரிட்டவன் மருகோனே

* மாயூரகிரி என்பது குன்றக்குடி, † நீசாளோடேயும் - நீசரோடேயும்.

மாசூடாடா டும்பகையைப்பகை
சூராளோடே வன்செருவைச்செறு
மாசூராபா ரெங்குமருட்பொலி முருகோனே
வானாடேழ்நா டும்புகழ்பெற்றிடு
தோனாறேசூழ் தூங்கமலைப்பதி
மாயூராவாழ் குன்றைதழைத்தருள் பெருமாளே.(௧௭௦)

---

## போதியமலை.

---

*தத்த தத்த தான தான தத்த தத்த தான தான*
*தத்த தத்த தான தான தனதான.*

398. மைக்க ணிக்கன் வாளி போழ வுட்க ளத்தை மாறி நாடி
மட்டு முற்ற கோதை போத முடிசூடி.
மத்த கத்தி னீடு கோடு வைத்த தொத்து மார்பி னூடு
வட்ட மிட்ட வாரு லாவு முலைமீதே
*இக்கு வைக்கு மாடை வீழ வெட்கி யக்க மானபேரை
யெத்தி முத்த மாடும் வாயின் இசைபேசி
எட்டு துட்ட மாதர் பாய லிச்சை யுற்றெ னைக மாவி
யெய்த்து நித்த மான வீனம் உறலாமோ
துர்க்கை †பக்க சூல காளி ‡செக்கை புக்க தாள வோசை
தொக்க திக்க தோத கீத வெனவோதச்
சுற்றி வெற்றி யோடு தாள்கள் சுத்த நிர்த்த மாடு மாதி
சொற்கு நிற்கு §மாறு தார மொழிவோனே
திக்கு மிக்க வானி னூடு புக்க விக்க மூடு சூரர்
|| திக்க முட்டி யாடு தீர வடிவேலா
செச்சை பிச்சி மாலை மார்ப விச்சைகொச்சை மாதினோடு
¶செப்பு வெற்பில் சேயதான பெருமாளே.(௧௭௧)

---

* இக்கு வைக்கும் - தடையாக வைக்கும், † பக்க-முக்கிளையாகப்பகுப்புற்ற. ‡ செக்கை-செங்கை § மாறுதாரம் - மறு உத்தரம், || திக்க - சிதற. ¶ செப்புவெற்பு - பொதியமலை 'செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியமும், (கல்லாடம்-65),

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தனதான

399 *வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை யசைத்து நூலின்ம ருங்கினுடை

மினுக்கி யோலைகள் பிலுக்கி யேவளை
துலக்கி யேவிள நகைத்து வாள்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு தந்தவாய்நீர்

குடித்து நாயென முடக்கு மேல் †பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்

குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் மேலென அளித்து வேல்மயில்
கொடுத்து வேதமு மொருத்த னாமென சிந்தைகூராய்

உடுட்டு டுடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்கு மூரமுழ ரங்குபோரில்

உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
யுடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராவை

அடைத்த மாசிறை விடுத்து வானுல
களிக்கு மாயிர திருக்க னூர
சளித்து நாளுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா

அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
அகத்ய மாமுனி பொருப்பின் மேவிய தம்பிரானே.()

---

* வெடித்த - நறுமணம் கமழ்கின்ற. † பிணி அடுத்து உபாதிகள் படுத்த எனப்பிரிக்க.

## *கழுகுமலை.

தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன தனதான.

400. குதலை மொழியினர் நிதிக்கொள் வாரணி
முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்
கொடிது கொடிததால் வருத்த மாயுறு துயராலே

மதலை மறுகிவா லிபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமை புகல்வதே யெனக்கு மோஇனி முடியாதே.

முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை யனையதா நிறத்த மால்திரு மருகோனே

கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள்மேவிய பெருமாளே. (௧௭௩)

தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன தனதான.

401. முலையை மறைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர்பூமலர் அணைமீதே

அலைகுலை யக்† கொட்டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர் பொருளைக்கைப் பறிப்பவர் வேசைகள் உறவாமோ.

தலைமுடி பத்துத் தெறித்த ராவண
னுடல்துளை பட்டுத் துடிக்க வேயொரு
தநுவை வளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே

* இந்த ஸ்தலம் திருநெல்வேலிக்கு வடக்கு ௨௮-மைல் தூரத்திலுள்ளது, கோயிற் பட்டிக்கு மேற்கு 12-மைல். †கொட்டணைப்பர்-கொண்டணைப்பர்.

கலைமதி யப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகு மலைக்குட் சிறக்க மேவிய பெருமாளே. (௪௭௪)

---

தாந்த தனன தனன தாந்த தனன தனன
தாந்த தனன தனனந் தனதான.

402. கோங்க முகையு மெலிய வீங்கு புளக களப
மேந்து குவடு குழையும் படிகாதல்
கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி யமுதுண் டியல்மாதர்
வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவுந் தணியாத
வாஞ்சை யுடைய அடிமை நீண்ட பிறவி யலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ
ஓங்க லணைய பெரிய * சோங்கு தகர மகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்
ஒய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில வுலவுந் தனிவேலா
வேங்கை யடவி மறவர் எங்க வனிதை யுருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே. (௪௭௫)

---

† வள்ளியூர்.

தைய தானன தனதான தைய தானன தனதான

403. அல்லில் நேருமின் அதுதானும் அல்ல தாகிய உடல்மாயை
கல்வி னேரமு வழிதோறும் கையும் நானுமு லையலாமோ
சொல்லி நேர்படு முதுசூரர் தொய்ய வூர்கெட விடும்வேலா
வல்லி மாரிரு புறமாக வள்ளி யூருறை பெருமாளே. (௪௭௬)

---

* சோங்கு - கப்பல். † இந்த ஸ்தலம் திருநெல்வேலி ஜில்லா நாங்குநேரி தாலூகா கஸ்பா நாங்குநேரிக்குத் தென்கிழக்கு ௯-மைல் தூரத்திலுள்ளது.

## கதிர்காமம்.

சந்தனம்.
கமாஸ்

தனதனன தான தனதனன தான
தனதனன தானத் தனதானா.

104. திருமகளுலாவு மிருபுயமுராரி
திருமருகநாமப் பெருமாள்காண்
செகதலமும்வானு மிகுதிபெறுபாடல்
தெரிதருகுமாரப் பெருமாள்காண்
மருவுமடியார்கள் மனதில்விளையாடு
மரகதமயூரப் பெருமாள்காண்
மணிதரளம்வீசி யணியருவிசூழ
மருவுகதிர்காமப் பெருமாள்காண்
அருவரைகள் நீறு படஅசுரர்மாள
அமர்பொருதவீரப் பெருமாள்காண்
அரவுபிறைவாரி விரவுசடைவேணி
அமலர்குருநாதப் பெருமாள்காண்
இருவினையிலாத தருவினைவிடாத
இமையவர்குலேசப் பெருமாள்காண்
இலகுசிலைவேடர் கொடியினதிபார
இருதனவினோதப் பெருமாளே. (௧௭௭)

---

தனன தான தானன தன்ன தான தானன
தனன தான தானன தனதான.

05. *அலகின் மாறு மாருத†கலதி பூத வேதாளி
அடைவில்‡ஞாளி கோமாளி அறமீயா
அழிவு கோளி நாணது புழுகு பூசி வாழ்மாதர்
அருளி லாததோடோய மருளாகி
பலக லாக ராமேரு மலைக ராச லாவீசு
பருவ மேக மேதாரு வெனயாதும்

* அலகின்மாறு - விளக்குமாறு. † கலதி - மூதேவி. ‡ ஞாளி - நாய்

பரிவுறாத மாபாதர் வரிசை பாடி யோயாத
பரிசில் தேடி மாயாத படிபாராய்
இலகுவேலை நீள் *வாடை யெரிகொள் வேலை மாசூரி
லெறியும் வேலை மாறாத திறல்வீரா
இமய மாது பாகீர திநதி பால காசார
விறைவி கான மால் வேடர் சுதைபாகா
கலக வாரி போல்மோதி வடவை யாறு சூழ்சீத
கதிர காம மூதூரில் இளையோனே
கனக நாடு வீடாய கடவுள் யானை வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே.(௧௭௮)

---

தனன தான தத்த தனதான தனன தான தத்த தனதான.

408. எதிரி லாத பத்தி தனைமேவி இனிய தாணி னைப்பை யிருபோதும்
இதய வாரி திக்கு ளுறவாகி யெனது ளேசி றக்க அருள்வாயே
கதிர காம வெற்பி லுறைவோனே கனக மேரு வொத்த புயவீரா
மதுர வாணி யுற்ற கழலோனே வழுதி கூனி மிர்த்த பெருமாளே)

---

தனதன தனதன தனதன தனதன
தானத் தனந்த தனதான.

409. கடகட வருவிகள் தப†வரி யதிர்கதிர்
காமத் தரங்க மலைவீரா
கன ‡கத நககுலி புணரித குணகுக
§காமத் தனஞ்சம் புயனோட
வடசிக ரகிரித விடுபட ||கடமிடு
மாவிற் புகுங்கந் த¶வழாது
வழிவழி தமரென வழிபடு கில்○னென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்

---

* வாடையெரி-வடவாமுகாக்கினி. † வரி-கீற்றுகளையுடைய புலி.
‡ கத நகம் - கோபத்தையுடைய மலையையொத்த யானை. § காம அத்தன் மன்மதன் பிதாவாகிய விஷ்ணு 'காமத்தன் அஞ்சு அம்புயன் ஓட,எனப்பிரிக்க
|| கடமிடுமா - மயிற்குதிரை ¶ வழாது-வழுவாமல். ○ எனக்காவிக்கினம் - என் அவா விக்கினம்.

அடவியி ருடியபி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றயர்வோனே
அயிலவ *சபரிசெய் கவிபுகல் தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே
இடமொரு மரகத மயிலிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே
இதமொழி பகரினு மதமொழி பகரினு
மேழைக் கிரங்கும் பெருமாளே.(கஅ0)

---

தனனதன தானத்த தனனதன தானத்த
தனனதன தானத்த தனதான தானனா.

408. சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போலுலாவியே
சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்ரு பாசுத்தர்
தமையுணர ராகத்தின் வசமாகமேவியே
உமதடியு ளுருக்கு மனுமரண மாயைக்கு
ழுரியவர்ம காதத்தை யெனுமாயமாதரார்
ஒளிரமணி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள்க்ரு பாசித்தம் அருள்கூரவேணுமே
இமகிரிகு மாரத்தி யநுபவைப ராசத்தி
யெழுதரிய காயத்ரி யுமையாள்குமாரனே
எயினர்மட மானுக்கு மடிலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகாவிசாகனே
அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய கவிராஜராஜனே
† அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தில் உரியாபிராமனே.(கஅக)

---

* சபரிசெய்கவி - பூஜை செய்த நக்கீரர்.

† இக்கருத்தை:—
"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்", என்னும் பெரியபுரா
ணத் திருவிருத்தத்தாற் காண்க.

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனதான.

409. சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்
சரிப்போ னமட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றான் இருகூறாச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சே வல்பெற்றாய் * வலக்கா ரமுற்றாய்
திருத்தா மரைத்தாள் அருள்வாயே
புரத்தார் † வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் ‡ மருத்தூர் மதனுரைக்
கரிக்கோ லவிட்டார் § கணுக்கா னமுத்தே
கதிர்க்கா மமுற்றார் முருகோனே. (௧அஉ)

---

தனதனு தத்தனத் தனதனு தத்தனத்
தனதனு தத்தனத் தனதான.

410. சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தினுக் கணுகொணு மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான
துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு

---

* வலக்காரம் - வெற்றி. † வரத்தார் - வரப்பிரசாதிகள். ‡ மருத்தூர் - தென்றற்காற்றாகிய தேரை நடத்தும். § கணுக்கான் - கண்ணுக்கான.

துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனோ
புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே
*கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிசூ தந்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிரகா மக்கிரிப் பெருமாளே. (௧௮௩)

---

தானதன தத்தத்த தானதன தத்தத்த
தானதன தந்தத்த தனதான.

411. பாரவித மூத்தப் படரபுள கப்பொற்ப
யோதரநெ ருக்குற்ற இடையாலே
பாகளவு தித்தத்த கீதமொழி யிற்புட்ப
பாணவிழி யிற்பொத்தி விடுமாதர்
காரணிகு ழற்கற்றை மேல்மகர மொப்பித்த
காதில்முக வட்டத்தில் அதிமோக
காமுகன கப்பட்ட வாசையைம றப்பித்த
கால்களைம றக்கைக்கும் வருமோதான்
தேரிரவி யுட்கிப்பு காமுதபு ரத்திற்றெ
சாசிரனை மர்த்தித்த அரிமாயன்
சீர்மருக அத்யுக்ர யானைபடும் ரத்நத்ரி
கோணசயி லத்துக்ர கதிகாம
வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
மேகலையி டைக்கொத்தின் இருதாளின்
†வேரிமழை யிற்‡ பச்சை வேயிலரு ணக்கற்றை
வேல்களில கப்பட்ட பெருமாளே. (௧௮௪)

---

தனதன தத்த தனதன தத்த
தனதன தத்த தனதான.

412. மருவரு வெற்றி மலர்§தொடா விற்கை
வலிசெயா னிற்கு மதனாலும்

---

*கரிய யூகம்-கருங்குரங்கு †வேரிமழை - வாசனை தங்கிய மேகம் போன்ற குழல் ‡பச்சை வேய்-பசிய மூங்கிலை யொத்த தோள். §தொடா-தொடுத்து

மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
மதி * சுடா நிற்கும் அதனாலும்
இருகணால் முத்த முதிரயா மத்தி
னிரவினால் நித்த மெலியாதே
இடருறு மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்
கரிகள்சேர் வெற்பி லரியவேடிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா
கனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிரகா மத்தில் உறைவோனே
முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா
முடுகிமே லிட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே. (௧அ௫)

---

தானதன தானத் தனதான தானதன தானத் தனதான.

413. மாதர்வச மாயுற் றுழல்வாரும் மாதவமெணாமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும் தீநரக மீதிற் றிகழ்வாரே
நாதவொளி யேநற் குணசீலா நாரியிரு வோரைப் புணர்வேலா
சோதிசிவ ஞானக் குமரேசா தோமில்கதிர் காமப் பெருமாளே.()

---

தனன தான தான தத்த தனன தான தான தத்த
தனன தான தானதத்த தனதான.

414. முதிரு†மார வார நட்பொ‡டிலகு மார வார மெற்றி
முனியு மார வார முற்ற கடலாலே
முடிவிலாத தோர்§வ டக்கில் எரியு ||மால மார்பி டத்து
முழுகி யேறி மேலெ றிக்கு நிலவாலே
¶ வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
வினைவி டாத தாய ருக்கு மழியாதே

---

* சுடாநிற்கும்-சுடும். † மார வார நட்பொடு-மாரனுக்கு உரிமையாகிய முதிர்ந்தநட்புடன். ‡ இலகும் ஆர் அ ஆரம் எற்றி-பிரகாசிக்கின்ற அரிய அந்த முத்துக்களை எற்றி. § வடக்கில் எரி-வடவா முகாக்கினி. || ஆலம் ஆர்பு இடம்-கடல். ¶ வெதிர-மூங்கில்,

விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற
விகட மாதை நீய ணைக்க வரவேணும்

கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல் தரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா

நயனு லாம்வி லோச னத்தி களப மார்ப யோக ரத்தி
ககன மேவு வா*ளொருத்தி மணவாளா

அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாசகத்தை யருள்வோனே

அகில லோக மீது சுற்றி யசுரர் லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே.(௪அஎ)

## அருக்கோண மலை.

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தனதான.

415. தொடுத்த வாளென விழித்து மார்முலை
யசைத்து மேகலை மறைத்து மூடிகள்
முடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல் கொளுமாதர்

சுகித்த ஹாரவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்
†துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு வழியேபோய்ப்

படுத்த பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடும் அழுத்தி வாயிதழ்
கடித்து நாணம தழித்த பாவிகள் வலையாலே

படுத்து நோயொடு கிடத்து பாய்மிசை
வெளுத்து வாய்களு‡மலத்தி னுயென
பசித்து தாகமு மெடுத்தி டாவுயிர் உழல்வேனோ

§வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே

* ஒருத்தி-தெய்வயானையம்மை †துவர்த்த-பவளமொத்த. ‡மலத்தி னுய்-மலம் தின் நாய். §வெடுத்த-வெடு வெடுத்த.

விதித்து ஞாலம தளித்த வேதனை
யதிர்த்து வோர்முடி கரத்து லாயனல்
விழித்து மாரனை யெரித்த தாதையர் குருநாதா

அடுத்த ஆயிர விடப்ப ணமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டரக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா

அறத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி னோடணி குறத்தி யானையொ
டருக்கொ ணமலை தருக்கு லாவியபெருமாளே (கஅஅ)

---

## திருக்கோணமலை

---

தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன தனதான.

18. விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த வாடையு மணிப்பூணு மாகவே
மினுக்கு மாதர்க ளிடைக்காம மூழ்கியெ மயலூறி

மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்ப தாகுமெ யுழைத்தேவி டாய்படு கொடியேனைச்

சலத்த மாகவெ மலக்கூடி லேமிகு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயும் ஒருவாழ்வே

தவிக்கு நாயக வுனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தரவேணும்

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே

வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுநி யிடைக்காடர் கீரனும்
வகுத்த பாவுறு பொருட்கோல மாய்வரு முருகோனே

நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணுமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே
நிகழ்ந்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
யெடுத்த வேல்கொடு பொடித்தூள தாஎறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே. (௩அக)

---

## புகழிமலை.

---

தன தனன தான தன தனன தான
தன தனன தான தன தான.

417. மருவுமலர்வாச முறுகுழலினாலும்
வரிவிழியினாலு மதியாலும்
மலையினிகரான இளமுலைகளாலு
மயல்கள்தருமாதர் வகையாலும்
கருதுபொருளாலு மனைவிமகவான
கடலலையில்மூழ்கி அலைவேனோ
கமலபதவாழ்வு தரமயிலின்மீது
கருணையுடனேமுன் வரவேணும்
அருமறைகளோது பிரமன்முதல்மாலும்
அமரர் முனிராசர் தொழுவோனே
அகிலதலமோது நதிமருவுசோலை
அழகுபெறுபோக வளநாடா
பொருகவருசூரர் கிரியுருவவாரி
புனல்சுவறவேலை யெறிவோனே
புகலரியதான தமிழ்முனிவரோது
புகழிமலைமேவு பெருமாளே. (௧௯0)

---

## தனிச்சயம்.

---

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் தனதான.

420. இலைச்சுருட் கொடுத்தணைத் தலத்திருத் திமட்டைகட்
கிதத்தபுட் குரற்கள்விட் டனுராகம்

எழுப்பிமைக் கயக்கணைக் கழுத்தைமூத் தமிட்டணைத்
தெடுத்திதழ்க் கடித்துரத் திடைதாவி
அலைச்சலுற் றிலச்சையற் றரைப்பைதொட் டிழைத்துழைத்
தலக்கணுற் றுயிர்க்களைத் திடவேதான்
அறத்தவித் திளைத்துறத் தனத்தினிற் புணர்ச்சிபட்
டயர்க்குமிப் பிறப்பினித் தவிராதோ
கொலைச்செருக் கரக்கரைக் கலக்குமிக் கருக்குடக்
கொடித்திருக் கரத்தபொற் பதிபாடுங்
குறித்தநற் றிருப்புகழ்ப் ப்ரபுத்துவக் கவிக்குவக்
குருத்துவத் தெனைப்பணித் தருள்வோனே
தலைச்சுமைச் சடைச்சிவற் கிலக்கணத் திலக்கியத்
தமிழ்த்ரயத் தகத்தியற் கறிவோதுஞ்
சமர்த்தரிற் சமர்த்தபச் சிமத்திசைக் குளத்தமத்
தனிச் *சயத் தினிற்பிளைப் பெருமாளே. (ககூக)

## பசுமலை.

தக்தானத் தாத்தத்தனதன தக்தானத் தாத்தத்தனதன
தத்தானத் தாத்தத்தனதன தனதான.

419. சிற்றாயக் கூட்டத்தெரிவையர் வித்தாரச் சூழ்ச்சிகடவ்விழி
சற்றேறப் பார்த்துச்சிலபணி விடையேவிச்
இற்றூபத் தாக்கைப்பொருள்கொடு †பித்தேறிக் கூப்பிட்டவர்பரி
செட்டாமற் றார்த்தத்தலைபடு சிறுகாலை
உற்றார்பெற் றார்க்குப்பெரிதொரு பற்றாயப் பூட்டுக்கயிறுகொ
டுச்சாயத் தாக்கைத்தொழிலொடு தடுமாறி
உக்காரித் தேக்கற்றுயிர்நழு விக்காயத் தீப்பட்டெரியுட
லுக்கேன்மெய்க் காட்டைத்தவிர்வதும் ஒருநாளே
வற்றாமுற் றாப்பச்சிளமுலை யிற்பால்கைப் பார்த்துத்தருமொரு
மைக்காமக் கோட்டக்குலமயில் தருபாலா
மத்தோசைப் போக்கிற்றயிருறிநெய்ப்பாலுக்காய்ச்சிக்கிருபதம்
வைத்தாடிக் காட்டிப்பருகரி மருகோனே

* சயம்-ஜயம். இது காவிரிநதி உற்பத்தியாகும் ஸையமலையா யிருக்கலாமென்பர். † பித்தேறி பித்தேற்றி.

கற்றூனிற் காட்டிக் †கரைதுறை ‡ நற்றூயிற் காட்டிப்புகழ் § கலை
கற்றூர்சொற் கேட்கத்தனிவழி வருவோனே
கைச்சூலக் கூற்றைக்கடிபது மத்தாளர்க் கேற்பக்கனல்பொழி
கற் ||றூவுக் கோட்டுக்குறுகிய பெருமானே. (௧௬௨)

---

## திருக்காளத்தி.

---

தனத்தா னத்தத் தனனா தந்தத்
தனத்தா னத்தத் தனனா தந்தத்
தனத்தா னத்தத் தனனா தந்தத் தனதான.

422. ¶சாக்கே றித்தப் பதிவாழ் தொந்தப்
பரிக்கா யத்திற் பரிவோ டைந்துஞ்
சதிக்கா ரர்ப்புக் குலைமே விந்தச் செயல்மேவிச்
சலித்தே மெத்தச் சருசா ரம்பொற்
சகித்தே சுற்றத் தவரோ டின்பத்
தழைத்தே மெச்சத் தயவோ டிந்தக் குடிபேணிக்
*குரக்கோ ணத்திற் கழுநா யுண்பக்
குழிக்கே வைத்துச் சவமாய் நந்திக்
குடிற்கே நத்திப் பழுதாய் மங்கப் படுவேனைக்
குறித்தே முத்திக் கு†மரு வின்பந்
தடத்தே பற்றிச் சகமா யம்பொய்க்
குலக்கால் வற்றச் சிவஞா னம்பொற் கழல்தாராய்
புரக்கா டற்றுப் பொடியாய் மங்கக்
கழைச்சா பத்‡தைச் சடலா னுங்கப்
புகைத்தீ பற்றப் புரிவோ ரன்புற் றருள்வோனே
புடைத்தே எட்டுத் திசையோ ரஞ்சத்
தனிக்கோ லத்துப் புகுசூர் மங்கப்
புகழ்ப்பேர் சத்திக் கிரையா நந்தத் தருள்வோனே

---

* கல் தா வில் காட்டி- மலையை யொத்த வலியுள்ள வில்லைக் காட்டி. † கரை துறை-சொல்லுகின்ற துறையை. ‡ நற்றூயில் காட்டி புகழ்-நற்றூயிரங்கலாகப் "பொன்போலுங் கள்ளி" என்றெடுத்துக் காட்டிப் புகழ்ந்த. § கலைகற்றூர்-பொய்யா மொழிப்புலவர். || ஆவுக்கோடு- பசுமலை ¶ சாக்கு வேறு இத்த பதி-பொருள்கள் மிகுந்த இப்புவிமிடம், இத்த-இந்த. * குரக்கோணத்திற்கழு-குளம்புத்தன்மையுள்ள மூக்கையுடைய கழு. † மரு—மாறு ‡ சடலான்-அழகிய தேகத்தையுடைய மன்மதன்.

திருக்கா னத்திற் பரிவோ டந்தக்
குறக்கோ லத்துச் செயலா ளஞ்சத்
திகழ்ச்சி ரத்திக்க*ழல்வா வென்பப் புணர்வோனே
சிவப்பே றுக்குக் கடையேன் வந்துட்
புகச்சீர் வைத்துக் கொளுஞ்ஞா னம்பொற்
றிருக்கா ளத்திப் பதிவாழ் கந்தப் பெருமாளே (௧௧௩)

தனத்தானத்தத் தனதான தனத்தானத்தத் தனதான.

421. சிரத்தானத்திற் பணியாதே செகத்தோர் பற்றைக்குறியாதே
வருத்தா மற்றொப்பிலதான மலர்த்தாள் வைத்தெத் தனையாள்வாய்
திருத்தா கர்த்தத் துவநேசா நினைத்தார் சித்தத் துறைவோனே
திருத்தாள் முத்தர்க் கருள்வோனே திருக்கா ளத்திப் பெருமாளே,

தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன தனதான.

424. பங்கய னூர்பெற் றிடுஞ்ச ராசர
அண்டம தாயுற் றிருந்த பார்மிசை
†பஞ்சவர் கூடித் திரண்ட தோர்நர உருவாயே
மந்தம தாகப் பிணிந்த ஆசையில்
இங்கித மாகத் திரிந்து மாதர்கள்
பண்பொழி குதைக்குடந்தி டாதுழல் ‡படிறுயே
சங்கட னாகித் தளர்ந்து நோய்வினை
வந்துடல் மூடக் கலங்கி டாமதி
தந்தடியேனைப் புரந்தி டாயுன தருளாலே
சங்கரர் வாமத் திருந்த நூபுர
சுந்தரி யாதித் தருஞ்§சு தாபத
தண்டைய னேகுக் குடம்ப தாகையின் முருகோனே
||திங்களு லாவப் பணிந்த வேணியர்
பொங்கர வாடப் புனைந்த மார்பினர்
திண்சிலை குலத் தமுந்து பாணியர் நெடிதாழ்வார்

---

* அழல் வா என்ப - அழாதே, வா என்ன. †பஞ்சவர் - ஐந்து பூதங்கள் ‡படிறு - வஞ்சகம், §சுதா - புதல்வனே. || திங்கள் உலாவு அப்பு எனப் பிக்க.

சிந்துவி லேயுற் றெழுந்த காளவி
டங்*கள மீதிற் சிறந்த சோதியர்
திண்புய மீதிற் றவழ்ந்து வீறிய குருநாதா
சிங்கம தாகத் திரிந்த மால்கெரு
வம்பொடியாகப் பறந்த சீறிய
சிம்புள தாகச் சிறந்த காவென வருகோமுன்
செங்கதி ரோனைக் கடிந்த தீவினை
துஞ்சிட வேநற் றவஞ்செய் தேறிய
†தென்கயி லாயத் தமர்ந்து வாழ்வருள் பெருமாளே ()

## திருவருணை

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன னததன
தனன தனதன தனதன தனதன தனதான.

423. குமர குருபர குணதர நிசிசர
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரபதி குலமானுங்
குறவர் சிறுமியு மருவிய திரள்புய
முருக சரணென வுருகுதல் சிறிதுமில்
கொடிய வினையனை யவலனை யசடனை யதிமோகக்
கமரில் விழவிடு மழகுடை யரிவையர்
களவி னொடுபொரு ளளவள வருளிய
யளறிடை துவளுறும் வெளிறனை யினிதாளக்
கருணை யடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே
தமர மிகுதிரை யெறிவளை கடல்குடல்
மறுகி யலைபட விடநதி யுமிழ்வன்
சமுக முககண பணபணி பதிநெடு வடமாகச்

* காளம் - கண்டம். †தென்கயிலாயம் - திருக்காளத்தி.

சகல வுலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தரவெகு கரமலர்
தளர வினியதொ ரமுதினை யொருதனி க்ளையாநின்

றமரர் பசிகெட வுதவிய க்ருபைமுகில்
அகில புவனமு மளவிடு குறியவன்
அளவு நெடியவ னளவிட அரியவன் மருகோனே

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே.

124. அருவ மிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியு ம்ருகமத
அளக மலையவு மணிதுகி லகலவும் அதிபார

அசல முலைபுள கிதமெழ அமளியில்
அமளி படஅன வரதமு மவசமொ
டணையு மழகிய கலவியு *மலமலம் உலகோரைத்

தருவை நிகரிடு புலமையு மலமல
முருவு மிளமையு மலமலம் விபரித
சமய கலைகளு மலமல மலமரும் வினை வாழ்வுந்

†சலில லிபியன சனனமு மலமல
மினியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமும் அருள்வாயே

உருவு கரியதொர் கணைகொடு பணிபதி
யிருகு தையுமுடி தமனிய தநுவுட
னுருளை யிருசுடர் வலவனு மயனென மறைபூணும்

உறுதி படுசுர ரதமிசை யடியிட
நெறுநெ றெனமுறி தலுநிலை பெறுதவம்
உடைய வொருவரு மிருவரு மருள்பெற வொருகோடி

தெருவு நகரியு நிசிசரர் முடியொடு
சடச டெனவடி படுவன புகைவன
திகுதி கெனஎரி வனஅனல் நகைகொடு முனிவார்தஞ்

* அலம் அலம் - போதும் போதும்.
† சலில லிபி யன - நீர்மேலெழுத்துக்கு நேரான.

சிறுவ வனசரர் சிறுமியொ டுருகிய
பெருமை அருணையி லெழுநிலை திகழ்வன
சிகரி மிசையொரு கலபியி லுலவிய பெருமாளே. ()

427. கருணை சிறிதுமில் பறிதலை*நிசிசரர்
பிசித அசனம றவரிவர் முதலிய
கலக விபரித வெகுபர சமயிகள் பலர்கூடிக்
கலக லெனநெறி கெடமுறை முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத அரியதை விழுபுனல் வரமொழி குழறுமன்
புருகி யுனதருள் பரவுகை வரில்விர
கொழியி லுலகியல் பிணிவிடி லுரைசெய
லுணர்வு கெடிலுயிர் புணரிரு வினையள றதுபோக
உதறி லெனதெனு மலமறி லறிவினி
லௌிது பெறலென மறைபறை யறைவதொ
ருதய மரணமில் பொருளினை யருளுவ தொருநாளே
தருண சததள பரிமள பரிபுர
சரணி தமனிய தநுதரி திரிபுர
தகனி கவுரிப வதிபக வதிபரி ரவிசூலி
சடில தரியனு பவையுமை திரிபுரை
சகல புவனமு முதவிய பதிவ்ருதை
சமய முதல்வித னயபகி ரதிசுத சதகோடி
அருண ரவியினு மழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர குருபர
அருணை நகருறை சரவண குரவணி புயவேளே
அடவி சரர்குல மரகத வனிதையு
மமரர் குமரியு மணவர தமுமரு
கழகு பெறநிலை பெறவர மருளிய பெருமாளே. ()

426. துகிலு ம்ருகமத பரிமள அளகமும்
நெகிழ இருதன கிரியசை தர இடை
துவள மணிதரு மமரரு முநிவரு முடனேடித்

---

* நிசிசரர் பிசித அசன மறவர் - இராக்ஷதரையும் புலாலுண்ணும் மறவரையும் ஒத்த சமணர்.

தொடர வனமணி மகரமி லகுகுழை
யடரு வனவிட மிளிர்வன ரதிபதி
சுருதி மொழிவன கயல்விழி புரள்தர — நடுவாக

வசிரு ரதிபுரை தருநுதல் பனிவர
வனர பதயுக பரிபுர மொலிபட
மறுகு தொறுமுல வியினிய கலவிவை — விலைகூறும்

*வரைவி லரிவையர் தருசுக சலதியி
லலையு மெனதுயி ரநுதின நெறிதரு
மவுன சிவசுக சலதியில் முழுகுவ — தொருநாளே

முகிலு மதியமும் ரவியெழு புரவியும்
நெடிய குலைமிட றிடறமு துககன
முகடு கிழிபட வளர்வன கமுகின — மிசைவாளை

முடுகு கயலுகள் வயல்களு முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொ ரருணையி லுறைதரு மிளையோனே

அகிலு மருதமு முகுளித வகுளமு
மமுத கதலியும் அருணமும் வருடையு
மபரி மிதமத கரிகளு மரிகளும் — உடனேகொண்

டருவி யிழிதரு மருவரை தனிலொரு
†சவர வனிதையை முனிதரு புனிதையை
அவச முடன்மல ரடிதொழு துருகிய — பெருமாளே. ()

429. மகர மெறிகடல் விழியினு மொழியினு
மதுப முரல்குழல் வகையினு நகையினும்
வளமை யினுமுக நிலவினு மிலவினு — திறமூசும்

மதுர இதழினு மிடையினு நடையினு
மகளிர் முகுளித முலையினு நிலையினும்
வனச பரிபுர மலரினு முலரினு — மவர்காமம்

பகரு கினுமவர் பணிவிடை திரிகினு
முருகி நெறிமுறை தவறினு மவரொடு
பகடி யிடுகினு மமளியி லவர்தரு — மநுராக

---

* வரைவிலரிவையர்-பொதுமாதர். †சவரர் - வேடர்,

பரவை படியினும் வசமுறி யினுமுத
லருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம வொருவச னமுமிரு சரணமு மறவேனே
ககன சுரபதி வழிபட எழுகிரி
கடக கிரியொடு மிதிபட வடகுல
கனக கனகுவ டடியொடு முறிபட முதுசூதங்
கதறு சுழிகட லிடைகிழி படமிகு
கலக நிசிசரர் பொடிபட நடவிய
கலப மரகத துரகத ந்ருபகிரி மயில்வாழ்வே
தகன கரதல சிவசுத கணபதி
சகச சரவண பரிமள சததள
சயன வனசரர் கதிபெற முனிபெறு புனமானின்
தரள முகபட நெறிபட நிமிர்வன
தருண புளகித ம்ருகமத தனகிரி
தழுவ மயல்கொடு தனிமட லெழுதிய பெருமாளே. ()

428. முகிலை யிகல்பொரு முழுவிருள் குழலென
முதிய மதியது முகமென *நுதலிணை
†முரணர் வரிசிலை முடுகிடு கணைவிழி யெனமூவா
முளரி தனின்முகு ளிதமலர் முலையென
முறுவல் தனையிரு குழைதனை மொழிதனை
மொழிய வரியதொர் தெரிவையர் வினையெனு மொழிகூறிப்
பகலு மிரவினு மிகமன மருள்கொடு
பதியி லவர்வடி வுளதழ கெனவொரு
பழுது மறஅவர் பரிவுற இதமது பகராதே
பகைகொ டெதிர்பொரு மசுரர்கள் துகைபட
விகட முடனடை பயில்மயில் மிசைவரு
பவனி தனையது தினநினை யெனஅருள் பகர்வாயே
புகல வரியது பொருளிது எனவொரு
புதுமை யிடஅரி யதுமுத லெனுமொரு
பொதுவை யிதுவென முதுதவ முநிவர்கள் புடைசூழப்

* நுதல் - புருவம். † முரணர் - வலியவர்.

புரமு மெரியெழ நகையது புரிபவர்
புனலும் வளர்மதி புனைசடை யினரவர்
புடவி வழிபட வொருபொருள் விரகொடு புகல்வோனே
அகில கலைகளு மறநெறி முறைமையு
மகில மொழிதரு புலவரு முலகினி
லறிஞர் தவமுயல் பவர்களு மியலிசை யதனாலே
அறுவர் முலையுணு மறுமுக னிவனென
அரிய நடமிடு மடியவ ரடிதொழ
அருணை நகர்தனி லழகுடன் மருவிய பெருமாளே.(உ0௯)

429. முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்
முலைகக ளளவிடு முகபட பகடிகள்
முதலு முயிர்களு மளவிடு களவியர் முழுநீல
முழுகு புழுககில் குழைவடி வழகியர்
முதிர வளர்கனி யதுகவ ரிதழியர்
முனைகொ ளயிலென விழியெறி நடையிய ரநுராகம்
மருவி யமளியி னலமிடு கலவியர்
மனது திரவிய மளவள வளவியர்
மசன மொருநொடி நிலையில் கபடியர் வழியேநான்
மருளு மறிவின னடிமுடி யறிகிலன்
அருணை நகர்மிசை கருணையொ டருளிய
மவுன வசனமு மிருபெரு சரணமு மறவேனே
கருதி யிருபது கரமுடி யொருபது
கனக மவுலிகொள் புரிசைசெய் பழையது
கடிய வியனகர் *புகவரு கனபதி கனல்மூழ்கக்
கவச அநுமனொ டெழுபது கவிவிழ
அணையி லலையெறி யெதிரமர் பொருதிடு
† களரி தனிலொரு கணைவிடு மடலரி மருகோனே
சருவு மவுணர்கள் தளமொடு பெருவலி
யகல நிலைபெறு சயிலமு மிடிசெய்து
தருமு னவர்பதி குடிவிடு பதனிசை மயில்வீரா

*புகவரு-புகுவதற்கு அரிதாகிய. †களரி யுத்தகளம்.

தருணா மணியவை பலபல செருகிய
தலையள் துகிலிடை பழகிய குறமகள்
தனது தனமது பரிவொடு தழுவிய பெருமாளே. (௨௨0)

130. விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி
வனச மலர்தழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல வொருஞான
விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல வுயிர்கவர் வலையென
விழையு மிளநகை தளவல களவென வியனாபித்
தடமு மடுவல படுகுழி யெனஇடை
துடியு மலமத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை புரள்கோவை
தரள மணியல யமன்விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையு முருவென வுணர்வொடு புணர்வதும் ஒருநாளே
அடவி வனிதையர் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
அசல மிசைவிளை புனமதி லினிதுறை தனியாளும்
அமர ரரிவைபு மிருபுடை யினும்வர
*முகர முகபட கவளத வளகர
அசல மிசைவரு மயிரவ கலவியும் விளையாடும்
கடக புளகித புயகிரி சமுக †விகட
கடக கசரத துரகத நிசிசரர்
கடக ‡பயிரவ §கயிரவ மலர்களும் எரிதீயுங்
கருக வொளிவிடு தனுபர கவுதம
புநித முநிதொழ அருணையி லறம்வளர்
கருணை யுமைதரு சரவண சுரபதி பெருமாளே. (௨0௩)

---

*முகரம்-சங்கவடிவமான. † விகட - விகடஅக ‡ பயிரவன்-பயத்தைச் செய்வோன் § கயிரவம்-ஆம்பல்.

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான.

423. *கமரி மலர்குழல் சரிய புளகித
கனக தனகிரி யசைய பொருவிழி
கணைக ளெனநுதல் புரள துகிலதை நெகிழ்மாதர்
கரிய மணிபுர ளரிய கதிரொளி
பரவ இணைகுழை யசைய நகைகதிர்
கனக வளைகல நடைகள் பழகிகள் மயில்போலத்
திமிரு மதபுழு கொழுக தெருவினி
லலைய விலைமுலை தெரிய மயல்கொடு
திலத மணிமுக அழகு சுழலிகள் தெருவில்
திரையிலமுதென கழைகள் பலசுளை
யெனவு மவர்மயல் தழுவு மசடனை
திருகு புலைகொலை கலிகள் சிதற அருள்தாராய்
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர எனதாளம்
குறைசெய் முரசமொ டரிய விருதொலி
டமட டமடம டமட டமடம
குமுற திமிலைச லரிகி னரிமுதல் இவைபாட
அமரர் முநிவரு மயனுமனைவரு
மதுகை மலர்கொடு தொழுது பதமுற
அசுரர் பரிகரி யிரத முடைபட விடும்வேலா
அகில புவனமொ டடைய வொளிபெற
அழகு சரண்மயில் புறம தருளியொ
ரருண கிரிகுற மகளை மருவிய பெருமாளே.(உ0௪)

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான.

434. கயல்விழித் தேனைச் செயலழித் தாயெனக்
கனவகெட் டேனெனப் பெறுமாது

* கமரி - கம் அரி, மேகம் போன்ற வண்டு தங்கிய.

கருதுபுத் ராஎனப் புதல்வராப் பாவனைக்
கதறிடப் பாடையிற் றலைமீதே
பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள் கொட்டாவரச் சமனாரும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்
அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அமரரத் தாசிறுக் குமரிமுத் தாசிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே
புயலிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே. (௨௦௫)

483. கருவழிக் காவியைக் *கலகுமக் காலனைத்
திலகுகட் சேல்களிற் புடைநடக்
கருதிமுற் பாடு†கட் டளையுடற் பேசியுட்
களவினிற் காசினுக் குறவாலுற்
றுறுமலர்ப் பாயலிற் றுயர்விளைத் தாடலுற்
றுயர்பொருட் கோதியுட் படுமாதர்
ஒறுவினைக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ
மறையெடுத் தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற் றணைவானும்
‡மறைகள்புக் காரெனக் குவடுநெட் டாழிவற்
றிடஅடற் சூரனைப் பொரும்வேலா
அறிவுடைத் தாருமற் றுடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே. (௨௦௬)

---

*கலகும்-கலக்கும். †கட்டளை உடல்-அளவான பொருள். ‡மறைகள் புக்கார் என-அடைக்கலம் புகுந்தாரென.

434. பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் படமோகப்
படியிலுற் றேனெப் பலர்கள்பற் றூஅடற்
படரெரிக் கூடுவிட் டலைநீரிற்
பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பிணிகளுக் கேயிளைத் துழல்நாயேன்
பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாளெனப்
பிரியமுற் றோதிடப் பெறுவேனோ
கரியமெய்க் கோலமுற் றரியினற் றாமரைக்
கமைவபற் றாசையக் கழலோர்முன்
கலைவகுத் தோதிவெற் பதுதுளைத் தோனியற்
கடவுள்செச் சேவல்கைக் கொடியோனென்
றரியநற் பாடலைத் தெரியுமுற் றோர்கிளைக்
கருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் றோகைபொற் றடமுகைக் காமசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே. (உ௦எ)

---

தனனதன தான தத்த தனனதன தான தத்த
தனனதன தான தத்த தனதான.

435. தருணமணி வானி லத்தி லருணமணி யால விட்ட
தழலமணி மீதெ றிக்கு நிலவாலே
தலைமைதவி ராம னத்தி னிலைமையறி யாதெ திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த கணையாலே
வருணமட மாதர் கற்ற வசையின்மிகை பேச முற்று
மருவுமென தாவி சற்றும் அழியாதே
மகுடமணி வாரி சைக்கும் விகடமது லாவு சித்ர
மயிலின்மிசை யேறி நித்தம் வரவேணும்
கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு கைச்சி
கலவிதொலை யாம றத்தி மணவாளா
கடுவுடைய ராநி ரைத்த சடிலமுடி மீது வைத்த
கடியமல ராக ரித்த கழல்வீரா

அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணைநகர் கோபு ரத்தில் உறைவோனே
அசுரர்குலம் வேர றுத்து வடவனலை மீதெழுப்பி
அமரர்சிறை மீள விட்ட பெருமாளே. (௨0அ)

438. முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேயி றக்கு
முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்
மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கு
முதியமத ராஜ னுக்கும் அழியாதே
புழுகுதிகழ் நீப மத்தி லழகியகு ராநி ரைத்த
புதுமையினி லாறிரட்டி புயமீதே
புணரும்வகை நானி னைத்த துணரும்வகை நீல சித்ர
பொருமயிலி லேறி நித்தம் வரவேணும்
எழுமகர வாவி சுற்று பொழிலருணை மாந கர்க்கு
ளெழுதரிய கோபு ரத்தில் உறைவோனே
இடைதுவள வேடு வச்சி படமசைய வேக னத்த
இளமுலைவி டாத சித்ர மணிமார்பா
செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா
திசைமுகன்மு ராரி மற்று மரியபல தேவ ருற்ற
சிறையடைய மீள விட்ட பெருமாளே. (௨0௯)

---

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தந்ததான,

437. ஆலவிழி நீலத் தாலதர பானத்
தாலளக பாரக் கொண்டலாலே
ஆரநகை யால்விற் போர்நுதலி னால்வித்
தாரநடை யால்நற் கொங்கையாலே
சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் தான்யமூழ்கித்
தாழ்வினுயிர் வீழ்பட் டேழ்வினைவி டாமற்
காவதன்மு னேவற் கொண்டிடாயோ

சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளினுற வாகக் கொண்டவாழ்வே
சோதியுரு காசித் தாபமழைய ஞானச்
சோணகிரி வீதிக் கந்தவேளே
பாலகக லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் தன்குமாரா
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே. (௨௧௦)

440. பேதகவி ரோதத் தோதகவி நோதப்
பேதையர்கு லாவைக் கண்டுமாலின்
பேதைமையு ழமற் றேதமக லாமற்
பேத வுடல் பேணித் தென்படாதே
*சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்வினுயி ராகச் சிந்தையாலுன்
தாரைவடி வேலைச் சேவல்தனை யேனற்
சாரல்மற மானைச் சிந்தியேனோ
†போதகம யூரப் போதகக டாமற்
போதருணை வீதிக் கந்தவேளே
‡போதகக லாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் சென்றவேலா
பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருலகு வாழக் கண்டகோவே
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே. (௨௧௧)

---

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

439. அமுத மூறுசொ லாகிய தோகையர்
பொருளு ளாரையெ ணுணையுணையெ
னருகு வீடிது தானிதில் §வாருமெ னுரைகூறப்

---

*சாதக விகாரச் சாதல்-விகாரச்சாதக சாதல்துன்பமான பிறப்பு இறப்பு.
† போதக மயூரபோத அக அகடு ஆ மன் போது-யானை,மயில்இவைகளின் மேல் மலராசனமிட்ட மத்தியஸ்தானத்தி லெழுந்தருளிவருகின்ற. ‡போதக கலாபகோதைமுதுவான்-தெய்வயானையம்மை அவதரித்த முதியவிண்ணுலகம்
§வாரும் என் உரை கூறும்.

அசடு மாதர் *குவாதுசொல் கேடிகள்
தெருவின் மீதுகுலாவியு லாவிகள்
அவர்கள் மாயைப டாமல் கெடாமல்நி னருள்தாராய்

குமரி காளிவ ராகிம கேஸ்வரி
கௌரி மோடிசு ராரிநி ராபரி
கொடிய சூலிசு டாரணி யாமளி மகமாயி

குறளு ரூபமு ராரிச கோதரி
உலக தாரிஉ தாரிப ராபரி
குருப ராரிவி காரிந மோகரி அபிராமி

சமர நீலிபு ராரித னாயகி
மலைகு மாரிக பாலிந ரணி
சலில மாரிசி வாயம னோகரி பரயோகி

சவுரி வீரிமு நீர்விட போஜனி
திகிரி மேவுகை யாளிசெ யாளொரு
சகல வேதமு மாயின தாயுமை யருள்பாலா

திமித மாடுசு ராரிநி சாசரர்
முடிக ளோடு†க டாவிய டேயொரு
சிலப சாசு‡கு ணலிநி ணமுண விடும்வேலா

திருவு லாவு§சொ ணேசர ணாமலை
முகிலு லாவுவி மானந வோநிலை
சிகர மீதுகு லாவியு லாவிய பெருமாளே.(௨௬௨

440. உருகு மாமெழு காகவு மேமயற்
பெருகு மாசையு ளாகிய பேர்வரி
ஓரிய மேடையில் வார்குழல் நீவிய ஒளிமானார்

உடைகொள் மேகலை யால்முலை மூடியு
நெகிழ நாடிய தோதக மாடியு
முவமை மாமயில் போல்நிற மேனியர் உரையாடுங்

கரவ தாமன மாதர்கள் நீள்வலை
கலக வாரியில் வீழடி யேனெறி
கருதொ ணாஅதி பாதக னேசம தறியாத

* குவாது - குதர்க்கம் † கடாவி யிடேய் - கடாவி யிட்டு ஏய். ‡ குணலி நிணம் உண - குணலியிட்டு நிணம் உண்ண. § சொணேசர் - சோணேசர்.

கசட - மூடனை யாளவு மேயருள்
கருணைவாரிதி யேயிரு நாயகி
கணவ னேயுன தாளிணை மாமலர் தருவாயே

சுருதி மாமொழி வேதியன் வானவர்
பரவு *கேசனை யாயுத பாணிநல்
துளப மாலையை மார்பணி மாயவன் மருகோனே

தொலைவி லாஅசு ரேசர்க ளானவர்
துகளி தாகவு மேயெதி ராடிடு
சுடரின் வேலவ னேயுல கேழ்வலம் வருவோனே

† அருணர் கோடியி னூடொளி வீசிய
தருண வாண்முக மேனிய னேயர
னருளு நாயகி பாலக னேநிறை கலையோனே

அணிபொன் மேருயர் கோபுர மாமதி
ளதிரு மாரண வாரண வீதியு
ளருணை மாநகர் மேவியு லாவிய பெருமாளே. (உகூ)

---

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தந்ததான.

441. கரியுரி அரவ மணிந்த மேனியர்
கலைமதி சலமு நிறைந்த வேணியர்
கனல்மழு வுழையு மமர்ந்த பாணியர் கஞ்சமாதின்

கனமுலை பருகி வளர்ந்த காமனை
முனிபவர் கயிலை யமர்ந்த காரணர்
கதிர்விரி மணிபொ னிறைந்த தோளினர் கண்டகாள

விரிவென வுனது ளுகந்த வேலென
மிகவிரு குழையு மடர்ந்து வேலினை
யணையவ ருயிரை விழுங்கி மேலும்வெ குண்டுநாடும்

வினைவிழி மகளிர் தனங்கள் மார்புற
விதமிகு கலவி பொருந்தி மேனியு
மெழில்கெட நினைவு மழிந்து மாய்வதொ ழிந்திடாதோ

---

* கேசன் - சேவகன். † அருணர் - சூரியர்.

எரிசொரி விழியு மிரண்டு வாளெயி
றிருபிறை சயில மிரண்டு தோள்முகி
லெனவரு மகுரா சிரங்கள் மேருவி ழுந்துவீழ்வ

தெனவிழ முதுகு பிளந்து காளிக
ளிடுபலி யெனவு நடந்து தாள்தொழ
எதிர்பொரு துதிர முகந்த வேகமு கைந்தவேலா

அரிகரி யுழுவை யடர்ந்த வான்மலை
அருணையி லறவு முயர்ந்த கோபுர
மதிலுறை குமர அனந்தவேதமொ ழிந்துவாழும்

அறுமுக வடிவை யொழிந்து வேடர்கள்
அடவியி லரிவை குயங்கள தோய்புய
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே. (௨௧௪)

442. கனைகடல் வயிறு குழம்பி வாய்விட
வடதம னியகிரி கம்ப மாய்நாக
கணபண விபரி தகந்த காளபு யங்கராஜன்

கயிறென அமர ரனந்த கோடியு
முறைமுறை யமுது கடைந்த நாளொரு
கதியற வுலகை விழுங்கு மேகமு ழுங்குபோல

வினைமத கரிக ளுமெண்டி சாமுக
கிரிகளு முருகி டஅண்ட கோளகை
வெடிபட எவரை யுமவி ஞசிமேலிடு நஞ்சுபோல

விடுகுழை யளவு மளந்து காமுக
ருயிர்பலி கவர்வு றுபஞ்ச பாதக
விழிவலை மகளி ரொடன்பு கூர்வதொ ழிந்திடாதோ

முனைபெறு வளைய அணைந்த மோகர
நிசிசரர் கடக முறிந்து தூளெழ
முகிலென வுருவ மிருண்ட தாருகன் அஞ்சமீன

முழுகிய திமிர தரங்க சாகர
முறையிட இமைய வர்தங்க ளூர்புக
யுருவ முனிந்த சேவக செம்பொன்மேரு

அணையன கனவி தசண்ட கோபுர
அருணையி லுறையு மருந்தா ளுமுலை
அபிநவ வனிதை தருங்கு மாரநெ டுங்குமால்கொள்
டடவியில் வடிவு கரந்து போயொரு
குறமகள் பிறகு திரிந்த காமுக
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே.(௨௪௫)

---

தனதன தனன தனதன தனன
தனதன தனதன தந்ததான.

443. இடமடு சுறவை முடுகிய மகர
மெறிகட லிடையெழு திங்களாலே
இருவினை மகளிர் மருவிய தெருவி
லெரியென வருசிறு தென்றலாலே
தடநடு வுடைய கடிபடு கொடிய
சரம்விடு தறுகண னங்கனாலே
சரிவளை நழுவ மயல்கொளு மரிவை
தனிமல ரணையில்ந லங்கலாமோ
வடகுல சயில நெடிதுட லசுரர்
மணிமுடி சிதறவி ட்டவேலா
மறமக ளமுத புளகித களப
வளரிள முலையைம ணந்தமார்பா
அடலணி விகட மரகத மயிலி
லழகுட னருணையில் நின்றகோவே
அருமறை *விததி முறைமுறை பகரு
மரியர பிரமர்கள் தம்பிரானே.(௨௪௬)

---

தனதன தனனந் தனதன தனனந்
தனதன தனனந் தனதான.

444. இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனி லினமொன் றிடுமோதும்
எழில்புதல் வருமின் றழுதுள முருகும்
இடர்கொடு †நடலம் பலகூறக்

* விததி - சமூகம். † நடலம் - துன்பமொழி.

கருகிய வுருவங் கொடுகனல் விழிகொண்
டுயிரினை நமனுங் கருதாமுன்
கயிறொடு பலருன் பொறிமக விழியின்
கழலிணை கருதும் படிபாராய்
திருமரு வியதிண் புயனயன் விரியெண்
டிசைகிடு கிடவந் திடுசூரன்
திணிபுய மதுசிந் திடஅலை கடலஞ்
சிடவலி யொடுகன் றிடும்வேலா
அருமறை யவரந் தரமுறை பவர்கண்
புடை யவ ருயவுன் றறமேவும்
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையி லுறையும் பெருமாளே.(உகஎ)

447- விரைகொடு வளைசங் கடமது தருவெம்
*பிணிகொடு விழிவெங் கனல்போல
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்
றெனவிதி வழிவந் திடுபோதிற்
கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையருற வினர்கள் புனல்பாயுங்
கலகமும் வருமுன் குலவினை களையுங்
கழல்தொழு மியல்தந் தருள்வாயே
பரவிடு மவர்சிந் தையர்விட முமிழும்
படவர வணைகண் டுயில்†மாலம்
பழமறை மொழிபங் கயனிமை யவர்தம்
பயமற விடமுண் டெருதேறி
அரவொடு மதியம் பொதிசடை மிசைகங்
கையுற அனலங் கையில்மேவ
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையில் மருவும் பெருமாளே.(உகஅ)

---

* பிணி-பாசக்கயிறு †மால் அம் பழமறைமொழி பங்கயன் எனப் பிரிக்க.

தனதன தனனா தனதன தனனா
தனதன தனனா தனதான.

446. கெஜநடை மடவார் வசமதி லுருகா
கிலெசம தறுபாழ் வினையாலே
கெதிபெற நினையா துதிதனை யறியா
கெடுநெறி மதிலாம் மதியாலே
தசையது மருவி வசையுட லுடனே
தரணியில் மிகவே யுலைவேனோ
சததள மலர்வார் புனைநின கழலார்
தருநிழல் புகவே தருவாயே
திசைமுக வனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால் மருகோனே
திரிபுர தகனா ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை யருள்சீர் முருகோனே
நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறையியல் முடுகா விடுவோனே
நிலமிசை புகழாா தலமெனு*மருணா
நெடுமதில் வடசார பெருமாளே (௨௧௯)

---

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான

447. திருட்டு வாணிப விக்ரம துட்டிகள்
மதத்த ரூபிகள் தாசசன பொட்டிகள்
செகத்து நீலிகள் கெட்டப ரத்தைகள் மிகநாணார்
சிலைக்கு நேர்புரு வப்பெரு நெற்றிக
ளடிப்பு மார்பிக ளெச்சிலு தட்டிகள்
சிரித்து மாறாடர் சித்தமு ருக்கிகள் விழியாலே
வெருட்டி மேல்விழு பப்பற மட்டைகள்
மிகுத்த பாவிகள் வட்டமு கத்தினை
மினுக்கி யோலைகள் பித்தளை யிற்பணி மிகநீறல்

---

அருணா-அருணை

விளக்கி யேகுழை யிட்டபு ரட்டிகள்
தமக்கு மால்கொடு நிற்கும ருட்டனை
விடுத்து நானொரு மித்திரு பொற்கழல் பணிவேனோ
தரித்த தோகண தக்கண செக்கண
குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு
தகுத்த திதிகு தக்குகு திக்குகு எனதாளம்
தடக்கை தாளமு மிட்டியல் மத்தள
மிடக்கை தாளமு மொக்கந டித்தொளி
தரித்த கூளிகள் தத்திமி தித்தென கணபூதம்
அருக்க னொளி யிற்பரவை யுற்றிடு
மிரத்ன மாமுடி யைக்கொடு கக்கழு
லடக்கை யாடிநி ணத்தையெடுத்துண அறவேதான்
அரக்கர் சேனைகள் பட்டுவி ழச்செறி
திருக்கை வேல்தனை விட்டரு ளிப்பொரும்
அருட்கு காஅரு ணைப்பதி யுற்றருள் பெருமாளே ()

---

தனத்த தத்தன தான தனதன
தனத்த தத்தன தான தனதன
தனத்த தத்தன தான தனதன தந்ததான.

448. முகத்து லக்கிக *ளாசா ரவினிகள்
விலேச்சி றுக்கிகள் நேரா அசடிகள்
முழுச்ச மர்த்திகள் காமா விரகிகள் முந்துகூறு
மொழிப்ப ரத்தைகள் காசா சையில்முறை
பலர்க்கும் விற்பவர் நாண அநுபவ
முயற்று பொட்டிகள் மோகா வலமுறு மன்றமூடர்
செகத்தி லெத்திகள் சார்வாய் †மயலிகள்
திருட்டு மட்டைகள் மாயா சொருபிகள்
சிரித்து ருக்கிகள் ஆகா வெனநகை சிந்தைமாயத்
திரட்பொ றிச்சிகள் மாபா விகளப
கடத்த சட்டைகள் மூதே விகளொடு
கிளைத்த லற்றிரு சீபா தமுமினி யென்றுசேர்வேன்

---

* ஆசாரவினிகள். ஆசார ஈனிகள். ஒழுக்கவீனமுள்ளவர். † மயலிகள் மயக்கிகள்.

தானதன தத்த தத்த தானதன தத்த தத்த
தானதன தத்த தத்த தனதான

450. கோடுசெறி மத்த கக்கை விசுகரி மைப்ப ருக்க
கூறுசெய்த ழிக்கு ழிக்கு நடைமாதர்
கோளுலவு முப்பு ரத்தை வானெரிகொ ளுத்தி விட்ட
*கோபநுத லத்த ரக்கு நடநாதர்
நீடுகன கத்த லத்தை யூடுருவி மற்ற வெற்பு
நீறெழமி தித்த நித்த மணநாளே
†நீபமலர் பத்தி மெத்த வோதுமவர் சித்த மெத்த
நீலமயில் தத்த விட்டு வரவேணும்
ஆடலணி பொற்சி லைக்கை வேடுவர்பு னக்கு றத்தி
ஆரமது மெத்த நித்த முலைமீதே
ஆதரவு பற்றி மெத்த மாமயலி னைத்த வெற்றி
ஆறிருதி ருப்பு யத்தி லணிவீரா
தேடுமைமையோர் புத்தி மெத்தி நீடுநகர் வைத்த பத்தி
சீருறவு வக்கு தித்த சிவவேளே
தேறலுகு வித்தி ரிக்க சேணுமுக டுக்க டக்க
தேவர்சிறை வெட்டி விட்ட பெருமாளே (௨௨௯)

---

தனத்தா தனத்தத் தனத்தா தனத்தத்
தனத்தா தனத்தத் தனதான.

451. அருக்கார் நலத்தைத் திரிப்பார் மனத்துக்
கடுத்தா சைபற்றித் தளராதே
அடற்கா லனுக்குக் ‡கடைக்கால் மிதித்திட்
டறப்பே தகப்பட் டழியாதே
§கருக்கா ரர்நட்டைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்திற் பிறவாதே
கருத்தா லெனக்குத் திருத்தா ளளித்துக்
கலைப்போ தகத்தைப் புகல்வாயே

---

*கோபநுதல் - கோபங்தறித்த †நீபமலர்பத்தி - நீபமலர்சூடியபுயபங்தி, ‡கடைக்கால் மிதித்திட்டு - அடிப்படை சோலி. §கருக்கார் - பிறவிக்குரியவர்.

ஒருக்கால் நினைத்திட் *டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார்கள் சித்தத் துறைவோனே
உரத்தோ டிடத்திற் குறத்தே னைவைத்திட்
டொளித்தோ டும்வெற்றிக் குமரேசா
செருக்கா தருக்கிச் †சுரச்சூர் நெருக்கச்
செருச்சூர் மரிக்கப் பொரும்வேலா
திறப்பூ தலத்திற் றிரட் ‡சோ ணவெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே. (௨௨௪)

---

தனனா தனனத் தனனா தனனத்
தனனா தனனத் தனதான.

452. அருமா மதனைப் பிரியா தசரக்
கயலார் நயனக் கொடியார்தம்
அழகார் புளகப் புழுகார் சயிலத்
தணையா வலிகெட் டுடல்தாழ
இருமா நடையுக் குரைபோ யுணர்வற்
றிளையா வுளமுக் குயிர்சோர
எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
கிருபா தமெனக் கருள்வாயே
ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
டுரமோ டெறிபொற் கதிர்வேலா
§உழைமா னடவிக் குறமா மகளுக்
குருகா திருபொற் புயவீரா
திருமால் கமலப் பிரமா விழியிற்
றெரியா அரனுக் கரியோனே
வயல்சுற் றருணைப் புரியிற்
றிருவீ தியினிற் பெருமாளே. (௨௨௫)

---

* இருக்கால்-இரண்டு திருவடிகளையும் † சுரச்சூர் நெருக்கு-சுரர்களாகிய தெய்வத் தன்மையோரை ஒடுக்கிய ‡ சோணவெற்பு - திருவண்ணாமலை. § உழைமான் - மான் உழை.

தனதனா தானனத் தனதனா தானனத்
தனதனா தானனத் தனதான.

453. அழுதுமா வாவெனத் தொழுதுமூ டூடுநெக்
கவசமா யாதரக் கடலூடுற்
றமைவில்கோ லாகலச் சமயமா பாதகர்க்
கறிவொணா மோனமுத் திரைநாடிப்
பிழைபடா ஞானமெய்ப் பொருள்பெறா தேவினைப்
பெரிய*ஆ தேசபுற் புதமாய
பிறவிவா ராகரச் சுழியிலே போய்விழப்
பெறுவதோ நானினிப் புகல்வாயே
பழையபா கீதிப் படுகைமேல் வாழ்வெனப்
படியு†மா றாயினத் ‡தனசாரம்
பருகுமா றானனச் சிறுவசோ ணாசலப்
பரமமா யூரவித் தகவேளே
பொழுதுசூழ் போதுவெற் படிபடா பார்முதற்
பொடிபடா வோடமுத் தெறிமீனப்
புணரிகோ கோவெனச் சுருதிகோ கோவெனப்
பொருதவே லாயுதப் பெருமாளே. (௨௨௬)

---

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான.

454. ஆனைவரிக் கோடிளகிர்ப் பாரமுலைச் சாரசைபட்
டாடைமறைத் தாடுமலர்க் குழலார்கள்
ஆரவடத் தோடலையப் பேசிநகைத் தாசைபொருட்
டாரையுமெத் தாகமயக் கிடுமோகர்
சோனமழைப் பாரவிழித் தோகைமயிற் சாதியர்கைத்
தூதுவிடுத் தேபொருளைப் பறிமாதர்
தோதகமுற் றேழ்நரகிற் சேருமழற் காயனையுட்
சோதியொளிப் பாதமளித் தருள்வாயே

---

* ஆதேசம் - தாங்கப்படுவது † ஆறு ஆய் - (கார்த்திகை மாதர்களாகிய) ஆறு தாய்மார். ‡ தன சாரம் - முலைப்பால்.

சமராடிய மார னெடுக்குங் கணையாலே
தனிமானுயிர் சோரு மதற்கொன் றருள்வாயே
குமராமுரு காச டிலத்தன் குருநாதா
குறமாமக ளாசை தணிக்குந் திருமார்பா
அமராவதி வாழ்வ மார்க்கன் றருள்வோனே
அருணைபுரி வீதி யினிற்கும் பெருமாளே. (௨௨௯)

---

தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனத் தனதானா.

4௦(. இரதசுரதமுலை களுயார்புகுத்த நுதல்வேர்வரும்ப
அமுதநிலையில்விர லுகிரேகைதைக்க மணிபோல்விளங்க
இசலியிசலியுப ரிதலீலையுற்று இடைநூல்நுடங்க
வளமகிழ்ச் சியினூடே

இருவருடலுமொரு வுருவாய்நயக்க முகமேலழுந்த
அளகமவிழவளை களுமேகலிக்க நயனுரவிந்த
லகரிபெருகஅத ரமுமேயருந்தி முறையேயருந்த
உரையெழப் பரிவாலே

புருவநிமிரஇரு*கணைவாள்இமைக்க வுபசாரமிஞ்ச
அவசகவசபுள வியலேதரிக்க அதிலேயனந்த
புதுமைவிளையஅது பரமாநிரிக்க இணைதோளுமொன்றி
அதிசுகக் கலையாலே

புளகமுதிரவிர கமென்வாரிதத்த வரைநாண்மழுங்க
மனமுமனமுமுரு கியெயாதரிக்க வியர்போலுகந்து
பொருளதளவுமரு வுறுமாயவித்தை விலைமாதர்சிங்கி
விடஅருட் புரிவாயே

பரவுமகரமுக ரமுமேவலுற்ற சகராம்விளைந்த
தமரதிமிரபிர பலமோகரத்ந சலராசிகொண்ட
படியையுமுழுதுமொரு நொடியேமதித்து வலமாகவந்து
சிவனிடத் தமர்சேயே

---

* கணைவாள் — கண்வாள்.

யழகிமிசையிலிசை யிசையேரகத்தில் திருவாவினன்கு
டியினில்பிரமபுர மதில்வாழ்திருத்த ணிகையூடுமண்டர்
பதியமுதியகதி யதூநாயெனுக்கு முறவாகிநின்று
கவிதையைப் புனைவோனே

அரியுமயனுமம ருமாயசிட்ட பரிபாலனன்ப
ரடையுமிடரைமுடு கியெநூறதுட்ட கொலைகாரரென்ற
அசுரர்படையையடையவுபவேரறுத்த அபிராமசெந்தில்
உரகவெற் புடையோனே

அருணகிரணகரு ணையபூரணச்ச ரணமேலெழுந்த
இரணகரணமுர ஹுரசூரனுட்க மயிலேறுகந்த
அருணையிறையவர்பெ ரியகோபுரத்தில் வடபாலமர்ந்த
அறுமுகப் பெருமாளே.(உநூ0)

---

தனதனனத் தனதான தனதனனத் தனதான.

458. இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞான
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப பெருமாளே.

---

தனன தனன தனன தனன
தனன தனன தனதான.

459. இருவர் மயலோ அமளி விதமோ
எனென செயலோ அணுகாத

இருடி அயன்மா லமர ரடியா
ரிரையு மொலிதான் இவைகேளா

தொருவ னடியே னலறு மொழிதா
னொருவர் பரிவாய் மொழிவாரோ

உனது பதநூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ

பரமகுருவா யணுவி லசைவாய்
பவன முதலா கியபூத

படையு முடையாய் சகல வடிவாய்
பழைய வடிவா இயவேலா
அரியு மயனோ டபய மெனவே
அயிலை யலைமேல் விடுவோனே
அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருணை கிரிவாழ் பெருமாளே.(௨௩௨)

---

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான.

460. இருவினை மங்க மலவகை மங்க
இருள்பிணி மங்க மயிலேறி
இனவரு ளன்பு மொழியக டம்பு
வினதக முங்கொ டளிபாடக்
கரிமுக னெம்பி முருகனெ னண்டர்
களிமலர் சிந்த அடியேன்முன்
கருணைபொ ழிந்து முகமும லர்ந்து
கடுகிந டங்கொ டருள்வாயே
திரிபுர மங்க மதனுடல் மங்க
திகழ்நகை கொண்ட விடையேறி
சிவம்வெளி யங்க ணருள்குடி கொண்டு
திகழுந டஞ்செய் தெமையீனும்
அரசியி டங்கொள் மழுவுடை யெந்தை
அமலன்ம கிழ்ந்த குருநாதா
அருணைவி லங்கல் மகிழ்குற மங்கை
அமளிந லங்கொள் பெருமாளே.(௨௩௩)

தனதன தாந்த தந்த தனதன தாந்த தந்த
தனதன தாந்த தந்த தனதான.

461. பூண்ப சும்பை கருவிளை கூன்கு டம்பை
யிடரடை பாழ்ம்பொ தும்ப கிதவாரி
இடைதிரி சோங்கு கந்த மதுவது தேங்கு கும்ப
மிரவிடை தூங்கு கின்ற பிணநோவுக்

குருவியல் பாண்டமஞ்சு மருவிய கூண்டு நெஞ்சொ
டுயிர்குடி போங்கு ரம்பை யழியாதெ னன்
றுலகுட னேன்று கொண்ட கருமபி ராந்தொ ழிந்து
னுபயப தாம்பு யங்கள் அடைவேனோ
அருணையி லோங்கு துங்க சிகரக ராம்பு யங்கள்
அமரர்கு ழாங்கு வித்து தொழவாழும்
அடியவர் பாங்க பண்டு புகலகி லாண்ட முண்ட
அபினவ சார்ங்க கண்டன் மருகோனே
கருணைமரு கேந்த்ர அன்ப ருடனுர கேந்த்ரா கண்ட
கடவுள்ந ரேந்த்ர மைந்த வரைசாடும்
கலபக கேந்த்ர தந்த்ர அரசகி ரேந்த்ர கந்த
நரகுலி சேந்த்ரா தங்கள் பெருமாளே. (உகூச)

---

தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த தனதான.

462. இருளளக மவிழமதி போத முகத ரும்ப
இலகுகயல் புரளஇரு பார பொற்த னங்கள
இளகஇடை துவளவளை பூச லிட்டி ரங்க மவராலும்
எழுதரிய கலைநெகிழ ஆசைமெத்த வுந்தி
யினியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டுந்த
இதழமுது பருகிஉயிர் தேக மொத்திருந்து முனிவாறி
முருகுகமழ் மலரமளி மீதி னிற்பு குந்து
முகவனச மலர்குவிய மோக முற்ற ழிந்து
மொழிபதற வசமழிய ஆசைபிற்க விழ்ந்து விடுபோதும்
முழுதுணர வுடையமுது மாதவத்து யர்ந்த
பழுதில்மறை பயிலுவள ஞாதரித்து நின்று
முனிவர்சுரர்தொழுதருகுபாதபத்மமென்றுமறவேனே
ஒருசிறுவன் மணமதுசெய் போதி லெய்த்து வந்து
கிழவடிவு கொடுமுடுகி வாசலிற்பு குந்து
உலகறியஇவனடிமையாமெனக்கொணர்ந்து சபையூடே

ஒருபழைய சருகுமடி ஆவணத்தை யன்று
உரமொடவ னறுவலிய வேகி ழிக்க நின்று
உதறிமுறை யிடுபழைய வேத வித்தர் தந்த சிறியோனே
அரியுவடு பதிகடவி யாட கர்சி லம்பொ
டமருமட மணிமுடிவி யாள மிட்ட மூந்த
அமரரொடு பலர்முடுகி ஆழியைக்க டைந்து அமுதாக
அருளுமரி திருமருக *வார ணத்தை யன்று
அறிவுடனொருகொடியி லேத ரித்த கந்த
அருணகிரி நகரிலெழு கோபுரத்தமர்ந்த பெருமாளே

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

463. இறுகு மணிமுலை மருவு தாளமு
மெரியு முமிழ்மதி நிலவாலே
இரவி லெனதுயிர் கவர வருகுழ
லிசையி லுறுகடல் அலையாலே
தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
சரமி லெளியெனும் அழியாதே
தருண மணிபொழி லருணை நகருறை
சயில மிசையினில் வரவேணும்
முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி யசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா
குறவர் மடமகள் அமிர்த கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரிலை தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே. (௨௩௬)

தனதனன தத்த தனதனன தத்த
தனதனன தத்த தனதான.

464. உலையிலன லொத்த வுடலினனல் பற்றி
யுடுபதியை முட்டி யமுதூற

* வாரணம் - கோழி.

இருகிவர விட்ட பரமாசு முற்று
வுனதடியை நத்தி நினையாமல்
சிலைநுதலி விட்ட திலதமவிர் பொட்டு
திகழ்முகவர் முத்து நகையாலே
சிறுகுவலை யிட்ட மயல்கவலை பட்டு
திருடனென வெட்கி யலைவேனோ
கலைகனக வட்ட திமிலைபறை கொட்ட
கனகமயில் விட்ட கதிர்வேலா
கருதலரின் முட்டி கருகியுரு கட்ட
கதவமனை நற்ற குலகாலா
அலைகடலு டுத்த தலமதனில் வெற்றி
அருணைவளர் வெற்பில் உறைவோனே
அசுரர்களை வெட்டி யமரர்சிறை விட்டு
அரசுநிலை யிட்ட பெருமாளே.(௨௬௭)

---

தனதனன தனந்த தானன தந்ததான.

465. கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே
கருதிமிக மடந்தை மார்சொல்வ தந்தியாலே
வடவனலை முனிந்து வீசிய தென்றலாலே
வயலருணை யில்வஞ்சி போதந லங்கலாமோ
இடமுமையை மணந்த நாதரி றைஞ்சம்வீரா
எழுகிரிகள் பிளந்து வீழ்ம றிந்தவேலா
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே.(௨௬௮)

---

தனதனனத் தனதனனத் தனதனனத் தனதனனத்
தனதனனத் தனதனனத் தனதான.

466. கமலமுகப் பிறைநுதல்பொற் சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற் சுழலும்விழிக் குழல்கார்போல்
கதிர்*தரளொப் பிய†தசனக் கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற் கிளிசேரும்

* தரளொப்பிய - தரளம் ஒத்த, தரளம் - முத்து. † தசனம் - பல்.

குமரிதனத் திதலைமலைக் கிகலியிலைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனுடைக்
கொடியிடைபட் டுடைநடைபொற் சரணமயிற் கெமனமெனக்
குணகிபொருட் * பறிபவருக் குறவாமோ
திமிலையுடுக் குடன்முரசு பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுர்திமிதித் தொலிதாளம்
செககணசெக் கணகதறத் திடுதிடெனக் கொடிமுடியெட்
டிகைசிலைபட் டுவரிபடச் சிலை † கோலித்
‡ துமிலவுடற் றசுரர்முடிப் பொடிபடரத் தமுள்பெருகத்
தொகுதசைதொட் டலைகயுணத் தொடும்வேலா
§ துவனிதினைப் புனமருவிக் குறமகளைக் களவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே. (௨௰௮)

தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன தனதான

467. கமலமொட் டைக்கட் டழித்துக் குமிழ்மை
நிலைகுலைத் துப்பொற் குடத்தைத் தமனிய
கலசவர்க் கத்தைத் தகர்த்துக் குலையுற வுளநீரக்
கறுவிவட் டைப்பிற் றுரத்திப் பொருதப
யம்விளைத் துச்செப் படித்துக் குலவிய
கரிமருப் பைப்புக் கொடித்துத் திறல்மதன் || அபிஷேகம்
அமலர்நெற் றிக்கட் டழற்குட் பொடிசெய்து
அதிகசக் ரப்புட் பறக்கக் கொடுமையி
னடல்படைத் தச்சப் படுத்திச் சபதமொ டுருதாளம்
அறைதல்கற் பித்துப் பொருப்பைப் பரவிய
சிறகறுப் பித்துக் கதித்துப் புடைபடு
மயிலவச் சித்ரத் தனத்துத் திருடிகள் உறவாமோ
தமரமிக் குத்திக் கதிர்க்கப் பலபறை
தொகுதொகுக் குத்தொத் தொகுக்குத் தொகுதொகு
தரிகிடத் தத்தத் தரிக்கத் தரிகிட எனவோதிச்

---

* பறிபவர்-பறிப்பவர் † கோலி-வளைத்து. ‡ துமில-பேரொலியிட, § துவனி-தொனி || அபிஷேகம்-கிரீடம்.

* சவடுறப் பக்கப் பழுதொத்திப் புகையெழ
விழிகளுட் செக்கச் சிவத்துக் குறளிகள்
தசைகள்பட் சித்துக் களிக்க கழுதொடு கழுகாட
அமலையுற் றுக்கொக் கரித்துப் படுகள
அசுரரத் தத்திற் குளித்துத் திமியென
அடிநடித் திட்டிட் டிடித்துப் பொருதிடு மயிலோனே
அழகுமிக் கச்சித் ரபத்மாசப் புரவியி
லுலவுமெய்ப் ப்ரத்ய க்ஷநர்த்தக் குருபர
அருணையிற்சித்தித் தெனக்குத்தெளிவருள் பெருமாளே

---

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான.

968. கரிமுகக் கடகளிற் றதிகசற் பகமதக்
கஜமுகத் தவுணனைக் கடியானை
கடலையெட் பயறுநற் கதலியிற் கனிபலக்
கனிவயிற் றினிலடக் கியவேழம்
அரிமுகத் தினனெதிர்த் திடுகளத் தினின்மிகுத்
தமர்புரிக் கணபதிக் கிளையோனே
அயிலெடுத் தசுரர்வெற் பலைவுறப் பொருதுவெற்
றியைமிகுத் தறுமுகக் குமரேசா
நரிமிகக் கிளைகளைப் பரியெனக் †கடிவளத்
தொடுபிடித் தெதிர்நடத் திடுமீசன்
நடனமிட் படியிடத் திறுமிசைத் தரையினிற்
கரியுரித் தணிபவற் கொருசேயே
‡துரிபெறச் சரிபொரிற் கனவயற் கழகுளத்
§துரியமெய்த் தரளமொய்த் திடவீறிச்
சுரர்துதித் திடமிகுத் தியல்தழைத் தருணையிற்
சடாயிற் சரவணப் பெருமாளே. (௨௪௧)

---

* சவடு உற பக்க பழு ஒத்தி - பக்கத்துப்பழு வெலும்புகள் நெரிய முடக்கிய வைககளை ஒத்தித் துன்பங்களைக் கூத்தாடி. †கடிவளம் - கடிவாளம், ‡துரி-(காய் கனிகளின் ஆகிய) சுமை. § துரியமெய்த்தரளம்-தூய்மையான முத்துக்கள்.

தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன தனதான.

469. கருதி றஞ்சிறந் தகல்வன புகல்வன
மதன தந்திரங் கடியன கொடியன
கனக குண்டலம் பொருவன வருவன * பரிதாவும்
கடலு டன்படர்ந் தடர்வன தொடர்வன
வினையு நஞ்சமுந் தொனிர்வன † பிளிர்வன
கணையை யொன்றொன் றெதிர்வன முதிர்வன இனையோர்முன்
‡ செருவை விண்டகஞ் சிறுவன புறுவன
களவு வஞ்சகஞ் சுழல்வன வுழல்வன
தெனன தெந்தனந் தெனதென தெனதென எனநாதம்
தெரிய ரும்பைவென் றிடுவன அடுவன
மருள்செய் கண்கள்கொண் டணைவர்த முயிரது
திருகு கின்றமங் கையர்வச மழிதலை யொழிவேனோ
மருவு தண்டைகிண் கிணிபரி புரமிவை
கலக லன்கலின் கலினென இருசரண்
மலர்கள் நொந்துநொந் தடியிட வடிவமு மிகவேறாய்
வலிய சிங்கமுங் கரடியு முழுவையு
முறைசெ ழும்புனந் தினைவிளை யிதண்மிசை
மறவர் தங்கள்பெண் கொடிதனை யொருதிரு வுளநாடி
அருகு சென்றடைந் தவள்சிறு பதயுக
சததளம்பணிந் ததிவித கலவியு
ளறமருண்டுநெஞ் சவளுடன் மகிழ்வுற அணைவோனே
அமரர் சங்கமுங் குடிபுக நொடியினில்
நிருதர் சங்கமும் பொடிபட அமர்செய்து
அருணை வந்துதென் திசைதனி லுறைதரு பெருமாளே

---

தானன தான தானன தான
தானன தான தனந்ததான.

470. கானுந் தூரம் ஞானத வாரி
காதார வார மத்தன்பினாலே

* பரி- வடவாமுகாக்கினி. † பிளிர்வன-கொப்புளிப்பன. ‡ செருவை விண்டு அகம் சிறுவன-போர் முயன்று அகங்கொண்டு சீறுவன.

காலாளும் வேளும் ஆலால நாதர்
காலால் நிலாவு  *முனிந்து†பூமேல்
நாஞன தோகை நூலாடை சோர
நாடோர்க ளேச  அழிந்துதானே
நாளுப வாத மேலாக ஆகம்
நாடோறும் வாடி  மயங்கலாமோ
சோணச லேச பூணார நீடு
தோளாறு மாறும்  விளங்குநாதா
தோலாத வீர வேலால டாத
சூராளன் மாள  வெகுண்ட கோவே
சேணாடர் லோகம் வாழ்மாதி யானை
சீராத காதல்  சிறந்தமாயா
தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர்  தம்பிரானே.(௨௬௮)

---

தானா தத்தன தானா தத்தன தந்த தனந்தன தான தந்தன
தானா தத்தன தானா தத்தன தந்த தனந்தன தான தந்தன
தானா தத்தன தானா தத்தன தந்த தனந்தன தான தந்தன தந்ததான.

471. காரா டக்குழ லாலா லக்கணை
கண்கள் சுழன்றிட வேமு கங்களி
னாலா பச்சிலை யாலே ‡மெற்புசி
மஞ்சள் கலந்தணி வாளி கொந்தள
காதா டக்கலன் மேலா டக்குடி
யின்ப ரசங்குட மார்ப ளிங்கொளி  கொங்கைமாத
காசா சைச்செய லாலே சொக்கிடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
போலே நற்றெரு வூடாடித் §துயல்
தொங்கல் நெகிழ்ந்திடை யேது வண்டிட
கால்தா விச்சதி போடே சித்திர
மென்ப நடம்புரி வாரு டன்செயல்  மிஞ்சலாகி

---

* முனிந்து - முனிய. † பூ - பூமி. ‡ மெற்புசி - மேலேபூசி
§ துயல் - அசைகின்ற.

சீராடிச்சில நாள்போய் மெய்த்திரை
வந்து கலந்துயி ரோட வங்கமொ
டோடி டிப்பல நோயோ டுத்தடி
கொண்டு நடந்தென வேந டந்துசொல்
போ டிக்கிளை பாயோ டுக்கிய
டங்கியழிந்துயி ரோடு ளஞ்சொரி யுங்கண்மாறிச்

சேரா மற்*பொறி கேளா மற்செவி
துன்பமொ டின்பமு மேமறந் தபின்
ஊரார் கற்றமு மாதோர் மக்களு
மண்டியு மண்டையு டேகு விக்கிது
சீசீ சீச்சீ போகா நற்சனி
யன்கடை யென்றிட வேகி டந்துடல் மங்குவேனோ

மாரோன் முப்புர யுற்றிட
அங்கி யுமிழ்ந்திடு வேரி யம்புலி
தோல்சீ யத்தொடை †யேகா சச்சடை
கங்கை யிளம்பிறை யார வணிந்தவர்
மாடே றிக்கட லாலா லத்தையு
முண்டவ ரெங்கை‡சி வானு பங்குறை யென்றன்மாதா

மாலோ னுக்கிளை யாள்மா பத்தினி
அம்பிகை சங்கரி மோக சுந்தரி
§வேதா மக்கலை ரூபாள் முக்கணி
ரம்பிய கொங்கையி னுள்ப யங்கருள்
மானா ணக்கும ராதோ கைப்பரி*
யின்பத வங்குரு வே||யெ னஞ்சுரர் தொண்டுபாடச்

சூரா மக்கிட மாமே ருக்கிட
அங்கட லெண்கிரி யோடி பங்கொடு
¶தீபே ழுற்றிட பாதா ளத்துறை
நஞ்சர வின்படண மாயி ரங்கெட

* பொறி - அறிவு. † ஏகாசம்-போர்வை; ஏகாசர் - போர்வையை உடையவர். ‡ சிவ அனுபங்கு உறை-சிவபெருமானோடுகூட (அவர் திருமேனியில்) பாதியாக உறையும். § வேதாமம் - வேதாகமம். || எனஞ்சுரர் - என் அம் சுரர். ¶ தீபு எழ் - எழு தீவு. பணம் - படம்.

சூழ்வா ளக்கிரி தூளா கிபொடி
விண்கணி றைந்திட வேக டமபுரி கின்றவேலா
சோர்வே தத்தலை மேலா டிச்சுக
பங்கய செங்கர மோட கம்பெற
வாகா னக்குற மாதோ டற்புத
*மங்குல ணங்குட னேமகிழ்ந்துநல்
†தூணே டிப்பட ராகா ரந்தைய
ணோங்குவி ளங்கரு ணாசலந்திகழ் தம்பிரானே. (௨௪௪)

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தந்த தனதான.

472. காருமரு வும்பெருகு சோலைமரு வுங்கொடிய
‡காகளம டங்கவுமு ழங்குமதனாலே
காலடர வும்பனிமே லடர வந்தபொரு
காமன்விடு விஞ்சுகணை யுஞ்சு மலராலே
ஊருமுலை கும்பமழிய பேருகமவி லாந்ததென
வோரிரவு வந்தெனது சிந்தையழியாதே
ஊடியிரு கொங்கைமிசை கூடியரி வண்டினமு
லாவியகு டம்பமலர் தந்தருள வாயே
ஆருமர வும்பிறையு நீருமணி யும்புடைய
ராதிபர வும்பரம னீந்த குருநாதா
ஆறுமுக முங்குரவு மேருபயி லுங்குறவி
யாளுமுர முந்திருவும அன்பு முடையோனே
மேருமலை யும்பெரிய சூரமலை யுங்கரிய
வேலையலை யும்பகையும் அஞ்சவிடும்வேலா
மோகினியி றைஞ்சமரு ணாபுரிவி ளங்குதிரு
வீதியிலெ ழுந்தருளி நின்றபெருமாளே. (௨௪௫)

தானன தானதத்த தனதான தானன தானதத்த தனதான.

473. சித்விநோதமெச்சு குரலாலே சிறுமையார்முடித்த குழலாலே
நீதியிலாதழித்து முழலாதே நீமயிலேறியுற்று வரவேணும்
சூதமர்சூரருட்க வருசூரா சோணகிரீயிலுற்ற குமரேசா
ஆதியர்க்கொருச்சொலருள்வோனே ஆனைமு கார்கனிட்ட பெருமாளே. ()

---

* மங்குல்அணங்கு - விண்ணுலகப் பெண், தெய்வயானை! † தூண் - சிவமாகிய அக்கினிஸ்தம்பம் ‡ காகளம் - (குயிலாகிய) எக்காளம்.

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான.

476, சிலைநுதல் வைத்துச் சிறந்த குங்கும
திலதமு மிட்டுக் குனிந்த பங்கய
திருமுக வட்டத் தமர்ந்த மென்குழல் தனிலேறிச்
செழுமணி ரத்நத் திலங்கு பைங்குழை
தனைமுனி வுற்றுச் சிவந்து நஞ்சணி
செயலினை யொத்துத் தயங்கு வஞ்சக விழிசீறிப்
புலவியி குத்திட் டிருந்த வஞ்சியர்
பதமலர் குக்குட் பணிந்த ணிந்தணி
புரிவளை கைக்குட் கலின்க லென்றிட அநுராகம்
புகழ்நல மெத்தப் புரிந்து கொங்கையி
லுருகிய ணைத்துப் பெரும்ப்ரி யங்கொடு
புணரினும் நிற்பொற் பதங்கள் நெஞ்சினுள் மறவேனே
கலைமதி வைத்துப் புனைந்து செஞ்சடை
மலைமகள் பக்கத் தமர்ந்தி ருந்திட
கணகண கட்கட் கணின்க ணென்றிட நடமாடும்
கருணைய னுற்றத் த்ரியம்ப கன்தரு
முருகபு னத்திற் றிரிந்த மென்கொடி
கனதன வெற்பிற் கலந்த ணைந்தருள் புயவீரா
அலைகடல் புக்குப் பொரும்பெ ரும்படை
யவுணரை வெட்டிக் களைந்து வென்றுயர்
அமரர்தொ ழப்பொற் சதங்கை கொஞ்சிட வருவோனே
அடியவ ரச்சத் தழுங்கி டுந்துயர்
தனையொழி வித்துப் ப்ரியங்கள் தந்திடும்
அருணகி ரிக்குட் சிறந்தமர்ந்தருள் பெருமாளே.(௨௪௯)

---

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான.

477. சிவமா துடனே அநுபோ கமதாய்
சிவஞா னமுதே பசியாறித்

திகழ்வோ டிருவோ ரொருரூ பமதாய்
திகைலோ கமெலாம் அநுபோகி
இவனே யெனமா லயனோ டமரோ
ரிளையோ னெனவே மறையோத
இறையோ னிடமாய் விளையா டுகவே
யியல்வே லுடன்*மா அருள்வாயே
†தவலோ கமெலா முறையோ வெனவே
தழல்வேல கொடுபோ யசுரரைத்
தலைதூள் படவேழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே
கவர்பூ வடிவாள் குறமா துடன்மால்
கடனா மெனவே அணைமார்பா
கடையேன் மிடிதூள் படநோய் விடவே
‡கனல்மால் வரைசேர் பெருமாளே.(உருO)

---

தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந் தந்ததான

478. சின§முடுவல் நரிகழுகு டன்பருந் தின்கணங்
கொடிகெருடன் அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ்
செடமளறு மலசலமொ டென்பு தநின் றுங்கலந் துன்பமேவு
செனனவலை மரணவலை ரண்டுமுன் பின்தொடர்ந்
தணுகுமுட லினைகவடி விங்கடைந் தம்பரஞ்
சிறுமணலை யளவிடினு மங்குயர்ந்திங்குலந் தொன்றுநாயேன்
கனகபுவி நிழல் மருவி யன்புறுந் தொண்டர்பங்
குறுகஇனி யருள்கிருபை வந்து|| தந் தென்றுமுன்
கடனெனது உடலுயிரு முன்பரந் தொண்டுகொண் டன்பரோடே
கலவிநல மருவிவடி வஞ்சிறந் தன்பதம்
புணர்கரண மயில்புறமொ டின்புகொண் டண்டருங்
கனகமலர்பொழியஉன தன்புகந்தின் றுமுன் சிந்தியாதே

---

* மா-[மயிலாகிய] குதிரை. † தவ-மிக. ‡ கனல்மால்வரை- திருவணணாமலை. § முடுவல்-நாய் || தந்து-சார.

தனனதன தனனதன தந்தனந் தந்தனம்
தகுகுகுகு குகுகுகுகு டங்குடங் குந்தடந்
தவில்முரசு பறைதிமிலை டிங்குடிங் குந்தடர்ந் தண்டபேரி
துடுடுடுடு டுடுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிடிமிட டகுர் திகுகு சங்கவெண் கொம்புதின்
கடையுகமொ டொலியகட லஞ்சவஞ் சங்குலஞ் சிந்திமோளச்
சினமுடுகி அயிலருளி யும்பரந் தம்பரந்
திசையுரகர் புவியுளது மந்தரம் பங்கயன்
செகமுழுது மகிழ அரி அம்புடன் றொண்டுகொண் டஞ்சல்பாடத்
திருமுறுவ லருளியுய ரெந்தையின் பங்குறுங்
கவுரிமன முருகவொரு கங்கைகண் டன்புறுந்
திருவருணை கிரிமருவு சங்கரன் கும்பிடுந் தம்பிரானே. ([illegible])

---

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன தந்ததான.

479\. சக்கிலச் சுரோணி தத்தி யூற்றநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிரக
சுக்கிலக் குளிகை யொத்து கொப்புளுமை யந்துகோல
தொப்பை யிட்டவயி றிற்பொ ருத்துமிக
வட்ட மிட்டுடல் வெப்ப முற்றுபதி
சொற்ற பத்தின்மதி யக்ஷரத்தி லுடை விஞ்சையாலே
கக்க நற்புவியி லுற்ற நற்றிமுலை
யைக்கொ டுக்கவமி ரதைப்பு சித்து*வளா
கைககு சத்தியொடு மைத்து தத்துநடை யந்தமேவிக்
கற்று வெற்றறிவு பெற்று பச்சைமயி
லொத்த மக்கள்மய லிற்சு ளித்துநெறி
கட்டி யிப்படிபி றப்பி லுற்றுடல மங்குவேனோ
தெற்க ரக்கர்பனி ஷைக்கு லைத்து†விட
ணற்கு நத்தரச ளித்து முத்திகொடு
சித்தி ரத்திருவு ரத்த சக்கிரிம கிழ்ந்தவேளே

---

* வளாகைக்கு சத்தியொடு எனப்பிரிக்க † விடணற்கு-விபீஷணற்கு.

செக்க ரத்தின்மலை முப்புரத்திலெரி
யிட்ட*சத்திசிவ னூற்று நத்தமிகு
சித்த னைத்தையும்வி ழித்த சத்தியுமை தந்தபாலா
தார்க்க மிட்டசுர ரைக்கெ லித்துமலை
யுக்கெ முக்கடல்கொ ளுத்தி அட்டதிசை
தட்ட முட்டையடையக்கொ டிப்புகையின் மண்டும்வேலா
தத்தை வித்ருமசி றத்தி முத்தமிகு
றத்தி கற்பகவ னத்தி சித்தமவை
தக்கு நத்தஅரு ணைக்கி ரிக்குள்மகிழ் தம்பிரானே. (௨௬௫)

---

தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன தனதான.

480. செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமுலை
கும்பத் தந்திக் குவடென வாவிய
கெந்தப் பந்தித் தரளம தாமெனு விடராவி
சிந்திக் கந்தித் திடுகலை யாமுன
தங்கத் தம்பொற் பெதுவென வோதுவ
†திண்டுப் புந்தித் திடுகனி தாலுமுன் இதழாமோ
மஞ்சொக் குங்கொத் தளகமெ னும்பிடை
கஞ்சத் தின்புற் றிடுதிருவேயின
வஞ்சிக் கொம்பொப் பெனுமயி லேயென முறையேய
வந்தித் திந்தப் படிமட வாரொடு
கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு
மந்தப் புந்திக் ‡கசடனெ னாளுன தடிசேர்வேன்
நஞ்சைக் கண்டத் திடுபவ ராரொடு
திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்
நம்பர்ச் செம்பொற் பெயரசு ரேசனை யுகிராலே

---

* சத்தி-வன்மை † திண்டுப்புந்தித்திடுகனிதாலும்-திண்டுப்பும் தித்தித்த கனிதாலும், துப்பு பவளம். ‡ கசடனெனான்-கசடன்+எ+நான்.

நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
*நந்திக் கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழி யேதென மிகநாடி

வெஞ்சச் சிம்புட் சொருபம தானவர்
பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி
விந்தைச் செங்கட் பொலிசுத வேடுவர் புனமீதே

*வெண்டித் தங்கித் திரிகிழ வாவதி
துங்கத் துங்கக் கிரிஅரு ணாபுரி
வெங்கட் சிங்கத் தடிமயி லேறிய பெருமாளே. (௨௫௩)

---

தனதன தந்தனந் தானதத்ததந்த
தனதன தந்தனந் தானதத்ததந்த
தனதன தந்தனந் தானதத்ததந்த தனதனத் தனதான

481. தமரகுரங்களுங் காரிருட்பிழம்பு
மெழுகிய அங்கமும் பார்வையிற்கொளுந்து
தழலுமிழ்கண்களுங் காளமொத்தகொம்பும்உளதக்கடாமேல்

தனிவருமந்தகன் பாசம்விட்டெறிந்து
அடவருமென்றுசிந் தாகுலத்திருந்து
தமரழமைந்தருஞ் சோகமுற்றிரங்க மரணபக்குவமாநாள்

கமலமுகங்களுங் கோமளத்திலங்கு
நகையுநெடுங்கணுங் காதினிற்றுலங்கு
கனககுதம்பையுந் தோடும்வஜ்ரஅங்க தமுமடற்சுடர்வேலும்

கடிதுலகெங்கணுந் ‡தாடியிட்டுவந்த
மயிலுமிலங்கலங் காரபொற்சதங்கை
கழலொலிதண்டையங் காலுமொக்கசந்த வரமெனக்கருள்கூராய்

இமகிரிவந்தபொன் பாவைபச்சைவஞ்சி
அகிலதலம்பெறும் பூவைசத்தியம்பை
யிளமுலையின்செழும்பால்குடித்திலங்குமியல்தமிழ்த்திறவோனே

இறைவரிறைஞ்சநின் றாகமப்ரசங்க
முறைசெய்திடும்ப்ரசண் டாவிசித்தநின்ற
ரணமுகதுங்கவெஞ் சூருடற்பிளந்த அயிலுடைக்கதிர்வேலா

---

* நந்தி-தோன்றி. †வெண்டி-வேண்டி ‡ தாடி-தாவடி, பிரயாணம்.

தனன தனத்தத் தனந்த தனன தனத்தத் தனந்த
தனன தனத்தத் தனந்த தனதான.

483. தலையை மழித்துச் சிவந்த துணியை யரைக்குப் புனைந்து
சடையை வளர்த்துப் புரிந்து புலியாடை
சதிரொ டுவெப்பப் புனைந்து விரகொ டுகெற்கப் புகுந்து
தவமொ நசத்தந் தறிந்து திருநீறு
கலையை மிகுத்திட் டணிந்து கரண வலைக்குட் புகுந்து
கதறு நிலைக்கைக் கமர்ந்த எழிலோடே
கனகமி யற்றித் திரிந்து தவனு மெனைச்சற் றறிந்து
கவலை யொழித்தற் கிரங்கி யருள்வாயே
அலைகட லிற்கொக் கரிந்து பருவ ரையைப்பொட் டெறிந்து
மமரு லகத்திற் புகுந்தும உயரானை
அருளொ டுமகைபற்றி வந்து மருண கிரிபுக் கிருந்து
மறிவு ளபதாக வரங்கும இளையோனே
மலையை வளைத்துப் பறந்து மருவு புரத்தைச் சிவந்து
வழிது நகைத்திட் டிருந்த சிவனார்தம்
மதலை புனத்திற் புகுந்து நாவ டிவுற்றுத் திரிந்து
மறமயி லைச்சுற்றி வந்த பெருமானே (௨௱௯)

---

தான தான தந்த தான தான தந்த
தான தான தந்த தனதான.

484. தேதொகு வாச முற்ற சீதவி நோத மெச்சு
தேனிரி சூழ மொய்த்த மலராலே
சீறும ராவெ யிற்றி லூறிய காள மிட்ட
சீதநி லாவெ றிக்கும் அனலாலே
போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கும் அழியாதே
போகமெ லாநி றைத்து மோகவி டாய்மி குத்த
பூவையை நீய ணைக்க வரவேணும்
மாதினை வேளி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாதரிக்கு மயில்வீர

வானவர் சேனை முற்றும் வாழும ராப திக்குள்
　வாரண மான தத்தை　　　　மணவாளா
மேதினி யோர்த ழைக்க வேயரு ளுச லத்து
　வீதியில் மேவி நற்கு　　　　முருகோனே
மேருவை நீறெ ழுப்பி நான்முக னாப தத்தில்
　வேலனை யாள விட்ட　　　　பெருமாளே (உருள)

தான தத்த தந்த தான தத்த தந்த
　தான தத்த தந்த　　தனதான.

485. தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
　தோகை யர்க்கு நெஞ்சம்　　　　அழியாதே
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
　சூழ்பி ணிக்க ணங்கள்　　　　அணுகாதே
பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
　பாசம் விட்டெ றிந்து　　　　பிடியாதே
*பாவ லர்க்கி ரங்கி நாவ லர்க்கி சைந்த
　பாடல் மிக்க செஞ்சொல்　　　　தரவேணும்
வேத மிக்க விந்து நாத மெய்க்க டம்ப
　வீர பத்ர கந்த　　　　முருகோனே
மேரு வைப்பி ளந்து சூர னைக்க டிந்து
　வேலை யிற்று ளைந்த　　　　கதிர்வேலா
கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
　கோம ளக்கு ரும்பை　　　　புணர்வோனே
கோல முற்றி லங்கு சோணை வெற்பு யர்ந்த
　கோபு ரத்த மர்ந்த　　　　பெருமாளே. (உருஅ)

தானதன தனதத்தந்　　தனதானு.

488. பாணமல ரதுதைக்கும்　　　　படியாலே
　பாவியிள மதிகக்குங்　　　　கனலாலே
நாணமழி யவுரைக்குங்　　　　குயிலாலே
　நாளுமய லிலிளைக்குந்　　　　தரமோதான்

* பாவலர்-கவிஞர்.

சேணிலரி வையணைக்குந் திருமார்பா
தேவர்மகு டமணைக்குங் கழல்வீரா
காணஅரு ணையில்நிற்குங் கதிர்வேலா
காலன்முது கைவிரிக்கும பெருமாளே. (௨௫௯)

---

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

487. பாலாலு நீலாய்தேனாய்*நீளாய்பாகாய்வாய்சொற்கொடியார்தாம்
†பாடா வாடா வேளா வாலேபாடா யீடற் றிடைபீறும்
தோலா லேகா லாலேயூனா லேசூழ் பாசக் குடில்மாசு
தேயாமாயாவோயாநோயால்சோர்வாய்மாளக் கடவேனோ
ஞாலா மேலா வேதா போதா நாதா ‡சோதிக் கிரியோனே
ஞானாசாராவானோர்கோனேநாராவேதப் பொருளோனே
வேலா பாலா §சீலா காரா வேளே வேடக் கொடிகோவே
வீரா தாரா ஆறு தாரா வீரா வீரப் பெருமாளே. (௨௬௦)

---

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

488. புணர்முலை மடந்தை மாதர் வலையினி லுழன்ற நேக
பொறியுட லிறந்துபோன தளவேதுன்
புகழ்மறை யறிந்துகூறு மினியென தகம்பொருவி
பொருளென நினைந்து நாயென் இடர்தீர
மணமுனர் மடந்தை மாரொ டொளிதிரு முகங்களாறு
மணிமகு டமுங்கொள் பானு வெயிலாசை
வரைபர வணங்குகோடி முநிவர்கள்புகழ்ந்துபோத
மயில்மிசை மகிழ்ந்துநாடி வரவேணும்
பணைமுலை யரம்பை மார்கள் குயில்கிளி யினங்கள் போல
பரிவுகொ டுகந்து வேத மதுகூறப்
பறைமுர சனந்த பேரி முறைமுறை ததும்ப நீசர்
படைகட லிறந்துபோக விடும்வேலா

* நீளாய் பாகாய்-நீண்டு வருகின்ற ஆய்ந்தபாகாய் † பாடா ஆடாவேள் தாவாலே-பாடி ஆடி விரும்புகின்றவலமையினாலே வேள்-விருப்பம். ‡ சோதிக்கிரி-திருவண்ணாமலை. § சீல ஆகாரா-பரிசுத்த வடிவனே.

அணிசுக நரம்பு வீணை குயில்புற வினங்கள் போல
அமளியில் களங்கொ ளோசை வளர்மாதர்
அரிமகள் மணங்கொ டேகி யெனதிட ரெரிந்துபோக
அருணையின் விலங்கல்மேவு பெருமாளே. (௨௯௧)

---

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான.

489. புலைய னான மாவீனன் வினையி லேது மாபாவி
பொறையி லாத கோபீகன் முழுமூடன்
புகழி லாத தாழ்வீனன் அறிவி லாத காபோதி
பொறிக ளோடு போய்வீழு மதிசூதன்
நிலையி லாத கோமாளி கொடையி லாத ஊதாரி
நெறியி லாத வேமாளி குலபாதன்
நினது தாளை நாடோறு மனநி லாமை வீடாமல்
நினையு மாறு நீமேவி யருள்வாயே
சிலையில் வாளி தானேவி யெதிரி ராவ ணார்தோள்கள்
சிதைய மாறு போராடி யொருசீதை
சிறையி லாம லேகூடி யயனி மீதி லேவீறு
திறல னான மாமாயன் மருகோனே
அலைய மேரு மாசூரர் பொடிய தாக வேலேவி
அமர தாடி யேதோகை மயிலேறி
அதிக தேவரே சூழ உலக மீதி லேசூழும்
அருணை மீதி லேமேவு பெருமாளே, (௨௯௨)

---

தானனத் தத்ததனத் தானனத் தத்ததனத்
தானனத் தத்ததனத் தத்த தனதான.

490 *போககற் பக்கடவுட் பூருகத் தைப்புயலைப்
பாரியைப் பொற்குவையுச் சிப்பொழுதிலீயும்
போதுடைப் புத்திரரைப் போலவொப் பிட்டுலகத்
தோரைமெச் சிப்பிரியப் பட்டுமிடிபோகத்

---

* போக கற்ப: கடவுட்பூருகம் - இஷ்டபோகத்தை யளிக்குங்கற்பகமாகிய தெய்வவிருக்ஷம்

த்யாகமெத் தத்தருதற் காசுநற் சித்திரவித்
தாரமுட் பட்டதிருட் டுக்கவிகள்பாடித்

தேடியிட் டப்படுபொற் பாவையர்க் கிட்டவர்கட்
சேல்வலைப் பட்டடிமைப் பட்டு விடலாமோ

ஆகமப் பத்தருமற் றாரணச் சுத்தருமுற்
றாதரிக் கைக்கருணைத் தூப்பு மதில்சூழும்

ஆடகச் சித்ரமணிக் கோபுரத் துத்தரிக்
காகவெற் றிக்கலபக் கற்கி யமர்வோனே

தோகையைப் பெற்றிடப் பாகஞ்*சொற் றைப்பகழித்
†தூணிமுட் டக்கவரத் திக்கிலெழுபாரச்

சோதிவெற் பெட்டுமுதிர்த் தூளிதப் பட்டமிழ்ச்
சூரனைப் பட்டுருவத் தொட்ட பெருமாளே (௨௬௩)

---

தான தனத்தத் தனதத தந்தன
தான னனத்தத் தனத்த தத்தன
தான தனத்தத் தனத்த தத்தன தனதான.

491, மானை விடத்தைத் தடத்தி னிற்கயல்
மீனை நிரப்பிக் குனித்து விட்டணை
வாளி யைவட்டச் சமுத்தி ரத்தினை வடிவேலை

வானை ‡வனத்§துற் பலத்தி னைக்கயல்
மீனை விழிக்கொப் பெனப்பி டித்தவர்
மாய வலைப்பட் டிலைத்||துடக்¶குழல் மணநாறும்

ஊனை விடத்தைச் சடக்கெ னக்கொழு
ஆறா முபத்தக் கருத்த டத்தினை
யூறா மணத்தைக் குணத்ர யத்தொடு தடுமாறும்

ஊசலைசித்தத் த்வமற்ற செத்தையு
பாதி யையொப்பித் துளிப்ப வத்தற
வோகை செலுத்திப் ப்ரமிக்கு மிப்ரமை தெளியாதோ

---

* ஒற்றைப்பகழி-திரிபுரசம்மாரத்தில் அம்பாக உற்ற விஷ்ணு.
† தூணி-அம்பு தங்கும் கூடாகிய கடல், ‡ வனம்-ஜலம்.
§ உற்பலம்-குவளை மலர். || துடக்கு - மகளிர் சூதகம்.
¶ ஊழல்-ஊழல். ஊழல்-மணம்-துர்நாற்றம்.

சானகி கற்புத் தனைச்சு டத்தன
சோகவனத்திற் சிறைப்படுத்திய
தானை யரக்கர் குலத்த ரதத்தனை வருமாரர்

சாலை மரத்துப் புறத்தொ ளித்தடல்
வாலி யுரத்திற் சரத்தை விட்டொரு
தாரை தனைச்சுக் ரீவற்க ளித்தவன் மருகோனே

சோனை மிகுத்துத் திரட் புனத்தினி
லானை மதத்துக் கிடச்சு றற்புக
சோண கிரிக்கச் சர்பொற்ற கொற்றவ மலைவேடத்

தோள்கொடு சேர்ப்ப பொருப்பினைப் பொடி
யாகநெ ருக்கிப் பொருக்கெ னத்தெதிர்
சூரனை வெட்டித் துணித்த டக்கிய பெருமாளே (௨௯௪)

---

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன தனதான

492 மேக மொத்தகுழ லார்சி லைப்புருவ
வாளி யொத்தவிழி யார்மு கக்கமல
மீது பொட்டிடுழ கார்க ளத்திலணி வடமாட

மேரு வொத்தமுலை யார்ப ளப்பளென
மார்பு துத்திபுய வார்வ ளைக்கடகம
வீறி டத்துவளு நூலொ டொத்தஇடை யுடைமாதர்

தோகை பக்ஷிநடை யார்ப தத்திலிடு
நூபு ரக்*குரல்கள் பாட கத்துகில்கள்
சோர நற்றெருவு டேந டித்துமுகை விலைகூறிச்

சூது கச்சுரச மோடெ யெத்திவரு
வோரை நத்திவிழி யால்ம ருட்டிமயல்
தூள்†ம ருத்திலுயி ரேப றிப்பவர்கள் உறவாமோ

* குரல்கள் பாடகத் துகில்கள் சோர எனப்பிரிக்க. ஆகத் துகில் - மார்பு வஸ்திரம். †மருத்தில்-மருந்தினால்.

சேகணச்செகண தோதிமித்திகுட
டாடுடிட்டமட டுகுதத்தொகுர்தி
தீதகத்திமித தோவுடுக்கைமணி முரசோதை
தேசமுட்கவர ஆயிரச்சிரமு
மூளிபட்டமக மேருவுக்கவுணர்
தீவுகெட்டுமுறை யோவெனக்கதற விடும்வேலா
ஆகமத்திபல காரணத்தியெனை
யீனுசத்தி அரி ஆரணத்திசிவ
னாகமுற்றசிவ காமிபத்தினியின் முருகோனே
ஆரணற்குமறை தேடிபிட்டகிரு
மால்மகட்சிறுமி மோகசித்ரவளி
ஆசைபற்றியுரு ஞைசசெத்தின்மகிழ் பெருமாளே. ()

---

தனதன தந்ததத்த தனதன தந்ததத்த
தனதன தந்ததத்த தனதான.

493. மொழியதி றங்கறுத்து மகரவி னங்கலக்கி
முடியவ ளைந்தரற்று கடலாலும்
முதிரவி டம்பரப்பி வடவைமு கந்தழற்குள்
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்
மழையள கந்தரித்த கொடியிடை வஞ்சியுற்ற
மயல்தணி யும்படிக்கு நினைவாயே
மரகத துங்கவெற்றி விகடந டங்கொள்சித்ர
மயிலினில் வந்துமுத்தி கரவே[illegible]ம்
அழகிய மென்குறத்தி புளகித சந்தனத்தி
னமுதத னம்படைத்த திருமார்பா
அமரர்பு ரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
மருணைவ ளம்பதிக்கு மிறையோனே
எழுபுவ னம்பிழைக்க அசுரர்சி ரந்தெறிக்க
எழுசயி லந்துளைத்த சுடர்வேலா
இரவிக ளிந்திரத்தர் அரியர பங்கயத்த
ரிவர்கள்ப யந்தவிர்த்த பெருமாளே. (உகூகூ)

---

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான.

494. வடவையன லூடு புக்கு முழுகியெழு மாம திக்கு
மதுரமொழி யாழி சைக்கும் இருநாலு
வரதிசைவி டாது சுற்றி யலறுதிரை வாரிதிக்கு
மடியவரு வேள்க ணைக்கும் அறவாடி
நெடுகனக மேரு வொத்த புளகமுலை *மாதருக்கு
நிறையுமிகு காதலுற்று மயல்தீர
நினைவினொடு பீலி வெற்றி மரகதக லாப சித்ர
நிலவுமயி லேறி யுற்று வரவேணும்
மடலவிழு மாலை சுற்று புயகிருப நோடு பத்து
மணிமுடியற வாளி தொட்ட அரிராமன்
மருகபல வான வர்க்கு மரியசிவ னார்ப டிக்க
மவுனமறை யோது வித்த குருநாதா
இடையரியு லாவு முக்ர அருணகிரி மாந கர்க்கு
ளினியகுண கோபு ரத்தில் உறைவோனே
எழுபுவிய ளாவு வெற்பு முடலினொடு நாக மெட்டு
நிலையுருவ வேலை விட்ட பெருமாளே. (௨௬௦)

---

தனதன தானதன தனதன தானதன
தனதன தானதன தனதான.

495. விடமத வேள்வாளி யின்விசை பெறு †மாலாகல
விழிகொடு வாபோவென உரையாடும்
விரகுட னூறாயிர மனமுடை மாபாவிகள்
மிருகமத கோலாகல முலைதோய
அடையவு மாசாபர வசமுறு கோமாளியை
அவனியு மாகாசமும் வசைபேசும்
அசடஅ நாசாரனை அவலனை ஆபாசனை
அடியவ ரோடாள்வது மொருநாளே
வடகுல கோபாலர்த மொருபதி னாறாயிரம்
வனிதையர் தோள்தோய்தரும் அபிராம

*மாதருக்கு - மாதர்அருக்கு; அருக்கு - அருமை. † ஆலாகல - ஆலகால.

மரகத நாராயணன் மருமக சோணாசல
மகிப சதாகாலமும் இளையோனே
உடுபதி சாயாபதி சுரபதி மாயாதுற
உலகுய வாரார்கலி வறிதாக
உயரிய மாநாகமு நிருதரு நீறாய்விழ
ஒருதனி வேலேவிய பெருமாளே.(௨௯௮)

---

தனன தானன தனன தானன தனன தானனந் தனதான.

496 விதிய தாகவெ பருவ மாதரார் விரகி லேமனந் தடுமாறி
விவர மானதொ ரறிவு மாறியே வினையி லேஅலைந் திடுமூடன்
முதிய மாதமி ழிசைய தாகவே மொழிசெய் தேநினைந் திடுமாறு
முறைமை யாகநி னடிகண் மேவவே முனிவு தீரவந் தருள்வாயே
சதிய தாகிய அசுரர் மாமுழ தாணி மீதுகுஞ் சமராடி
சகல லோகமும் வலம தாகியே தழைய வேவருங் குமரேசா
அதிக வானவர் கவரி வீசவே அரிய கோபுரந் தனில்மேவி
அருணை மீதினின் மயிலி லேறியே அழகதாய்வரும் பெருமாளே

---

தந்தத் தனதன தந்தத் தனதன
தந்தத் தனதன தந்தத் தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன தனதான.

497. விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுன்பச் சிறுதுளி
விரித்த *கமலமெல் தரித்து வொருசுழி
யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி
விண்டுற் றருள்பதி கண்டுற் றருள்கொடு
†மிண்டிச் செயலினி ரம்பித் துருவொடு
மெழுக்கி லுருவென வலித்து எழுமதி
கழித்து ‡வயிறுகு டமொப்ப வொருபதில்
விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச செயல்கொடு

*கமலமெல் - கமலமேல், †மிண்டி - வலிமைகொண்டு. ‡வயிறு குடம் ஒப்ப எனப்பிரிக்க.

சம்பத் துறைமுறை யண்டைக் கொளுகையில்
சண்டக் கருநம னண்டிக் கொளுகையி
றெடுத்து விசைகொடு பிடித்து வுயிர்தனை
பதைப்ப தனிவழி யடித்து கொடுசெல
சந்தித் தவரவர் பங்குக் கழுதழு
ரங்கப் பிணமெடு மென்றிட் டறைபறை
தடிப்ப சுடலையி லிறக்கி விறகொடு
கொளுத்தி யொருபிடி பொடிக்கு மிலையெனும் உடலாமோ
திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
என்பத் துடிகள்த வண்டைக் கிடுபிடி
பம்பைச் சலிகைகள் சங்கப் பறைவலை
திகுர்த்த திகுதிகு டுடுட்டு டுடுடு
டிடிக்கு டிகரென வுடுக்கை முரசொடு
செம்பொற் குடமுழ வந்தப் புடன்மணி
பொங்கச் சுரர்மலர் சிந்தப் பதமிசை
செழித்த மறைசிலர் துதிப்ப முனிவர்கள்
களித்து வகை*மனி முழக்க அசுரர்கள் கலமீதே
சிந்திக் குருதிக ளண்டச் சுவரகம்
ரம்பக் கிரியொடு பொங்கிப் பெருகிய
சிவப்ப அதில்கரி மதர்த்த புரவிகள்
சிரத்தொ டிரதமு மிதப்ப நிணமொடு
செம்புட் கழுகுக ளுண்பத் தலைகள்த
தும்பக் கருடனங்†கொங்கொட்டிடகொடி
மறைப்ப நரிகண மிகுப்ப குறளிகள்
நடிக்க இருள்மலை கொளுத்தி யலைகடல்
செம்பொற் பவளமு டங்கிச் கமர்விட
வெங்கிட்‡டிகமலை விண்டுத் துகள்பட

* மனி-மன்னி, பொருந்தி. † கொட்டிட-கோட்டிட-வளைக்க, வட்டமிட. ‡ இகமலை-இங்குள்ள மலைகள்.

சமக்கு முரகனு முழக்கி விடபட
மடைத்த சதமுடி நடுக்கி யலைபட விடும்வேலா
தொந்தத் தொகுகுட என்பக் கழலொலி
பொங்கப் பரிபுர செம்பொற் பதமணி
சுழற்றி நடமிடு நிருத்த ரயன்முடி
கரத்த ரரிகரி புரிந்த கடவுள்மெய்
தொண்டர்க் கருள்பவர் வெந்தத் தாகமணி
கங்கைப் பனிமதி கொன்றைச் சடையினர்
தொடுத்த மதனுரு பொடிந்த விழியினர்
மிகுத்த புரமதை யெரித்த நகையினர்
தும்பைத் தொடையினர் கண்டக் கறையினர்
தொந்திக் கடவுளை தந்திட் டவரிட
சுகத்தி மழுவுழை கரத்தி மரகத
நிறத்தி முயலக பதத்தி அருளிய முருகோனே
தண்டச் சசிநுதல் சம்பைக் கொடியிடை
ரம்பைக் கரசியெ*னும்பற் றருமகள்
சுகிப்ப மணவறை களிக்க அழையுறு
முகத்தொ டுறமயல் செழித்த திருபுய
செம்பொற் கரகம லம்பத் திருதல
மம்பொற்†சசியெழ சந்தப் பலபடை
செறித்த கதிர்முடி கடப்ப மலர்தொடை
சிறப்பொ டொருகுடில் மருந்து வனமகள்
தொந்தப் புணர்செயல் கண்டுற் றடியெனி
டைஞ்சற் பொடிபட முன்புற் றருளயில்
தொடுத்து மிளநகை பரப்பி மயில்மிசை
நடித்து‡அழல்கிரி பதிக்குள் மருவிய பெருமாளே (௨௭௦)

---

தானதன தானதன தானதான தானதன
தானதன தானதன தனதான.

498. வீறுபுழு கானபனி நீர்கள்மலர் தோயல்விடு
மேருகிரி யானகொடு தனபார

---

*உம்பல் தருமகள்-தெய்வயானையம்மை † சசியெழ - சந்திரனைப்போல் ஒளியெழ. ‡ அழல்கிரிபதி-திருவண்ணாமலை.

மீதுபுர ளாபரண சோதிவித மானநகை
மேசுமனு காடுகடல் இருள்மேனி
நாறுமலர் வாசமயிர் நூலிடைய தேதுவள
நாணமழி வார்களுடன் உறவாடி
நாடியது வேசறியெ னாகமுறு மோடனெனின்
ஞானசிவ மானபதம் அருள்வாயே
கூறுமடி யார்கள்வினை நீறுபடவே அரிய
கோலமயி லாளபதம் அருள்வோனே
கூடவிர ரேறுநட மாடரிய காளியருள்
கூறுசிவ காமியுமை யருள்பாலா
ஆறுமுக மானநதி பாலகுற மாதுகன
மாரவிளை யாடுமணம் உறுவோனே
ஆதிரகு ராமசெய மாலின்மருகா பெரிய
ஆதியரு ணைபுரியில் பெருமாளே. (௨௯௧)

---

தனதான தந்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான.

499. வலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள்சூலை குட்டமொடு குளிர்தாகம்
மலிநீரி ழிச்சல்பெரு வயிறீளை கக்குகளை
வருநீர டைப்பினுடன் வெகுசோடி
சிலநோய டைக்குமுடல் புவிமீதெ டுத்துழல்கை
தெளியாவெ னக்குமினி முடியாதே
சிவமார்தி ருப்புகழை எனிநாவி னிற்புகழ
சிவஞான சித்திதனை யருள்வாயே
தொலையாத பத்தியுள திருமால்க ளிக்கவொரு
சுடர்வீசு சக்ரமதை யருள்ஞான
துவர்வேணி யப்பன்மிகு சிவகாமி கர்த்தன்மிகு
சுகவாரி சித்தனருள் முருகோனே
அலைசூரன் வெற்புமரி முகனானை வத்திரனொ
டசுராரி றக்கவிடு மழல்வேலா

மாசுற்றுப் பாசம்வி டாசம ஞார்புக்குப் பாழ்நர கேவிழு
மாயத்தைச் சீவியு ஞதர வருள்வாயே
தாடெட்டெ டுடுடு டிடிமி டுடெட்டெ டுடுடு டாடமி
தானத்தத் தானத ஞவென வெகுபேரி
தாஜெத்தப் பூதப சாசுகள்*வாய்விட்டுச் சூரர்கள் சேனைகள்
சாகப்பொற் றேகைமி லேறிய சதுரோனே
கூடற்கச் சாலைசி ராமலை காவைப்பொற் காழிவெ ணூர்திகழ்
கோடைக்கச் சூர்கரு வூரினும் உயர்வான
கோதிற்†பத் தாரொடு மாதவ சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே. (௨௭௪)

---

502. வேதத்திற் கேள்வியி லாதது போதத்திற் காணவொ ணாதது
வீசத்திற் றாரமி லாதது கதியாளர்
வீதித்துத் தேடரி தானது ஆதித்தற் காய வொணாதது
வேகத்துத் தீயில்வெ காதது சுடர்கானம்
வாதத்துக் கேயவி யாதது காதத்திற் பூவிய லானது
வாசத்திற் பேரொளி யானது மதமூறு
மாயத்திற் காயம தாசல நீதர்க்குத் தூரம தாகிய
வாழ்வைச்சற் காரம தாஇனி யருள்வாயே
காதத்திற் காயம தாகும நீதித்தித் தீதிது தீதென
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணர்
*காணப்பட் டேகொடு நோய்கொடு வாதைப்பட் டேமதி தீதிக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவோனே
கோதைப்பித் தாயொரு வேடுவ ரூபைப்பெற் றேவன வேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு முருகோனே
கோதிற்பத் தாரொடு மாதவ சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே. (௨௭௫)

---

தத்தான தனத்ததத்தன தத்தான தனத்ததத்தன
தத்தான தனத்ததத்தன தனதான.

505. முத்தோலை தனைக்கிழித்தயி லைப்போரி கலிச்சிவத்துமு
கத்தாம ரையிற்செருக்கிடும் விழிமாதர்

---

* வாய்விட்டு-வாய்விட. †பத்தார்-பத்தர்கள்

முற்றுதி வகிப்பணைத்தணி கச்சார மறுத்தனித்தில
முத்தார மழுத்துகிர்க்குறி யதனாலே
வித்தார கவித்திறத்தினர் பட்டோலை நிகர்த்திணைத்தெழு
வெற்பான தனத்திலிணைத்தலும் உழல்வேனோ
மெய்த்தேவர் துதித்திடத்தரு பொற்பார்க மலப்பதத்தினை
மெய்ப்பாக வழுத்திடக்கிருபை புரிவாயே
பத்தான முடித்தலைக்குவ டிற்றுட அரக்கருக்கிறை
பட்டாவி விடச்செயித்தவன் மருகோனே
*பற்பாசன் மிகைச்சிரத்தையறுத்தாதவனைச் சினந்துறு
பற்போக வுடைத்ததற்பரன் மகிழ்வோனே
கொத்தார்க தலிப்பழக்குலை வித்தார வருக்கையிற்கனி
சொற்றோடு நிரக்குதித்தெழு கயலாரங்
கொட்டாசுழியிற்கொழித்தெறி சிற்றாறு தனிற்களித்திடு
குற்றால மிடத்திலுற்றருள் பெருமாளே. (உசகு)

---

## † திருமலை.

---

தனதனத் தன்னத் தனதான தனதனத் தனனத் தனதான,

504. வனசமொத் தபதக் குருநாதா மலைமடப் பிடியுத் தமிபாலா
அனகதத் துவமெய்ப் பொருளானே யடியனுக் குனபொற் கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவநீதா இபமுகப் பரமற் கிளையோனே
தினைவனத் தெரிவைக் குரியோனே திருமலைக் குமரப் பெருமானே. (ருஎஎ

---

தனதன தானதந்த தனதன தானதந்த
தனதன தானதந்த தனதான

505. படுகொலை யேமிகுந்து ம்ருகமத பாளிதங்கொள்
பணைமுலை மாதர்தங்கள் மயலாலே
பழியொடு பாவமென்ப தறிவுகொ ளாதுயங்கு
பதகனை யாளஇன்று வரவேணும்
கடுவர வேயுளஞ்சி யடிதொழு தோதுமும்பர்
கவலைகொ ளாதிருண்ட களநாதர்

*பற்பாசன்—பத்மாசனன், பிரமன். † இந்தஸ்தலம் திருக்குற்றாலத்துக்கு வடமேற்கில் 12 மயில் தூரத்திலுள்ளது.

கயிலையில் மேவுகின்ற பரமதயாளநம்பர்
கருதவொர் வாசகஞ்சொல் குருநாதா
கொடுமுடி மேருவஞ்சி யலறிட வேயொர் செண்டு
கொடுபுடை யாவெகுண்ட கர*மாறு
†குடகிரை வாடல்கண்டு குலகிரி யேவிரிந்த
குடையென மேவுகொண்டல் மருகோனே
திடுதிடெ னுமுழங்கும் அருவிக ளேமிகுந்த
திருமலை வாழ்வுகந்த முருகோனே
திறல்மிகு சூரனஞ்ச வடியயில் லாலெறிந்து
செயவலி மார்பளந்த பெருமாளே (௨௭௫)

---

தனதன தான தான தனதன தான தான
தனதன தான தான தனதான.

506. வரிவிழி பூச லாட இருகுழை யூச லாட
வளர்முலை தாமு மாட வளையாட
மணிவட மாலை யாட முகவிதி ரோதி யாட
மதுரமு தூறி வீழ அநுராகம்
இருவரு மேக போக மொருவரு மாக மாக
இதமொடு கூடி மாயை படுபோதும்
இருகர மாறு மாறும் அறுமுக நீப மார்பும்
இருகழல் தானு நானு மறவேனே
திருநட மாடு காளி பயிரவி மோடி சூலி
திரிபுர நீறு தாக அனல்மோதுஞ்
சிவைகயி லாச வாசி மலைமகள் நாரி பாரி
திரண்முலை யாயி தாயி யருள்பாலா
குருபர நாத ஞகி யரனொரு காதி லோது
குணநிதி யாசை நேச முருகோனே
குறமகள் பாசநேச திருமலை வாசவாச
குலவிய ஞான மோன பெருமாளே. (௨௭௬)

—(*)—

*மாறு — உக்கிரகுமார பாண்டியனே †குடகிரை — பசுக்கூட்டம்

## ஆறாவது

# பழமுதிர்சோலை.



தனதன தானதான தனதன தானதான
தனதன தானதான தனதான.

507. இலகிதற் சோதி*நேத்ர மதநகலை யார வார
இளநகை யாட ஆடு மிகவாகுற்
றெதிர்பொரு கோர பார மிருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்
கலவியி லோடி நீடு வெகுவித தாக போக
கரணப ராப பாப மடமாதர்
கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞான போதம் அடைவேனோ
கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி யாளி மகமாயி
குமரிவ ராகி யோகி பகவதி யாதி சோதி
குணவதி †யால வுண்டி யபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோல
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே.(க)

---

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான.

508 சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக வென்று தெருவூடே
வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்

* நேத்ர - கயதி † ஆலவுண்டி விஷத்தையுண்டவள்.

வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழுமென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே
சேலவளை நாடனங்கள் ஆரவயல் சூழு*மிஞ்சி
சேணிலவு தாவு செம்பொன் மணிமேடை
சேருமம ரேசர் தங்கள் ஊரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா
ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி யீசர் தந்தை களிகூர
ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே. (௨)

---

509. வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னால்ம யங்கி நிலமீதே
வீசுகையி னாவி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து ரகாகிப்
†பாரவச மான வங்க ணீடுபொருள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்
‡பாகம்வர மேவ அன்பு நீபமலர் சூடு கின்ற
பாதமலர் நாடி யென்று பணிவேனோ
§பூரணம தான திங்கள் சூடுமர னாரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே
பூவுலகெ லாம டங்க வோரடியி னால ளந்த
||பூவைவடி வானு கந்த மருகோனே
சூரர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா
சோலைதனி லேப றந்து லாவுமயி லேறிவந்து
சோலைமலை மேல மர்ந்த பெருமாளே. (௩)

* இஞ்சி-மதில். † பாரவசம் - பரவசம் ‡ பாகம் - பரிபாகம், பரிபக்குவம். § பூரணமதான திங்கள் - என்றும் தேயாது, வளராது ஒருதன்மையாயிருக்கும் திங்கள் || பூவை வடிவான்-காயம்பூ வண்ணனாகிய திருமால்.

தானதன தந்த தந்த தானதன தந்த தந்த
தானதன தந்த தந்த தனதான.

510. வாரணமு கங்கி ழிந்து விழவும ரும்ப லர்ந்து
மால்வரைய சைந்த ணங்கள் முடிசாய
வாளகிரி யண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவம றந்து றந்து நிலைபேரப்
பூரணகு டங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலைவி ரும்பு கொங்கை மடவார்தம்
போகசய னந்த விர்ந்து ஞானகப தம்ப ணிந்து
பூசனைசெய் தொண்ட னென்ப தொருநாளே
ஆரணமு ழங்கு கின்ற ஆயிரம கந்த வங்கள்
ஆகுதியி டங்கள் பொங்கு நிறைவீதி
ஆயிரமு கங்கள் கொண்ட நூபுரமி ரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்
தோரணம லங்கு துங்க கோபுரநெ ருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்
சோதியின்மி குந்த செம்பொன் மாளிகைவி ளங்கு கின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே. (௪)

---

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான.

511. வார்குழையை யெட்டி வேளினைம ருட்டி
மாயமம ருக்கும் உறவாகி
மாதவம ழித்து லீலைகள் மிகுத்து
மாவடுவை யொத்த விழிமாதர்
சீருடனு ழைத்து வாய்கனிவு வைத்த
தேனித ழளித்து அநுபோக
சேர்வைதனை யுற்று மோசம்விளை வித்து
சீர்மைகெட வைப்பர் உறவாமோ
வீரினை யறுத்து மேருவை மறித்து
மாகனக மொத்த குடமாகி

வாரவணி வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது
*தோரணி புயத்தி யோகினி சமர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே
சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து
சோலைமலை யுற்ற பெருமானே. (௫)

---

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தந்ததான.

512. ஆசை†நாலுசது ரக்கமல முற்றினொளி
வீசி யோடியிரு பக்கமொடு றச்செல்வழி
ஆவல்கூர‡மண்மு தற்றலச பொற்சபையும்§இந்துவாகு
ஆர||மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாருசோதி¶நூறு பத்திலுட னெட்டுஇத
ழாகியோடுமன விட்டுநடு விற்பதியின் விந்துநாத
ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடுகூடியொரு மித்த0அமுத சித்தியொடு
மோதுவேத**சர சத்தியடி யுற்றதிரு நந்தியூடே
ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற
††மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
யோகபேதவகையெட்டுமிதிலொட்டுமவகையின்றுதாராய்
வாசி வாரிகனை யக்குதிரை விற்றுமகிழ்
வாதவூரனடி மைக்கொள்கிரு பைக்கடவுள்
மாழைரூபன்முக‡‡மத்திகைவிதத்தருணசெங்கையாளி

---

*தோரணி - ஒழுங்கு. தோர் - தோல் எனக்கொண்டு உரைப்பாருமுண்டு. † நாலு சதுரக் கமலம் - மூலாதார கமலம். ‡ மண்முதற் றலசம் - சுவாதிஷ்டான முதல் ஆக்கினை வரை உள்ள ஐவகைக் கமலம். § இந்துவாகு - சந்திரப் பிரபை. || மூணு பதி - அக்கினி முதலிய மூன்று மண்டலம். ¶ நூறு - நூறு, நூறுபத்திலுடன் எட்டு இதழ் - ௧௦௦௮ இதழுள்ள சகஸ்ரகமலம். 0 அமுத சித்தி - மதிமண்டலத்தினின்றும் பெருகிப் பாயும் அமிர்தப்பேறு. ** சரசத்தி அடி உற்ற திருநந்தி - வாசிசத்திக்கு ஆதாரமாக உள்ள ஸ்ரீநந்தி ஒளி. †† மூலவாசல் - பிரமரந்திரம். ‡‡ மத்திகை - குதிரைச்சம்மட்டி.

வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவையென்
மாக சேரெழுபி றப்பையுமு ழுதகவுமை தருதவாழ்வே
காசி ராமெசுரம் ரத்நகிரி சர்ப்பகிரி
ஆரூர் வேளூர்*தெவுர் கச்சிமது ரைப்பழியல்
காவை மூதுரூர ணக்கிரிதி ருத்தணியல செந்தில்நாகை
காழி வேளூர்பழ நிக்கிரிகு றுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின மிக்கதிகழ்
காதல்சோலைவளர் வெற்பிலுறை முத்தர்புகழ் தம்பிரானே. ()

---

தனதானன தானன தத்தன
தனதானன தானன தத்தன
தனதானன தானன தத்தன தனதான.

513. கருவாகியெ தாயுத ரத்தினி
லுருவாகவெ கால்கையு றுப்பொடு
கனிவாய்விழி நாசியு டற்செவி †நரைமாதர்
கையிலேவிழ வேகிய ணைத்துயி
லெனவேமிக பீதுது யிற்றிய
கருதாய்முலை யாரமு தத்தினில் இனிதாகித்
தருதாரமு மாகிய சுற்றமு
நலவாழ்வுமி லாதபொ ருட்பதி
சதமாமிது தானென வுற்றுனை நினையாத
சதுராயுன தாளிணை யைத்தொழ
அறியாதநிர் மூடனை நிற்புகழ்
தனையோதிமெய் ஞானமு றச்செய்வ தொருநாளே
செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுள பூதக ணத்தொடு வருபேய்கள்
திருகாவுண வாயுதிரத்தினை
பலவாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா

---

* தெவுர்-தேவூர் † நரைமாதர்-மருத்துவச்சிகள்.

அருமாமறை யோர்கள்து திசெதிடு
புகர்வாரண மாதுத னைத்திக
முளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே
அழகானபொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய சோலைவி யப்புறு
அலையாமலை மேவிய பத்தர்கள் பெருமாளே. (௭)

---

தானதன தான தந்த தனதான.

514. காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே. (௮)

---

தான தத்த தான தனு தனுதன
தான தத்த தான தனு தனுதன
தான தத்த தான தனு தனுதன தனதான.

515. சீர்சி றக்கு மேனி பசேல் பசேலென
நூபு ரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் செவேல் செவேலென வருமாதர்
சேக ரத்தின் *வாலை சிலோர் சிலோர்களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால்கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோவென மடமாதர்
மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
†ஏம லித்தெ னாவி பகீர் பகீரென
மாம சக்கி லாசை யுளோ முளோமென நினைவோடி
வாடை பற்று வேளை அடா அடாவென
நீம யக்க மேது சொலாய் சொலாயென
வாரம் வைத்த பாத மிதோ இதோஎன அருள்வாயே

*வாலை-இளமைப்பருவம். †ஏமலித்து-ஏமாந்து.

பார தத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇபவர்
*பானி றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே
யாடன் முக்ய மாது தாரிழ் தமிழிறை
மாமு னிக்கு காதி னுரை வுரைவிடு
பாச மற்ற வேத குரு குருபர குமரேசா
போர்பி குத்த சூரன் விடோம் விடோமென
நேரெ திர்க்க வேலை பயர் பயரென
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி
பூமி†யுக்க வீர குகா குகா திகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானை‡தோய்
பூணி யிச்சை யாறு புயா புயாறுள பெருமாளே. (௯)

---

தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன தனதான.

516. பாசத் தால்விலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் பிசவேதான்
பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமய லைத்தரு துட்டிகள் ஒழியாத
மாசுற் றேறிய பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்டபி லுக்கிகள் அதிமோக
வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்
நேசித் தாரையு மெத்திய டிப்பவர்
மாயைக் கேமனம் வைத்தத னுட்டினம் அலைவேனோ
தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்§கவட்கல்சு ழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள் மணவாளா

---

* பானிறம் - பானுநிறம், சூரியனைப்போல் சிவந்தநிறம். † உக்க - சிந்த.
‡ தோன் - தோள். § கவட்கல் - கவண்கல்.

தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதிதி ருப்புக லிப்பதி வருவோனே
ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கேவைகை யிற்கரை கட்டிட
ஆளாப் பாயுதிர் பிட்டமு துக்கடி படுவோனே
டாரத் தோடகி லுற்றரு ருக்குல
மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய
ஆதிச் சோலைம லைப்பதி யிற்றிகழ் பெருமாளே (௧0)

தனன தனதன தனதத்த தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த தனதான.

517. அழகு தவழ் குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி யநுராக
அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி யணியாரம்
ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத†வரியிடை வளைத்துக் காட்டி
யுலவு முடைதனை நெகிழ்த்துக் காட்டி யுறவாடி
உருகு மவயவ மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
யுயிரை விலைகொளு மவர்க்குத் தேட்டம் ஒழிவேனோ
முழுகு மருமறை முகத்துப்* பாட்டி
கொழுநர் குடுமியை யறுத்துப் போட்ட
முதல்வ குகைபதி திருப்பொற் கோட்டு முனிநாடா
மூடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழுமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட முதுநீதர்

* பாட்டி-சரசுவதி. † அரியிடை—அழகிய இடை

பழைய கடதட முகத்துக் கோட்டு
வழுவை யுரியணி மறைச்சொற் கூட்டு
பரமர் பகிரதி சடைக்குட் சூட்டு பரமேசர்
பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர *குலமலை யுயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு பெருமாளே. (கக)

---

518. தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறித்
தடிகொடு தத்திக் கக்கல்பெ ருக்கிட்
டசனமும் விக்கிச் †சத்திஎ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்
திலதயி லத்திட் டொக்கவொ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளியவ டித்துற் றய்த்துடல் செத்திட் டுயிர்போமுன்
திகழ்புகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பர முத்திக் கருள்தாராய்
‡கலனைவி சித்துப் §பக்கரை யிட்டுப்
புடவிசெ லுத்திக் ||கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்
கனபடை கெட்டித் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப் பொருகோவே
குலிசன்ம கட்குத் தப்பிய மற்றக்
குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்தினை மெத்தத் தத்துபு னத்திற் றிரிவோனே

---

* குலமலை-சோலைமலை. † சத்தி-வாந்தி. ‡ கலனை-கல்லணை. குதிரைச்சேணம். § பக்கரை-அங்கவடி || கைக்கொடுவெற்பை-கையையுடைய கொடிய மலையையொத்த யானையை.

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
குலகிரி யிற்புக் குற்றுறை யுக்ரப் பெருமாளே. (௧௨)

---

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

579. மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ
மணபரி மணங்கள் வேர்வை யதனோடே
வழிபட இடங்க ளூடெ மறைபடு தகல் புரண்டு மாழ்க
வளைகலை நெகிழ்ந்து போக இளநீரின்
மலையிணை ததும்ப நூலின் மருங்கிடை சுழன்று வாட
முகமுக மொடொன்று பாயல் அதனூடே
முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு
முடிவடி வொடாறுகை வேலு மறவேனே
சிலைநுக விளம்பெண் மோகி சடையளகி யெந்தை பாதி
திகழ்மரகதம் பொன் மேனி யுமைபாலா
சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக
திகழுயி லெறிந்த ஞான முருகோனே
கொலைமிகை பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோள
குரவலர் கடம்ப மாலை யணிமார்பா
கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான
குலகிரி மகிழ்ந்து மேவு பெருமாளே. (௧௩)

---

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான.

520. வாதினைய டர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயமதொ ழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள்பு னைந்து
மாபதம ணிந்து பணியேனே
ஆதியொடு மந்த மாகியந லங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே

ஆன தனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடமயி லென்ப தறியேனே
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானிலம லைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
*சோகமது தந்து எனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே. (௧௯)

---

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான.

521. சேலையடர்த் தாலமிகுத் தேயுமிழைச் சீறிவிதிர்த்
தூறுசிவப் பேறுவிழிக் கடையாலே
தேனிரதத் தேமுழுகிப் பாகுநிகர் தாரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே
ஆலிலையைப் போலும்வயிற் றூலைகதத் தாலதரத்
தாலிரதத் தாலும்வளைப் பிடுவோர்மேல்
ஆசையினைத் தூரவிடுத் தேபுகழ்வுற் றேப்ரியநற்
றாளிணையைச் சேரஎனக் கருள்வாயே
காலனைமெய்ப் பாதமெடுத் தேயுதைவிட் டேமதனைக்
காயஎரித் தேவிதியிற் றலையூடே
காசினியிற் காணஇரப் போன்மதியைச் சூடியெருத்
தேறிவிரித் தாடுதிரைக் கடல்மீதில்
ஆலமிடற் றானையிபத் தோலையுடுத் தீமமதாற்
†றாடியிடத் தேயுமைபெற் றருள்வாழ்வே
ஆழியினைச் சூரனைவெற் பேழுமில்தொட் டாவிதுணித்
தாதிதிருச் சோலைமலைப் பெருமாளே. (௨0)

* சோகம்- [ஸா+அகம்] அது நான் † ஆடி-ஆடிய சிவபிரான்.

தனனதந்த தத்தான தனன்தந்த தத்தான
தனனதந்த தத்தான தனதான.

522. களவுகொண்டு கைக்காசி னளவறிந்து கர்ப்பூர
களபதுங்க வித்தார முலைமீதே
கலவியின்பம் விற்பார்க ளவயவங்களைப்பாடு
கவிதெரிந்து கற்பார்கள் சிலர்தாமே
உளநெகிழ்ந்த சத்தான வுரைமறந்து சத்தான
உனைபுணர்ந்து கத்தூரி மணநாறும்
உபயபங்க யத்தாளி லபயமென்று னைப்பாடி
யுருகிநெஞ்சு சற்றேனு மிருவாமோ
அளவிலுள்ள விற்சேனை பரவவந்த சுக்ரீவ
அரசுடன்க டற்றூளி எழவேபோய்
அடலிலங்கை கட்டாடி நிசிசரன்க ளுக்கீறு
மருவொரம்பு தொட்டார்த மருகோனே
வளருமந்த ரச்சோலை மலைநெருங்கு முற்பாலை
வனவர்கொம்பி னைத்தேடி ஒருவேட
வடிவுகொண்டு பித்தாகி யுருகிவெந்த முற்காலில்
மறவர்குன்றி னிற்போன பெருமாளே. (௧௪௩)

---

## ஆறு திருப்பதி.

---

தனதன தனதானன தனதன தனதானன
தனதன தனதானன தனதான.

523. அலைகடல் நிகராகிய விழியொடு வலைவீசிகள்
* அபகடமகபாவிகள் விரகாலே
அதிவித மதமா‡யத நிதமொழி பலகூறிகள்
அசடரொ டுறவாடிகள் அநியாயக்
கலைபகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்
கருதிடு கொடியாருடன் இனிதாகக்
கனதன முலைமேல்விழு கபடனை நிருமூடனை
கழலிணை பெறவேயினி அருளவாயே

---

* அபகடம்-வஞ்சகம். † அதமித-அதம அநீத. அதம்-தாழ்வு.

அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய
அறுமுக வடிவே அருள் குருநாதா
அசுரர்கள் குடிகெட அமராசன் பதிபெற
அதிரிடும் வடிவேல்விடு அதிதீரா
தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கள் நினைவோனே
* சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனில்மேவிய பெருமாளே (௩)

---

தானதனத் தனதனன தானான

524. ஈனமிகுத் துளபிறவி யணுகாதே
யானுமுனக் கடிமையென வகையாக
ஞானஅருட் டனையருளி வினைதீர
நாணமகற் றியகருணை புரிவாயே
† தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
‡ சாரதியுத் தமிதுணைவ முருகோனே
ஆனதிருப் பதிகமருள் இளையோனே
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே. (௨)

---

## மதுரை.

---

தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன தந்ததான.

525. அலகிய வுணரைக் கொன்ற தோளென
மலைதுளை யுருவச் சென்ற வேலென
அழகிய கனகத் தண்டை சூழ்வன புண்டரீக

---

* சகலமு முதலாகிய அறுபதி-சகல தலங்களுக்கும் முதன்மையாகவுள்ள ஆறுபடைவீடு. † தானதவத்தினில்-தன்னைக் குறித்து அன்பர்கள் செய்யும் தானத்திலும் தவத்திலும். ‡ சாரதி உத்தமி துணைவன்-சரசுவதியாகிய உத்தமிக்குப் பக்கத்துணையாக இருப்பவன்.

அடியென முடியிற் கொண்ட கூதள
மெனவன சரியைக் கொண்ட மார்பென
அறுமுக மெனநெக் கென்பெ லாமுரு கன்புறுதோ
கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்க மாகிய பொங்களாவுங்
கலைகளு மொழியப் பஞ்ச பூதமு
மொழியுற மொழியிற் றுஞ்ச ருதன
கரணமு மொழியத் தந்த ஞானமி ருந்தவாறென்
இலகுக டலைகற் கண்டு தேனொடு
மிரதமு றுதினிப் *பிண்டி பாகுடன்
இனிமையி னுகருற் றெம்பி ரானொரு கொம்பினாலே
எழுதென மொழியப் பண்டு பாரதம்
வடகன சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய பவளக் குன்று தாதையை யன்றுசூழ
வலம்வரு மளவிற் சண்ட மாருத
விசையினும் விசையுற் றெண்டி சாமுக
மகிதல மடையக் கண்டு மாசுணம் உண்டுலாவு
மரகத கலபச் செம்புள் வாகன
மிசைவரு முருகச் சிம்பு ளேயென
மதுரையில் வழிபட் டும்ப ரார்தொழு தம்பிரானே. (௧)

தனனதனந்தன தனனதனந்தன தனனதனந்தன தனதான.

526 பரவுநெடுங்கதி ருலகில்வி ரும்பிய †பவனிவரும்படி யதனாலே
பகரவளங்களு நிகரவிளங்கிய ‡இருளைவிடிந்தது நிலவாலே
வரையினிலெங்கணு முலவிநிறைந்தது வரிசைதருப்பதம் அதுபாடி
வளமொடுசெந்தமி ழுரைசெய அன்பரு மகிழவரங்களும் அருள்வாயே
அரஹரசுந்தர அறுமுகனென்றுனி அடியர்பணிந்திட மகிழ்வோனே
அசலநெடுங்கொடி யுமையமை தன்சுத குறமகளிங்கித மணவாளா

* பிண்டி-மா. † பவனி வரும்படி யதனாலே - பவனிவரும் ரதத்தைச் சிறப்பித்தும். ‡ இருளைவிடிந்தது நிலவாலே - இருளைப்போக்கி உதயமாகும் சந்திரனைச் சிறப்பித்தும்.

கருதருதிண்புய சரவண குங்கும களப மணிந்திடு மணிமார்பா
கனகமிகும்பதி மதுரை வளம்பதி யதனில் வளர்ந்தருள் பெருமாளே. (உ)

---

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தன தனத் தனதான.

527. பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
ஒருத்தர் வாய்ச்சொ லொருவர்கை யுதவுவர்
பணத்தை தேக்குவர் பிணையது முழுவதும் அளவளப் பதனாலே
படுக்கை விட்டிது வாயுதைக முதலைவர்
அணைப்பர் சார்த்திகை வருமென வுழுபொருள்
பறிப்பர் மாத்தையி லொருவிசை வருமென அவரவர்க் குறவாயே
அழைப்ப ராஸ்திகள் கருதுவ ரொருவரை
முடுக்கி யோட்டுவ ரிறுகுடி யரிவையர்
அலட்டி னூற்பிணை யெருமென யயிலனு நரகினிற் சுழல்வேனோ
அவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கிபு னடியவ ருடனெனை
அமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்து கதிதனைத் தருவாயே
தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்சிவ நெறிதனை யடைவொடு
தகப்ப னூர்க்கொரு செவிதனி லுரைசெய்த முருகவித் தகவேளே
சமர்த்தி னாற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டு ராக்கத னுடலது துணிசெய்து
சயத்த யோத்தியில் வருபவ னரிதிரு மருமகப் பரிவோனே
செழித்த வேற்றனை யசுரர்க ளுடலது
பிளக்க வோச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி யீட்டிய சுரபதி மகள்தனை மணமதுற் றிடுவோனே
திறத்தி னாற்பல சமணரை யெதிரெதிர்
கழுக்க ளேற்றிய புதுமையை யினிதொடு
இருந்த மாய்ப்புகழ் மதுரையி லுறைதரும் அறுமுகப் பெருமாளே. (க)

---

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தந்ததான.

528. சீத வாசனைம லர்க்குழல்பி னுக்கிமுக
மாய வேல்விழிபு ரட்டிநகை முத்தமெழ
தேமல் மார்பினிள பொற்கிரிப ளப்பளென தொங்கலாரம்
சேரு மோவியமெ னச்சடமி னுக்கிவெகு
வாசை நேசமும்வி ளைத்துஇடை யுற்றவரி
சோலை காவில்விழ விட்டுடைமை யிட்டுமயி லின்கலாபச்
சாதி யாமெனவெ ருட்டிநட மிட்டுவலை
யான பேர்தமைபி ரக்கவகை யிட்டுகொடி
தாக நோய்பிணிகொ டுத்திடர்ப டுத்துவர்கள் பங்கினூடே
தாவி மூழ்கிமதி கெட்டவல முற்றவனை
பாவ மானபிற விக்கடலு ழப்பவனை
தாரு லாவுபத பத்தியிலி ருத்துவதும் எந்தநாளோ
வாத வூரனைம கிழ்ந்தொருகு ருக்களென
ஞான பாதம்வெளி யிட்டுநரி யிற்குழுவை
வாசி யாமெனந டத்துவகை யுற்றரசன் அன்புகாண
மாடை யாடைதர பற்றிமுனை கைத்துவகை
யாறின் மீதுநட மிட்டுமணெ டுத்துமகிழ்
மாது வாணிதரு பிட்டுநுகர் பித்தனருள் கந்தவேளே
வேத லோகர்பொனி லத்தர்தவ சித்தரதி
பார சீலமுனி வர்க்கமுறை யிட்டலற
வேலை யேவியவு ணக்குலமி றக்கநகை கொண்டசீலா
வேத மீனுகம லக்கணர்மெய் பச்சைரகு
ராம*ரீனுமயி லொக்கமது ரைப்பதியின்
மேவி வாழமரர் முத்தர்சிவ பத்தர்பணி தம்பிரானே. (௪)

தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன தனதான.

529 புருவச் செஞ்சிலை கொண்டிரு கணைவிழி
யெறியக் கொங்கையி ரண்டெனு மதகரி
பொரமுத் தந்தரு மிங்கித நயவிதம் அதனாலே

*ஈனுமயில்-வள்ளிநாயகி,

புகலச் சங்கிரை கண்டா மதனிலெழ
உருவச் செந்துவர் தந்தக ரமுமருள்
புதுமைத் தம்பல முந்தியி தரவரு மணநாலே
பருகித் தின்றிட லந்தக மெனமன
துருகிக் குங்கும சந்தன மதிவியர்
படியச் சம்ப்ரம ரஞ்சித மருள்கல வியினாலே
பலருக் குங்கடை யென்றென இகழவு
மயலைத் தந்தரு மங்கையர் தமைவெகு
பலமிற் கொண்டிடு மன்றனை முனதடி பணிவேனோ
திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை
வரவைச் சங்கொடு வந்திடு*முழையுடல்
சிதறக் கண்டக வெங்கர னொடுதிரி சிரனோடு
திரமிற் றங்கிய கும்பக னொருபது
தலைபெற் றும்பரை வென்றிடு மவனொடு
சிலையிற் கொன்றமு குந்தன கமகிழ் மருகோனே
மருவைத் தந்திய பைங்குழ லுமையவள்
சிவனுக் கன்பரு ளம்பிகை கவுரிகை
மலையத் தன்தரு சங்கரி கருணைசெய் முருகோனே
வடவெற் பங்கய மன்றமரி குசசர
வனையிற் றங்கிய பங்கய முகதமிழ்
மதுரைச் சங்கிலி மண்டப இமையவர் பெருமாளே. ()

---

தனதான தானன தானன தனதான தானன தானன
தனதான தானன தானன தனதான.

530. முகிலாமெனும் வார்குழ லாரிய †புருவார்கயல் வேல்விழி யார்சசி
‡முகவார்§தாராமென வோதகை புரிமாதர்
முலைமாலிணை கோபுர மாமென அடமாடிட வேகொடி நூலிடை
முதுபாளித சேலைகு லாவிய மயில்போல்வார்
||அகிசேர்குறி யார்துடை வாழையின் அழகார்கழ லார்தர வேய்தரு
அழகார்கன நூபுர மாடிட நடைமேவி

---

*உழை - மானுருக்கொண்ட மாரீசன். † புருவார் - புருவத்தினர். ‡ முகவார் - முகத்தினர். § தாராமென - தாரமென. || அகி - பாம்பு.

அனமாமென யாரையுமால்கொள விழியால்சுழலாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுடல் அழிவேனோ
ககனூர்பதியோர்முறை யோவென இருள்காரசு ரார்படை தூள்பட
கடலேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா
கமலாலய நாயகி வானவர் தொழுமீசுர னாரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை யருள்பாலா
மகிழ்மாலதி நாவல்ப லாகமு குடனூடகி லாமயில் கோகில
மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா
மதிமாமுக வாவடி யேனிரு வினைதூள்படவே அயி லேவிய
மதுராபுரி மேவியு லாவிய பெருமாளே. (௬)

---

தனனதான தானத்தனந்த தனனதான தானத்தனந்த
தனனதான தானத்தனந்த தனதான.

531. முகமெலாநெய் பூசித்தயங்கு நுதலின்மீது லேபொட்டணிந்து
முருகுமாலை *யோதிக்கணிந்த மடமாதர்
முதிருமார பாரத்தனங்கள் மிசையிலாவி யாய்நெக்கழிந்து
முடியமாலி லேபட்டலைந்து பொருள்தேடிச்
செகமெலாமு லாவிக்கரந்து திடனுமாகி யோற்றுமன்று
†திமிரனாகி யோடிப்பறந்து திரியாமல்
தெளியுஞான மோதிக்கரைந்து சிவபுராண நூலிற்படிந்து
செறியுமாறு தாளைப்பரிந்து தரவேணும்
அகரமாதி யாமக்ஷரங்க ளவனிகால்வி ணாரப்பொடங்கி
அடையவேக ரூபத்திலொன்றி முதலாகி
அமரர்காணு வே‡யத்தமன்றி லரிவையாட ஆடிக்கலந்த
அமலநாத னார்முற்பயந்த முருகோனே
சகலவேத சாமுத்ரியங்கள் சமயமாறு லோகத்ரயங்கள்
தருமநீதி சேர்தத்துவங்கள் தவயோகம்
தவறிலாம லாளப்பிறந்த தமிழ்செய்மாறர் கூன்வெப்பொடன்று
தவிர§ஆல வாயிற்சிறந்த பெருமாளே. (௭

---

ஓதி - கூந்தல். † திமிரன் - மயக்கமுடையவன். ‡ அத்தமன்று - கனக சபை. § ஆலவாய் - மதுரை.

தானத்தன தானன தானன தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன தனதான

532. ஏலப்பனி நீரொளி மாதர்கள் கானத்தினு மேயுற வாடிடு
மீரத்தினு மேவளை சேர்கர மதனாலும்
ஏமக்கிரி மீதினி லேகரு நீலக்கய மேறிய னேரொன
ஏதுற்றிடு மாதன மீதினு மயலாகிச்
சோலைக்குயில் போல்மொழி யாலுமெ தூசுற்றிடு நூலிடையாலுமெ
*தோஷமிற்குத வீங்கரா கிய தொடையாலும்
சோமப்ரபை வீசிய மாமுக சாலத்தினு மாகடு வேல்விழி
கூசத்தினு நானவ மேதினம் உழல்வேனோ
ஆலப்பணி மீதினில் மாசறு மாழிக்கிடை யேதுயில் மாதவ
ஞானக்கினி தாயுத வியருள் நெடுமாயன்
ஆதித்திரு நேமியன் வாரண னீலப்புயல் நேர்தரு மேனியன்
ஆரத்துள வார்திரு மார்பினன் மருகோனே
சோலைச்சய மாவுரி போர்வையர் ஆலக்கடு வார்கள நாயகர்
†கோலக்கொழி யால்வரு மாதுத குமரேசா
கூர்முத்தமிழ் வாணர்கள் வீறிய சீர்ப்புக மாநக ராகிய
‡கூடற்பதி மீதினில் மேவிய பெருமாளே. (அ)

---

தனதான தானத் தனதான தனதான தானத் தனதான.

535. கலைமேவு ஞானப் பிரகாச கடலாடி ஆசைக் கடலேறிப்
பலமாய வாதிற் பிறழாதே பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின் மணமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே திருவாலவாயிற் பெருமாளே.

---

தானத் தனதான தானத் தனதான.

534. நீதத் துவமாகி நேமத் துணையாகிப்
பூதத் தயவான போதைத் தருவாயே
நாதத் தொனியோனே ஞானக் கடலோனே
கோதற் றமுதான கூடற் பெருமாளே. (௧0)

—(*)—

*-தோஷமில்—குற்றமற்ற. † கோ - கண். ‡ கூடற்பதி - மதுரை.

தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன தனதான.

537. மனநினை சுத்தந் தூர்த்த காரிகள்
அமளிவி ளைக்குங் கூளி மூளிகள்
மதபல நித்தம் பாவி நாரிகள் அழகாக
வளைகுழை முத்தாரம் பூணும் விலைகள்
விழலிகள் மெத்தன் டாடி பாடிகள்
வரமிகு வெட்கம் போல வோடிகள் தெருவூடே
குனகிகள் பக்ஷம் போல பேசிகள்
தனகிக ளிச்சம் பேசி கூசிகள்
குசலிகள் வர்க்கந் தேடு காரிகள் பொருளாசை
கொளுவிக ளிஷ்டம் பாறி வீழ்பட
அருளமு தத்தின் சேரு மோர்வழி
குறிதனி லைக்குந் தாள பாதமே யருள்தாராய்
தனதன தத்தந் தான தானன
டுடுடுடு டட்டுண் டுடு டுடுடு
தகுதிகு தத்தந் திந தோதக எனபேரி
தவில்முர சக்கந் தாரை பூரிகை
வளைதுடி பொற்சோம் பார சூரரை
சமர்தனில் முற்றும் பாறி நூறிட விடும்வேலா
தினைவன நித்தங் காவ லாளியன்
நகைமுறை முத்தின் பாவை மான்மகள்
திகழ்பெற நித்தங் கூடி யாடிய முருகோனே
திரிபுர நக்கன் பாதி மாதுறை
யழகிய சொக்கன் காதி லோர்பொருள்
செலவரு ளித்தென் கூடல் மேவிய பெருமாளே. (௧௧)

---

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான

538. முத்துநவ ரத்நமணி பத்திநிறை சத்தியிட
மொய்த்தகிரி முத்திதரு வெனவோதும்

மூக்கணிறை வர்க்குமருந் தைத்தழுவு நக்கடவுள்
முப்பதுமு வர்க்கசுரர் அடிபேணிப்
பத்துமுடி தத்தும்வகை யுற்றகணை விட்டஅரி
* பற்குனனை வெற்றிபெற ரதமேறும்
பச்சைநிற முற்றுமுயர் அச்சுதம ருக்குமொருள்
பத்தர்மன துற்றசிவம் அருள்வாயே
திக்திமிதி திக்திமிதி திக்குகுகு திக்குகுகு
தெய்த்தகெதன தெய்த்தகெதன தெனனென
திக்குவென மத்தளமி டக்கைதவில் தத்தகுகு
செச்சரிகை செச்சரிகை யெனஆடும்
அத்தனுட னொத்தநட மிட்டபுவ னத்திரய
சித்தியருள் சத்தியருள் புரிபாலா
† அற்பனிடை ‡ கற்பமது முற்றுமில்லை பெற்றுவள
§அற் ||கனக பத்மபுரி பெருமாளே. (௨௧)

தையதனத் தனதானா தனனதனத் தனதானா.

537. வள்ளமுலைப் பொதுமாதர் மயல்தனிற் படியாதே
கள்ளம்விடுத் துனதாளே கருதவருட் பெறுவேனோ
உள்ளமறைப் பொருளானே யுமைமகிழ்நற் புதல்வோனே
தெள்ளுதமிழ்க் குரியோனே திருமதுரைப் பெருமாளே. ()

---

538. சைவமுதற் குருவாயே சமணர்களைத் தெறுவோனே
பொய்யருளத் தணுகானே புனிதவருட் புரிவாயே
கையின்மிசைக் கதிர்வேலா கடிகமழற் புதநீபா
தெய்வதசற் குருநாதா திருமதுரைப் பெருமாளே. (௧௬)

---

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

539. ஆனைமுக வர்க்கு நேரிளைய கர்த்த
ஆறுமுக முற்ற அழகோனே

---

* பற்குனனை-பற்குனன்—அருச்சுனன். † அற்ப இடை-நுண்ணிய இடையுடை மாதர்கள். ‡ கற்பம்-மெத்தைவீடு. §அல்-மதில். || கனக பத்மபுரி-பொற்றாமரையுள்ள மதுரை.

ஆதியர னுக்கும் வேதமுதல் வற்கும்
  ஆரணமு ரைத்த குருநாதா
தானவர்கு லத்தை வேல்கொடுது ணித்த
  சால்சதுர்மி குத்த திறல்வீரா
தாளிணைக ளுற்று மேவியப தத்தில்
  வாழ்வொடுசி றக்க அருள்வாயே
வானெழுபு விக்கு மாலுமய னுக்கும்
  யாவரொருவர்க்கும அறியாதாய்
மாமதுரை சொக்கர் மாதுமைக ளிக்க
  மாமயில்ந டத்தூ முருகோனே
தேனெழுபு னத்தில் மான்விழிகு றத்தி
  சேரமந வுற்ற திரள்தோளா
தேவர்கள்க ருத்தில் மேவியப யத்தை
  *நீவிமகிழ் வித்த பெருமாளே. (௧௫)

— —

## ஸ்ரீபுருடமங்கை. (நான்குநேறி)

தானதன தந்த தந்தன தானதன தந்த தந்தன
தானதன தந்த தந்தன தனதான.

540. ஆடல்மத னம்பின் மங்கைய ராலவிழி யின்பி றங்கொளி
  யாரமத லம்பு கொங்கையின் மயலாகி
ஆதிகுரு வின்ப தங்களை நீதியுட னன்பு டன்பணி
  யாமல்மன மைந்து நொந்துடல் அழியாதே
வேடரென நின்ற ஐம்புல னுலுகர ணங்க ளின்தொழில்
  வேறுபட நின்று ணர்ந்தருள் பெறுமாறென்
வேடைகெட வந்து சிந்தனை மாயையற வென்று துன்றிய
  வேதமுடி வின்ப ரம்பொருள் அருள்வாயே
தாடகையு ரங்க டிந்தொளிர் மாமுனிம கஞ்சி றந்தொரு
  தாழ்வறந டந்து திண்சிலை முறியாவொண்
சானகித னங்க லந்தபின் ஊரில்மகு டங்க டந்தொரு
  தாயர்வச னஞ்சி றந்தவன் மருகோனே
சேடன்முடி யுங்க லங்கிட வாடைமுழு தும்ப ரந்தெழ
  தேவர்கள்ம கிழ்ந்து பொங்கிட நடமாடும்

*நீவி-நீக்கி.

சீர்மயில மஞ்சு துஞ்சிய சோலைவளர் செம்பொ னுந்திய
சீபுருட மங்கை தங்கிய பெருமாளே. (௧)

---

தானதன தந்ததந்த தானதன தந்ததந்த
தானதன தந்ததந்த தனதான.

541. கார்குழல்கு லைந்தலைந்து வார்குழையி சைந்தசைந்து
காதலுரு சிந்தையுந்து மடமாதர்
காமுகர கங்கலங்க போர்மருவு முந்திவந்த
காழ்கடிய குப்பதம்ப இருகோடார்
பேர்மருவும் அந்திதந்த வாரணமு னங்கனங்க
பேதையர்கள் தங்கள்கண்கள் வலையாலே
பேரறிவு குந்துநொந்து காதலிலை லந்தசிந்தை
பீடையற வந்துநின்றன் அருள்தாராய்
ஏர்மருவு தண்டைகொண்ட தாளசைய வந்தகந்த
ஏகமயி லங்கதுங்க வடிவேலா
*ஏமனுமை மைந்த சந்தி சேவலணி கொண்டு ஆண்ட
†ஈடெறஇ ருந்தசெந்தில் நகர்வாழ்வே
தேருகள்மி குந்தசந்தி வீதிகளை ணிந்தகெந்த
சீரலர்கு ளிர்ந்துயர்ந்த பொழிலோடே
சேரவெயி லங்குதுங்க வாவிகளி ரைந்திருந்த
சீபுருட மங்கைதங்கு பெருமாளே. (௨)

---

தானதனதந்த தானதனதந்த
தானதனதந்த தனதான.

542. வேனின்மதனைந்து பாணம்விடநொந்து
வீதிதொழுகின்ற மடவார்பால்
வேளையெனவந்து தாளினில்விழுந்து
வேடை கெடநண்பு பலபேசித்
தேனினுமணந்த வாயமுதமுண்டு
சீதளதனங்க ளினின்மூழ்கித்

* ஏமன் - பொன்னிறமுள்ள சிவபிரான். † ஈடெற - ஈடேற

தேடியதனங்கள் பாழ்படமுயன்று
சேர்கதியதின்றி யழல்வேனோ
ஆனிரைபுரந்து மாநிலமளந்தொ
ராலிலையிலன்று துயில்மாயன்
ஆயர்மனையென்று பால்தயிரளைந்த
ஆரணமுகுந்தன் மருகோனே
வானவர்புகழ்ந்த தானவர்பயந்த
மாறெடுவிளங்கு மணிமார்பா
மாமறைமுழங்கு சீருடமங்கை
மாநகரமர்ந்த பெருமாளே. (௩)

---

## * இலஞ்சி

---

தனந்த தனதன தனந்த தனதன
தனந்த தனதன தனதான.

545. கரங்க மலமின தரம்ப வளம்வளை
களம்ப கழிகிழி மொழிபாகு
கரும்ப முதுமுகை குரும்பை குருகுப
கரும்பி டியினடை யெயின்மாதோ
டரங்க நககன தனங்கு தலையிசை
யலங்கி ருதமுற மயில்மீதே
அமர்ந்து பவவினை களைந்து வருகொடி
யவந்த கனகல வருவாயே
தரங்க முதியம கரம்பொ ருதகிரை
†தழங்கு நதி‡கும ரெனவான
தலம்ப ரவமறை புலப்ப வருசிறு
சதங்கை யடிதொழு பவராழி
இரங்கு நதிதிரு வரங்கர் மருகப
னிரண்டு புயமலை கிழவோனே
இலங்கு தரத்மிழ் விளங்க வருதிரு
இலஞ்சி மருவிய பெருமாளே. (௧)

---

*இந்தஸ்தலம் திருக்குற்றாலத்துக்கு வடபுறம் 2 மைல் தூரத்திலுள்ளது.
† தழங்கு-முழங்குகின்ற. ‡குமரென - குமர என.

தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத்      தனதான.

546. கொந்தள வோலை குலுங்கிட வாளிச்
சங்குட னாழி கழன்றிட மேகக்
கொண்டைகள் மாலை சரிந்திடவாகப்      பனிநீர்சேர்
கொங்கைகள் மார்பு குழைந்திட வாளிக்
கண்கயல் மேனி சிவந்திட கோவைக்
கொஞ்சிய வாயி ரசங்கொடு மோகக்      கடலூடே
சந்திர ஆர மழிந்திட லூலிற்
பங்கிடை யாடை துவண்டிட நேசத்
தந்திட மாலு ததும்பியு ழூழ்குற்      றிடுபோதுஞ்
சந்திர மேனி முகங்களு நீலச்
*சந்த்ரகி மேல்கொ டமர்ந்திடு பாதச்
†சந்திர வாகு சதங்கையு மோசற்      றருள்வாயே
சுந்தரர் பாட லுகந்திரு தாளைக்
கொண்டுநல் தூது நடந்தவ ராகத்
‡தொந்தமொ டாறு மிருந்தவள் ஞானச்      சிவகாமி
தொண்டர்க ளாக மமர்ந்தவள் நீலச்
சங்கரி மோக சவுந்தரி கோலச்
சுந்தரி காளி பயந்தரு மாலைக்      கினியோனே
இந்திர வேதர் பயங்கெட சூரைச்
சிந்திட வேல்கொ டெறிந்துநல் தோகைக்
கின்புற மேவி யிருந்திடு வேதப்      பொருளோனே
எண்புன மேவி யிருந்தவள் மோகப்
பெண்திரு வாளை மணந்திய லார்சொற்
கெஞ்சி யளாவு மிலஞ்சி விசாகப்      பெருமாளே.(உ)

---

தனந்தன தந்த தனந்தன தந்த
தனந்தன தந்த      தனதான.

545. சுரும்பணி கொண்டல் நெடுங்குழல் கண்டு
துரந்தெறி கின்ற      விழிவேலால்

---

* சந்த்ரகி - மயில். † சந்திர வாகு சதங்கை - சுரத்தைச் செய்கின்ற இரமான அழகையுடைய சதங்கை. ‡ தொந்தம் - சம்பந்தம்.

சுழன்று சுழன்று துவண்டு துவண்டு
சுருண்டு மயங்கி மடவார்தோள்
விரும்பி வரம்பு கடந்து நடந்து
மெலிந்து தளர்ந்து மடியாதே
விளங்கு கடம்பு விரைந்த விதண்டை
விதங்கொள் சதங்கை யடிதாராய்
பொருந்த லமைந்த சிதம்பெ றநின்ற
பொலங்கிரி யொன்றை யெறிவோனே
புகழ்ந்து மகிழ்ந்து வணங்கு குணங்கொள்
புரந்தரன் வஞ்சி மணவாளா
இரும்பு னமங்கை பெரும்பு ளகஞ்செய்
குரும்பை மணக்கு மணிமார்பா
*இலஞ்சி யில்வந்த †இலஞ்சிய மென்று
இலஞ்சி யமர்ந்த பெருமாளே.(௧)

தானதனந்த தானதனந்த தானதனந்த தனதான.

548. மாலையில்வந்து மாலைவழங்கு மாலையனங்கன் மலராலும்
வாடையெழுந்து வாடையெறிந்து வாடையெறிந்த அனலாலும்
கோலமழிந்து சாலமெலிந்து கோமளமேனி தளராமுன்
கூடியகொங்கை நீடிய அன்பு கூரவுமின்று வரவேணும்
காலனடுங்க வேலைதுகொண்டு காளிநடந்த முருகோனே
கானமடந்தை நாணமொழிந்து காதலிரங்கு குமரேசா
சோலைவளைந்து சாலிவிளைந்து குழுவிலஞ்சி மகிழ்வோனே
சூரியனஞ்ச வாரியில்வந்த சூரனைவென்ற பெருமாளே.(௨)

## திருப்பூவணம்.

தனத்தான தத்தத் தனதானா தனத்தான தத்தத் தனதானா.

549. ‡அறப்பாவை யத்தற் கருள்பாலா
அளித்தாது வெட்சித் திருமார்பா

* இலஞ்சி - புனம். † இலஞ்சிய மென்று - இல் அஞ்சி அம் என்று மனைவியாகிய வள்ளி நாயகிக்குப் பயந்து (அவள்) அழகை (வியந்து) கூறி.
‡ அறப்பாவை - உமையம்மை.

சந்தத்திக் காளுங்கிசாசரர் வெந்துட்கத் தூளிபடாமெழ
சண்டைச்செற் றூர்படவேயயில் விடுவோனே
தங்கச்சக் ராயுதர்வானவர் வந்திக்கப்பேரருளேதிகழ்
தம்பப்பொற் பூவணமேவிய பெருமாளே. (௯)

## திருக்கானப்பேர்.

தனத்தானத்தா தனதன தனதன தனதான.

550. அனத்தோடொப்பா மெனுநடை மடவியர் அநுராகம்
அதற்கேசிச்சீ யினமென துயிர்கெடல் அழகாமோ
உனைப்பாடிப்பே றுறுமொரு வரமினி உதவாயோ
உவப்பாகத்தே வர்கள்சிறை விடவிடும் அயிலோனே
*முனைப்பாடிக்கே திரிதரும் அரிதிரு மருகோனே
முகிற்கே†நத்தா விரிதரு கலபநன் மயிலோனே
தினைக்காவற்கே யுரியவள் மணமகிழ் மணவாளா
திருக்கானப்பேர் நகர்தனி லினிதுறை பெருமாளே. (௧)

தானத்தானத் தனதான தானத்தானந் தனதான.

551. கோலக்காதிற் குழையாலே கோதிச்சேர்மைக் குழலாலே
ஞாலத்தாரைத் துயரேசெய்‡நாரிக்காசைப் படலாமோ
மேலைத்தேவர்க் கரியோனே வீரச்சேவற் கொடியோனே
காலப்பாசத் தயர்தீராய் கானப்பேரிற் பெருமாளே. (௨)

## திருவுத்தர கோசமங்கை.

தத்தன தானதந்த தத்தன தானதந்த
தத்தன தானதந்த தனதான

552. வெற்பென வேயெழுந்து செப்பென வேதிரண்டு
மெத்தென மோடிகொண்ட தனமாதர்
மெய்ப்படு கோலமுங்கண் மைப்படு சாலமுஞ்செய்
வித்தையு மேநினைந்து மயலாகி
அற்பக லாவலைந்து கற்பதெ லாமுலைந்துள்
அற்பமு மானமின்றி அழிவேனோ

*முனைப்பாடிக்கே-முன்பு ஆயர் பாடியில். † நத்தா-விரும்பி ‡ நாரி-பெண்.

அக்கினி ரூபமைந்த கிர்த்திகை மாதர்தந்த
அற்புத பாலையுண்ட குமரேசா
பொற்பதி காவலிந்தி ரற்குற வேலெறிந்து
பொய்ப்படி சூர்பிளந்த அதிதீரா
*புட்பகி யேறுகொண்ட லச்சுத னோர்பகிர்ந்த
புத்தமிர் தானசெஞ்சொல் மருகோனே
†உற்பல மோதொடுக்க ளைக்கிளை யோவெலுங்கண்
உத்தமி தேவதந்தி புணர்மார்பா
உத்தம மாவளங்கொள் உத்தர கோசமங்கை
யுற்றினி தாவிருந்த பெருமாளே. (௧)

---

## திருப்புத்தூர்.

---

தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன தனதான.

553. கருப்புச் சாப னனைய இளைஞர்கள்
ப்ரமிக்கக் காத லுலவு நெடுகிய
கடைக்கட் பார்வை யினிய வனிதையர் தனபாரங்
களிற்றுக் கோடு கலச மலிநவ
மணிச்செப் போடை வனச நறுமலர்
கனத்துப் பாளை முறிய வருதிகர் இளநீர்போற்
பொருப்பைச் சாடும் வலியை யுடையன
அறச்சற் றான இடையை நலிவன
புதுக்கச் சார வடமொ டடர்வன எனநாளும்
புகழ்ச்சிப் பாட லடிமை யவரவர்
ப்ரியப்பட் டாள வுரைசெ யிழிதொழில்
‡பொகட்டெப் போது சரியை கிரியைசெய் துயிர்வாழ்வேன்
இருட்டுப் பாரில் மறலி தனதுடல்
பதைக்கக் கால்கொ டுதைசெய் தவன்விழ
§எயிற்றுப் போலி யமர ருடலவர் தலைமாலை

* புட்பகி-பக்ஷிராஜனாகிய கருடன். † உற்பலம்-குவளைமலர் ‡ பொகட்டு-போகவிட்டு. § எயில் துப்பு ஒலி - திரிபுரங்களின் வலிமையைத் தொலைத்து.

சீல மாப்ப திமத்தப் பாரிட
சேனை போற்றி டப்பர்க் கோதிய
சேத னார்த்த ப்ரசித்திக் கேவரு முருகோனே
சேல ருக்க யல்தத்தப் பூழ்வய
லூர மேற்க ரவிப்ரார்க் காதர
தீர தீர்த்த திருப்புத் தூருறை பெருமாளே. (உ)

## திருவாடானை.

தானான தத்ததன தானான தத்ததன
தானான தத்ததன தனதான.

555. ஊனாரு முட்பிணியு மானாக வித்தவுட
லோதாரி பட்டொழிய உயிர்போனால்
ஊரார் குவித்துவர ஆவா வெனக்குறுகி
ஓயாமு றைப்பெறவு மழுதோய
நானாவி தச்சிவிகை மேலேற விட்டியதை
நாறாதெ டுத்தடவி எரியூடே
நாணாமல் வைத்துவிடு நீள்மெ யெனப்பிறவி
நாடாமெ னைக்குறுகி புரிவாயே
மானாக துத்திமுடி மீதேறி நிர்த்தமிடு
மாயோனு மட்டொழுகு மலர்
வாழ்வாயி ருக்குமொரு வேதாவு மெட்டியசை
வானோரு மட்டகுல கிரியாவும்
ஆனாவ ரக்கருடன் வானோர் பிழைக்கவரு
மாலால முற்றமுது மயில்வோன்முன்
ஆசார பத்தியுடன் ஞானாக மத்தையரு
ளாடானை நித்தபுரை பெருமாளே. (௧)

## இராமேசுவரம்.

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன தனதான

556. வாலவய தாகியழ காகிமத னாகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவினை யாடிவிழல்
வாழ்வுசத மாகிவலு வாகி*மடகூட மொடுபொருள்தேடி

* டகூடம் - மாடகூடம.

வாசபுழு கோடுமல ரோடுமன மாகிகமழ்
வாசனைக ளாதிபிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியல ராசைதனி லேசூல சிலனாய்ப்போய்த்
தோல்திரைக ளாகிநரை யாகிகுரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிநக மாறிதடி யோடுதிரி யுறுநாளிற்
சூலைசொறி பீளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிநமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல் அழிவேனோ
நாலுமுக னாதியரி யோமென* அ தாரமுறை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபட தாளமிடும் இளையோனே
நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுத
லீனமக வாணைமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுற மாதுதினை காவில்மண மேவுபுகழ் மயில்வீரா
ஓலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக னேடொருவி ராதனெழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாமமரில் பொடியாக
ஓகைதழல் வாளிவிடு மூரிதனு நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு காஎனவெ
யோதமறை ராமெசுர மேவுகுமரா அமரர் பெருமாளே.()

---

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான

557. வானோர் வழுத்துமனது பாதார பத்மமலர்
மீதே பணிக்கும்வகை அறியாதே
மானார் வலைக்கணதி லேதூளி மெத்தையினி
லூடே யணைத்ததவு மதனாலே
தேனே கருப்பிலெழு பாகோ விதற்கிணைக
ளேதோ வெனக்கலவி பலகோடி
தீரா மயக்கினொடு நாகா படத்திலெழு
சேரூடல் பெற்றதுயர் ஒழியேனோ

---

* அதாரம் - ஆதாரம்.

மேனுடுபெற்றுவளர் சூராதி பற்கெதிரி
　　னூடேகி நிற்குமிரு　　　கழலோனே
மேகா ரவுக்ரபரி தாவேறி வெற்றிபுனை
　　வீராகு றச்சிறுமி　　　மணவாளா
ஞானுப ரற்கினிய வேதா கமப்பொருளை
　　நாணு துரைக்குமொரு　　　பெரியோனே
நாரா யணற்குமரு காவீறு பெற்றிலகு
　　ராமே சுரத்திலுறை　　　பெருமானே.(உ)

---

## திருப்பெருந்துறை.

---

தனத்த தந்தன தானதனந்தத்
தனத்த தந்தன தானதனந்தத்
தனத்த தந்தன தானதனந்தத்　　　தனதான.

560. இரத்த முஞ்*சியு மூளையெலும்புட்
　　டசைப்ப சுங்குடல் நாடிபுனைந்திட்
　　டிறுக்கு மண்சல வீடுபுகுந்திட்　　　டதில்மேவி
இதத்து டன்புகல் சூதுமி குந்திட்
　　டகைத்தி டும்பொரு ளாசையெனும்பட
　　டெருட்ட வுந்தெளி யாதுப றந்திட்　　　டிட†மாயா
பிரத்தம் வந்தடு வாதச ரம்பித்
　　துளைப்பு டன்பல வாயுவு மிஞ்சிப்
　　பெலத்தை யுஞ்சில நாளுளொ டுங்கித்　　　தடிமேலாய்ப்
பிடித்தி டும்பல நாள்கொடு மந்திக்
　　குலத்தெ னும்படி கூனிய டங்கிப்
　　பிசக்கு வந்திடு போதுபி னஞ்சிச்　　　சடமாமோ
தரித்த னந்தன தானன தந்தத்
　　திமித்தி மிந்திமி திதக திந்தத்
　　தடுட்டு டுண்டுடு டுடுடி மிண்டிட்　　　டியல்தாளம்
தனத்த குந்தகு தானன தந்தக்
　　கொதித்து வந்திடு சூருடல் சிந்தச்
　　சலத்து டன்கிரி தூள்படெ றிந்திட்　　　டிடும்வேலா

---

* சியும் - சீயும்.　† மாயாபிரத்தம் - மயக்கமதிகரித்தல்.

## ஆய்க்குடி.

---

தாத்தனத் தானதன தாத்தனத் தானதன
தாத்தனத் தானதன தனதான.

564. வாட்படச் சேனைபட வோட்டியொட் டாரையிறு
மாப்புடைத் தாரரசர் பெருவாழ்வும்
மாத்திரைப் போதிலிடு காட்டினிற் போமெனஇல்
வாழ்க்கைவிட் டேறுமடி யவர்போலக்
கோட்படப் பாதமலர் பார்த்திளைப் பாறவினை
கோத்தமெய்க் கோலமுடன் வெகுரூபக்
கோப்புடைத் தாகியல மாப்பினிற் பாசவரு
கூத்தினிற் *பூரையிட அமையாதோ
தாட்படக் கோபவிஷ பாப்பினிற் †பாலன்மிசை
தாக்குமப் போதிலொரு கழல்தாவிச்
சாற்றுமக் கோரவுரு கூற்றுதைத் தார்மவுலி
தாழ்க்கவஞ் ஞாயுதனும் இமையோரும்
ஆட்படச் சாமபர மேட்டியைக் காவலிடு
மாய்க்குடிக் காவல்வு ததிமீதே
ஆர்க்குமத் தானவரை வேற்கரத் தால்வரையை
ஆர்ப்பெழச் சாடவல பெருமாளே. (க)

---

## காசி.

தானதத்தன தானதானன தானதத்தன தானதானன
தானதத்தன தானதானன தனதான

565. தாரணிக்கதி பாவியாய்வெகு சூதுமெத்திய மூடனும்மன
சாதனைக்கள வாணிபாயுறும் அதிமோக
தாபமிக்குள வீணனுமிரு வேல்விழிச்சிய ராகுமாதர்கள்
தாமுயச்செயு மேதுதேடிய நினைவாகிப்
பூரணச்சிவ ஞானகாவிய மோதுதற்புணர் வானநேயர்கள்
பூசுமெய்த்திரு நீறிடாஇரு வினையேனைப்
பூசிமெய்ப்பத மானசேவடி காணவைத்தருள் ஞானமாகிய
போதகத்தினை யேயுமாறருள் புரிவாயே

---

*பூரையிட ன்ன. † பாலன் - மார்க்கண்டன்.

வாரணத்தினை யேகராவுமு னேவளைத்திடு போதுமேவிய
மாயவற்கித மாகவீறிய மருகோனே
வாழுமுப்புர வீறதானது நீறெழப்புகை யாகவேசெய்த
மாமதிப்பிறை வேணியாரருள் புதல்வோனே
காரணக்குறி யானநீதிய ரானவர்க்குமு நைகவேநெறி
காவியச்சிவ நூலையோதிய கதிர்வேலா
கானகக்குற மாதைமேவிய ஞானசொற்கும ராபராபர
காசியிற்பிர தாபமாயுறை பெருமாளே. (௬)

---

தந்தத் தனதன தானன தானன
தந்தத் தனதன தானன தானன
தந்தத் தனதன தானன தானன தனதான

568. மங்கைக் கணவனும் வாழ்சிவ னுமயல்
பங்கப் படமிசை யேபனி போல்மதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவன் அருள்மேனி
வண்டுத் தடிகைபொ லாகியெ நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலமு வழியாலே
* திங்கட் பதுசெல வேதலை கீழுற
வந்துப் புவிதனி லேமத லாயென
சிந்தைக் குழவியெ னுவனை தாதையும் அருள்கூரச்
செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போவித மாய்பல
சிங்கிப் பெருவிழி யாரவ மாயதில் அழிவேனோ
அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுவரி யாயிரண் யாசுரன் உடல்பீறி
அண்டர்க் கருள்பெரு மான்முகி ராவணி
சங்குத் திகிரி † க ரோனரி ‡ நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன் மருகோனே

---

* திங்கட்பது — பத்துமாசம். † கரோன். - கையுடையவன்
‡ நார - ஜலம் பொருந்திய

அருணமணிவெயில்பரவு பத்துத்திக்குமிகு
மழகுபொதிமதர்மகுட தத்தித்தத்திவளர்
அணியகயலுகளும்வயல் அத்திப்பட்டியுறை பெருமாளே.

---

## திருவொற்றியூர்.

---

தனனதனதான தனனதனதான
தனனதனதான தனதான

570. கரியமுகில்போலு மிருளளகபார
கயல்பொருதவேலின் விழிமாதர்
கலவிகளில்மூழ்கி ம்ருகமதபடீர
களபமுலைதோய அணையூடே
விரகமதுவான மதனகலையோது
வெறியனெனநாளு முலகோர்கள்
விதரணமதான வசைநசைகள்கூறி
விடுவதன்முன் ஞான அருள்தாராய்
அரிபிரமர்தேவர் முனிவர்சிவயோகர்
அவர்கள்புகழோத நிலமீதே
அதிகநடராஜர் பரவுகுருராஜ
அமரர்குலநேச குமரேசா
சிரகரகபாலர் அரிவையொருபாகர்
திகழ்கனகமேனி யுடையாளர்
திருவளரு* மாதி புரியதனில்மேவு
செயமுருகதேவர் பெருமாளே. (க)

---

தனதத்தன தானதன தனதத்தன தானதன
தனதத்தன தானதன தனதான.

501. சொருபப்பிர காசவிசு வருபப்பிர மாகமிர
சகவிப்பிர தோரச சுபமாயா
துவியப்பிர காசமத சொலியற்றர சாசவித
தொகைவிக்ரம மாதர்வயி றிடையூறு
கருவிற்பிற வாதபடி யுருவிற்† பிர மோதஅடி
களை ‡யெத்திடி ராகவகை யதின்மீறிக்

---

* ஆதிபுரியென்பது திருவொற்றியூர். † பிரமோத—விரும்பத்தக்க
‡ எத்திடு - ஏத்திடு.

கருணைப்பிர காசவுன தருளூற்றிட ஆசில்சிவ
கதிபெற்றிட ஞானவைவை யொழிவேனோ
குருகுக்குட வாரகொடி செருவுக்கிர *ஆதபயில்
பிடிகைத்தல ஆதியரி மருகோனே
குமரப்பிர தாபகுக சிவசுப்பிர மாமணிய
†குணமுட்டர வாவசுரர் குலகாலா
‡திருவொற்றியு ருமருவு நகரொற்றியூர் வாரிதிரை
யருகுற்றிடு மாதிசிவன் அருள்பாலா
திகழுற்றிடு யோகருள் ரிக்குமுக்கிய மாதவர்க
ளிதயத்திட மேமருவு பெருமாளே. (௨)

---

## §திருவேற்காடு.

---

தானந்தா னனதான தானந்தா னனதான
தானந்தா னனதான தனதான.

572. ஆலம்போ லெழுநீல மேலங்காய் வருகோல
||வாழம்போர் செயுமாய விழியாலே
ஆரம்பால் தொடைசால ஆலுங்கோ புரவார
ஆடன்பார் குவிநேய முலையாலே
சாலந்தாழ் வுறுமால ஏலங்கோர் பிடியாய
வேளங்கார் துடிபோலும் இடையாலே
சாரஞ்சார் விலைமாய மேகங்கா யமன்மீறு
காலந்தா னொழிவேது உரையாயோ
பாலம்பால் மணநாறு காலங்கே §யிறிலாத
¶மாதம்பா தருசேய வயலூரா
பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர
பாசந்தா திருமாலின் மருகோனே
வேலம்பார் குறமாது மேல்○உம்பார் தருமாதும்
வீறங்கே யிருபாலு முறவீறு
வேதந்தா அபிராம நாதந்தா அருள்பால
வேலங்கா டுறைசீல பெருமாளே. (௧)

---

*ஆசபயில் - ஆதப அயில், ஒளிவிடும்வேல். † குணமுட்டர் - குணமற்றவர். ‡திருவொற்றியுருமருவு - இலக்ஷுமிசேர்ந்து உற்றிருக்கும் § இந்த ஸ்தலம் சென்னப்பட்டணத்துக்கு மேற்கயுள்ள ஆர்க்காடுரயில் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கில் ௨-மைல் தூரத்திலுளது || ஆழம் - கடல். § இறிலாத - ஈறிலாத. ¶ மாதம்பா - மாது அம்பா. ○உம்பார் - உம்பர்

தாத்தாதன தானனதானன தாத்தாதன தானனதானன
தாத்தாதன தானனதானன தனதான.

573. கார்ச்சார்குழலார்விழியாரயிலார்ப்பால்மொழியாரிடைநூலெழு
வார்ச்சாரிள நீர்முலைமாதர்கள் மயலாலே
காழ்க்காதல தாமன மேமிக வார்க்காமுக னாயுறு சாதக
மாப்பாதக னாமடியேனைநின் அருளாலே
பார்ப்பாயலையோஅடியாரொடுசேர்ப்பாயலையோவுனதாரருள்
கூர்ப்பாயலையோவுமையாள்தரு குமரேசா
பார்ப்பாலலரோதுசொலாலமுது நீர்ப்பாரினில்மீறியகீரனை
யார்ப்பாயுனதாமருளாலொர்சொல் அருள்வாயே
வார்ப்பேரருளேபொழிகாரணை நேர்ப்*பாவசகாரணமாமத
†ஏற்பாடிகளேயழிவேயுற அறைகோப
‡வாக்காசிவ மாமதமேமிக §ஊக்காதிப யோகமதேயுறும்
||ஆத்தாசிவ பாலகுகாவடி யர்கள்வாழ்வே
வேற்காடவல்வேடர்கள்மாமகளார்க்கார்வநன் மாமகிணைதிரு
வேற்காடுறை வேதபுரீசுரர் தருசேயே
வேட்டார்மகவான்மகளானவளோட்டார்திருமா மணவாபொனி
நாட்டார்பெரு வாழ்வெனவேவரு பெருமாளே. (௨)

---

பாக்கம்.

---

தாத்தத்த தானதன தாத்தத்த தானதன
தாத்தத்த தானதன தனதான.

574. கார்க்கொத்த மேனிகடல் போற்சுற்ற மானவழி
காய்த்தொட்டொ டூதவுரு ஒருகோடி
காக்கைக்கு நாய்கழுகு பேய்க்¶கக்க மானவுடல்
காட்டத்தி னீளெரியில் உறவானிற்
கூர்ப்பித்த சூலனத னாற்குத்தி யாவிகொடு
0போய்த்துக்க மானதுறை யுடையேனைக்

---

* பாவசகாரணமாம் - பாவத்துக்குத் துணைக்காரணமாகிய † ஏற்பாடிகள் - ஏற்பாடு செய்தவர்கள். ‡ வாக்கா - வாக்குள்ளவனே. § ஊக்காதிப - ஊக்கு ஆதிப || ஆத்தா கடவுளே. ¶ அக்கமான - கண்ணான. 0போய் - போக

கூப்பிட் *டுசாவருளி வாக்கிட்டு நாமமொழி
கோக்கைக்கு நாலறிவு தருவாயே
போர்க்கெய்த் திடாமறலி போற்குத்தி மேவசுரர்
போய்த்திக்கெ லாமடிய வடிவேலாற்
பூசித்தர் தேவர்மறை போற்†றூர்க்க வேபொருது
போற்றிச்செய் வார்சிறையை விடுவோனே
பார்க்கொற்ற நீறுபுனை வார்க்கொக்க ஞானபர
னைப்பத்தி கூர்மொழிகள் பகர்வாழ்வே
‡பாக்கொத்தி னியலர் கோக்கைக்கு வேல்கொடியர்
பாக்கத்தில் மேவவல பெருமாளே. (௧)

---

தாத்தத் தனந்ததந்த தாத்தத் தனந்ததந்த
தாத்தத் தனந்ததந்த தனதான.

575 பாற்றுக் கணங்கள்தின்று தேக்கிட் டிடுங்குரம்பை
நோக்கிச் சுமந்துகொண்டு பதிதோறும்
பார்த்துத் திரிந்துழன்று ஆக்கத் தையுந்தெரிந்து
ஏக்கற் றுநின்று நின்று தளராதே
வேற்றுப்புலன்களைந்து மோட்டிப் புகழ்ந்துகொண்டு
கீர்த்திக் குநின்பதங்கள் அடியேனும்
வேட்டுக் கலந்திருந்து சட்டைக் கடந்துநின்ற
வீட்டிற் புகுந்திருந்து மகிழ்வேனோ
மாற்றற் றபொன்துலங்கு வாட்சக் கரந்தெரிந்து
வாய்ப்புற் றமைந்தசங்கு §தடிசாப
பாற்பொற் கலந்துலங்க ||நாட்டச் சுதன்பணிந்துய்
வார்க்கத் தன்முன்புசென்று திரைமோதும்
¶பாற்சொற் றடம்புகுந்து வேற்கட் சினம்பொருந்து
0பாய்க்குட் டுயின்றவன்றன் மருகோனே
பாக்குக் கரும்பைகெண்டை தாக்கித் தடம்படிந்த
பாக்கத் தமர்ந்திருந்த பெருமாளே. (௨)

---

* உசா - ஆராய்ச்சி. † தூர்க்க - தூர்க்க, பொழிய. ‡ பாக்கொத்து - பாமாலை. § தடிசாபம் - தண்டம், வில். || நாட்டச்சுதன் - நாட்டு அச்சுதன். ¶ பாற்சொற்றடம் - பாற்கடல். 0 பாய் - சர்ப்பசயனம்.

கருநெல்லி மேனியரி மருகோனே
கனவள்ளி யார்கணவ முருகேசா
திருவல்லி தாயமதில் உறைவோனே
திகழ்வல்ல மாதவர்கள் பெருமானே.(க)

## *குறட்டி.

தானதன தத்ததான தானதன தத்ததான
தானதன தத்ததான தனதான.

578. நீரிழிவு குட்டமீளை வாதமொடு பித்தமூறல்
நீள்குளிர்வெ துப்புவேறு முளநோய்கள்
நேருறுபு ழுக்கள்கூடு நான்முகனெ டுத்தவீடு
நீடியவி ரத்தமூளை தசைதோல்சீ
பாரியந ரத்துவார நாறுமும லத்திலாரு
பாய்பிணியி யற்றுபாவை நரிநாய்பேய்
பாறுறுகை முக்கள்கூகை தாமிவைபு சிப்பதான
பாழுடலெ டுத்துவீணில் உழல்
நாரணிய றத்திநாரி ஆறுசம யத்திபூத
நாயகரி டத்துவாமி மகமாயி
நாடகந டத்திகோல நீலவரு ணத்திவேத
நாயகியு மைச்சிநீலி திரிசூலி
வாரணிமு லைச்சிஞான பூரணிக லைச்சிநாக
வாணுதல ளித்தவீர மயிலோனே
மாடமதில் முத்துமேடை கோபுரமு யர்த்தசோலை
வாகுளகு றட்டிமேவு பெருமானே.

## † திருவடமுல்லைவாயில்.

தனதைய தானனதானன தனதைய தானனதானன
தனதைய தானனதானன தனதான.

579. அணிசெவ்வி யார்திரைசூழ்புவி தனில்‡சிவ்வி யேகரையேறிட
அறிவில்லி யாமடியேனிட ரதுதீரா

*குறட்டி என்பது கூறட்டூர் பாடிக்குச் சமீபத்திலுள்ளது. † இந்த ஸ்தலம் சென்னபட்டணத்துக்கு மேற்கேயுள்ள ஆவடிஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 3 மைல் தூரத்திலுள்ளது. ‡ சிவ்வி—நீங்கி,

அருள்வல்லை யோநெடுநாளின மிருளில்லி லேயிடுமோவுன
தருளில்லை யோஇனமானவை யறியேனே
குணவில்ல தாமதமேரினை யணிசெல்வி யாயருணைசல
குருவல்ல மாதவமேபெறு *குணசாத
குடிவில்ல மேதருநாளொது மொழிநல்ல யோகவரேபணி
குணவல்ல வாசிவனேசிவ குருநாதா
பணிகொள்ளி மாகணபூதமொ டமர்கள்ளி கானகநாடக
பரமெல்லி யார்பரமேஸ்வரி தருகோவே
படரல்லி மாமலர்பாணம துடைவில்லி மாமதனாரினை
பரிசெல்வி யார்மருகாசுர முருகேசா
மணமொல்லை யாகிநகாகன தனவல்லி மோகனமோடமர்
மகிழ்தில்லை மாநடமாடினர் அருள்பாலா
மருமல்லி மாவனநீடிய பொழில்மெல்லே காவணமாடமை
வடமுல்லை வாயிலின்மேவிய பெருமாளே. (௧)

---

தையதன தானதந்தன தையதன தானதந்தன
தையன தானதந்தன தனதான.

580. மின்னிடைக ளாபதொங்கலொ டன்னமயில் நாணவிஞ்சயர்
மெல்லியர்கு ழாமிசைந்தொரு தெருமீதே
மெள்ளவுமு லாவியிங்கித சொல்குயில்கு லாவிநண்பொடு
வில்லியல்†பு ருகண்கணை தொடுமோக
கன்னியர்கள் போலிதம்பெறு மின்னணிக லாரகொங்கையர்
கண்ணியில்வி ழாமலன்பொடு பதஞான
கண்ணியிலு ளாகசுந்தர பொன்னியல்‡ப தாரமுங்கொடு
§கண்ணுறுவ ராமலின்பமொ டெனையாள்வாய்
சென்னியிலு டாடிளம்பிறை வன்னியும ராவுகொன்றையர்
செம்மணிகு லாவுமெங்கையர் குருநாதா
செம்முகஇ ராவணன்தலை விண்ணுறவில் வாளியுந்தொடு
தெய்விகபொ ருழிவண்கையன் மருகோனே

---

* குணசாதகுடில்-குணம் பிறக்குமிடம் †புருரம்-புருவம் ‡பதாரம் பாதத்திற் சாத்திய மாலை §கண்ணுறு-கண்ணூறு. திருஷ்டிதோஷம்

துன்னியெதிர் சூரர்மங்கிட சண்முகம தாகிவெங்கிரி
துள்ளிடவெ லாயுதந்தனை விடுவோனே
சொல்லுமுனி வோர்தவம்புரி முல்லைவட வாயில்வந்தருள்
துல்யபர ஞானவம்பர்கள் பெருமாளே. (உ)

---

## திருவாலங்காடு.

---

தனதானந் தானன தானன தனதானந் தானன தானன
தனதானந் தானன தானன தனதான.

581. கனவாலங் கூர்விழி மாதர்கள் மனசாலஞ் சால்பழி காரிகள்
கனமாரம் போருக மாமிணை முலைமீதே
கசிவாருங்*கீறுகி ளாலுழு வசைகாணுங்†காளிம வீணிகள்
களிகூரும் பேயமு தூணிடு கசுமாலர்
மனமோசங் கூர்மக பாவிகள் மதுவார்சங் கீதவி னோதிகள்
மருளாருங் காதலர் மேல்விழு மகளிர்வில்
மதிமாடஞ் சேர்பவர் காதலில் மகிழ்கூருப் பாழ்மனம் வாரிச
மலர்பேணுந் தாளுனை வேயருள் அருளாயோ
தனதானந் தானன தானன எனவேதங் கூறுசொல் மீறனி
தனைசேர்தண் பூமணமாலிகை யணிமார்பா
தகரேறங் காரச மேவிய குகவீரம் பாகும ராமிகு
தகைசாலன் பாரடி யார்மகிழ் பெருவாழ்வே
தினமாமன் பாபுன மேவிய தனிமானின் தோளுட னாடிய
தினைமாவின் பாவுயர் தேவர்கள் தலைவாமா
திகழ்வேடங் காளியொ டாடிய செகதீசங் கேசந டேசுரர்
திருவாலங் காடினில் வீறிய பெருமாளே. (க)

---

தந்தானந் தாத்தந் தனதன தந்தானந் தாத்தந் தனதன
தந்தானந் தாத்தந் தனதன தனதான.

582. பொன்றாமன் றாக்கும் புதல்வரும்நன்றாமன் றார்க்கின் றுறுதுணை
பொன்றானென் றாட்டம் பெருகிய புவியூடே
பொங்கா வெங்கூற்றம் பொதி தருசிங்காரஞ் சேர்த்திங் குயரிய
புன்கூடொன் றாய்க்கொண் டுறைதரு முயிர்கோல

---

* கீறுகிளால் - கீறுகின்ற கிள்ளுதலால். † காளிமம்-கறுப்பு

நின்றுணின் றேத்தும் படிநினை வுந்தானும்போச்சென்றுயர்வற
* நிந்தாகும் பேச்சென் பதுபட நிகழாமுன்
நெஞ்சாலஞ்சாற்பொங் கியவினைவிஞ்சாதென் பாற்சென்றகலிட
நின்தாள்தந் தாட்கொண் டருள்தர நினைவாயே
குன்றால்விண் டாழ்க்குங் குடைசொடுகன்றன்முன்காத்துங்குவலய
முண்டார்கொண் டாட்டம் பெருகிய மருகோனே
சொந்தார்பைந் தார்த்திண் குயதற மின்தாள்சிந் தாச்சிந் தையில்மயில்
கொண்டேசென் றுட்கொண் டருளெனமொழிவோனே
அன்றாலங் காட்டண் டருமுய நின்றாடுங் கூத்தன் திருவருள்
அந்தாகும் பாட்டின் பயனினை யருள்வாழ்வே
அன்பால்நின் தாட்டும் பிடுபவர் தம்பாவம் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே.(உ)

---

தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த தனதான.

583. வடிவது நீலங் காட்டி முடிவுள காலன் கூட்டி
வரவிடு தூதன் கோட்டி விடுபாசம்
மகனொடு மாமன் பாட்டி முதலுற வோருங் கேட்டு
மதிகெட மாயந் தீட்டி யுயிர்போமுன்
படிமிசை தாளுங் காட்டி யுடலுறு நோய்பண்டேற்ற
பழவினை பாவந் தீர்த்துன் அடியேனைப்
பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த
பரபுகழ் பாடென் றுட்கொ டருள்வாயே
முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங் காட்டில்
முதிர்நட மாடுங் கூத்தர் புதல்வோனே
முருகவிழ் தாருஞ் சூட்டி யொருதனி வேழங் கூட்டி
முதல்மற மானின் சேர்க்கை மயல்கூர்வாய்
இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி
யெதிர்பொரு சூரன் தாக்க வரஏகு
இலகிய வேல்கொண் டார்த்து உடலிரு கூறன் றாக்கி
யிமையவ ரேதந் தீர்த்த பெருமாளே.(ங)

---

## *வெள்ளிகரம்.

தனதன தனன தனதன தனன
தையன தத்ததந்த — தனதான.

584. அடலரி மகவு விதிபடி யொருகு
மலையர மெய்க்குரம்பை — புடனுனும்
அலைகட லிலகி லலம்பு நகலக
வையவர்க மக்குடைந்து — தடுமாறி
இடர்படு மடமை யுளமுமை யுடனொ
டெல்லெலி பொரபுந்த — மயல்தீர
எனதற நினது கழல்பெற மனன
வெல்லெகு திப்பதொன்று — புகல்வாயே
வடமணி முலைய மழகிய முகமும்
வள்ளியெ னத்தயங்கும் — இருகாதும்
மரகத வடிவு மடலிடை யெழுதி
வள்ளிபு னத்திநின்ற — மயில்வீரா
விடதர திருண ரசிதர் கிமலர்
வௌ்ளிம லைச்சயம்பு — குருநாதா
விகசித கமல பரிபுர முளரி
வெள்ளிக ரத்தமர்ந்த — பெருமாளே. (௧)

---

தனதன தைய தனதன தைய
தனதன தைய — தனதான.

585. குவலைய மல்கு †தவலிகள் முல்லை
குளிர்நகை சொல்லு — முதுபாகு
குழையிள வள்ளை யிடைசிறு வல்லி
குயமுலை கொள்ளை — ‡விழைமேவி
கவலைசெய் வல்ல தவலரு முள்ள
§கலவியில் தென்று — கனிமாலை

* இந்த ஸ்தலம் வேப்பகுண்டா என்னும் ரெயில்டேஷனிலிருந்து ௧௨ மைல் தூரத்திலுள்ளது. † தவலிகள் - குறைவானவர்கள். ‡ விழைமேவி - விரும்பிமேவி. || கலவியில் - கலவியிலும்

கடிமல ரைய அணிவன செய்ய
கழலிணை யைய அருள்வாயே
தவநெறி யுள்ளு சிவமுனி தூள்ளு
யுடனாடி
தருபுன வள்ளி மலைமற வள்ளி
தருகிணை மெள்ள நுகர்வோனே
அவநெறி சொல்லு மவரவை கொல்லு
மழகிய*வெள்ளி நகர்வாழ்வே
அடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே. (உ)

---

588. பொருவன கள்ள இருகயல் வள்ளை
புரிகுழை தள்ளி விளையாடும்
புளகித வல்லி யிளகித வல்லி
புரியிள முல்லை நகைமீதே
உருகிட வுள்ள விரகுடை யுள்ளம்
உலகுயி ருள்ள பொழுதேநின்
றுலைமதரு செல்வனை யிரு கல்வி
யுணர்வொடு சொல்ல வுணராதோ
மருவலர் வள்ளி புரமுள வள்ளி
மணவாளா
வளர்புவி யெல்லை யளவிடுதொல்லை
மரகத நல்ல மயில்வீரா
அருவரை விள்ள அயில்விடு மள்ள
அணிவயல் வெள்ளி நகர்வாழ்வே
அடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே. (௩)

---

தைய தைய தைய தைய தைய தைய தனதான

589. கள்ள முள்ள வல்ல வல்லி கையிலள்ளி நிதியீய
†கல்லு நெல்லு வெள்ளி தெள்ளு கல்வி செல்வர் கிளைமாய

---

* வெள்ளிநகர் என்பதும் வெள்ளிகரம் என்பதும் ஒரே ஸ்தலம்.

†. கல்லு—நவமணிகள்.

அள்ளல் துள்ளி ஐவர் செல்லு மல்லல் சொல்ல முடியாதே
*ஐய ரைய மெய்யர் மெய்ய ஐய செய்ய கழல்தாராய்
வள்ளல் புள்ளி நவ்வி நல்கு வள்ளி பிள்ளை மொழியாலே
மையலெய்து மையசெய்யில் வைபல் வெள்ள ளைகவோர
மெள்ள மள்ளர் கொய்யு நெல்லின் †வெள்ள வெள்ளி நகர்வாழ்வே
வெய்ய ‡சைய வில்லி சொல்லை வெல்ல வல்ல பெருமாளே. (௬)

---

588. தொய்யில் செய்யில் §நொய்யர் எகயர் மொய்பு மைய இடையாலும்
துள்ளி வள்ளை தள்ளி யுள்ளல் சொல்லு கள்ள விழியாலும்
மையசெல்வி மவ்வல் முல்லை மல்கு நல்ல குழலாலும்
மைமல்கொள்ள என்னல் செய்யும் வல்லி சொல்லை மகிழ்வேனோ
செய்ய தூய்ய புள்ளி நவ்வி செல்வி கல்வ ரையிலேனல்
தெய்வவள்ளி மையல்கொள்ளி செல்வ பிள்ளை முருகோனே
மெய்யர் மெய்ய பொய்யர் பொய்ய வெள்ளை வெள்ளி நகர்வாழ்வே
வெய்ய சையவில்லி சொல்லை வெல்ல வல்ல பெருமாளே. ()

---

தைய தன தான தைய தன தான
தைய தன தானந் தன தான.

589. இல்லையென நாணி யுள்ள திண் மருமெல்லினளவேனும் பகிராரை
எவ்வமென நாடி யுய்வகையிலேலை யெவ்வகையுநாமங் கவியாகச்
சொல்லவறியேனை யெல்லைதெரியாத தொல்லைமுதலேதென் றுணரேனை
தொய்யுமுடல்பேணு பொய்யனைவிடாதுன் தூய்யகழலாளுந் திறமேதோ
வல்லசுரர்மாள நல்லசுரர்வாழ மையவரைபாகம் படமோது
மையுலவுசோலை செய்யகுளிர்சாரல் வள்ளிமலைவாழுங் கொடிகோவே

---

* ஐயர் ஐய - முனிவர்க்குமுனிவனே. † வெள்ளம்-மிகுதி- ‡ சைய வில்லி - மலையாகிய வில்லையுடையவர். § நொய்யர் - நன்குந்தன்மை யுடையோர்.

அசடராக்கிகள்மார்மேலேபடு முகைகள்காட்டிகள் கூசாதேவிழும்
அழகுகாட்டிக ளாரோடாகிலும் அன்புபோலே
சதிரதாய்த்திரி வேயாவேசிகள் கருணைநோக்கமி லாமாபாவிகள்
தருமுபேட்சைசெய் தோஷாதோஷிகள் நம்பொறாத
சரசவார்த்தையி னாலேவாறுசெய் விரகமாக்கி விடாமூதேவிகள்
தகைமைதீர்ந்தன தாளேசேர்வதும் எந்தநாளோ
மதுரைநாட்டினி லேவாழ்வாகிய அநகர்வாக்கினி லேசார்வாகிய
வழுதிமேற்றிரு நீறேபூசியி பிர்ந்துகூனும்
மருவுமாற்றெதிர் வீறேடேறிட* அழகிபோற்றிய நீராலாகிய
மகினமயாற்சமண் வேரோடேகெட வென்றகோவே
புதியமாக்கனி விழ்தேனூறல்கள் பகவிராத்திரி யோயா ஆலைகள்
புரளமேற்செலவூ நர்பாயவு ணைந்துபோதும்
புகழினூற்கடல்நூழ்பார்மீதினிலளகைபோற்பலவாழ்வால்வீறிய
புலவர்போற்றிய வேலூர்மேவிய தம்பிரானே. (க)

---

தானன தந்ததந்த தானன தந்ததந்த
தானன தந்ததந்த தனதான.

594. சேலாலமொன்றுசெங்கண் வேலாலுமவென்றுமைந்தர்
சீர்வாழ்வுசிந்தைபொன்ற முதல்நாடி
தேன்மேவு செஞ்சொலின்சொல் தானேதிவந்தணைந்து
தீராததுன்பஇன்பம் உறுமாதர்
கோலாகலங்கள்கண்டு மாலாகிநின்றனன்பு
கூராமல்மங்கியங்கம் அழியாதே
கோள்கோடிபொன்றவென்று நாடோறுநின்றியங்கு
கூர்வாய்மைகொண்டிறைஞ்ச அருள்தாராய்
மாலாலுமன்றணங்கை யாராமதன்கருப்பின்
வாகோடழிந்தொடுங்க முதல்நாடி
வாழ்வானகந்தமுந்த மாறாகிவந்தடர்ந்த
மாசூரர்குன்றவென்றி மயிலேறி
மேலாகுமொன்றமைந்த மேனாடர்நின்றிரங்க
வேலாலெறிந்துகுன்றை மலைவோனே
வேய்போலவுந்திரண்ட தோள்மாதர்வந்திறைஞ்சு
வேலூர்விளங்கவந்த பெருமானே. (உ)

---

* அழகி போற்றிய-மங்கையர்க்கரசியார் போற்ற.

## * விரிஞ்சிபுரம்.

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத் தனதான.

595. ஒருவரைச் சிறுமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுலழவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட் டதனாலே

ஒருவருக் கொருவர்சக் களமையிற் சருவிவிட்
டுருவுபத் திரமெடுத் துறையின்மற் புரியவிட்
டுயிர்பிழைப் பதுகருத் தளவினுச் சிதமெனச் செயுமாதர்

தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்
சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்
தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழ்வுறத் திரிவேனைச்

சகலதுக் கமுமறச் சகலசற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றினதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திட அருட் டருவாயே

குருமொழித் தவமுடைப் புலவரைச் சிறையில்வைத்
தறவுமுக் கிரம்விளைத் திடுமரக் கரைமுழுக்
கொடியசூர்க் குண அவத் தரைமுதற் றுரிசறுத் திடும்வேலா

குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்
சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்
கொடியிடைப் பிடிநடைக் குறமகட் டிருவினைப் புணர்வோனே

கருதகட் சமயிகட் கமைவுறக் கிறியுடைப்
பறிதலைச் சமணரைக் குலமுதற் பொடிபடக்
கலகமிட் டுடலுயிர்க் கழுவினுச் சியினில்வைத் திடுவோனே

கமுகினிற் குலைபறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் கயல்குதித் துலவுநற்
கனவயற் றிகழ்திருக் †கரபுரத் தறுமுகப் பெருமாளே. (௧)

---

* இத்தஸ்தலம் வேலூருக்கு மேற்கே 8-மைல் தூரத்திலுள்ளது.

† கரபுரம் என்பது விரிஞ்சிபுரம்

சிகரதுங்கமால்வரை தகரவென்றிவேல்விடு
சிறுவசந்த்ரசேகரர் பெருவாழ்வே
திசைதொறும்ப்ரபூபதி திசைமுகன்பராவிய
திருவிரிஞ்சைமேவிய பெருமாளே

---

தனன தனனதத் தனன தனனதத்
தனன தனனதத் தனன தனனதத்
தனன தனனதத் தனன தனனதத் தனதான

599 பரவி யுனதுபொற் கரமு முகமுமுத்
தணியு முரமுமெய்ப் பாவையு மருமலர்ப்
பதமும் விரவுகுக் குடமு மயிலுமுட் பரிவாலே
படியு மனதில்வைத் துறுதி சிவமிகுத்
தெவரு மகிழ்வுறத் தரும நெறியின்மெய்ப்
பசியில் வருமவர்க் கசன மொருபிடிப் படையாதே
சருவியினியநட் புறவு சொலிமுதற்
பழகு மவரெனப் பரிவு யருகினிற
சரச விதமளித் துரிய பொருள்பறித் திடுமானார்
தமது ம்ருகமதக் களப புளகிதச்
சயில நிகர்தனத் திணையின் மகிழ்வுறத்
தழுவி யவசமுற் றுருகி மருளெனத் திரிவேனோ
கரிய நிறமுடைக் கொடிய அசுரரைக்
கெருவ மதமொழித் தடல்கள் நுணிபடக்
கழுகு பசிகெடக் கடுகி அயில்விடுத் திடுதீரா
கமல அயனுமச் சுதனும் வருணனக்
கினியு நமனுமக் கரியி னுறையு*மெய்க்
கணனு மமரரத் தனையு நிலைபெறப் புரிவோனே
இரையு முததியிற் கடுவை மிடறமைத்
துழுவை யதளுடுத் தரவு பணிதரித்
திலகு பெருநடிப் பவர்மு னருளுமுத் தமவேளே
இசையு மருமறைப் பொருள்கள் தினமுரைத்
தவனி தனிலெழிற் கரும முனிவருக்
கினிய கரபுரப் பதியி லறுமுகப் பெருமாளே. ([illegible])

---

*மெய்க்கணான் - ஆக்கமெல்லாங் கண்ணுள்ள இந்திரன்.

## திருவோத்தூர்.

தனனதந்ததான தனனதந்ததான
தனனதந்ததான தனதான

600. மருவுமஞ்சபூத முரிமைவந்திடாது
மலமிதென்றுபோட அறியாத
மயல்கொளிந்தவாழ்வு அமையுமெந்தநாளும்
வகையில்வந்திடாத அடியேனும்
உருகியன்பினோடு உனைநினைந்துநாளும்
உலகமென்றுபேர அறியாத
உருவமொன்றிலாத பருவம்வந்துசேர
உபயதுங்கபாத மருள்வாயே
அரிவிரிஞ்சர்தேட அரியதம்பிரானும்
அடிபணிந்துபேசி கடையூடே
அருளுகென்றபோது பொருளிதென்றுகாண
அருளுமைந்தஆதி குருநாதா
திரியுமும்பர்நீடு கிரியிளாதசூரர்
செருவடங்கவேலை விடுவோனே
செயலமைந்தவேத தொனிமுழங்குவீதி
திருவிரிந்தவோத்தை பெருமாளே.(கூ)

---

## திருவோத்தூர்.

தனனத் தானனதானந் தனனத் தானனதானந்
தனனத் தானனதானந் தனதான.

601. தவர்வாட் டோமரசூலந் தரியாக் காதியசூரும்
தணியாச் சாகரமேழுங் கிரியேழும்
சருகாக் காய்கதிர்வேலும் பொருகாற் சேவலுநீலந்
தரிகூத் தாடியமாவுந் தினைகாவல்
துவர்வாய்க் கானவர்மானுஞ் சுரநாட் டாளொருதேனுந்
துணையாத் தாழ்வறவாழும் பெரியோனே
துணையாய்க் காவல்செய்வாயென் றுணராப் பாவிகள்பாலும்
தொலையாப் பாடலையானும் புகல்வேனோ

* இந்தஸ்தலம் காஞ்சீபுரத்துக்கு மேற்கில் சுமார் 20 மைல் தூரத்திலுள்ளது

*பவமாய்த் தாணதுவாகும் பனைகாய்த் தேமணநாறும்
பழமாய்ப் பார்மிசைவீழும் படிவேதம்
படியாப் பாதகர்பாயன் றியுடாப் பேதைகள்கேசம்
பறிகோப் பாளிகள்யாருங் கழுவேறச்
சிவமாய்த் தேனமுதூறுந் திருவாக் காலொளிசேர்வெண்
டிருநீற் றாலமராடுந் சிறியோனே
செழுநீர்ச் †சேய்நதி ‡யாரங் கொழியாக் கோமளம்வீசுந்
திருவோத் தூர்தனில்மேவும் பெருமாளே

## திருமயிலை.

தனன தனனதன தனன தனனதன
தனன தனனதன தனதான.

602. அமரு மமரரினி லதிக னயனுமரி
யவரும் வெருவவரும் அதிகாளம்
அதனை யதகரண விதன பரிபுரண
மமைய னவர்கரண அகிலேச
நிமிர வருள்சரண நிபிட மதெனவுன
நிமிர சமிரமய நியமாய
நிமிட மதனிலுண வலசி வசதவா
கினது பதவிதர வருவாயே
§சமர சமரசுர|| அசுர விதரபர
¶சரத விரதஅயில் விடுவோனே
தகுர்த தகுர்தகிகு திகுர்த திகுர்ததிகு
தரர ரரரரிரி தகுர்தாத
எமர நடனவித மயிலின் முதுகில்வரு
மிமைய மகள்குமர எமதீச
இயலி னியல்மயிலை நகரி லினிதுறையு
மெமது பரகுரவ பெருமாளே.(௧)

* பவமாய்த்து ஆணதுவாகும் எனப்பிரிக்க. † சேய்நதி - சேயாறு. ‡ஆரங்கொழியா — முத்துக்களைக் கொழிக்கது. § சமரச அமரசுர - ஒற்றுமையான பெருந்தன்மையுடைய தேவர்களுக்கு. || அசுர இதரபர—பகைவராகியஇழிவான அசுரர்மேல் ¶சரத -மெய்யனே

தனனத் தனதன தனதான.

603. அயிலொத் தெழுமிரு விழியாலே
அமுதொத் திடுமரு மொழியாலே
சயிலத் தெழுதுணை முலையாலே
தடையுற் றடியனு மடிவேனோ
கயிலைப் பதியரன் முருகோனே
கடலக் கரைதிரை யருகேசூழ்
மயிலைப் பதிதனி லுறைவோனே
மகிமைக் கடியவர் பெருமாளே. (௨)

---

தனாதனாதன தானனதந்தத் தனதான.

604. அறமிலாவதி பாதகவஞ்சத் தொழிலாலே
அடியனேன்மெலி வாகிமனஞ்சற் றிளையாதே
திறல்குலாவிய சேவடிவந்தித் தருள்கூடத்
தினமுமேமிக வாழ்வுறுமின்பைத் தருவாயே
விறல்நிசாசரர் சேனைகளஞ்சப் பொரும்வேலா
விமலமாதபி ராமிதருஞ்சற் புதல்வோனே
மறவர்வாணுதல் வேடைகொளும்பொற் புயவீரா
மயிலைமாநகர் மேவியகந்தப் பெருமாளே (௩)

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

605. இகல வருதிரை பெருகிய சலநிதி
நிலவு முலகினி லிகமுறு பிறவியி
னிளிமை பெறவரு மிடருறு மிருவினை யதுதீர
இசையு முனதிரு பதமலர் தனைமன
மிசைய நினைகிலி யிதமுற வனைதரு
ளிவர வுமுகிலி அயர்கிலி தொழுகிலி உமைபாகர்
மகிழு மகவென அறைகிலி நிறைகிலி
மடமை குறைகிலி பதியுணர் வறிகிலி
வசன மறவுறு மவுனமொ டுறைகிலி மடமாதர்

மயம தடரிட இடருறு மடியனு
மினிமை தருமுன தடியவ ருடனுற
மருவ அருள்தரு கிருபையின் மலிகுவ தொருநாளே
சிகர தனகிரி குறமக ளினிதுற
சிலத நலமுறு சிலபல வசனமு
திறைய அறைபயி லறுமுக நிறைதரும் அருணாக
சிரண புரணவி தரணவி சிரவண
சரணு சரவண பவகுக ஈயனெனி
திரவ பரவதி சிரமறை முடிவுறு பொருணீத
அகர உகரதி மகரதி சிகரதி
யகர அருளதி தெருளதி வலவல
அரண முரணுறு மசுரர்கள் கெட அயில் விடுவோனே
அழகு மிலகிய புலமையு மகிமையும
வளமு முறைதிரு மயிலையி லுறுதின
மமரு மரகர சிவசுத அடியவர் பெருமாளே.(௪)

---

தனதனன தானதந்த தனதனன தானதந்த
தனதனன தானதந்த தனதான.

606. இணையதில தாமிரண்டு கயல்களென வேபுரண்டு
இருகுழையின் மீதடர்ந்து அமராடி
இலகுசிலை வேள்துரந்த கணையதினு மேசிறந்த
இருநயனர் வாரிணங்கு மதிபார
பணைமுலையின் மீதணிந்த தரளமணி யார்துலங்கு
பருவரதி போலவந்த விலைமாதர்
பயிலுநடை யாலுழன்று அவர்களிட மோகமென்ற
படுகுழியி லேமயங்கி விழலாமோ
கணகணென வீரதண்டை சரணமதி லேவிளங்க
கலபமயில் மேலுகந்த குமரேசா
கறுவிவரு சூரனங்க மிருபிளவ தாகவிண்டு
கதறிவிழ வேயெறிந்த முருகோனே
மணிமகுட வேணிகொன்றை அறுகுமதி யாறணிந்த
மலையவிலி யையகன்தன் ஒருபாக
மலையரையன் மாதுதந்த சிறுவனென வேவளர்ந்து
மயிலைநகர் வாழவந்த பெருமாளே.(௫)

தனதனன தானதத்த தனதனன தானதத்த
தனதனன தானதத்த தனதான.

607. களபமணி யாரமுற்ற வனசமுலை மீதுகொற்ற
கலகமத வேள்தொடுத்த கணையாலும்
கனிமொழிமி ஞர்கள்முற்று மிசைவசைகள் பேசவுற்ற
கனலெனவு லாவுபட்ட மதியாலும்
வளமையணி நீடுபுஷ்ப சயனஅணை மீதுருக்கு
வனிதைமயல் நாடிநித்த நலியாதே
வரியளியு லாவுதுற்ற இருபுயம ளாவிவெற்றி
மலரணையில் நீயணைக்க வரவேணும்
துளபமணி மார்பசக்ர தானரிமு ராரிசர்ப்ப
துயிலதர னுதரித்த மருகோனே
சுருதிமறை வேள்விமிக்க மயிலைநகர் மேவுமுக்ர
துரகதக லாபபச்சை மயில்வீரா
அளகைவணி கோர்குலத்தில் வனிதையுயிர் *மீளழைப்ப
†அருள்பரவு பாடல்சொற்ற குமரேசா
அருவரையை நீறெழுப்பி நிருதர்தமை வேரறுத்து
அமரர்பதி வாழவைத்த பெருமாளே (௬)

---

தனனதான தானன தனனதான தானன
தனனதான தானன தனதான.

608. கடியவேக மாருத விரதசூத ராபாதர்
கலகமேசெய் பாழ்மூடர் வினைவேடர்
கபடவீன ராகாத இயல்புநாடி யேநீடு
கனவிகார மேபேசி நெறிபேணுக்
கொடியனேது மோராது விரகமால் மேமூடு
குடிலின்மேவி யேநாளு மடியாதே
குலவுதோகை மீதாறு முகமும்வேலு மீராறு
குவளைவாகும் நேர்காண வருவாயே

* மீளழைப்ப - மீளஅழைப்ப. † இது திருமயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணாக்கிய திருஞானசம்பந்தசுவாமிகள் சரித்திரத்தைக் குறித்தது.

படியிஞேடு மாமேரு அதிரவீசி யேசேட
பணமுமாட வேநீடு வரைசாடிப்
பரவையாழி நீர்மோத நிருதர்மாள வாளுடு
பதியதாக வேலேவு மயில்வீரா
வடிவுலாவி யாகாச மிளிர்பலாவி னீள்சோலை
வனசவாவி பூவோடை வயலோடே
மணிசெய்மாட மாமேடை சிகரமோடு வாகான
மயிலைமேவி வாழ்தேவர் பெருமாளே.(எ)

---

தனனு தனதானன தனனு தனதானன
தனனு தனதானன தனதான.

309. திரைவார் கடல்சூழ்புவி தனிலே யுலகோரொடு
திரிவே னுனையோதுதல் திகழாமே
தினநா ளுமுனேதுதி மனதா ரயிேனசிவ
சுதனே*திரி தேவர்கள் தலைவாமால்
வரைமா துமையாள்தரு மணியே குகனேயென
அறையா அடியேனுமுன் அடியாராய்
வழிபா டுறுவாரொடு அருளா தரமாயிடு
மகநா ளுளதோசொல அருள்வாயே
இறைவா ரணதேவனு மிமையோரவ ரேவரு
மிழிவா கிமுனேயியல் இல்ராவி
இருளா மனதேயுற அசுரே சர்களேமிக
இடரே செயவேயவர் இடர்தீர
மறமா அயிலேகொடு உடலே பிருகூறெழ
மதமா மிகுசூரனை மடிவாக
வதையே செயுமாவலி யுடையா யழகாகிய
மயிலா புரிமேவிய பெருமாளே.(அ)

---

தனதன தனதன தாந்ததானன
தனதன தனதன தாந்ததானன
தனதன தனதன தாந்ததானன தனதான.

310. நிரைதரு மணியணி யார்ந்தபூரித
ம்ருகமத களபகில் சாந்துசேரிய
இளமுலையுர மிசை தோய்ந்து மாமலர் அணைமீதே

---

*திரிதேவர்கள் — மும்மூர்த்திகள்.

நெகிழ்தர அரைதுகில் வீழ்ந்துமாமதி
முகம்வெயர் வெழுவிழி பாய்ந்துவார்குழை
யொடுபொர இருகர மேந்து நீள்வளை யொலிகூர

விரைமலர் செறிகுழல் சாய்ந்துநூபுர
மிசைதர இலவிதழ் மோந்துவாயமு
தியல்பொடு பெருகிய வாஞ்சையேதக வியனுடும்

வினையனை யிருவினை யீண்டுமாழ்கட
லிடர்படு சுழியிடை தாழ்ந்துபோமதி
யிருகதி பெறஅருள் சேர்ந்துவாழ்வது மொருநாளே

பரையபி னவைசிவை சாம்பவியுமை
யகிலமு மருளரு ளேய்ந்தகோமளி
பயிரவி திரிபுரை யாய்ந்த நால்மறை சதகோடி

பக்வதி யிருசுட ரேந்துகாரணி
மலைமகள் கவுரி*வி தார்ந்தமோகினி
படர்சடை யவனிட நீங்குறுதவள் தருகோவே

குரைகடல் மறுகிட மூண்டசூரர்க
ளணிகெட நெடுவரை சாய்ந்துதூளெழ
முடுகிய மயில்மிசை யூர்ந்துவேல்விடு முருகோனே

குலநறை மலரளி சூழ்ந்துலாவிய
மயிலையி லுறைதரு சேந்தசேவக
குகசர வணபவ வாய்ந்த தேவர்கள் பெருமாளே. (௬)

---

தனதன தத்தன தான தானன
தனதன தத்தன தான தானன
தனதன தத்தன தான தானன தனதான.

611, வருமயி லொத்தவ ரீவார் மாமுக
மதியென வைத்தவர் தாவா காமிகள்
வரிசையின் முற்றிய வாகா ராமியல் மடமாதர்

மயலினி லுற்றவர் மோகா வாரிதி
யதனிடைபுக்கவ ராளாய் நீணிதி
தருவிய லுத்தர்கள் மாடாமாமதி மிக†மூழ்கி

* விதார்ந்த- ர்து ஆர்ந்த, சந்திரனைத் தரித்த, †மூழ்கி-மூழ்குகிறவன்.

தருபர வுத்தம வேளே சிருறை
அறுமுக நற்றவ லீலா கூருடை
அயிலுறை கைத்தல சீலா பூரண பரயோக

சரவண வெற்றிவி னோதா மாமணி
தருமர வைக்கயி *நீதா வாமணி
மயிலுறை யுத்தம நாதா நீடருள் பெருவேளே

திரிரிரி தித்திதி தீதி தீதிதி
தொகுதொகு தொகுதொகு தோதோதோதிகு
திமிதிமி திக்திமி ஜேஜே ஜேஜெயெ தொதிதிதோ

தெனவரி பத்தனர் தார் தேமுற
திடுவென மிக்கியல் வேதா வேதொழ
திருநட மிட்டவர் காதேழ டிய குருபோதம்

உரைசெயு முத்தம வீரா காரணி
உமையவ ளுத்தர பூர்வா காரணி
உறுஜக ரக்ஷணி நீரா வாரணி தருசேயே

உயர்வர முற்றியசோசே யாரண
மறைமுடி வித்தக தேவே காரண
ஒருமயி லேப்பதி வாழ்வே தேவர்கள் பெருமாளே.(௧௦)

---

## திருவான்மியூர்.

தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன தனதான.

612. குசமாகி யாருமலை மரைமாநு ளூரினிடை
குடிலான ஆல்வயிறு குழையூடே
குறிபோகு மீனவிழி மதிமாமு காருமலர்
குழல்கார தானகுண மிலிமாதர்

புசவாசை யால்மனது உனைநாடி டாதபடி
புலையேனு லாவிமிகு புணர்வாகிப்
புகழான பூமிமிசை மடிவா யிருதவகை
பொலிவான பாதமலர் அருள்வாயே

* நீதாவா-நீதா அவா.

நிசநார ணாதிதிரு மருகாவு லாசமிகு
நிகழ்போத மானபர முருகோனே
நிதிஞான போதமரு ளிருகாதி லேயுதவு
நிபுணாதி சாசரர்கள் குலகாலா
திசைமாமு காழியரி மகவான்மு னோர்கள்பணி
சிவநாத ராலமயில் அமுதேசர்
திகழ்பால மாகமுறு மணிமாட மேடையுயர்
திருவான்மி யூர்மருவு பெருமாளே.

---

## மாடம்பாக்கம்

தானதந்தன தானதானன தானதந்தன தானதானன
தானதந்தன தானதானன தனதான

613. தோடுறும்†குழை யாலேகோல்வளை யாலேசெங்கைக ளாலேயாழ்தரு
கீதமென்குர லாலேதூமணி நகையாலே
தூமமென்குழ லாலேவாசனை தேனிலங்கித ழாலேயாலவி
லோசனங்களி னாலேசோபித அழகாலே
பாடகம்புனை தாளாலேமிக வீசுதண்பனி நீராலேவளர்
பாரகொங்கைக ளாலே‡கோலிய விலைமாதர்
பாவகங்களி னாலேயான்மயல் மூழ்கிநின்றய ராதேநூபுர
பாதபங்கய மீதேயாள்வது கருதாயோ
§நாடருஞ்சுடர் தானாயோதுசி வாகமங்களி னாலேபதவ
நாததந்த்ரக லாமாபோதக வடிவாகி
நால்விதந்தரு வேதாவேதமும் நாடிநின்றதொர் மயாதீதம
னோலயந்தரு நாதாஆறிரு புயவேளே
||வாடயங்கிய வேலாலேபொரு சூர்தடிந்தருள் வீராமாமயி
லேறுகந்தவி னோதாகூறென அரனார்முன்
வாசகம்பிற வாதோர்ஞானசு கோதயம்புகல்¶வாசாதேசிக
0மாடையம்பதிவாழ்வேதேவர்கள் பெருமாளே.(க)

---

* இந்த ஸ்தலம் வெண்டலூர் ரெயில்ஸ்டேஷனுக்குக் கிழக்கு ௭ மைல் [தூ]ரத்திலுள்ளது. † குழை - காது, இஃது ஆகுபெயர். ‡ கோலிய - வளை[த்த]. § நாடருஞ்சுடர் - சிவபெருமான். || வாடயங்கிய-வான்+தயங்கிய - [ஒளி]ரி பொருந்திய. ¶ வாசாதேசிகன்-உபதேசகுரு. 0 மாடையம்பதி யென்[பது] [மா]டம்பாக்கம்.

## திருப்போரூர்.

தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன தனதான.

614. *அனுத்தே னேர்மொழி யாலே மாமய
லடைத்தார் போலவு மோர்நா ளானதி
லடுத்தே தூதுகள் நூறாறானதும் விடுவார்கள்
அழைத்தே வீடினிலேதா னேகுவர்
நகைத்தே மோடிகளாவார் காதலொ
டடுத்தே மாமுலை மீதே மார்புற அணைவார்பின்
குனித்தே பாகிலை யீவார் பாதியில்
கடிப்பார் வாயிதழ் வாய்நீ ரானது
குடிப்பார் தேனென நாணு லீலைகள் புரிவார்கள்
குறித்தே மாமய லாலே நீள்பொருள்
பறிப்பா ராசுகள் சூழ்மா பாதக
குணத்தார் மாதர்கள் மே†லா சாவிட அருள்வாயே
வனத்தே வேடுவர் மாதா மோர்பிணை
யெடுத்தே தான்வர வேதான் யாவரும்
வளைத்தே சூழவு மோர்வா ளால்வெலும் விறல்வீரா
மலர்த்தே னோடையி லோர்மா வானதை
பிடித்தே நீள்கர‡வாதா டாழியை
மனத்தா லேவிய மாமாலானவர் மருகோனே
சினத்தே சூரர்கள் போராய் மாளவு
மெடுத்தோர் வேல்விடு தீரா தாரணி
திருத்தோளா இரு§பாதா தாமரை முருகோனே
திருத்தேர்சூழ்மதி ளோரார் தூபிக
ளடுக்கார் மாளிகை யேநீ ளேருள
திருப்போ ரூருறை தேவா தேவர்கள் பெருமானே.(க)

* அனு - அற்பம். † ஆசா - ஆசை. ‡ வாதாடாழியை - வாதாட ஆழியை. § பாதாதாமரை-பாததாமரை.

தனத்தா தானதந்த தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த தனதான

615. உருக்கார் வாளிகண்கள் பொருப்பார் வார்தனங்கள்
உகப்பார் வாலசந்த்ர ணுதனூலாம்
உருச்சேர் நீண்மருங்குல் பணைத்தோ ளாதிகொண்ட
னுவப்பா மேல்விழுந்து திரவோர்கள்
அருக்கா மாதர்தங்கள் வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடிநின்ற மசக்கால் மாயுமிந்த
அவத்தா வீனமின்றி யருள்வாயே
எருக்கார் தாளிதும்பை மருச்சேர் போதுகங்கை
யிணைச்சூ டாதிநப்பர் புதல்வோனே
இருக்கா லேநினைந்து துதிப்பார் நாவினெஞ்சி
லிருப்பா யானைதங்கு மணிமார்பா
செருக்கா லேமிகுந்த கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கைகொண்ட முருகோனே
தினைக்கோர் காவல்கொண்ட குறத்தேன் மாதுபங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே. (உ)

---

தானதானன தானன தானதானன தானன
தானதானன தானன தனதான.

696. சேருலாவிய வேதிம மானமானடை மாமயில்
சேயசாயல்க லாமதி முகமானார்
தேனுலாவிய மாமொழி மேருநேரிள மாமுலை
சேலுலாவிய கூர்விழி குமிழ்நாசி
தாருலாவிய நீள்குழல் வேயளாவிய தோளியர்
சார்பிலேதிரி வேனைநின் அருளாலே
சாமவேதியர் வானவ ரோதிநாண்மலர் தூவிய
தாளில்வீழநி னைதருள் புரிவாயே
காருலாவிய நீள்புன வேடர்மால்வரை மீதுறை
காவல்மாதினொ டாவல்செய் தணைவோனே
காணஆகம வேதபு ராணநூல்பல வோதிய
காரணாகருணாகர முருகோனே.

போருலாவிய சூரனை வாரிசேறொழ வேல்விடு
  பூபசேவக மாமயில் மிசையோனே
போதன் மாதவன் மாதுமை பாதியாதியு மேதொழு
  போரிமாநகர் மேவிய பெருமாளே. (கூ)

---

தனனதானன தானன தனனதானன தானன
தனனதானன தானன தனதான.

617. திமிரமாமன மாமட மடமையேமிட ராவை
  திமிரமே*யரி சூரிய லாக
தினகராசிவ காரண பனகபூஷண ஆரண
  சிவசுதாவரி நாரணன் மருகோனே
குமரிசாமளை மாதுமை அமலியாமளை பூரணி
  குணகலாநிதி நாரணி தருகோவே
குருகுகாகும ரேசுர சரவணாசக ளேசுர
  குறவர்மாமக ளாசைகொள் ம
பமரபாரப்ர பாருண படலதாரக மாகுல
  †பசுரபாடன பாலித பகளேச
பகிதபாரண வாரணை துவசனடக மாமயில்
  பரவுபாணித பாவல பரயோக
சமபராமத சாதல சமயமாறிரு தேவத
  சமயநாயக மாமயில் முதுவீர
சகலலோகமு மாசறு சகலவேதமு மேதொழு
  சமரமாபுரி மேவிய பெருமாளே. (ச)

---

## உத்தரபேரூர்.

தனனதனன தனதான தனனதனன தனதான
தனனதனன தனதான தனதான.

618. சுருதிமறைக ளிருநாலு திசையிலதிபர் முனிவோர்கள்
  துகளிலிருடி யெழுபேர்கள் சுடர்மூவர்
சொலவில்முடிவில் வெகுரூப‡பகுதிபுருடர் நவநாதர்
  தொலைவிலுடுவி னுலகோர்கள் மறையோர்கள்

---

*அரி-கெடுக்கின்ற. †பசரம்-பாசரம். ‡பகுதிபுருடர்-பிரகிருதிபுருடர்.

அரியசமய மொருகோடி அமரர் சரணர் சதகோடி
அரியுமயனு மொருகோடி யிவர்கூடி
அறிய அறிய அறியாத அடிகளறிய அடியேனும்
அறிவுளறியு மறிவூற அருள்வாயே
வரைகள்தவிடு பொடியாக நிருதர்பதியும் அழிவாக
மகரசலதி அளறுக முதுசூரும்
மடியஅலகை நடமாட விஜயவனிதை மகிழ்வாக
மவுலிசிதறி இறைதேடி வருநாய்கள்
நரிகள்கொடிகள் பசியாற உதிரநதிக ளலைமோத
நமனும்வெருவி யடிபேண மயிலேறி
நளினவுபய கரவேலை முடுகுமுருக * வடமேரு
நகரியுறையு மிமையோர்கள் பெருமாளே. (க)

---

தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தானதந்த தானதந்த தனதான.

629. தோலெலும்பு சீநரம்பு பீளைதன்ற கோழைபொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான
தூலபங்க காயம்வம்பி லேசுமந்து நான்மெலிந்து
சோருமிந்த நோயகன்று துயராற
ஆலமுண்ட கோனகண்ட லோகமுண்ட மால்விரிஞ்ச
னாரணங்க ளாகமங்கள் புகழ்தாளும்
ஆனனங்கள் மூவிரண்டு மாறிரண்டு தோளுமங்கை
யாடல்வென்றி வேலுமென்றும் நினைவேனோ
வாலசந்த்ர சூடிசந்த வேதமந்த்ர ரூபியம்பை
வாணி†பஞ்ச பாணிதந்த முருகோனே
மாயையைந்து வேகமைந்து பூதமைந்து நாதமைந்து
வாழ்பெருஞ்ச ராசரங்கள் உறைவோனே
வேலையன்பு கூரவந்த ஏகதந்த யானைகண்டு
வேடர்மங்கை யோடியஞ்ச அணைவோனே
வீரமங்கை வாரிமங்கை பாரின்மங்கை மேவுகின்ற
மேருமங்கை யாளவந்த பெருமாளே. (உ)

---

*வடமேருநகரி-உத்தரமேரூர் †பஞ்சபாணி என்பது பார்வதிக்கொருபெயர்.

தானதத் தனதான தானதத் தனதான
தானதத் தனதான தனதான.

620. நீள்புயற் குழல்மாதர் பேரினிற் க்ருபையாகி
நேசமுற் றடியேனு நெறிகேடாய்
நேமியிற் பொருள்தேடி யோடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிலவாழ்வை நினையாதே
பாழினுக் கிரையாய நாமம்வைத் தொருகோடி
பாடலுற் றிடவேசெய் திடுமோச
பாவியெப் படிவாழ்வ னேயர்கட் குளதான
பார்வைசற் றருளோடு பணியாயோ
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
மாகமப் பொருளோரும் அனைவோரும்
ஆனைமக் ககவோனும் ஞானமுற் றியல்வோரு
மாயிரத் திருநூறு மறையோரும்
வாழுமுத் தரமேருமேவியற் புதமாக
வாகுசித் திரதோகை மயிலேறி
மாறெனப் பொருசூர னீறெழப் பொரும்வேல
மான்மகட் குளனான பெருமாளே. (ரு)

---

தான தந்தன தத்தானத்தன
தானதந்தன தத்தானத்தன
தானதந்தன தத்தானத்தன தனதான.

11. மாதர்கொங்கையில் வித்தாரத்திரு
மார்பிலங்கிய முத்தாரத்தினில்
வாசமென்குழ லிற்சேலைப் பொரும் விழிவேலில்
மாமையொன் றும லர்த்தாள் வைப்பினில்
வாகுவஞ்சியில் மெய்த்தாமத்தினில்
வானிளம்பிறை யைப்போல்நெற்றியில் மயலாகி
ஆதரங்கொடு கெட்டேயிப்படி
ஆசையின்கட லுக்கேமெத்தவும்
ஆகினின் றுத வித்தேநித்தலும் அலைவேனோ

ஆறிரண்டுப ணைத்தோளற்புத
ஆயிரங்கலை கத்தாமத்திப
ஞயுமுன்றலை கிற்பேனுக்கருள் புரிவாயே
சாதனங்கொடு தத்தாமெத்தன
வேடடந்துபொய் பித்தாவுத்தர
மேதெனும்படி தற்காய்நிற்பவா சபையூடே
தாழ்வில்சுந்தர னைத்தாறெற்றிகொள்
நீதிதந்திர நற்சார்புற்றருள்
சாலநின்றுச மாத்தாவெற்றிகொள் அரன்வாழ்வே
வேதமுங்கிரி யைச்சூழ்நித்தமும்
வேள்வியும்புவி யிற்றுபித்தருள்
வேர்விழும்படி செய்த்தேர்மெய்த்தமிழ்மறையோர்வாழ்
மேருமங்கையி லத்தாவித்தக
வேலொடும்படை குத்தாவொற்றிய
வேடர்மங்கைகொள் சித்தாபத்தர்கள் பெருமாளே.(௪)

---

மதுராந்தகம்.

---

தனதாந்ததத்த தனதனத்தத்
தந்தனத்தனந்த தனதான.

624. குதிபாய்ந்திரத்தம் வடிதுளைத்தொக்
கிந்த்ரியக்குரம்பை வினைகூர்தூர்
குணபாண்டமுற்ற கிலமெனக்கைக்
கொண்டிளைத்தயர்ந்து சுழலாதே
உதிதாம்பரத்தை*யுயிர்கெடப்பொற்
கிண்கிணிச்சதங்கை விதகீத
உபயாம்புயப்புணையையினிப்பற்
றுங்கருத்தையென்று தருவாயே
கதைசார்ங்ககட்கம் வளையடற்சக்
கரந்தரித்தகொண்டல் மருகோனே

---

* "[illegible]யிர்கெட" பாடபேதமும் நீங்க.

கருஞ்சனக்க மலைகிரிப்பொற்
பைம்புனக்கரும்பின் மணவாளா
மதனுந்தகர்க்கு மகவெனப்பக்
கந்தனிற்பிறந்த குமரேசா
மதுராந்தகத்து வடதிருச்சிற்
றம்பலத்தமர்ந்த பெருமாளே. (க)

---

623. சயிலாங்கனைக்கு ருகியிடப்பக்
கங்கொடுத்தநம்பர் வெகுசாரி
சதிதாண்டவத்தர் சடையிடத்துக்
கங்கைவைத்தநம்பர் [illegible]
செயல்மாண்டுசித்த மலமறுத்துத்
த்வம்பெறப்பகர்ந்த உபதேசம்
சிறியேன்தனக்கு முறைசெயிற்சற்
றங்குருத்துவங்கு றையுமோதான்
அயில்வாங்கியெற்றி யுததியிற்*கொக்
கன்தனைப்பிளந்த சுரர்வாழ
அகிலாண்டமுற்று நொடியினிற்சுற்
றுந்திறற்ப்ரசண்ட முழுநீல
மயில்தாண்டவிட்டு முதுகுலப்பொற்
குன்றிடித்தசங்க்ர மவிரேந்தா
மதுராந்தகத்து வடதிருச்சிற்
றம்பலத்தமர்ந்த பெருமாளே. (உ)

தனதாந்தன தானதனந்தன
தனதாந்தன தானதனந்தன
தனதாந்தன தானதனந்தன தந்ததான.

624. மனைமாண்சுத ரானசுணங்கரு
மனம்வேந்திணை யானதனங்களு
மடிவேன்றனை யீனஅணங்குறு வம்பராதி

*கொக்கன் - மாமரமாகிய சூரன்.

நட்டந டிக்கட விற்பெரு வெற்பினை
நட்டர வப்பணி சுற்றும திர்த்தளம்
நத்தமு தத்தையெ ழுப்பிய வித்தகர் மருகோனே
கொச்சைமொ ழிச்சிக றுத்தவி ழிச்சசி
றுத்தஇ டைச்சிபெ ருத்ததனத்திரு
றத்திதனக்குமணப்பிரிய முற்றிடு குமரேசா
கொத்தவிழ் பத்மம லர்ப்பழ னத்தொடு
சுற்றம றக்கடி கைப்புனல் சுற்றிய
கொட்புள நற்றிரு வக்கரையுற்றுறை பெருமாளே.(௧)

---

## * திருவாமாத்தூர்.

தனதன தானதானன தனதன தானதானன
தனதன தானதானன தனதான.

627. அடல்வடிவேல்கள் வாளிக ளனைவிடவோடல்நேர்படு
மயில்விழியாலுமானெனு மதவேழத்
தனியகோடுபோல்வினை யளவளவானகூர்முலை
யதின்முகமூடு மாடையின் அழகாலும்
துடியிடையாலும்வாலர்கள் துயர்வுறமாயமாயொரு
துணிவுடனாடுமாதர்கள் துணையாகத்
தொழுதவர்பாதமோதியுன் வழிவழியானெனுமுயர்
ஊலையிலைமாறுபோலுயிர் சுழல்வேனோ
அடவியுனாடுவேடர்க ளரிவையொடாசைபேசியு
மடிதொழுதாடுமாண்மையு முடையோனே
அழகியதோளிராறுடை அறுமுகவேளெனவுனை
அறிவுடனோதுமாதவர் பெருவாழ்வே
விடை†யெறுமீசர்நேசமு மிகநினைவார்கள்தீவினை
யுகநெடிதோடமேலணை பவர்மூதூர்
விரைசெறிதோகைமாதர்கள் விரகுடனாடுமாதையில்
விறல்மயில்மீதுமேவிய பெருமாளே. (௧)

---

* இத்தலம் விழுப்புரம் ரெயில் ஸ்டேஷனுக்குச் சமீபத்திலுள்ளது.
† ஏறும் – ஏறும்.

தந்ததந்தன தானனதன தந்ததந்தன தானனதன
தந்ததந்தன தானனதன தனதான.

628. கண்கயற்பிணை மானொடுற வுண்டெனக்கழை தோளிணை
நன்*கமைக்கிணை மாமாமென முலையான
கஞ்சமொத்தெழு கூர்மாமுலை குஞ்சரத்திரு கோடோடுற
விஞ்சமைப்பொரு கார்கோதைகொ டியர்காலன்
பெண்டனக்குள கோலாகல மின்றெடுத்திளை யோராவிகள்
†மன்பிடிப்பது போல்நீள்வடி வுடைமாதர்
பின்பொழித்திடு மாமாயையி லன்புழைத்துழி யாதேயுறு
மிஞ்சிலத்தனை தாள்பேணிட அருள்தாராய்
விண்டனக்குற வானோருடல் கண்படைத்தவன் வேதாவொடு
விண்டுவித்தகன் வீழ்தாளினர் விடையேறி
‡வெந்தனத்துமை யாள்மேவிய சந்தனப்புய மாதீசுரர்
வெங்கயத்துரி யார்போர்வையர் திருவாழ்வே
தண்புடைப்பொழில்சூழ்மாமதையில்நண்புவைத்தருள்தாராதல
முங்கிளைத்திட வானீள்திசை யொடுதாவித்
தண்டரக்கர்கள் கோகோவென விண்டிடத்தட மாமயிலசை,
சண்டவிக்ரம வேலேவிய பெருமாளே. (௨)

தனதன தானத்தானன தனதன தானத்தானன
தனதன தானத்தானன தனதான.

629. கருமுகில்போல்மட்டாகிய அளகிகள்தேனிற்பாகொடு
கனியமுதூறித்தேறிய மொழிமாதர்
கலவிகள்நேரொப்பாகிகள் மதனிகள்காமக்ரோதிகள்
கனதனபாரக்காரிகள் செயலோடே
பொருகயல்வாளைத்தாவிய விழியினர்சூறைக்காரிகள்
பொருளளவாசைப்பாடிகள் புவிமீதே
பொதுவிகள்போகப்பாவிகள் வசமழியேனுக்கோரருள்
புரிவதுதானெப்போசொல் புகல்வாயே
தருவடுதிரச்சூரர்கள் அமர்கிளைமாளத்தூளெழ
சமனிலையேறப்பாறொடு கொடிவீழத்

* அமை-மூங்கில். †மன்-மிக. ‡வெம்-விருப்பம்.

அழைத்தகப் படுத்தியொட் டறப்பொருட் பறிப்பவர்க்
கடுத்தபத் தமுற்றுவித் தகர்போலத்
தரிக்கும்வித் தரிக்குமிக் கதத்துவப் ப்ரசித்தியெத்
தலத்துமற் றிலைப்பிறர்க் கெனஞானம்
சமைத்துரைத் திமைப்பினிற் சடக்கெனப் படுத்தெழச்
சமுக்குமிப் பிறப்புமுற் றிடலாமோ
பொருக்கெழக் கடற்பரப் பரக்கர்கோத் திறப்புறப்
பொருப்பினிற் பெருக்கவுற் றிடுமாயம்
புடைத்திடித் தடற்கரத் துறப்பிடித் தகற்பகப்
புரிக்கிரக் கம்வைத்தபொற் கதிர்வேலா
திருத்தமுத் தமிழ்க்கவிக் கொருத்தமைக் குறத்தியைத்
தினைப்புனக் கிரித்தலைத் திடைதோயுஞ்
சிவத்தருக் குடக்கொடிச் செருக்கவுற் பலச்சுனைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே. (உ-அ)

---

தனதனன தனதனன தத்தத்த தத்தத்த
தனதனன தனதனன தத்தத்த தத்தத்த
தனதனன தனதனன தத்தத்த தத்தத்த தனதான.

633. மொகுமொகென நறைகொண்மலர் வற்கத்தி லற்புடைய
முளரிமயி லனையவர்கள் நெய்த்துக்க றுத்துமழை
முகிலனைய குழல்சரிய வொக்கக்க னத்துவளர் அதிபார
முலைபுளக மெழவினைகள் சத்திக்க முத்தமணி
முறுவலிள நிலவுதர மெத்தத்த வித்தசில
மொழிபதற விடைதுவள வட்டச்சி லைப்புருவஇணைகோட
அகில்மிருக மதசலிலம் விட்டுப் பனித்தமல
ரமளிபட வொளிவிரவு ரத்னப்ர பைக்குழையொ
டமர்பொருத நெடியவிழி செக்கச்சி வக்கமர மதநீதி
அடல்வடிவு கலவிதனில் மட்கச்செ ருக்கியுள
முருகநறை பெருகவுட லொக்கப் பழுத்துவிழு
மளவிலொருபரமவொளி யிற்புக்கி ருக்கவெனைநினையாதோ
செகுதகெண கெணசெகுத செக்குச்செ குச்செகுத
திருதசெய செயகிருத தொக்குத்தொ குத்தொகுத
டிமிடடிமி டிமிடிமிட டிட்டிட்டி டிட்டிமிட டிடிதீதோ
திரிகடக கடகதிரி தித்திக்ர தித்ரிகட
திமிர்ததிமி திமிர்ததிமி தித்தித்தி தித்திதிதி
செணுசெணுததணசெணுத தத்தித்தி குத்ரிகுடததிதோ

தகுட திகு திகுட திமி தத்தத்த திக்திகுட
குகுகுகுகு குகுகுகுகு குக்குக்கு குக்குகுகு
தரரரர ரிரிரிரிரி றிற்றிக்க றிற்றிரிரி யெனவேஙள்
சதிமுள்வு பலவுமிரு பக்கத்தி சைப்பமுது
சமையபயி ரவியிதய முட்கி... மிக்கவுயர்
தணிகைமலை தனில்மயிலி னிர்த்தத்தி னிற்கவல பெருமாளே. ()

---

தனத்ததன தனதான தனத்ததன தனதான
தனத்ததன தனதான தனதான.

634. வரிக்கலையி னிகரான விழிக்கடையி லொளேரை
மயக்கியிடு மடவார்கள் மயலாலே
மதிக்குளறி யுளகாம மவாக்குதவி டியாகி
வயிற்றிலெரி மிகவுள அதனாலே
ஒருத்தருட னுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தர்தமை மிகநாடி யவரோடே
*உணக்கையிடு படுபாவி யெனக்குனது கழல்பாட
உயர்ச்சிபெறு குணசீலம் அருள்வாயே
விருத்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனோதை மகிழ்வோனே
வெடித்தமணர் கழுவேற † ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு புலவோனே
செருக்கியிடு பொருசூரர் குலத்தையடி யறமோது
திருக்கையினில் வடிவேலை யுடையோனே
திருக்குலவு மொருநீல மலர்ச்சுனையி லழகான
திருத்தணிகை மலைமேவு பெருமாளே. ‡ (௨அ௨

---

உணக்கையிடு — உண் ÷ கை + இடு. † ஒருத்திகணவன — மங்கையர்க்கரசியாருடைய கணவனாகிய கூன பாண்டியன். ‡ இச்செய்யுள் அருணகிரிநாதருடைய திருவாக்கென்பதைப்பற்றச் சிறிது ஐயமிருப்பினும், பழைய பிரதிகள் பலவற்றிலும் காணப்பட்டபடியால் விடாது சேர்க்கப்பட்டது.

## ஸ்ரீமான். மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்கள் பார்வையிற்பிரசுரித்த, தமிழ்ப்புத்தகங்கள்.



| | |
|---|---|
| திருப்புகழ் முதற்பாகம் (642-பாடல்களுடன்) | 2—8—0 |
| ஷை 2-ம் பாகம் (611-பாடல்களுடன்) | 2—8—0 |
| தனிச்செய்யுட் சிந்தாமணி | 3—0—0 |
| வியாசத்திரட்டு (மு. ரா. க.) முதற்பாகம் | 0—8—0 |
| ஷை (ஷை) 2-ம் பாகம் | 0—12—0 |
| குமணசரித்திரம (ஷை) | 0—8—0 |
| சித்தாந்த ஞானரத்னாவளி | 0—6—0 |
| திருக்குறள் வசன காவியம் (மு. ரா. அ.) | 0—12—0 |
| குலோத்துங்க சோழன கோவை | 0—12—0 |

வித்தியா. இலாகா. 7-வது சர்க்கிள் பெர்ஷனல் அஸிடெண்டு இன்ஸ்பெக்டர் மகா-ா-ா-ஸ்ரீ V. முத்துஸ்வாமி அ ரவர்களியற்றிய பத்மினி. (தமிழ் நாவல்) 0—12—0

| | |
|---|---|
| பொருளதிகார வாராய்ச்சி | 0—8—0 |
| கதையும் பாட்டும் (மாணாக்கர்களுக் குரியது) | 0—4—0 |

### ஸ்ரீ. ம. கோபாலகிருஷ்ணையரவர்களியற்றிய

அரும்பொருட்டிரட்டு வியாசங்களும், ஆங்கிலமொழி பெயர்ப்புகளும், தனிப்பாடல்களும் அடங்கியுள்ளவை 2—8—0

சாணக்யராஜ தந்திரம் சந்திரகுப்த சரிதம் 1—4—0

### நே. ரா. சுப்பிரமணிய சர்மா அவர்களியற்றிய

| | |
|---|---|
| பாண்டிய தேச நாயக்கமன்னர் வரலாறு | 0—6—0 |
| திருமலை நாயக்கர் சரித்திரம் (தனி) | 0—2—0 |
| இராணி மங்கம்மாள் சரித்திரம் (தனி) | 0—1—0 |
| கிருஷ்ணன் தூது வசனம் | 0—2—0 |

### முத்தமிழ் க்ஷேத்திரமதுர பாஸ்கரதாஸ ரவர்களியற்றிய

பக்திரஸ கீர்த்தனங்கள். (உட்சாகத்தை உண்டாக்கக் கூடிய வர்ணமெட்டுகளா லியற்றியவை) முதற்பாகம் 0—5—0

ஷை 2-ம் பாகம் 0—5—0

### உடுமலை. முத்துஸாமிக் கவிராய ரவர்களியற்றிய

இராமாயண நவீன நாடகம். அருமையான பாடல்களும், அற்புதமான வசனங்களும், சிறந்த சித்திரப் படங்களுடன். 2—0—0

பக்திரஸ கீர்த்தனங்கள் 0—4—0

இ. மா. கோபாலகிருஷ்ணகோன்,

புக்ஷாப், புதுமண்டபம் மதுரை.